உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முன்பனிக்கால உபந்நியாசம்,



இவை

தமிழ் நாட்டுச்

சைவசித்தாந்த மகாசமாஜ

மானேஜரும்

பிரதம உபந்நியாசகருமான

சென்னைக் கிறிஸ்டியன்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

நாகபட்டினம். வேதாசலம் பிள்ளையவர்களால்

நிகழ்த்தப்பட்டு,



சென்னை

மிமோரியல் அச்சியந்திரசாலையிற்

பதிக்கப்பட்டன.

1906.



அ. ௧௧. ௯. ௰.

29-1.61.

சைவசித்தாந்த உண்மை இது எனக்
கணக்கிறந்த பிரசங்கமாரியாலும், அரிய பெரிய
புத்தக பிரகடனங்களாலும் இனிது விளக்கி, இத்தமிழ்நாடு
எங்கும் சித்தாந்த சூரியன்போல் உலாவினவரும், சேது ஸ்ரீ, பாஸ்
கரமன்னரால் 'வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்' எனப்
பட்டஞ் சூட்டப் பெற்றவரும், எனக்குச்சித்தாந்த நுணுக்
கங்களைத் தமது அருட் பெருக்கோடு குழைத்து
ஊட்டினவருமான

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள்**

என்றும் என் சித்தாந்த ஆசிரியர்
அடியேன்மீது பாராட்டிய அருட்பாங்கை
நினைந்து நினைந்து கனிந்திடுதற்கு ஓர் அறிகுறியாக
இப்புத்தகம் அடியேனால்
உருக்கப்படுகின்றது.



# முகவுரை.

அருள்மயமான திருச்சிற்றம்பலத்திலே அருள்நடம் புரியும் ஆனந்த நடராசப் பெருமான் திருவுளப்பாங்கிருந்த வண்ணம் இத் தமிழ் வழங்கும் வளநாட்டில் சைவசித்தாந்த மஹாசமாஜம் நிலை நிறுத்தப்பட்டு இற்றைக்கு ஏறக்குறைய ஒன்றரை வருடம் ஆயின. இம்மகா சமாஜத்திற்கு முதன் முதற் பிரதம காரியதரிசியாராய் நியமிக்கப்பட்ட சூபர்வைசர் ஸ்ரீமான். கு. சிங்காரவேலு முதலியாரவர்கள் இம்மகாசமாஜ அபிவிர்த்தியின் பொருட்டு மேற்கொண்ட ஊக்கமும் முயற்சியும் மிக வியக்கத் தக்கதன. அந்தோ! அவ்வளவு சிறந்த அபிமானியான அவர் சமாஜம் பிறைமதிபோல் வளரத் தொடங்கிய அரும் பாதத்தில் சிவபெருமான் திருவடிநீழல் எய்தினார்! அவருடைய அருமை பெருமை யறிந்து வருந்தின கிளைச சபை அங்கசபையார்கள் அவர் பிரிவாற்றமைக் கிரங்கிச் செய்யுட்கள் பல இயற்றிப் பிரசுரம் பண்ணினார்கள்.

அவர்கட்குப் பின் இப்பெரிய சமாஜத்தை ஏற்றுக்கொண்டு நடத்துவார் எவரென்று ஆழ்ந்தெண்ணி மகாசமாஜத்தார் எல்லாநற்குணமு மமைந்து சிறந்த தாசில்தார் ஸ்ரீமான். சி. சு. பொன்னுசாமி முதலியாரவர்களைப் பிரதம காரியதரிசியாராக நியமனஞ் செய்தனர். அற்றை நாள் தொடங்கிச் சமாஜ காரியங்கள் செவ்வனே நடைபெற்று வருகின்றன. இப்பிரதம காரியதரிசியாரும் பிறரும் அடியேனை ஒரு பொருட்டாக நினைந்து இம்மகாசமாஜ காரிய நிருவாகனும் பிரதம உபந்யாசகனுமாக ஏற்படுத்தினார்கள். அதற்காக அவர்கட்கு எழுமையும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

பிரதம காரியதரிசியாராற் குறிக்கப்பட்ட வண்ணம் சென்ற 1905ஞு டிசம்பர் மாதத்தில் யான் நாகை, கீழ்வேளூர், தஞ்சை, திருச்சி, உறையூர், சிதம்பரம் முதலிய இடங்களிற்சென்று ஆங்காங்குள்ள கிளைச்சபை அங்கசபைகளின் சம்பந்தமாகச் செய்த உபந்யா

சங்களை அவ்வப்போது எழுதிச் சித்தாந்தம் பயில்வார்க்கு இவை பயன்படுமென்று இப்போது பிரசுரிக்கலானேன். சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் பயிலவேண்டுவோர் இலக்கணம் இலக்கியம் தருக்கம் முதலியன ஒழுங்காகக் கற்றுக்கொண்டு செல்லவேண்டியிருத்தலின், இத்தமிழ் நாட்டில் சித்தாந்தம் அறிந்தவர் மிகச்சிலரே யிருக்கின்றனர். ஆகவே, அவ்வரிய பெரிய சாத்திரங்களிற் போதிக்கப்படும் நுண்பொருள்களில் சிலவற்றை இவ்வுபந்நியாசங்களில் என்னாலியன்றவரையில் நன்கு விளக்கி யிருக்கின்றேன். ஆதலால், இவ்வுபந்நியாசங்களைக் கருத்தூன்றிப் படிப்போர்க்குச் சித்தாந்தநுட்பங்கள் பல தெளிவாய் விளங்குமென்னும் நம்பிக்கை யுடையேன்.

இவற்றைப் படிக்கும் நுண்ணறிவாளர் இவற்றில் வழூஉக்கள் காண்பாராயின் திருத்திக்கொள்ளும்படி வேண்டுகின்றேன்.

சென்னை,
26—11—1906 } நாகபட்டினம். வேதாசலம் பிள்ளை.

திருச்சிற்றம்பலம்.

# முதல் உபந்நியாசம்.

# சைவஉபயதீபங்கள்.

சைவமென்பது யாது ? அச்சைவத்தினைப் பிரகாசப்படுத்திய உபயதீபங்கள் அல்லது இரண்டு விளக்கங்கள் யாவை ? என்று விசாரணைசெய்யப் பிரவேசிக்கின்றமையால் இன்று உபந்நியசிக்க எடுத்துக்கொண்ட அரும்பெரும் விஷயத்திற்குச் 'சைவஉபயதீபங்கள்' என்னும் பெயர் புனைந்து கொள்ளப்பட்டது. இந்த நிலவுலகத்திலே பிறந்து இருந்து இறந்துபோகின்ற சீவர்களுக்குள்ளே சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் ஐந்து உணர்ச்சிகள் மாத்திரம் வாய்க்கப்பெற்று, இவ்வைந்துணர்வுகளினும் மேம்பட்டு இவை தம்மை யெல்லாம் நல்லதுதீயதுஎன்று பகுத்தறியும் விவேகம் பொருந்தப்பெறாத மிருகராசிகளை யொழித்து மிக அரிதிலே கிடைக்கப்பட்ட மக்கட்பிறவியினையுடைய சீவர்களுக்கெல்லாம் இவ்விவேகவுணர்வால் இந்தவுலகத்திற் பெறப்படாத ஓரரும்பெருந்தனம் சைவசத்திலே இருக்கக் காண்கின்றேம். இந்த அசேதன வுலகத்தில் அசேதன முயற்சியால் தொகுத்துக்கொள்ளப்படுகின்ற பெருங்குவியலான பெரும்பொருளெல்லாம் எம்முடைய இவ்வசேதன சரீரம் இவ்வசேதன வுலகத்தில் நடைபெறுங்காலும் ஒரு சிலர்க்கு மாத்திரம் ஒவ்வொரு வகையாற் பயன்பட்டு அழிவெய்தி மறுமையிற் செல்லும் சைதன்னிய ரூபியான எமக்குச் சிறிதும் பயன்படுவதில்லை. இது

> "தெய்வச் சிதம்பரத்தேவா வுன்சித்தந் திரும்பிவிட்டாற்
> பொய்வைத்த சொப்பனமா மன்னர் வாழ்வும் புவியுமெங்கே
> மெய்வைத்த செல்வமெங்கே மண்டலீகர்தம் மேடையெங்கே
> கைவைத்த நாடகசாலை யெங்கே யிதுகண்மயக்கே." என்று

அற்புத வைராக்கிய சுத்தசிவஞான சிரேட்டராகிய பட்டினத்தடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்கான் இனிது விளங்கும். இத்

தன்மையதான அசேதன செல்வம்போலாது, ஆன்மாவின் ஞான மென்னுங் களஞ்சிய அறையிலே வைத்துப் பாதுகாக்கப்படுவதாய், அழியுந்தன்மைத்தான சரீரத்தை மாத்திரம் போஷிப்பதற்கு அனுகூலமான அசேதன திரவியம்போலாது ஆன்மாவின் சிற்சக்தியான சரீரத்தைப் போஷிப்பதற்கு மிக இயைந்த திரவியமான சமய உணர்ச்சியானது அநாகரிக சாதியார் முதல் நாகரிக விருத்தியுடையார் ஈருக எல்லார்க்கும் பொதுமையாய் நிகழக் காண்கின்றோம்.

இனி இந்தச் சமயம் என்னுஞ் சொல்லால் பொழுது, அல்லது காலம், அல்லது அவசரம் என்னும் பொருள் பெறப்படுகின்றது. பஞ்சேந்திரிய உணர்வுகளும் ஒருகாலத்து ஒருங்குசேர்ந்து ஐந்து விடயங்களையும் ஒன்ருய் அனுபவியாமையால், அவ்விந்திரியங்கள் ஒவ்வொன்றன்வழியாயும் தனித்தனியே பிரவேசித்து அவ்வவற்றை விடயிக்கின்ற ஆன்மாவானது அவ்வவற்றை அங்ஙனம் தனித்தனியே விடயிக்கும் அவசரம் உண்டாகின்றது. இவ்வாறு காலத்திறல் வரையறுக்கப்படுதல் ஏகதேச வியாபகமுடையசீவான்மாவுக்கன்றிச் சருவ வியாபகமுடைய பரமான்மாவுக்கு இல்லையாம். சலனமுடைய பொருள்களுக்கே காலமும் இடமும் உண்டாம். ஏகதேசப்பட்ட வியாபகமுடைய சாத்தன் என்பான் கங்கைக்கரையிலிருந்தான் என்றவழி இறந்தகாலமும், காவிரிக்கரையி லிருக்கின்ருன் என்னும் வழி நிகழ்காலமும், கன்னித்துறையி லிருப்பான் என்புழி எதிர்காலமும் கங்கை, காவிரி, கன்னி என்னும் இடங்களும் பெறப்படுகின்றன. இங்ஙனங் காலவேறுபாடுகளும் இடவேறுபாடுகளும் ஏகதேசவியாபகமும் சலனமுமுடைய சீவான்மாக்களுக்கே உள்ளனவாதல் தெற்றென விளங்கும். இனி அச்சாத்தன் என்பான் அவ்வாறு ஏகதேசப்படுதலும் சலித்தலும் இல்லாது எங்கும் உள்ள அறிவுப் பொருள் என்று சிந்திக்கக் கூடுமாயின், கங்கை, காவிரி, கன்னி முதலான எல்லா இடங்களிலும் சலனமின்றி ஏககாலத்துள்ள அவனுக்கு அங்ஙனங் காலவேறுபாடும் இடவேறுபாடும் ஒருவாற்ருனும் சொல்லல் ஒவாதென்க. நேற்றும் இன்றும் நாளையும் கங்கை, காவிரி, கன்னி என்னுஞ் சருவதானங்களினும் ஒருங்கு வசிப்பானை நோக்கி இவன் கங்கைக் கரையி லிருந்தான், காவிரிக்கரையி லிருக்கின்ருன், கன்னித்துறையி லிருப்பான் என்று வழங்குவேமாயின் அஃது உண்மைக்குமாருய் எல்லாரானும் நகையாடற் பாலதாய்முடி

யும். எவ்வாறெனின், சருவ வியாபகமாயுள்ள ஆகாயத்தை நோக்கி இது கங்கைக்கரையி லிருந்தது எனவும், இது காவிரிக்கரையி லிருக்கின்ற தெனவும், இது கன்னித்துறையி லிருக்குமெனவுங் கூறுவார் உலகில் இல்லையன்றே! அதுபோலச் சருவவியாபியாய் எங்கும் நிறைந்திருக்கின்ற எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளுக்குக் காலமும் இடமும் இல்லை; அவன் காலத்திற்கும் இடத்திற்கும் அதீதமாவன்; அவன் அவற்றின் உள்ளே மாத்திரம் இருப்பான் அல்லன்; அவற்றின் உள்ளும் புறம்பும் அவற்றின் மேலும் வியாபிப்பன் என்றறிக. இது பற்றியன்றே சிவஞானச் செல்வரான ஸ்ரீதாயுமானசுவாமிகள்

"அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்" என்று திருவாய் மலர்ந்தருளியதூஉ மென்க. சகலாகமபண்டித மெய்கண்ட சந்தான துவிதீய ஆசாரிய சுவாமிகளான அருணந்தியடிகளும்,

> "உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்பதோரார்
> உலகவ னுருவிற்றோன்றி யொடுங்கிடு மென்றுமோரார்
> உலகினுக் குயிருமாகி யுலகுமாய் நின்றதோரார்
> உலகினுள் ஒருவனென்ப ருருவினையுணரா ரெல்லாம்" என்று

கட்டளையிட்டருளியது. ஈசாவாசியோபநிடதச் சுருதியும் 'அசைவில்லதாய் ஏகமாய்மனோவேகத்திலும் மிக்குச்செல்வதாகிய பரமான்மா அநாதிதொட்டே இந்திரியங்களின் உட்பொருளா யிருத்தலால் அதனை யிந்திரியங்கள் அணைந்தறியமாட்டா, மற்றை அந்தக்கரணங்களுள்ளும் அஃதுள்ளுறையாயிருத்தலால் அவையும் அதனை அணுகமாட்டா, ஆகலின் அப்பரம் பொருட் சொரூபத்தினின்று தோன்றும் பரிசுத்தவாயுவே ஏனை எல்லாவற்றினையுஞ் சேட்டைப்படுத்துகின்றது.' என்று " అనేజదేకం " என்னும் வாக்கியத்தாற் கூறுகின்றது. ஆகவே, ஏகதேச இலக்கணந் தீண்டப்பெறாத பரமான்மாவை யொழித்து அவ்விலக்கணந் தீண்டப் பெறுகின்ற சீவான்மா ஒன்றே காலபேதம் அவசரபேதம் உடையதென்று துணியப்படும்.

இனி ஏகான்ம வாதஞ் சாதிப்பார் மதம்பற்றிக்கடங்க டோறும் உள்ள சலத்தின் கண்ணே தோன்றுஞ் சந்திரவிம்பம் சலத்தின் அசைவாற் றானும் அசைவதுபோற் றோன்றினும் உண்மையாக நோக்குமிடத்து அச்சலனம் அதற்கு இல்லாமை போலச் சீராங்க

"எரியெனக் கென்னும் புழுவோ வெனக் கென்னு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக் கென்னுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும் புன் னாயெனக்கென்னு மிந்நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தே னிதனாலென்ன பேறெனக்கே" எனவும்

"முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு
பிடிசாம்பராய் வெந்து" எனவும்

எழுந்த திருவாக்குகளின்படியே இன்னகணத்தில் மாய்வதென்றறி யப்படாத வண்ணம் சடுதியிலே மாய்ந்தொழியும் இம்மனித சரீரத் தோடு அப் பஞ்சேந்திரிய இன்பானுபவங்களும் இறந்தொழியக் காண்கின்றமையாலும், இங்ஙனம் இடையிடையே யழிந்தொழியும் அவ்வின்பானுபவங்கள் சீவான்மாவினைக் கடைத்தேற்றுதற்கு ஒரு சிறிதும் பயன்படாமையானும் அவற்றை யெல்லாம் வெறுத்துப் பகிர்முகமாகச் செல்லும் நம் ஆன்ம அறிவினை அந்தர் முகமாக உள்ளிழுத்து

"நானா ரென்னுள்ளமார் ஞானங்களா ரென்னை யாரறிவார்" என்ற அருமைத் திருவாக்கின்படி ஆ! நான் யார்? விவித பேதங் களோடு அதிவிசித்திரமாய் அமைந்திருக்கும் இப்பிரபஞ்சங்கள் யாவை? இவற்றிடையில் யான் வந்து பிறந்ததேன்? பிறந்து பல வகைத்துன்பங்களை அனுபவித்து மிகவருந்தும்போதும் அவற்றை யிடை யிடையே மறந்து நான் எப்போதும் இவ்வுலகத்திற் சாசுவத மாய் இருப்பது போல் நினைப்பதேன்? என்மனைவி, மக்கள், சுற்றத் தார், பிறர் என்னுமிவர்க்கும் எனக்குமுள்ளசம்பந்தம் என்னை? மற்றையோரிடத்திலெல்லாம்யான் அன்புடையனாய் ஒழுகாது என் மனைவி, மக்களிடத்தேமாத்திரம் யான் அளவிறந்த அன்புபூண்டொழு குவதுஎன்னஅறியாமை?யான்இறக்குங்காலத்துஅவர்அவ்விறப்பினை நீக்குவரா? யான் பிறக்குங்காலத்து அவர் அப்பிறப்பினை நீக்குவரா? யான் துன்புறுங்காலத்து அவர் அத்துன்பத்தை நீக்குவரா? இவர்க ளெல்லாம் அந்தோ! எம்மைப்போலவே துன்புறுகின்றார்கள் பிறக் கின்றார்கள், இறக்கின்றார்கள்; சாவார்க்குச்சாவாரும், துன்புறுவார்க் குத்துன்புறுவாரும் துணையாவதியாங்ஙனம்? ஐயோ! இப்பிறப்பினுந் துன்பத்தினும் எவ்வாறு நீங்குவேன்! இறக்கவேண்டுமேஎன்பதனை நினைக்குங்காலத்து என்னெஞ்சம்பகீரென்று துணுக்குறுகின்றதே!

"யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" என்ற மேலோர் திருவாக்கு இடையறாது என்னுள்ளத்திற்றோன்றி என்னை வருத்துகின்றதே! என்று இப்படி யெல்லாம் ஆன்மவறிவானது உள்மடங்கிப் பஞ்சேந்திரிய சேட்டை யெல்லாம் ஒடுக்கிக் கொண்டு சிந்தனை செய்யும் அவசரந்தான் ஆன்மாக்களுக்கு என்றும் மாறாது நிகழும் சமயமாதலின் இம்மானசிக அவசரமே சமயம் அல்லது மதம் என்று ஆன்றோரான் வழங்கப்பட்டது.

என் அருமைச் சகோதரர்களே! திராவிடமேன் மக்களே!

முன்னே காட்டியபடி எப்படியானும் நமது ஆன்மஞானமானது பஞ்சேந்திரியங்களின் வசப்பட்டு நடைபெறுங்காலத்து அது வதுவாய் நின்று விஷயங்களைப் புசித்துத்தான் மிகவிரும்பிய தொன்றனை அபிமானத்தால் உயர்த்துப் பேசுதல் போல, நமது மானசிக தர்மத்தால் பரிசீலனஞ் செய்யப்படுகின்ற தத்துவ விசாரணைகளும் பலதிறப்படுகின்றன. அறிவு நிரம்ப வில்லாது தாழ்ந்த பக்குவத்தின் கண்ணராய் நிற்கின்ற ஆன்மாக்கள் தத்துவங்களைப் பிரித்துப் பிரித்து ஆயும்போது அவர்கள் அறிவு மேற்பட்ட தத்துவங்களிற் பிரவேசியாமையால் தமக்குத் துணையாவன பிருதிவி அப்புத்தேயு வாயுக்களேயாமென்றும், இந்நாற்பூதக் கூட்டத்தினுற் றோன்றிய அண்டமாகிய இப்பிரபஞ்சமும் பிண்டமாகிய இச்சரீரமுமே மெய் யென்றும் நிச்சயித்தலினுல் உலகாயதமதம் தோன்றுவதாயிற்று. இவ்வாறே இவர்க்கு மேற்பட்ட பக்குவத்தினையுடையாரால் இந்திரியான்ம வாதமும், இவர்க்கு மேற்பட்ட பக்குவத்தினை யுடையாரால் அந்தக் கரணான்ம வாதமும், இவர்க்கும் மேற்பட்டாரராற் பிராணான்ம வாதமும், இவர்க்கும் மேற்பட்டாரால் விஞ்ஞானான்ம வாதமும், இவர்க்கும் மேற்பட்டாரராற் சிவப்பிரமவாதமு மெனப்பலப்பலவான மதங்களும், பலப்பலவான தத்துவ விசாரணைகளும் பலதிறப்பட்டுத் தோன்றின. இவற்றுள் ஒன்றே மெய்ந் நிலையாய்ப் பெறப்படுமாயினும் ஏனையவெல்லாம் பொய்யென்று கழிக்கப் படாமல் அம்மெய்ந் நிலையினைப்பயப்பதற்குரிய சோபான நிலைகளாய் நிலைபெறுவனவாம். முன்னே காட்டிய வண்ணம் எப்படியானும் சத்தப் பரிசரூபரச கந்தம் என்னும் பஞ்சேந்திரிய புணர்வுகளுள் சத்தவுணர்வே ஏனை எல்லாவற்றினும் மிகச சிறந்ததாயினும் அவை யொவ்வொன்றும் ஏனையதன் வளர்சசிக்குக் காரணமாய்ப் பயன்படுதல் போலவும்,

மனிதப் பிறவியினுள் குழவிப்பருவம் பாலப்பருவம் மனிதப்பருவம் விருத்தப்பருவம் என்பனவற்றுள் விருத்தப்பருவமே அறிவு மிகச் சிறந்ததாயினும் அதனை எய்துதற்கு ஏனைமூன்று பருவங்களும் ஒன்றற்கொன் றுபகாரமாய் இன்றியமையாது வேண்டப்படுதல் போலவும், மெய்ந்நிலைச் சித்தாந்தமாய் முடிக்கப்படும் ஒரு மெய்ச் சமயத்தினைச் சென்றடைதற்குரிய பேரறிவினைப் பெறுதற் பொருட்டு மிகத்தாழ்ந்த பக்குவத்திலே தோன்றிய சிற்றறிவுச்சமய முதலிய எல்லாம் ஒன்றற்கொன் றுபகாரமாய் மிகுதியும் பயன்படுத லுடையனவாம். ஈசுரனும் ஆன்மாவும் இல்லையென்று சொல்லுகிற நாத்திகமத முதற்கொண்டு பரம வேதாந்த சித்தாந்த முடிநிலைச் சமரசானுபவ நிலையாயுள்ள மெய்ச்சமயங்காறுமுள்ள சருவ ஆன்மாக் கட்கும் ஈசுரனது அனுக்கிரகப்பேறு உண்டென்பது துணிபொரு ளாம். இது திராவிடசுருதியுள்,

"விரிவிலா வறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்தே
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாமே" என்று

பெறப்பட்டமையானும், திராவிட ஆகமசித்தாந்தத்துள்,

"அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்" என்று

வலியுறுத்தப்பட்டமையானும் இனிது விளங்கும்.

இனி இப்பெற்றிப்பட்ட தத்துவ விசாரணையின் அவசர பேதங் களை யெல்லாம் கடந்து மேல் நிலைக்கண்ணே சென்றானுக்குக் கீழ் நிலைக்கண்ணுள்ளன வெல்லாம் பொருளல்லனவாய்த் தோன்றுமாக லின் அதுபற்றி அவன் அவமதிக்கப்படுவானல்லன். அந்த மேனி லைக் கண்ணே நின்று பேரின்பானுபவத்தை நுகர்ந்து கொண்டு,

"சோம்பரிருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பது சுத்த வொளியிலே
சோம்பருணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர் கண்டாரச் சுருதிக்கட் டுக்கமே" என்றபடி எவ்

வகைச் செயலுமில்லாத சுத்த சோம்பராய்,

[களோர் மூன்றும்
"பூதமுங் கரணம் பொறிகளைம் புலனும் பொருந்திய குணங்
நாதமுங் கடந்த வெளியிலே நீயு நானுமாய் நிற்குநாள் உளதோ
வாதமுஞ் சமயபேதமுங் கடந்தமனோலயவின்பசாகரனே
எதுமொன்றில் லேன்யாது நின்செயலே யிறைவனே ஏகநாயகனே"

என்ற வண்ணம் எல்லாம் இறைவன் செயலே தஞ்செயலாய்க் கொண்டாராய் உள்ள பிரமஞானிகளுக்கு ஏனையவெல்லாம் வெறும் போலிகளாய் ஒழிதல் பொருத்தமேயாம். அங்ஙனம் அவர்க்குத் தோன்றுதல் பற்றி அவர் மற்றைச் சமயங்களை இகழ்ந்தார் எனத் திரித்துணர்ந்து அவரைப் புறம் பழித்தல் பொருந்தாதாம். அது நிற்க.

இனி இங்ஙனம் ஆன்மஞான அவசர பேதங்களாய்த் தோன்றிய பல் வகைச் சமயங்களுட் பிரதமத்தில் விசாரணை செய்தற் பொருட்டெடுத்துக் கொண்ட சைவம் என்பது அதிதீவிர பக்குவத்தினையுடைய ஓரான்மாவானது தன் ஏகதேச வியாபக சீவலக்கணத்தை விட்டுப் பெருவியாபகத்ததாய் நின்று சிவம் என்னும் முழுமுதற் பரம்பொருளைத் தலைப்பட்டு நின்ற அவசரமாம். இது

"தெய்வஞ் சிவனே சிவனருள் சமயஞ்
சைவஞ் சிவத்தொடு சம்பந்தமென்றான்

சைவம் வளர்க்குஞ் சம்பந்த மூர்த்தி" என்ற திருவாக்கான் அறியற்பாலதாம். இங்கே சிவம் என்று பிரதிபாதிக்கப்பட்ட பொருள் அசுத்தமாயையிற் றோன்றிய சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணவயப்பட்ட மும்மூர்த்திகளுள் ஒருவனும் அல்லன் அது, "అవస్థాత్రితయాతీతం తురీయం సత్యచిత్సుఖం" என்றும் "ఈశానం పరమం విద్యాత్ ప్రేరకం బుద్ధిసాక్షిణం" என்றும் போந்த பஞ்ச பிரமண சுருதியானும், "தேவர்கோவறியாத தேவதேவன்" என்னுந் திருவாசகச சுருதியானும் அறியற்பாலதாம். இன்னுமிது

"சிவனொடொக்குந் தெய்வம் தேடினு மில்லை" என்னுந் திருமந்திரத்தானும் உணரப்படும். சிவம், பிரமம், கந்தழி யென்பன ஒரு பொருட்கிளவிகள். இவற்றுட் கந்தழி என்பது ஆசிரியர் தொல்காப்பியனாராற் சிவம் என்பதற்குப் பிரதி பதமாக வைத்துக்

"கொடிநிலை கந்தழி வள்ளியென்ற
வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்

கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே" என்று திருவாய் மலர்ந்தருளப்பட்டது. இதற்குரைகண்ட பேராசிரியரும்,

"பச்சை யாலனைய மேகம் பௌவ நீர்பருகிக்கான்ற
எச்சினுற்றிசையு முண்ணு மமிழ் தெனவெழுநா வெச்சில்
மெய்சசி நாணுளும் விண்ணோர் மிசைகுவர் வேதபோதன்
நச்சினார்க் கினியனெச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்" என்றும்,

"எவனாலவாயிடைவந் தமுதவாயுடைய னெனவியம்பப்பெற்றோன்
[யீந்தோன்
எவன் பண்டைப் பனுவல் பல விறவாது நிலவவுரை யெழுதி
எவன்பரமவுபகாரி எவன் நச்சினார்க்கினியனெனும்பேராளன்
அவன்பாதவிருபோது மெப்போது மலர்கவெனதகத்துமன்றே"

என்றும் ஆன்றோராற் சிறப்பிக்கப்பட்டவருமான ஆசிரியர் நச்சினார்க்கினியர் "கந்தழி என்பது ஒருபற்றுமன்று அருவாய்த்தானேயாய்த் தத்துவங்கடந்த பொருள்" எனவுரைகூறி, இதனியல்பை ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாமிகள் உய்த்துணரவைத்து

"உற்றவாக்கையி னுறுபொருள் நறுமலரெழுதரு நாற்றம்போற்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள்பாராதே
பெற்றவாபெற்றபயனது நுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே
அத்தனாண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங்கண்டாமே"

என்று திருவாய்மலர்ந்தருளிய அருமைத் திருவாக்கினை எடுத்துக் காட்டி 'என்று அதனை உண்மையான் உணர்ந்தோர் கூறியவாற்றானுணர்க' என்று அதற்கு உதாரணமுங் காட்டினார். எமக்கினிய நண்பர்களே! ஆ! பாருங்கள்! உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரென்னும் புலவர் பெருமானே ஸ்ரீமந் மாணிக்கவாசகசுவாமிகளை 'அதனை உண்மையானுணர்ந்தோர்' என விசேடித்துரைத்தமையால் கந்தழியினியல்பை அத்திருவாக்கே இனிது விளக்குவதென்பது பெற்றாம். தத்துவங்களாவன பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும், சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும் பஞ்சஞானேந்திரியங்களும், சத்தப்பரிச ரூபரச கந்தம் என்னும் பஞ்சதன்மாத்திரைகளும், வாக்கு பாதம்பாணி பாயுருபஸ்தம் என்னும் பஞ்ச கன்மேந்திரியங்களும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான் கந்தக் கரணங்களும், காலம் நியதிகலை வித்தை அராகம் புருடன் மாயை என்னும் சுத்த வித்தியா தத்துவங்களும், சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் பஞ்ச சிவதத்துவங்களுமான முப்பத்தாறு

தத்துவங்களுங் கடந்த பரம்பொருள் யாது அது கந்தழி யென்பார் 'தத்துவங்கடந்த பொருள்' என்றும், உருவுடைப்பொருளெல்லாம் அனித்தமாகலின் சிருட்டிக்கப்படும் உருவுடைப் பொருளன்று அக் கந்தழி யென்பார் 'அருவாய்' என்றும், இம்முப்பத்தாறு தத்துவங் களும் அப்பரம்பொருளையின்றி யியங்கமாட்டாவாகலின் அவற்றுள் நின்று அவற்றைச் சேட்டித்தும் தான் தாக்கற்று நிற்குமென்பார் 'ஒரு பற்றுமற்று' என்றும் புலவர் பெருமான் நச்சினார்க்கினியர் இனிது விளக்கி யருளினார். இவருதாரணமெடுத்துக் காட்டிய திருவாசகத் திருவாக்கு இக்கந்தழியாம் பரம்பொருளியல்பைவிளக் குமாறு யாங்ஙனமெனில்;—'உற்றவாக்கையில் உறுபொருள்' என் பது இறைவன் தத்துவங்களுள் அருவாய் நிற்றற்கும், 'நறுமலரெழு தருநாற்றம்' என்பது அவன் சீவான்மாவினுள் அருவுருவாய் நிற்றற் கும் உவமைகளாக எழுந்தன. சரீரத்தினுள்ளிருக்கும் உயிர் தனக் கென ஓர் உருவின்றித் தான் சார்ந்த சரீரமே தனக் குருவாய்க் கொண்டு நிற்கின்றது. அங்ஙனம் நிற்குமிடத்துத் தான் வேறு உயிர் வேறு என்னும் பேதந்தோன்றுவாறு சாத்தா, கொற்றா என் னும் உடம்புக்கிட்ட பெயரால் அழைத்தவழித் தான் என் னென்கின் றது. அங்ஙனம் நிற்பினும் உடம்பு உடம்பே, உயிர் உயிரே, உடம்பு உயிராகாது, உயிர் உடம்புமாய் அதனின் வேறுமாய் நிற்கும். உடம்பு தானே இயங்காது உயிர் இயக்கினால் இயங்கும், உயிர்தானே யியங்கும் உடம்பினையும் இயக்கும். இதுபோல இறைவன் பிரபஞ் சங்களுட் கலந்து நிற்கும்வழித் தான் வேறு உலகம் வேறு என்னும் பேதந் தோன்றுவாறு அபேதமாய் நிற்கும். இவ்வாறு அபேதமாய் நிற்றல் பற்றியே 'விசுவம் பிரம்மா' என்னும் வாக்கியமும், "உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பலவாகி நின்றவாதோ ணோக்கமாட்டாயோ" என்னுந் திராவிடோப நிடதத்திருவாக்கும் எழு ந்தன. இங்ஙனம் அபேதமாய் நிற்பினும் இறைவன் இறைவனே, உலகம் உலகமே; உலகமிறைவனாகாது, இறைவன் உலகமுமாய் அவற்றின் வேறுமாய் நிற்பன். உலகம் தானே இயங்காது இறை வன் இயக்கினால் இயங்கும்; இறைவன் தானேயும் இயங்குவன் பிற வற்றையும் இயக்குவன். இங்ஙன மெல்லாம் அபேதவொற்றுமை பூண்டு நிற்பினும் இதனாற் சிறிதும் விகாரமுறுத்தப்படுவானல்லன். அது 'நறுமலரெழுதரு நாற்றம்போல்' என்னும் உவமையால் விளக் கப்படுகின்றது. மலர் முகையாய் இருந்தழி அதனுள் அருவாய்

இருந்தமணம் அது பருவ முதிர்ந்து மலர்ந்தவிடத்து அதனுள்ளும் புறம்புமாய்ப் புலப்பட்டு வியாபித்துத் தான் மலரைப் பற்றிக்கொண்டு நிற்பினும் தான் அம்மலரால் பற்றப்படாது அதனையுங் கடந்து வியாபித்துத் தன் வியாபகத்தினுள்ளே அம்மலரையும் ஏகதேசமாய் அடக்கிக்கொண்டு பேதமும் அபேதமுமாகிய பேதாபேத விலக்கணத்தோடு அதிற் சிறிதும் தாக்கின்றி நிற்றல்போல, இறைவன் ஆணவமலவயப்பட்டுக் குவிந்து நின்ற ஆன்மாவினுள்ளே அருவாய் இருந்து பின் அம்மலத்தடைநீங்கி அது விரிந்த வழி அப்பரமான்ம சைதன்னியம் அதன் உள்ளும் புறம்புமாய்ப் புலப்பட்டு விளங்கித் தான் அம்முத்தான்மாவைப்பற்றி நிற்பினும் தான் அதனாற் சிறிதும் பற்றப்படாது அதனையுங் கடந்து வியாபித்துத் தனது சிதாகாச வியாபகத்திலே அவ்வான்மாவினையும் ஏகதேசமாய் அடக்கிக்கொண்டு பேதமுமாய் அபேதமுமாய்ப் பேதாபேதவியையுற்று அதிற் சிறிதும் தாக்கின்றி நிற்குமெனக. இங்ஙனம் அசேதனம் சேதனம் என்னும் இருவகைப் பிரபஞ்சத்திலும் பேதாபேதமாகவும் அருவுருவமாகவும் தன் னியல்பிற் சிறிதும் திரிவின்றித் தானேயாய் நிற்கும் இறைவனியல்பை இவ்வுண்மைத் திருவாக்கு 'உற்றவாக்கையி லுறுபொருள் நறுமல ரெழுதரு நாற்றம்போற் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' என்று இனிது விளக்கினமையும் இவ்வுண்மையினை ஆசிரியர் நச்சினார்க்கினியர் காட்டினமையும் பெரிதும் நினைவுகூரற் பாலனவாம். இவ்வுண்மை,

"பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம்போல வுணர்ந்தறிவாளர்க்கு
நாவியணைந்த நடுத்தறியாமே" என்ற திருவாக்கானும் விளக்கப் பட்டமைகாண்க.

அன்பர்களே! இங்ஙனம் கந்தழி, பிரமம் என்னும் பதங்களாற் பிரதிபாதிக்கப்பட்ட சிவம் என்னும் தத்துவங்கடந்த பரம்பொருளை விசாரித்த அவசரமே சைவசமயம் என்று உணரற்பாற்று. அற்றேல் அப்பரம்பொருளை யாதானுமொரு பெயரால் வழங்கியிடாமற் சிவம் என்னும் சிறப்புப் பெயரால் வழங்குவித்தல் என்னையெனின்;—வேதாகம உபநிடத ஷடதரிசன புராணேதிகாசமாகிய சருவமும் சிவ என்னும் இரண்டெழுத்திலே அடங்குகின்றன. யாங்

னமெனின், இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதம் நான்கில் அதர்வணம் என்பது முதன் மூன்றின் மந்திரத் தொகுப் பேயாதலால் அஃதவற்றில் அந்தர்ப்பாவமுறும். ஆகலினன்றோ அமரநிகண்டுடையார் அம்மூன்றனையுஞ்சுட்டி வேதங்கள் 'த்ரயீ.' என வழங்கப்படுமென்றனர். அம்மூன்று வேதங்களுள் நடுநின்ற எசுர் 'த்ரய்யாம் யஜுர்வேத:' என்றமையால், ஏனை யிரண்டிற் கும் சிரத்தானமாய் நிற்குஞ் சிறப்பு வாய்ந்ததாம். இது மாந்திர மெனவும் பிராமணம் எனவும் இருவேறு பகுதியினதாய் விளங்கா நிற்கின்றது. இவற்றுள் மாந்திரப் பகுதி மறித்தும் எழுகண்டங்க ளாகப் பகுக்கப்பட்டுச சம்மிதாகாண்டம் என்னும் பெயருடைத் தாய்ச் சிறந்து விளங்குவதாம். இனி யிச்சம்மிதாகாண்டம் எழி னுள்ளும் நடுக்காண்டமே பெரிதுஞ் சிறப்புடைத்து. இனி யிந்நடுக் காண்டமும் எழு சங்கிதைகளாக வகுக்கப்பட்டுள்ளது. இவற்றுள் ளும் நடுகின்ற சங்கிதையுள் திருவுருத்திரத்தின் கண்ணே சத ருத்ரீயம் விளங்காநிற்ப, அச்சத ருத்ரீயத்தின் இடையிலே விளங் கும் 'நமசிவாய' என்னும் பஞ்சாக்கா மத்தியிற் பிரகாசித்துக்கொண் டிருக்கும் 'சிவ' என்னும் பதத்தால் வேதமும் வேதத்தைச் சார்ந்த கலைகளும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. ஆகையால், இச சிவவென்னும் பதம் பிரமமென்னும் பதத்தாற் குறிக்கப்படும் பரம் பொருட்குச் சிறப்புப் பெயராம் என்று தெளியப்படும். இன்னும் இதனை விரிப்பிற் பெருகுமாதலால் இத்துணையின் அமைந்து, எடு த்த விஷயத்தின் மேற் றொடர்ந்து செல்வாம்.

இவ்வாறு சைவம் என்னும் தத்துவ விசார அவசரம் தத்துவா தீதமான பரம்பொருட் சிவ சொரூபத்திலே தலைப்பட்டு நிற்குங்கழி பெருஞ் சிறப்புணர்ந்தன்றே ஸ்ரீ தாயுமானசுவாமிகள்

"சைவசமயமே சமயம்" என்று கட்டளை யிட்டருளினர். பிற சான்றோரும் "சைவத்தின்மேற் சமயம் வேறிலை" என்று கூறினர். மற்றைச சமயங்களெல்லாம் சைவத்திற்குரிய சோபானமார்க்கங்க ளாய் உபகாரப்பட்டு நம்மாற் கௌரவிக்கப்படுந் தன்மையவாய் நிற்ற லின் அவை சைவசமயிகளானநம்மாற் புறம்பழிக்கற் பாலனவல்ல வாம். வேதமென்னும் விருட்சத்தில் இலையும், தளிரும், அரும்பும், மல ரும், பிஞ்சும், காயுமாய் மற்றைச் சமயங்களெல்லாம் நிற்ப வேதாந்தம் என்பது அதன் முடியிற் பழமாய்ப் பழுத்துக் கேவலாத்து விதமாய்

ற்ப அதனைப் பிழிந்து எடுத்த சுத்தாத்துவித சாரமே சைவசித்தாந்த மென்பதனை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் "நீயே வேதமென்னும் பாதவம் வளர்த்தனை" என்றருளிச் செய்வாராயினர்.

எம்மரிய ஆப்த சிகாமணிகளே! எமக்கினிய சிவநேயச் செல்வர்களே! இங்ஙனம் சைவசமயத்திறுைல் உபதேசிக்கப்படும்சிவபரம்பொருள் எல்லாத்தத்துவங்களுங் கடந்ததாய்ச், சச்சிதானந்த சொரூபியாய்ச், சருவசத்தியு முடையதாய்ச்,சருவத்தையு மறிவதாய்ப், பிறப்பிறப்புக்களிற்படாத திவ்விய அருட்சரீர முடையதாய்ச் சுத்த சைதன்னிய சொரூபியாய் விளங்குவதென்று அறிமின்கள்! இவ்விலக்கணங்களெல்லாம் ஒருங்குடைய அப்பரம்பொருளைச் சிவம் என்றழைக்க உங்கட்கு விருப்பமில்லையாயின் நாராயணன் என்றழைமின்கள்! பிரமனென்றழைமின்கள்! புத்தனென்றழைமின்கள்! அருகனென்றழைமின்கள்! எப்பெயரிட்டு எவ்வெவ்வாறு அழைப்பினும் அப்பெயரெல்லாம் அவர்க்குப் பொருந்தும். வெறும் பெயரிலே நுங்கட்குப்போர் நிகழவேண்டாம். எங்கும்உள்ள கடவுள் ஒருவனே. சருவயோகஞான சித்த சிரேட்டரான திருமூலரும் பட்டினத்தடிகளும்

> "ஒன்றே குலமும் ஒருவனே தேவனு
> நன்றே நினைமினமனில்லை நாணுமே
> சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
> நின்றே நிலைபெற நீர் நினைந்துய்ம்மினே" என்றும்

> "ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
> அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் லறமுநட்பும்
> நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
> என்றென் றிருமனமே யுனக்கோருபதேசமிதே" என்றும் அரு

ளிச்செய்த உண்மை வாக்கியங்களைக் கடைப்பிடித்துஒழுகுமின்கள்! நம்முடைய தேசம் மத ஒற்றுமை யில்லாமையால் நாளுக்கு நாள் க்ஷீணதசையை அடைகின்றது. சைவத்தின் முடிபுகள் எல்லாச் சமயங்களுக்கும் பொருத்தமாவனவாம். இதனை நீங்கள் செவ்வி தின் மனம் பொருத்தி எல்லாரும் ஒற்றுமையாய் வாழ்மின்கள்!

இத்தன்மையவான மத ஒற்றுமையும் சீவகாருணியமும் சைவத்தின் சிறப்பான உண்மைகள் என்பதனையே சைவசமயாசாரிய மூர்த்திகளுள் முதல்வரான ஸ்ரீமந் ஞானசம்பந்தப் பெருமானும், சைவ

சந்தானசாரியருள் முதல்வரான ஸ்ரீமந் மெய்கண்ட தேவரும் உப தேசித்தனர்கள். இச்சைவஉபய தீபங்களான இவ்வாசிரியன்மார் இருவருள் ஞானசம்பந்தப்பெருமான் இற்றைக்கு ஆயிரத்து இரு நூற்றைம்பது வருடங்களின் முன்னே சீர்காழி என்னுந் திவ்விய தலத்திலே அவதரித்தும், மெய்கண்டதேவர் இற்றைக்கு 650 வருடங்களின் முன்னே மகாகவியான கம்பரை வைத்து ஆதரித்து இராமவதாரம் பாடுவித்த வெண்ணெய்நல்லூர்ச் சடையப்பபிள்ளை மகளார் மணிவயிற்றிற்றோன்றித் திருவெண்காட்டில் அவதரித்தும் சைவத்தின் அரிய பெரிய உண்மைகளைச் சருவ ஆன்மாக்களும் உய்யும்படி காட்டி நந்தாமணி விளக்குங்களாய்ப் பிரகாசித்தனர். சூரிய சந்திர அக்கினி என்னும் மூன்று விளக்கங்களும் உலகத்திலே பரவிய பூதவிருளை விலக்கி எம்முடைய ஊனவிழிகளை மாத்திரம் விளக்குகின்றன. இந்நந்தாமணி விளக்கங்களான ஆசிரியன்மார் இருவரும் எம் அகத்தேபரவிய ஆணவவல்லிருளை ஒட்டி எம் ஞானக்கண்களைத் திறப்பித்துச் சிவபெருமான் திருவருட்பேற்றைப் பெறுவிக்கின்றனர். அன்பர்களே! ஞானசம்பந்தப் பெருமானும் மூன்று வயதிலே சிவனருள் நிரம்பப்பெற்றார். மெய்கண்டதேவரும் மூன்று வயதிலே சிவனருள் நிரம்பப் பெற்றார். ஞானசம்பந்தர் தம் மூன்றாம் ஆண்டிலேயே தோத்திர ரூபமான திருப்பதிகங்கள் கட்டளையிட்டு வைதிக வழியை விளக்கி யருளினார், மெய்கண்ட தேவர் தாமும் மூன்றாம் ஆண்டிலே சாத்திரரூபமான சிவஞானபோதங் கட்டளையிட்டு ஆகமவழியை விளக்கி யருளினார். வேதம் சூத்திரம் போலப் பொருட் சுருக்கமுடைத்தாய்ப் பொதுவுற நிற்பது, ஆகமம் அச்சூத்திரத்திற்குரைபோலப் பொருட் பெருக்க முடைத்தாய்ச் சிறந்து நிற்பது. இது,

'வேதமொ டாகமம்' என்னுந் திருமந்திரத்தானும்உணரப்படும். அவை யவ்வாறிரண்டா யிருப்பினும் பொருள் முடிபால் ஒன்றே யாமென்பது சைவ பாஷியகாரரான ஸ்ரீ நீலகண்டர் "వయం తువేదశివాగమయోర్భేదం" என்றுரைத்தமையால் விளங்கும். இது போல, ஞானசம்பந்தர் திருவாக்கான வேதமும் மெய்கண்ட தேவர் திருவாக்கான சிவஞானபோதமும் போதிக்கு முறையால்இருதிறப் படினும் பொருள் முறையால் ஒன்றென்பது பெறப்படுமென்க. அது நிற்க. அவ்விருவருங் குழந்தையாயிருந்த பருவத்திலே திராவிட

வேதமும் திராவிட ஆகமமும் தோன்றிய முறைமை அதி ரகசியார்த் தங்களை உள்ளடக்கி நிற்கின்றது. காமவெகுளி மயக்க மென்னும் திரிமல வலியுஞ் சிறிதுந் தோன்றப்பெறாத பருவஞ் குழந்தைப் பருவமேயாம். அப்பருவமொன்றே அதி பரிசுத்தமான திராவிட வேத சிவாகமங்கள் தோன்றுதற் குரிய தாகலின் அப்பருவத்திலே அவர்க்கு அவை தோன்றுவவாயின. இன்னும் அவர்க்கு மூன்றாம் ஆண்டிலே அவை தோன்றின என்பதனால் பதிபசுபாசம் என்னும் மூன்றிற் பசுபாச நிலைகழன்று பதிநிலையில் நின்றபொழுது அப்பதி வாக்கியங்கள் தோன்றின வென்றும், அவர் அப்போது சத்துவம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களிற் றாமத இராசதங்களைக் கடந்து சுத்தசத்துவத்திலே நின்றனரென்றும், சுத்தம் அசுத்தம் சுத்தாசுத்தம் என்னும் மும்மாயையுட் பின்னிரண்டனையுங் கழித் துச் சுத்தமாயையிலே நின்றனரென்றும் அறியப்படும். இன்னும் ஞானசம்பந்தப் பிள்ளையார்க்குப் பரமேசுவரர் பார்வதி சமேதராய் எதிர்தோன்றிப் பிள்ளையார்க்கு அழுகைதீர்ப்ப அம்மையார் அரு மைத் திருமுலைப்பாலைப் பிள்ளையார்க்கு ஊட்டினார் என்பதனால், சத்திசிவத்தைத் தியானிக்கும் உறைப்பினாலே பாம்புமண்டலித் தாற்போலச் சுரித்துக்கொண்டிருக்கின்ற சுத்தமாயை யென்னுங் குண்டலி சத்தியானது சிவாக்கினியாற் கண்விழித்து நாததத்துவத் தின் மேற்கண்ணதான அமிழ்ததாரையைச் சென்றுபற்ற அப் போது ஒழுகும் அவ்வமிழ்த தாரையினைப் பருகிச் சுத்தசிவானந் தத்திலேநிருவிகற்ப சமாதிகூடி நிற்குமாறு உணர்த்தப்பட்டபடியாம். எதிர்தோன்றிய உமாமகேசுரரே தியானிக்கப்படும் சத்தி சிவமாம். அத்தியானவுறைப்பின்கட் டோன்றும் சிவாக்கினியே பொற்பிர காசமாம்; பொன் அக்கினியின் கூறென்பது தருக்க சாத்திரியாரா கிய அன்னம் பட்டர்க்கும் உடன்பாடு. அப்பொற் பிரகாசத்தோடு கூடிய கிண்ணத்தின் வட்டவாய் வடிவே மண்டலித்திருக்கும் குண் டலி சத்தியாம். அக்கிண்ணத்திற் கறந்தூட்டப்பட்ட திருமுலைப் பாலே நாததத்துவத்தின் மேற்கண்ணதான சந்திர மண்டலத்தி னின்றுருகி ஒழுகும் சிவானந்த அமிழ்த தாரையாம். அவ்வமிழ்த தாரையைப் பருகித் தசநாடியினும் பூரிப்பவே தச நாதங்களுங் கேட்குமாகலின் அத்தசநாத சொரூபமே ஞானசம்பந்தப் பிள்ளை யார் அருமைத் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களாம். அசு த்தமாயையிற் றோன்றும் அசுத்த வர்ண ரூபமான மற்றையோர்

வாக்குப்போலாது, ஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாக்குகள் பரவ யிந்துவத்தின் கண்ணே தோன்றிய பிரணவ விகாசமாகும். இதனை அறிவித்தற் பொருட்டே பிள்ளையார் தம்முடைய முதற்பதிகத்திலே 'தோடுடைய செவியன்' என்று கட்டளையிட்டுமுதற்கண்ணே பிரணவத்தை நிறுத்தி யருளினர். இவ்வாறே மெய்கண்டதேவர்தம் சிவஞானபோதத் திருவாக்குஞ் சுத்தவயிந்தவத்திற் றேன்றிய பரநாத வொலிகளாம். இன்னும் இவற்றின் நுட்பங்களெல்லாம் ஞானகுரவனை யடைந்து அவனறிவுறுக்கும் உபதேச வாயிலான் அறியற் பாலனவாகலின் அவற்றை யினி இங்கு விரியாது விடுக்கின்றாம்.

இதுகாறும் உபக்கியசித்தமையால் முதலிற் சைவமென்பது யாது என்று விசாரிக்கப் புகுந்து சமயஞானம் என்பது அழிந்து போகும் திரவியம் போலாது அழியாத் திரவியமாய் எல்லாச் சீவர்களுக்கும் தொன்று தொட்டே உள்ளத்திற் பதிந்திருக்கின்றதென்பதும், சமயம் என்பது பொழுது, காலம், அவசரம் என்று பொருள் படுவதாகலின் இக்காலத்தினுலும் இடத்தினுலும் வரையறுக்கப்படுதல் ஏகதேசவியாபகமுடைய சீவான்மாவுக்கன்றிப் பரமான்மாவுக்கு இல்லையென்பதும், சீவான்மா பரமான்மாவென இரண்டில்லை பரமான்மாவே பஞ்சேந்திரிய சலனத்தாற் சீவான்மாப்போலத் தோன்றுகின்றதென்று கூறும் ஏகான்ம வாதவுரை சீவஆன்மாவின் அறிவின் சையோகமின்றி இந்திரியங்கள் இயங்கமாட்டா என்று காட்டப்படுவதனுல் மறுக்கப்படுதலின் அது பொருந்தா தென்பதும், இங்ஙனஞ் சீவான்மா பஞ்சேந்திரியங்கள் வாயிலாய் விடயிக்குங்காலங்களெல்லாம் அதற்குத் தனித்தனியே ஒவ்வோர் அவசரங்களாமென்பதும், அங்ஙனம் விடயிக்கும்வழியும் சீவான்மாவிற்கு யாதானுமோர் இந்திரியத்தின் வழிவரும் இன்பத்திலேயே பிரியம் மிக்குப் படுமென்பதும், அங்ஙனமெல்லாம் மிக்குச் செல்லுகின்ற ஆன்மாவின் அவசரபேதங்களைச் சமயங்கள் என்று வழங்காமை அவை சரீரத்தோடு அழிதலினுலேயா மென்பதும், அந்தர் முகமாகச் செல்லும் மானசிக விசாரணையே சமயமாவதற்குரியதா மென்பதும், அவ்வாறு செய்யப்படும் அந்தர்முக மானசிக விசாரணையும் பலதிறப்படுகின்றன வென்பதும், அவையே உலோகாயதம் முதலிய பெயர்களான் வழங்கப்பட்டன வென்பதும், அவை யொவ்வொன்றும் உபகாரமுடை

யனவே யல்லது பயனற்றனவாகா வென்பதும், இதுவேமுடிநிலையி லுள்ள சைவத்தின் சமரச உண்மையா மென்பதும், இனி அம்முடி நிலைக்கண் உள்ளார்க்குக் கீழ் நிலைகளினுள்ளன போலியாகத்தோன் றுதல் குற்றமாகா தென்பதும், இனிச் சைவமென்பது சிவசம்பந்த முடைய தென்பதும், சிவமென்பது தொல்காப்பியர் நச்சினார்க்கினி யர் ஸ்ரீமந் மணிவாசகப் பெருமான் முதலிய பேரறிவாளரால் விளக் கப்பட்ட தத்துவங்கடந்த அருவப்பொருளா மென்பதும்,இத்தகைய பரப்பிரமப்பொருளை விசாரித்த அவசரமே சைவசமயமா மென்ப தும், அப்பரப்பிரமப்பொருளைச் சிவம் என்று வழங்குதலே வேதாகம முதலிய தொன்னூற் கருத்தா மென்பதும், இப் பெற்றியதான அப் பரப்பிரம சொரூபத்தை ஒரோவொரு கால் வேறுவேறு பெயரிட்டு வழங்கினும் அது சைவத்திற்கு இழுக்காவதில்லை யென்பதும், இங் ஙனஞ் சமரச வுண்மையும் சிவகாருணியமும் விளக்க வந்த இரண்டு சைவதீபங்கள் ஸ்ரீஞான சம்பந்தப் பெருமானும் ஸ்ரீமெய்கண்டதேவ ருமாவ ரென்பதும், இவர் இருவரும் அற்புத அருள் மூர்த்திகள் என்பதற்கு அவர் சரித்திரங்களிலுள்ள அந்தரங்க அர்த்தங்களே சான்று மென்பதும் இதன் கண்ணே தொகுக்கப்பட்ட பொருள்க ளாம். ஓம்சிவாயநம, ஓம்சிவாயநம, ஓம்சிவாயநம.



இரண்டாம் உபந்நியாசம்

# சிவஞானபோதம்.

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வர்
ஓதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்"

இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதங்கள் நான்கும் இங்கே பசுவாக உருவகஞ் செய்யப்பட்டன. பசுவினுடைய தேகத்தில் என்பு தோல் நரம்பு இரத்தம் சுக்கிலம் மூளை மச்சை என்னுஞ் சத்ததாதுக்களே பெரும்பகுதியாய் நிற்ப, இவற்றின் சாரமாகிய பாலமிழ்தம் மிகவுஞ்சொற்பமாயிருப்பதாகும். வேதத்துள்ளும் முப்பத்தாறு தத்துவங்களுட்பட்டுச் சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மாயாகுணவயப் பட்டவரான காரியமூர்த்திகளின் உபாசனைகளே பெரும்பான்மையுஞ் சொல்லப்பட்டுக் காரணமூர்த்தியும் தத்துவங்களைக்கடந்த பரப்பிரமமுமான சிவோபாசனை சிறுபான்மையே குறிக்கப்பட்டிருக்கும். இனிப்பசுவின் சரீரத்தின் கண்ணவான அச்சத்த தாதுக்களும் நமக்குப்பயன்படுதலின்றி அவற்றின்சாரமாகிய அமிழ்தமே நமக்குப் பயன்படுதலுடைத்தாம். வேதத்தின் கண்ணவான காரியமூர்த்திக ளுபாசனையும் நமக்குச் சிவானந்தப்பேரின்ப முத்தியினைத்தருதற்குப் பயன்படுதலின்றி, அவ்வேதத்தின் சிரத்தானமாய்விளங்குஞ் சிவோபாசனையே அப்பேரின்பமுத்தியினை நமக்குப் பயப்பிக்கும் ஆற்றலுடைத்தாம். அற்றாயினும், பசுவின்சரீரத்தின் கண்ணவான அச்சத்ததாதுக்களும் அவ்வமிழ்தத்தினைச்சுரப்பித்து ஒழுகுவித்தற்கு இன்றியமையாது வேண்டப்படுஞ் சாதனங்களாதல்போல, வேதத்தின்கண்ணவான அக்காரியமூர்த்திகளுபாசனையும்மந்தம், மந்ததரம், தீவிரம் என்னுந் தாழ்ந்த பக்குவத்தின் கண்ணராய்ப் பரஞானப்பேறின்றிப் பாசஞானபசுஞானங்களாம் அபரஞானம்மாத்திரம் வாய்க்கப்பெற்றுடையார்க்குப் பயன்தருவனவாய்

அந்நெறியே அவர் அறிவினை முதிர்விக்துப் பரஞானம்பெறுதற்குரிய மேல்நிலைக்கண்ணே செலுத்துமாகலான் அவையும் அம்மந்தபக்குவமுடையார்க்கு வேண்டற்பாலனவேயாம். வேதத்துள் அன்னமே பிரமம் தேகமேபிரமம் இந்திரியங்களேபிரமம் அந்தக்கரணங்களே பிரமம் பிராணனேபிரமம் விஞ்ஞானமேபிரமம் சீவான்மாவேபிரமம் என்றுள்ள வாக்கியங்களெல்லாம் இக்கருத்துப்பற்றியே எழுந்தனவாம். இங்ஙனங் கீழ்ஒன்றுசொல்லி மேல்ஒன்றுசொல்லி முறைமுறையே உயர்ந்தசிதிபற்றிச் செல்லுங்காலத்துக் கீழ்க்கீழ் நின்ற வாக்கியங்களெல்லாம் மேன்மேற் செல்லும் வாக்கியங்களான் மறுக்கப்பட்டுப் பூருவபக்கமாய் ஒழியுமாதலால் மேல்நிலைக்கண்முடிவாய் நின்றவாக்கியம் ஒன்றுமே சித்தாந்தமாக நிலைபெறுவதாம். தேகமே பிரமமென்ற கீழ் நின்றவாக்கியம் அதன்மேற்செல்லும் இந்திரியமே பிரமமென்ற வாக்கியத்தான் மறுக்கப்படுதலும், அஃது அதன் மேற் செல்லும் அந்தக்கரணமே பிரமமென்ற வாக்கியத்தான் மறுக்கப்படுதலும், அஃது அதன்மேற் செல்லும் பிராணனே பிரமமென்னும் வாக்கியத்தான் மறுக்கப்படுதலும், அஃது அதன் மேற் செல்லும் விஞ்ஞானமே பிரமமென்பதனால் மறுக்கப்படுதலும், அஃது அதன் மேற்செல்லும் சீவான்மாவே பிரமமென்பதனான் மறுக்கப்படுதலும் உய்த்துணரவல்ல நன்னிலையுடையார்க்கு, இவையெல்லாவற்றையும் ஒருங்கே சேர்த்து "సర్వమిదం బ్రహ్మావిష్ణురుద్రేంద్రాస్తేసంప్రసూయం తేసర్వాణిచేంద్రియాణిసహభూతైర్న కారణం కారణానాం ధ్యాతా కారణంతు ధ్యేయస్సర్వైశ్వర్యసంపన్నస్సర్వేశ్వరశ్శంభు రాకాశమధ్యే ధ్రువం స్తబ్ధ్వాధికం" என்னும் அதர்வசிகோபநிடத மந்திரமானது "இவை யனைத்தும் பிறக்கின்றன. இப்பிரமன் விண்டு உருத்திரன் இந்திரனென்னும் அவரெல்லாம் பிறக்கின்றனர், பூதங்களோடு இந்திரியங்களெல்லாம் பிறக்கின்றன, காரணங்களைத் தோற்றுவிப்பானும் தியாதாவுமான காரணன்றான் பிறப்பானல்லன், காரணப்பொருளும் ஐசுவரிய மனைத்தையுமுடையானும் அனைத்திற்கும் ஈசுரனுமான சம்புஆகாய நடுவிற்றியானிக்கப்படும்" என்று அக்காரியப்பிரமோபாசனைகளையெல்லாம் மறுத்துத் தான் ஒன்றாற் காரியப்படுவானல்லனாய்த் தான் எல்லாவற்றையுங் காரியப்படுத்துவானாய்த் தனக்குமேற்காரண மொன்றின்றித் தானே யனைத்திற்குங்காரணனாய் எல்லாம்வல்லமுழுமுதற் பொருளாய்த் தத்துவங்கடந்ததாயுள்ள சிவபரம்பொருளே சிதா

காயமத்தியிற் றியானிக்கப்படுவதென்று நிச்சயப்படுத்தியதன் உண்மை இனிதுவிளங்கும். அல்லதூஉம், வேதங்கள் ஒவ்வொன்றும் கருமகாண்டம், உபாசனகாண்டம், ஞானகாண்டம் என்னும் மூப்பகுதியாய்ப் பிரிக்கப்பட்டு விளங்கும். இவற்றுட் கருமகாண்ட உபாசனகாண்டப் பகுதிகளே நிரம்பவும் மிகுதியாய் விரிந்துகிடப்பதல்லாமல் ஞானகாண்டப்பகுதி மிகவுஞ்சொற்பமாய்ச் சுருங்கிக்கிடக்கும். ஞானகாண்டத்திற்குரியாராக ஆன்மாக்களைப் பக்குவப்படுத்தி விடுக்கும் அம்மாத்திரையேயன்றித் தம்மிற்றாமே பிரயோசனந்தருவதில்லாத கருமகாண்டப்பகுதிகளும் உபாசனகாண்டப்பகுதிகளும் மிகுதியாயிருத்தலினாலும், அவ்வேதங்கள் தம்மிற்றாம் பயன்றருவதின்றிப் பாலைச்சுரப்பிக்கும் அம்மாத்திரையே பயன்படுதலுடைய சத்ததாதுக்களாற் கட்டப்பட்ட பசுவினோடு உவமிக்கப்படுவனவாயின. அற்றாயினும் அக்கீழ்நிலையிலேயுள்ள அச்காரியப் பிரமோபாசனைகள் ஒன்றினொன்றேற்ற முடையனவாய் மேனிலைக்கண்ணதான காரணப் பிரமோபாசனைக்குச் சோபானங்களாய் நிலைபெறுவனவா மாதலால் அவையெல்லாம் நம்மாற்பெரிதுங் கௌரவிக்கற்பாலனவேயாம். ஒரு பருவதத்தின் முகட்டிற்செல்ல வேண்டுவானுக்கு அடிவாரத்திலிருந்து வெட்டப்பட்டிருக்கும் படிக்கட்டுகள் ஒவ்வொன்றும் அவன் மேலேறிப்போவதற்கு இன்றியமையாது வேண்டப்படுதல்போல அவையொவ்வொன்றும் ஆன்மாக்களின் அறிவுவளர்ச்சிக்கு அவசியமாவனவேயாம். அற்றாயினும் ஒருசிலர் ஓரிரண்டு படிகளின்மேற் சென்றமாத்திரையானே சலிப்புற்று மேலேறிச்செல்லுதற்குரிய ஆற்றலில்லாமையினாலே அப்படிக்கட்டுகளின் பக்கத்திலுள்ள மலைப்பாறையின் அமைதிகளைப் பார்த்து வியந்துகொண்டு அதுவே சிறந்ததென நின்றுவிடுதல்போல, ஒவ்வோர் பக்குவமுடைய சீவான்மாக்கள் தத்தமக்கறிவு எட்டியவரையில் உபாசிப்பதற்கு ஏற்றகாரியப்பிரமங்களையே காரணப் பிரமமென விபரீதமாயுணர்ந்து அம்மாத்திரையின் நின்றுவிடுகின்றனர். இங்ஙனம் அம்மலையின் இடை யிடையே தங்கி யொழிவார் பெரும்பாலராக, அதன் முகட்டில் ஏறி அங்கே சுவர்ணமயமாய்க் கட்டப்பட்டிருக்குங் களஞ்சிய அறைகளைத்திறந்து அங்குள்ள அரிய பெரிய நவரத்தின பொக்கிஷங்களை அனுபவிப்பார் மிகச்சிலரேயாதல்போல அவ்வேதங்களின் கீழ்ப்பாகங்களில் சொல்லப்பட்ட காரியப்பிரம வழிபாட்டின்கண்ணே நின்றொழிவார் பலராக, அவற்றையெல்லாந் தாண்டிப்போய் வேதசிரசாய் விளங்கும்

சிவபரம் பொருளைத் தலைக்கூடுவார் அதிதீவிரபக்குவமுடைய ஆன்மாக்கள் மிகச்சிலரே யாவர். இவ்வாறு சாத்தியமான சிவப்பிரமத்தை யடைதற்குரிய சாதனங்களாங் காரியப் பிரமோபாஸ்தியையே சாத்தியமாய்த் துணிந்து பலர் மயங்குதல் பற்றியன்றே ஸ்ரீமத் குமரகுருபரசுவாமிகள்.

"நீயே, வேதமென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவமதனிற் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண் டுவந்தனர்பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர்பலரே தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர்கொண்டுகொண் டுவந்தனர்பலரே
அவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆராவின்ப வருங்கனி பிழிந்து
சாரங்கொண்ட சைவசித்தாந்தத்
தேனமுதருந்தினர் சிலரே" என்று அருளிச்செய்வா ராயினர். ஆகையினால், அதிதீவிர பக்குவமுடைய ஆன்மாக்கள் ஒரு சிலரையன்றி ஏனையோரை யெல்லாம் பொருளிதுவென்றுபுலப்படக் காட்டாமல் மயக்கிக்கொண்டிருத்தல் பற்றியே அவ்வேதங்களை மயக்க நூல் என்றும், பலவகைப்பட்ட சீவபேதங்களையே ஆண்டாண்டுப் பிரமம் என்றும் பதிப்பொருள் என்றும் கூறுதல்பற்றியே அவற்றைப் பசுநூல் என்றும் அறிவுடையோர் வழங்குவாராயினர். துவிதீய சமயாசாரியசுவாமிகளான திருநாவுக்கரையரும்,

"வேதமோ திலென்சாத்திரங் கேட்கிலென்
நீதிநூல் பலநித்தல் பயிற்றிலென்
ஓதியங்கமோ ராறு முணரிலென்
ஈசனை யுள்குவார்க்கன்றி யில்லையே" என்று திருவாய்மலர்ந்தருளியதூஉம், அற்புதவைராக்கிய சுத்த சிவஞான சிரேட்டரான பட்டினத்துப்பிள்ளையார்.

"நீற்றைப்புனைந்தென்ன நீராடப்போயென்ன நீமனமே
மாற்றிப்பிறக்க வகையறிந்தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக்கிடக்கும் எழுகோடி மந்திர மென்னகண்டாய்
ஆற்றிற்கிடந்துந் துறையறியாமலலைகின்றையே" என்றருளிச்

செய்ததூஉமென்க. இங்ஙனம் அதிதீவிரபக்குவ முடையார்க்கன்றி ஏனையோர்க்கவை பயன்படாமை மேலெடுத்துக் காட்டிய பசுவுவமையானும் இனிது பெறப்படுவதாகும். யாங்ஙனமெனில், பசுவின் உடம்பிற் சாரமாய் வியாபித்திருக்கும் அமிழ்த சத்துக்கள் அப்பசு தானீன்ற கன்றைக்கண்டான் மாத்திரம் புலப்பட்டுப் பாலாய்ச் சுரந் தொழுகுவதல்லது, வேறொரு வாற்றானும் வெளிப்படுதலில்லை. அதுபோல் அதிதீவிர பக்குவமுடைய ஆன்மாவென்னுங் கன்றைக் கண்டான் மாத்திரம் வேதம் என்னும் பசு தன்கண் அதிசூக்குமமாய் வியாபித்திருக்கின்ற சிவம் என்னும் அமிழ்தத்தைப் புலப்படக் காட்டி ஊட்டுமல்லது பிறஅபக்குவரைக்கண்டால் ஒரு சிறிதாயினும் அதனைக்காட்ட மாட்டாதாகலின் அவ்வேதத்தினை அறிவுடையார் மயக்கநூலென்றும்வஞ்சனைநூலென்றுங்கூறியது இழுக்கன்றென்க. வேதநூலாற் சிவம் எளிதினறியப்படாதது பற்றியே

"மறையினு னயனுன் மாலான் மனத்தினன் வாக்கான் மற்றுங்
குறையிலா வறிவினாலுங் கூறொணு தாகிநின்ற
இறையனார் கமலபாத மின்றியா னியம்புமாசை
நிறையினோர் குணத்தோர்க்கெல்லாம் நகையினை நிறுத்துமன்றே"

என்னுந்திருவாக்கு மெழுந்தது.

"பூதங்களல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ளமதியின்
பேதங்களல்ல வினையன்றி நின்ற பிறிதல்லவென்றுபெருநூல்
வேதங்கிடந்து தடுமாறு வஞ்சவெளியென்பகூடன் மறுகிற்
பாதங்களோவ வழையிந்தனுதி பகர்வாரை யாயுமவரே" என்னும்

ஆன்றோர்திருவாக்கும் இக்கருத்தினையே போதிப்பதொன்றாம்.

இனி இங்ஙனம் வஞ்சனையாற் சிவத்தை அதியிரகசியமாய் வைத்து அதிதீவிர பக்குவமுடைய அதிகாரிகட்கு மாத்திரம் மின் மினிவிளக்கம்போற் காட்டுவதாகிய வேதம் என்னும் பசுவிற் கறந் தெடுக்கப்படுகின்ற பாலே ஆகமங்கள் என்று மேலைத்திருவாக்கினுல் நன்குணர்த்தப்பட்டது. ஆகமங்கள் இருபத்தெட்டாம். அவைகாமி கம் யோகஜம் சிந்தியம் காரணம் அஜிதம் தீப்தம் சூக்குமம் சகத்திரம் அஞ்சுமான் சுப்பிரபேதம் விசயம் நிசுவாசம் சுவாயம்புவம் அனலம் வீரம் இரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் விம்பம் புரோற் கீதம் இலளிதம் சித்தம் சந்தானசருவோத்தமம் பாரமேசுரம் கிர ணம் பேதம் வாதுளம் என்பனவாம். வேதங்கள் நான்கினும் மிகவும்

சுருக்கமாய் வைத்துக் குறிக்கப்பட்ட சிவம் ஒன்றனையே இவ்விருபத்தெட்டாகமங்களும் மிகவிரித்து விளக்குவதன்றி வேறொன்றனையுங் குறியாமையால் அவைமுழுவதூஉம் பாலாக உருவகஞ்செய்யப்பட்டது நிரம்பவும் பொருத்தமேயாம். அற்றேல், வேதத்தின் பிராணனாய்வைத்துச் சுருக்கிச சொல்லப்பட்ட அச்சிவ பரம்பொருளை இங்ஙனம் இருபத்தெட் டாகமங்களால் விரிக்க வேண்டிற்றென்னையெனின்;—இந்த அண்டத்திலுள்ளனவும் இப்பிண்டத்திலுள்ளனவுமான சருவ பதார்த்தங்களும் ஒருவரம்பினுட்பட்டனவாகலான் அவையெல்லாம் ஆன்மவறிவினால் அளந்துரைக்கப்படுவனவேயாம். சிவம் என்னும் பரம்பொருள் அண்டபிண்டங்களிரண்டினுமொன்றன்றாய்ச் சீவவறிவுக்குச சிறிதும் புலப்படாத அகோசரப்பொருளாகலின், அதுதன்னை ஆராய்ந் துரைக்கப்புகுந்த அச்சிவாகமங்களும் அங்ஙனம் வரம்பின்றி விரிந்தன. இச்சிவாகமங்கள் இருபத்தெட்டேயன்றி இவற்றிற்குக்கிளையாவனவும் அவற்றின் பேதங்களும் பலப்பலவாய் விரிந்திருக்கின்றன. இவ்வாற்றால் வேதங்களுட் சிவோபாசனை சுருக்கப்பட்ட பாகங்கள் சூத்திரம்போலப் பொருட்செறிவுஞ் சுருங்கிய சொற்கோப்புமுடையனவென்றும், சிவாகமங்கள் அச்சூத்திரப்பொருளை விளக்கவெழுந்த விருத்தியுரைபோல்வன வென்றும் இனிதறியப்படும். சொற்சுருக்கமுடைமையினாற் பொருள் பலதிறப்படப்போதிக்கும் அவ்வேதங்கள் பொதுவென்றும், அதனை அவ்வாறாகவொட்டாது அம்மெய்ப்பொருளைக் கரதலாமலகம்போற் காட்டும் உரைகளான அச்சிவாகமங்கள் சிறப்பென்றும் ஆன்றோரான் வழங்கப்பட்டன. இதற்கிவ்வாறன்றி வேதங்கள் மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என்னும் எல்லாவதிகாரிகட்கும் பொதுப்பட எல்லாம் போதிக்குமாறுபற்றிப் பொதுவெனவும், சிவாகமங்கள் அதிதீவிர பக்குவமுடையார்க்குமாத்திரம் சிறப்புடையவாய் ஒரே பொருளை வலியுறுத்துப் போதிக்கின்றமையின் சிறப்பெனவும் வழங்கப்பட்டன வென்று அவ்வாறு கோடலுமொன்று. இது சிவராஜயோக கைவல்லிய சிவானந்தானுபவ சருவைசுவரிய சம்பன்ன சிரேட்ட சிவஞானகுருபகவானான திருமூலர்

"வேதமொ டாகமமெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதனுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க் கபேதமே" என்றருளிச்செய்த

மையானும், வேதாந்த சூத்திர சைவபாடியகாரரான நீலகண்டர் వయంతు వేదశివాగమయోర్భేదం నపశ్యామః என்று கூறினமை யானும் நன்கு பெறப்படும். ஆகவே, பசுவைக்காட்டினும் அப்பசுவினின்று பெறப்படும் சுத்தவமிழ்தமாகிய பாலே சிறப்புடைத்தாதல் போல, அவ்வேதத்தைக் காட்டினும் அவ்வேதத்தின் சாரமாகிய சிவாகமங்களே சிறப்புடையவாகும். 'சித்தாந்தம் வேதசாரத்வாத்' என்றவாக்கியமும் இதனை வலியுறுத்துவதாகும்.

இனிப், பசுவினின்றுங் கறந்துகொள்ளப்படும் பால் திரவ ரூபமாய் நெகிழ்ந்திருத்தலால் அதனைக்காய்ச்சி யதன்கண் உள்ள நீரைப் போக்கிக்கடைந்த வழி அதன்கண் உள்ள சாரமெல்லாம் ஒருங்கு திரண்டு நெய்யாய் எழுதல் போல, வேதசாரமாய் விளங்கும் அச்சிவாகமங்களும் சரியாகாண்டம் கிரியாகாண்டம் யோககாண்டம் ஞானகாண்டம் என நால்வகையாய்ப்பகுக்கப்பட்டு ஆராய்ந்தறிதற்கு அருமையுடையனவாய் மிகவிரிந்து கிடத்தலின் அவையும் நெகிழ்ந்த பக்குவமுள்ளனவா மாகவே அவற்றின்கண் உள்ள சரியை கிரியை யென்றற் றொடக்கத்து வினை மூன்றுகாண்டப் பொருளையும் விடுத்து ஞானகாண்டப்பொருள் விசேடமாய் விளங்கும் துரியாதீதப்பொருளான சிவத்தைமாத்திரங் குழைந்துருகப்பாடித் திருஞான சம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசுகளும் சுந்தரமூர்த்திகளும் மாணிக்கவாசகப் பெருமானும் திருவாய் மலர்ந்தருளிய தேவார திருவாசகச் செந்தமிழ் நான்மறைகள் அச்சிவாகம சாரமாய்த்தோன்றி அவற்றினும் சிறப்புடையனவாம் என்க. தத்துவங்களுட்பட்ட எந்த மூர்த்திகளையும் பாடிற் றிலராய்ச் சிவமொன்றையே சைவசமயாசிரியன்மார் நால்வரும் துதித்த இரகசியவுண்மை சைவசமயிகளாற் பெரிதும் போற்றற்பாலதாம். இது நிற்க.

இனி, அப்பாலின்கட் சாரமாய்த் திரட்டி எடுத்த நெய்யினுட் சுவை இல்வழி அது பயன்படாமையால் நெய்யினும் அதன் இன்சுவையே சிறப்புடைத்தாம். சிவாகம ஞானகாண்டப் பொருட்கு ஞேயப் பொருளான சிவம் தன்னை யறியும் ஞானமில்வழி யான்மாக்கட்குப் பயன்படமாட்டாதாகலின் அச்சிவத்தினும் அதனை யறியும் ஞானமே விசிட்ட முடைத்தாம். ஆகவே, அச்சிவத்தை யுணர்த்தும் தேவார திருவாசகச் செந்தமிழ் நான்மறையினும், சிவஞானத்தைப் போதிக்குஞ் சிவஞானபோதமே மிகப்பெருஞ் சிறப்புடைத்தாம்.

அற்றாயினும், பசுவினின்று வேறு பிரித்தெடுக்கப்படும் பால்போல வேதத்தினின்றும் தாம்வேறாய்த் தனித்து நடைபெறுஞ் சிவாகமங்கள். அச்சிவாகமங்களேபோல இச்செந்தமிழ்ச் சிவஞானபோதமும் தான்வேறாய்த் தேவார திருவாசகச் செந்தமிழ் நான்மறைகளைவிட்டு நடைபெறுமோ வெனின்; அங்ஙனம் நடைபெறாது; எங்ஙனம் சிவமும் அச்சிவத்தை யறியும் ஞானமும் ஒன்றைவிட்டொன்று பிரியமாட்டாவோ அங்ஙனமே சிவத்தை யுணர்த்தும் தமிழ் நான்மறைகளும் சிவஞானத்தை யுணர்த்துஞ் சிவஞான போதமும் ஒன்றை விட்டொன்று பிரியமாட்டா. இரண்டும் அபேதமாகவே விளங்கும். இது மேற்காட்டிய உபமானத்தானும் பெறற்பாலதேயாம். நெய்யாகிய குணிப்பொருளும் அதன்கட் சுவையாகிய குணமும் ஒன்றைவிட்டொன்று பிரியாமற் றாதான்மிய சம்பந்தமுற்று அபேதமாக நிற்றல்போலத் தேவார திருவாசகங்களாகிய குணியும் அவற்றின் குணம்போல விளங்குகின்ற சிவஞானபோதமும் அபேத சம்பந்தமுற்றுப் பொலிவனவாம். வடமொழியில் வேதத்தைத் தழுவாமற்றாமே நடைபெறுந் தன்மையவாய் விளங்கும் சிவாகமங்கள்; இதுபற்றியே வாயுசங்கிதையில்,

"இருபத்தெட்டாகமந் தழுவா, தழிவிலாத சித்தாந்தத்தின் பகுதியா யமரும்" என்னும் வாக்கியம் எழுந்தது. இதுபற்றியே சிவாகமங்களை 'அச்ரௌதம்' என்று அறிவுடையோர் வழங்குவர். அச்ரௌதம் என்றால் சுருதி சம்பந்தமில்லாதது என்றர்த்தமாம். இப்பொருள் காணமாட்டாதார் ஆகமம் சுருதிவிரோத மென்பர். அது பொருந்தாமை முற்காட்டிய திருமூலர் திருவாக்கான் இனிது பெறப்படும்.

இனித் தெய்வச செந்தமிழ்ப் பாஷையிலேயுள்ள வேதங்களான தேவார திருவாசகங்களும், ஆகமங்களான திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞான போதமென்றற் றொடக்கத்தனவும் தம்முள் ஒன்றையொன்று விட்டு நீங்காவாய் நடைபெறுந் தன்மையவாம். வடமொழிக்கண்ணுள்ள வேதங்கள் கன்ம பாகங்களை மிக விரித்துக் கூறி அவலம்படுகின்றமையால் அவை சுத்தஞானமயமாயுள்ள சிவாகமங்களை முற்றுந்தழுவி நடைபெறுகின்றில. இனித்தமிழ் நான்மறைகளோ வெனின் சுத்தஞானவிசேட ஞேயப்பொருளாம் சிவத்தையே விடயமாய்க் கொண்டிருத்தலால், அவையும் சுத்தஞானத்தை

விடயமாகவுடைய சிவஞானபோதமும் தம்மிற் பெரிதொத்துப் பிரகாசிப்பவாயினவென்க.

தமிழ்ப் பாஷையில் இயற்றப்பட்ட பழைய செந்தமிழ் நூல்களெல்லாம் சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும்உடையனவாம். இலக்கண நூலாசிரிய ரெல்லாரும் நூல் அமைதிகளைப் பற்றிச் சொல்லுமிடத்து முதலிற் 'சுருங்கச் சொல்லல்' என்பதனையே சிறப்பாக வைத்து ஓதினர். அங்ஙனஞ் சுருங்கிய சொற்களால் தொடுக்கப்படினும் அவற்றின் பொருள் தெற்றெனை விளங்காநிற்கும். உதாரணமாகத் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த திருக்குறள் நூலைப் பாருங்கள்! அவ்வாசிரியர் தாம் விளக்குதற்கு எடுத்துக்கொண்ட பொருளை மிகவுஞ் சுருக்கமாகத் தெரித்தற்பொருட்டு எவ்வளவு சிறிய குறட்பாவினை எடுத்துக்கொண்டார்! அக்குறட்பாக்களெல்லாம் ஒன்றே முக்கால் அடிகளால் அமைக்கப்பட்டிருக்கின்றன. அப்பாவில் ஒவ்வொரு சொல்லும் பொருட் பயன் நிரம்பி விளங்குகின்றது. அப்பாவில் ஒரு சொல்லை எடுத்து விடினும் அது முழுவதூஉம் பொருள் பயவாது அழியும். வாயில் மேனிலை வரைத்துக் கட்டப்பட்ட ஒரு மாளிகை அம்மேனிலை மூலைக் கல்லினையே நிலைக்களனாய்க்கொண்டு நிற்கின்றது; அம்மூலைக் கல்லைப் பெயர்த்துவிடின் அக்கட்டிடம் எல்லாம் கீழ் விழுந்து நுறுங்கி அழிதல் திண்ணமேயாகும். அதுபோல, நாயனார் திருவாக்கான அச்செய்யுளில் ஒவ்வொருசொல்லும் ஏனையவற்றைத் தாங்கும் மூலைக்கற்போலப் பொருட்சாரமுற்றுப் பொருந்தி யிருக்கின்றது. அங்ஙனஞ்சொற்சுருக்கமுற்றுநிற்றலால்பொருள்புலப்படாமல் புதைந்து கிடக்கின்றதோவெனின், ஒரு சிறிதுமில்லை. ஒள்ளிய பளிங்குபோல் தெள்ளத் தெளிந்து நீர் ததும்பும் ஒரு தடாகம் மிக ஆழமுடையதா யிருப்பினும், அதன் அடிப்படையெல்லாம் காண்பார் கண்ணுக்கு இனிது விளங்கித் தோன்றல்போலவும், கண்ணாடி ஒன்றுதான் உருவத்தான் மிகச் சிறிதேயாயினும் அது தன்பக்கத்தே வானளாவித் தோன்றும் மாடமாளிகை முதலிய பேருருவத்தை யெல்லாம் தன்னுட் செறித்துத் தெளிவாய்க் காட்டுதல்போலவும் திருக்குறட்பாவின் பொருள் நன்கு புலப்பட்டுக் கிடக்கின்றது. இதுபற்றி யன்றோ கபிலர்,

"தினையளவு போதாச் சிறு புன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு

வள்ளைக் குறங்கும் வளநாடா! வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி" என்று உரைப்பாராயினர். அரிசிற் கிழாரும்

"பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேர—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல்லால்" என்று ஓதியதும் இதனை வற்புறுத்துதல் காண்க. இங்ஙனந் திருக்குறட் பாட்டுகள் சொற் சுருங்க அமைக்கப்படினும் பொருள் தெளிவாய்க் காட்டுதல், இவை தம்மை நாலடியார் செய்யுட்களோடு ஒப்பவைத்து நோக்கினுநன்கு புலப்படும். உதாரணமாக ஒன்று காட்டுவாம். நாலடியாரில்,

"தினையனைத்தே யாயினுஞ் செய்த நன்றுண்டாற்
பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்—பனையனைத்து
என்றுஞ் செயினும் இலங்கருவி நன்றோ
நன்றில நன்றறியார் மாட்டு" எனப் போந்த செய்யுட் பொருள் முழுவதும்

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன் றெரிவார்" என்னும் அருமைத் திருக்குறட் பாட்டில் அடங்குதல் காண்க. அவ்வாறு அடங்குதலே யன்றியும் அப்பொருள் இதன் கண் இனிது விளங்குதல் கற்றறிவில்லார்க்கும் புலனாம். "தினையனைத்தே யாயினுஞ் செய்த நன்றுண்டால்" என்னும் நாலடியார் செய்யுள் அடி "தினைத்துணை நன்றி செயினும்" எனுந் திருக்குறளடியிலும், "பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்" என்பது "பனைத்துணையாக் கொள்வர் பயன் றெரிவார்" என்பதிலும் அடங்குதல் காண்க. நாலடியாரின் மற்றிரண்டடிகளும் திருக்குறளில் அடங்கவில்லையாலெனின்;—'பயன்தெரிவார் பனைத்துணையாக் கொள்வர்' என்ற மாத்திரையிலேயே 'பயன்தெரியார் பனைத்துணைசெய்த நன்றியினையும் தினைத்துணையேனுங் கருதமாட்டார்' என்பது அத்திருக்குறட் பாவினுள் இனிது பெறப்படுதலின் அது வேண்டா கூறுதலேயாம். தானேயும் விளங்காத பொருளையேகூற வேண்டுமல்லது, எளிது புலப்படுவதனைக்கூறுதல் வேண்டா கூறலேயாம். உலகத்தின்கண் விரிந்து கிடக்கும் எல்லா நூல்களும் வேண்டா கூறுதலாகிய இக்குற்றம் பொருந்தப் பெற்றனவேயல்

ளாமல் பிறிதில்லை; மற்றுந் திருக்குறளும் சிவஞானபோதமும் எனும் இரண்டுமோ அக்குற்றம் சிறிதும் இல்லாதனவாம்.

அற்றேல், நாலடியார், சிலப்பதிகாரம் போன்ற வேறு உயர்ந்த நூல்களெல்லாம்பயன்படாவா வொழியுமோவெனின்;—ஒழியா; உலகத்திலுள்ள நூல்களெல்லாம் இயற்கைநெறி, செயற்கைநெறி என்னும் இருபகுதிகளிலே அடங்கும். 'இயற்கைநெறி' என்பது தான் கருதிய உண்மைப் பொருளை உள்ளவாறே சொல்லுதற்கு இன்றியமையாத வேண்டப்படுஞ் சொற்களால் நடை பெறுவது; 'செயற்கைநெறி' என்பது தான் கருதியதோர் உண்மைப்பொருளை உணர்த்துகின்றவர் கேட்போர் அறிவு அதிற் பற்றுந் திறந்தால் அவர்க்கு இசைய அப்பொருளோடு இணங்கிய வேறு சிலவற்றையுஞ் சேர்த்துப் பலசொல்லால் விரித்துக்கூற வருவது. 'இயற்கைநெறி' பற்றி எழுதப்படும் நூல்கள் நுண்ணறிவுடைய அதிதீவிர பக்குவமுடையார் பொருட்டும், 'செயற்கைநெறி' பற்றி எழுதப்படும் நூல்கள் மழுங்கிய அறிவுடைய மந்த பக்குவமுடையார்பொருட்டும்எழுந்தனவாகும். இனி உலகத்தில் மந்த பக்குவ முடையார் பலரும், அதிதீவிர பக்குவமுடையார் சிலருமாகலான் அவரவர் பொருட்டு எழுந்த செயற்கைநெறி நூல்கள் பலவும், இயற்கைநெறி நூல்கள் சிலவுமாயின. கசக்கும் மருந்துண்ணாத மகவுக்கு அதனை ஊட்டலுறுவாள் அது தன்னைப் பனைவட்டுத் துண்டிற் பொதிந்து ஊட்டியவழி அம்மகவு இன்சுவைத்தாகிய அதனை உண்டு நோய் தீர்ந்தவாறு போலவும், அறியாதான் ஒருவன் சேறு குழம்பிய தண்ணீரை உண்ணப்போதலைக் கண்டு இரங்கிய அறிவுடையான் தூரத்திற் றோன்றும் பேய்த்தேரைக்காட்டி 'அந்த நல்ல நீரைப் பருகு' என்று வஞ்சித்துக்கொண்டுபோய் ஒரு தடாகத்தில் நீர் ஊட்ட அவனுண்டு நீர் வேட்கை ஒழிந்தவாறு போலவும், உண்மை நுண்பொருளை உள்ளவாறே உணர்த்தினால் அறியமாட்டாத மந்த மதியுடையார்க்கு அதில் அறிவு செல்லும் வண்ணம் அப்பொருளைப் பலவகையால் அலங்கரித்துச் சான்றோர் பலநூல்கள் செய்வாராயினர். இயற்கையிலேயும் அழகுடையளாய் விளங்கும் ஒரு மங்கையைப் பல்வகை ஆடைஅணிகலங்களாற் புனைந்து சிறப்பித்த வழி அவள் அச்செயற்கை நலத்தால் ஆடவரைக் காமுறுத்தல்போல, அலங்கார நெறிபற்றி வரும் நூல்கள் மந்த பக்குவமுடையாரைப் பெரிதும் வசிகரிக்கு. மென்க.

மிகச் சிறந்த பழந்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தினுள் உணர்த்தப்படும் உண்மை நுண்பொருள்கள் சிலவேயாம்; இவ்வுண்மைகளை உலகத்தார்க்கு உணர்த்தி அறிவு கொளுத்தல் வேண்டி அவற்றைப் பலவாற்றால் அலங்கரித்து ஒரு பெருங்காப்பியம் இயற்றுவே மென அதன் ஆசிரியர் இளங்கோவடிகள்,

"அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை யுருத்துவந்தூட்டு மென்பதூஉஞ்
சூழ்வினைச் சிலம்பு காரணமாக

நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என்று பாயிரவுரை கூறியதனை உய்த்துணருங்கால் செங்கோன்முறை திறம்பினுரை அறக்கடவுள் கொல்லுதலும், கணவன் மாட்டு உண்மை யன்புடைய கற்புடை மகளிரைச் சான்றோரும் வழிபடுதலும், ஊழ்வினைப்பயன் உடையானை விடாது பற்றிவந்து பந்த முறுத்தலும் ஆகிய மூன்றுமே சிலப்பதிகாரம் முழுவதூஉம் விளக்கப்பட்ட நுண்பொருள்களாம்; இவை மூன்றும்,

"வெருவந்த செய்தொழுகும் வெங்கோலனாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்"

"பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ் சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு"

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" என்ற தெய்வத் திருக்குறட்பாக்கள் மூன்றினும் அடங்குதல் காண்க. உலகத்திலுள்ள எல்லா அறிவுநூற்பொருள்களும் திருக்குறளிலே காணக் கிடக்கும், திருக்குறளிலேயுள்ள பொருள்கள் எல்லாம் ஏனை நூல்களிற்காணப்படா; ஒரு சிலவே காணப்படும். திருக்குறள் ஏனை எல்லா நூற்பொருள்களும் தன் கண் ஏகதேசமாய் அடங்கத் தான் அவற்றுள் அடங்காது விரிந்த வியாபக இலக்கணமுடைத்தாம். இஃதுணர்ந்தே,

"எல்லாப் பொருளு மிதன்பால் உளஇதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்—சொல்லாற்

பரந்த பாவாலென் பயன் வள்ளுவனார்
சுரந்தபா வையத் துணை" என்று மதுரைத் தமிழ்நாயகனார் அதனை அங்ஙனஞ் சிறந்தெடுத்துக் கூறினார்.

இத்தகைப் பெருஞ் சிறப்பினதாகிய திருக்குறள் நூலைக் காட்டினும் மிகச் சுருக்கமான நூல் ஒன்று தமிழ்ப் பாஷையிலே உளதாயின் தமிழின் தெய்வச் சிறப்பு இத்துணைத் தென்று வரையறுத்தல் எலாதென்றாம். அத்துணைச் சுருக்கமான நூல் யாதோவெனின், அதுவே **சிவஞானபோதம்** என்னும் அரிய பெரிய தெய்வச் செந்தமிழ் ஞானநூலாகும். இது பன்னிரண்டு சூத்திரங்களுடையது; இப்பன்னிரண்டு சூத்திரங்களும் நாற்பத்தோர் அடிகளுடையன; இந்நாற்பத்தோரடிகளும் இருநூற்றுப் பதினாறு சொற்களுடையன; இவ்விருநூற்றுப் பதினாறு சொற்களும் அறுநூற்று இருபத்து நான்கு எழுத்துக்கள் உடையனவாம். தமிழ்ப் பாஷையிலே தெள்ளத் தெளிய வடித்து இறக்கிய ஞானசாத்திரங்களுக்கெல்லாம், பன்னிரண்டு சூத்திர வடிவினதாய் விளங்கும் இச்சிவஞானபோதமே முதல்நூல் அல்லது பிரதம கிரந்தமெனப் படுவதாகும். இந்நூற் பன்னிரண்டு சூத்திரங்களும் தடத்தம், சொரூபம் என இருபகுதியாய்ப் பகுக்கப்பட்டுள்ளன. தடத்தலக்கணம் முதல் ஆறுசூத்திரங்களானும், சொரூபலக்கணம் பின் ஆறு சூத்திரங்களானும் வகுத்து உணர்த்தப்பட்டன. தடத்தலக்கணங் கூறும் பகுதி பிரமாண இயல், இலக்கண இயல் என மறித்தும் இருவகையாய்ப் பகுக்கப்பட்டு ஒவ்வோர் இயலும் மும்மூன்று சூத்திரங்களுடையனவாய் விளங்கும்; சொரூபலக்கணப்பகுதியும் சாதன இயல், பயனியல் என மேலிருவகையாய்ப் பகுக்கப்பட்டு ஒவ்வொன்றும் மும்மூன்று சூத்திரங்களுடையனவாய் விளங்கும். எனவே, இப்பன்னிரண்டுசூத்திரங்களும் இருபகுதிகளாகவும் நான்கு இயல்களாகவும் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் பாகுபடுத்தப்பட்ட இச்செந்தமிழ் ஞானநூலிலே, உலகத்தில் வரம்பின்றி விரிந்து கிடக்கும் எல்லா நூன் முடிபுகளும் எல்லா ஞான முடிபுகளும் எல்லா அனுபவமுடிபுகளும் ஒருங்கமைந்து கிடந்தனவாயின், இவ்வரிய பெரிய நூற்பெருமையும் இதனை அருளிச் செய்த முதல் ஞானாசிரியர் மெய்கண்டதேநாயனார் பெருமையும் புழுத்தலை நாயினுங் கடையேமாகிய எம்முடைய சிற்றறிவினால் ஒரு சிறிதும் அளக்கப்படமாட்டா.

ஆயினும், எம் அரிய நண்பர்களே! இன்றெடுத்துக்கொண்ட விஷயம் ஒருவாறாயினும் புலப்படுதற் பொருட்டு அச்சூத்திரங்கள் பன்னிரண்டாலும் அறிவுறுத்தப்படும் நுண்பொருள்கள் இவை யென்று மாத்திரம் ஒருசிறிது ஈண்டுக் காட்டுவாம்.

"அவனவளதுவெனும் அவை" என்னும் முதற் சூத்திரம் சாருவாகர், பௌத்தர், சமணர், சாங்கியர் முதலாயினோர் கடவுள் இல்லையெனக் கூறும் நிரீசுரவாதத்தை மறுத்துக் காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுள் உண்டென்பதனை வலியுறுத்துகின்றது. அக்கடவுளும் இரணிய கருப்பவாதி பாஞ்சராத்திரவாதிமுதலியோரால் கொள்ளப்படும் கடவுளரில் ஒன்றாகாதென்றும், அநேகேசுரவாதி கூறுமாறுபோற் பலவாகாதென்றும், இவற்றிற்கெல்லாம் மேலாய்ச் சங்கார கிருத்தியத்தை நடத்துவதே அப்பரம்பொருளாய் நிலைபெறுவதென்றும் நன்கு விளக்காநிற்கின்றது.

"அவையேதானேயாய்" என்னும் இரண்டாம் சூத்திரம் சங்கார காரணனை முழுமுதற் கடவுளாற் சங்கரிக்கப்பட்ட உலகம் மீளவுந் தோன்றுதலை உணர்த்துகின்றது. இதன்கண் 'அத்துவிதம்' என்னுஞ் சொல்லிற்குக் கேவலாத்துவிதிகள், விசிட்டாத்துவிதிகள், துவைதிகளென்னும் மூவரும் தம்மிலே திரம்பிக் கூறிய பொருள்களெல்லாம் பொருந்தாமையும், சுத்தாத்துவிதப் பொருள் இலக்கணநெறி தருக்கநெறி சாத்திரநெறி முதலான எந்நெறியானும் பொருந்த முடைத்தாதலும் நன்கு உணர்த்தப்படுகின்றன. இனிப் பரிணாமவாதிகள் சன்மமில்லையெனக் கூறுதலும், கிரீடாப் பிரமவாதிகள் இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லையெனவும் ஈண்டே மறுக்கப்படுகின்றன. பொருளுக்கு அதன்சத்தி வேறென்னும் மீமாஞ்சகர் மதமும், பொருளுஞ் சத்தியும் ஒன்றேயென்னும் நையாயிகர் மதமும் பொருந்தாமை ஈண்டே காட்டப்படுகின்றன.

"உளதிலதென்றலின்" என்னும் மூன்றாஞ் சூத்திரம் காணப்படுகின்ற அசேதன சரீரத்தின் வேறாய் அதனை இயக்குஞ் சேதனப் பொருளாகிய ஆன்மா உண்டென்று நாட்டுகின்றது. இல்பொருளே ஆன்மா என்னுஞ் சூனியான்மவாதியும், உடம்பே ஆன்மா என்னுந் தேகான்மவாதியும், ஐம்பொறிகளே ஆன்மா வென்னும் இந்திரியான்மவாதியும், கனவுடம்பே ஆன்மா வென்னும் சூக்குமதேகான்மவாதியும், பிராணனே ஆன்மா வென்னும் பிராணான்மவாதியும்,

பிரமமே ஆன்மாவென்னும் விஞ்ஞானான்மவாதியும், எல்லாக் கருவி களும் ஒன்றுகூடிய கூட்டமே ஆன்மாவென்னும் சௌத்திராந்திகர் வைபாடிகர் முதலிய சமூகான்ம வாதிகளும் ஈண்டு மறுக்கப்படு கின்றனர்.

"அந்தக்கரணம்" என்னும் நான்காஞ் சூத்திரமும் ஆன்மா உண் டென்பதனையே வலியுறுத்துகின்றது. மேலை நடு-ஆம் சூத்திரத் திற் கூறாது எஞ்சிநின்ற அந்தக்கரணான்மவாதிகள் மதம் ஈண்டு ஆராய்ந்து மறுக்கப்படுகின்றது. ஆன்மா ஆணவமல முடைத்தாய் அறிவிழந்தமையும், மாயை அவ்வறிவைச் சிறிது விளக்குதற்குபகார முடைத்தாதலும் ஈண்டே உணர்த்தப்படுகின்றன. சாக்கிர முத லான ஐந்தவத்தைகளியல்பும் ஈண்டே காட்டப்படுகின்றன.

"விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு" என்னும் ஐந் தாம் சூத்திரம் 'ஆன்மாவும் அவ்வான்மாவுக்கு அறிவு விளக்கும் பிர கிருதியின் காரியமான ஐம்பொறி முதலானகருவிகளுமே அமையும், இவற்றின் வேறாகக் கடவுள் ஒன்று வேண்டாம்' எனச் சாங்கியர் கூறுதலை மறுத்து அவற்றை அதனோடு இயைவித்து உபகரிக்கின்ற முழுமுதற்கடவுள் இன்றியமையாது வேண்டப்படும் என வலி யுறு க்கின்றது. ஈண்டே ஈசுர வவிகாரவாதி மதமும் மறுக்கப்படு கின்றது.

"உணருருவசத்தெனின்" என்னும் ஆறாஞ் சூத்திரம் ஆன்ம அறிவால் அறியப்பட்டு நிலையின்றி அழிவது அசத்து என்பதூஉம், முழுமுதற்கடவுள் அங்ஙனம் ஆன்ம வறிவால் அறியப் படுவதன் றாகலின் அஃதழிவில்லாச் சத்தா மென்பதூஉம் வரையறுத்துப் பரம்பொருளியல்பு முற்ற அறிவுறுத்துகின்றது. முதல்வன் பிர பஞ்சத்தைப்போல் தருக்கவறிவா லறியப்படுவதேயாமென்னும் நையாயிகர் மதமும், அப்பரம்பொருள் அநிருவசனம் என்னும் மாயா வாதி மதமும், அதுதியானபாவனைக்கட் கோசரமாம் என்னும் யோகநூலார் மதமும், உயிர் மலநீங்கியவழி முத்தியிற் சிவனோ டொப்ப எண்குண முதலியன உடையவாம் என்னுஞ் சிவசமவாதி மதமும், முத்தியிற் சிவத்தோடு ஒன்றாய்ப் போவதே உயிரென்னுஞ் சிவாத்துவித சைவர் சுத்தசைவர் முதலியோர் மதமும் ஈண்டெடு த்து மறுக்கப்படுகின்றன.

"யாவையுஞ் சூனியம்" என்னும் ஆறாஞ்சூத்திரம், மேலைச் சூத்திரத்தால் சத்தாவது சிவம் அசத்தாவது பிரபஞ்சமென் றுணர்த்தியவழி உயிர் சத்து அசத்து என்னும் இரண்டில் எதன்கட்படுமென எழும் ஆசங்கை போக்குதற்பொருட்டு உயிர் சத்தும் அசத்துமன்றாய்ச் சதசத்தா மியல்புடைத்தென அறிவுறுக்கின்றது. சத்தாகிய சிவத்தின் முன் அசத்தாகிய பிரபஞ்சம் பிரகாசியா தென்னும் உண்மை இனிது விளக்கப்படுகின்றது. இதன்கட் சிவமே எல்லாமாம் என்னும் சிவாத்துவித சைவர் மதமும், அசத்தாகிய கரணங்கள் முத்தி நிலையிற் சிவகரணமாய்ச் சிவத்தை அறிதல் செய்யுமென்னுஞ் சிவசங்கிராந்தவாதி மதமும் மறுக்கப்படுதல் காண்க.

"ஐம்புலவேடரின்" என்னும் ஏட்டாஞ் சூத்திரம் சிவமே குருவாய் முன்வந்து ஆன்மாவின் உண்மைத் தன்மையுணர்த்தி அதற்கு அறிவுகொளுத்துமாறும், அங்ஙனம் உணர்த்தப்பட்ட ஆன்மா சிவன் திருவடியைத் தலைக்கூடுமாறும் வகுத்துரைக்கின்றது. வேதத்துட் கூறிய வேள்வி வேட்டலானே தத்துவஞானந் தலைப்படுமாகலின், ஆன்மாவிற்குச் சரியை முதலான தவங்கள் வேண்டப்படாவெனக் கூறும் பாட்டாசாரியன் மதமும், சிவமே குருவாய் வரல்வேண்டுமென வேண்டா ஞானத்தை யுணர்த்துவானும் நம்மனோரில் ஒருவனுதலே யமையு மென்னுஞ் சாங்கியர் நையாயிகர் மதமும், விடய ஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவ ஞானத்தையும் பயப்பிக்கும் என்னுஞ் சிவசங்கிராந்தவாதசைவர் மதமும், ஆன்மாத் தன்னைப் பொய்ப் புலன்களின் வேறாகக் காண்டலே அமையும், அது முதல்வன் பாதத்தை அணையு மென்றல் பொருந்தாதென்னும் பேதவாத சைவர் மதமும், முதல்வன் திருவடியை எய்திய ஆன்மா மீண்டு மதனை விடுத்து வருதலும் உண்டென்னுஞ் சிவாத்துவித சைவர் மதமும் எண்டெடுத்து மறுக்கப்படுதல் காண்க.

"ஊனக்கண்பாச முணரா" என்னும் ஒன்பதாஞ் சூத்திரம் மேலைச் சூத்திரத்து ஓதப்பட்டவாறு குருவா லுணர்த்தப்பட்ட ஆன்மா அவ்வுபதேசத்தை இடையறாது சிந்தனை செய்து தன்னைத் தூய்மை செய்து கொள்ளுமாற்றை விரித்துரைக்கின்றது. பரமான்மா ஆன்மவறிவால் அறியப்படுவதே யாமென்னுஞ் சிவசமவாதச் சைவர்மதம் ஈண்டு மறுக்கப்படுகின்றது.

"அவனேதானே" என்னும் பத்தாஞ் சூத்திரம் மேலைச் சூத்திரத்தோதியவாறே தன்னைச் சுத்தி செய்த ஆன்மாப் பாசங்களினின்றுங் கழலப் பெறுமாறு கூறுகின்றது. ஞானத்தைப்பெற்று முதல்வனை யறிதலே போதுமென்னுஞ் சிவசமவாத சைவர் மதமும், உடம்பு உளதாங்காறும் அதன் வழிவரும் வினைநுகர்ச்சியினைக் கடத்தல் முடியாதாகலின் இறைபணியி னேகனுகி நிற்றல் கூடாதென்னுஞ் சுத்தசைவர் மதமும் ஈண்டெடுத்து மறுக்கப்படுகின்றன.

"காணுங் கண்ணுக்கு" என்னும் பதினோராஞ் சூத்திரம் தன்னோடு அத்துவிதமாய் நின்று தனக்கறிவை விளக்கிவரும் அரன்பாற் பேரன்பு செய்து அவ்வத்துவித நிலையை அயராது கடைப்பிடிக்குமாயின் ஆன்மா அம்முதல்வன் திருவடிச் சிவானந்தானுபூதியைத் தலைப்படும் என்கின்றது. இதன்கண், உயிருக்குக் குணம்போல அநாதியாயுள்ள சகசமலம் முத்தியில் அவ்வுயிரின் வேறாய்ப் பிரிக்கற் பாலதன்றென்னும் பாடாணவாத சைவர் மதம் மறுக்கப்படுகின்றது.

"செம்மலர் நோன்றாள்" என்னும் பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன் முத்தர்க்கு இறைவன் றிருவடிக்கட் பதிந்த அறிவிச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்தே செல்லுமாயின் அவை செல்லுமிடம் உணர்த்து முகத்தாற் சிந்தித்தற் கரியனுன முதல்வனைச் சிந்தித்தற் கெளியனுகத் தெளியக்கண்டு வழிபடுமாறுணர்த்துகின்றது.

எம்மரிய சகோதரர்காள்! இச்சூத்திரங்கள் பன்னிரண்டிற் பொதிந்த இவ்வரும் பொருளெல்லாம் எத்துணை நுண்ணியவாயிருக்கின்றன. இப்பொருள்களுள் ஒருசிலவாயினும் வேறு பெருநூல்களிற் காணப்படுதல் உண்டோ? சொல்லுமின்! அன்றி, இவ்வளவு பொருள்களையும் இப்பன்னிரண்டு சூத்திரங்களிற் செறித்துக்கூறிய **சிவஞானபோதம்**போல் முழுநூல் வேறு எங்காயினுமுண்டா? ஆ! இதன் அருமை பெருமையை நினைக்க நினைக்க இதன் சிறப்பை எங்ஙனங் கூறுவதென்று உளந்தடுமாறுகின்றது! இத்துணைச் சிறந்த ஞானநூலை எளிதிற் பெற்ற தமிழ் நன்மக்களாகிய நுங்கள் புண்ணியமே புண்ணியம்! யானுந் தமிழனுகப் பிறத்தற்கு பேறுசெய்த நல்வினையை எண்ணி எண்ணி இறுமாப்பெய்துகின்றேன். உலகத்திற் பலவாக விரிந்த நூல்களெல்லாஞ் சில

வாழ்நாளும் பல்பிணியுமுடைய எமக்கு யாது பயன் உடையவாம்? உண்மை முடிபை யுணர்த்தும் ஒரு மொழியே எமக்கு உறுதிபயப்பதாகும். இப்பெற்றி யுணர்ந்தன்றே பட்டினத்துப் பிள்ளையார்

"மண்ணுமுருகு மரமுருகு மாயையுருகு மாலுருகும்
பெண்ணுமுருகு மாணுருகும் பேதாபேத வகையுருகும்
அண்ணலுருகு மிடத்தமர்ந்த ஆத்தாளுருகு மரவணையான்
எண்ணியுருகுங் குருநாத னென்பாலுரைத்தவோர்மொழியே"

என்றருளிச் செய்வாராயினர். இவ்வாறே தாயுமான சுவாமிகளும் சிவஞான சித்தியின் விழுப்பந்தேற்றிப்

"பாதிவிருத்தத்தாலிப்பார் விருத்தமாகவுண்மை
சாதித்தார்பொன்னடியைத் தான்பணிவதெந்நாளோ" என்றதூஉம், பிறசான்றோரும்,

"பார்விரித்தநூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஓர்விருத்தப்பாதிபோதும்" என்றதூஉம் உற்றுணரற்பாலவாமென்க. இங்ஙனம் மிகச் சுருங்கிய ஞான முழுமுதற் பெருநூலான சிவஞானபோதத்தின் றெய்வமாட்சி உள்ளவாறே புலப்படுத்தற்கென்றே

"வேதம் பசுவதன்பால் மெய்யாகம நால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறு நெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்" என்னுஞ் சான்றோர் திருவாக்கெழுந்தது.

என்றிதுகாறுங் கூறிய வாற்றால் வேதம் பசுவின்சரீரம்போலப் பயன்படுதலுடைய பாகஞ் சிறிதுந் தம்மிற்றும் பயன்படுத லில்லாத பாகம் பெரிதுமுடைத்தா மென்பதூஉம், பசுவின்கட் சத்த தாதுக்களும் பாலைச் சுரப்பித்தற்கு இன்றியமையாது வேண்டப்படுதல் போல வேதத்திற் கூறிய காரியமூர்த்திக ளுபாசனை அனைத்தும் காரணப் பிரமத்தை அடைவித்தற்குரிய முறையாற் பயன்படுதலுடையவாமென்பதூஉம், அக்காரியமூர்த்திக ளுபாசனையெல்லாம் பலதிறப்பட்ட பக்குவமுடையாரை நோக்கியே எழுந்தனவாகலின் அவை யொவ்வொன்றும் ஆண்டாண்டுச் சிறப்பித்துக் கூறப்படு

மென்பதூஉம், இவ்வாறு அவ்வக்காரிய மூர்த்தியினையும் ஆண்டாண்டு உபசார வழக்காற் பிரமம் பிரமமென ஓதுதலின் வேதந்தனைக் கற்பார்க்கு மயக்கத்தை விளைவிப்பதா மென்பதூஉம், இங்ஙனமெல்லாம் மயக்கத்தை விளைவியாது தத்துவங்கடந்த பரப்பிரமப்பொருட்சொரூபத்தை இனிது விளங்கக்காட்டும் சிவாகமங்கள் பசுவிற் கறந்து கொள்ளப்படும் பால்போல வேதத்தினுஞ் சிறப்புடையவாமென்பதூஉம், பாலினும் அப்பாலிற் றிரண்ட நெய்யே விசேடமுடைத்தாதல்போலச் சிவாகமங்களினும் அவற்றின் முடிபொருளான சுத்தஞானகாண்டப்பொருள் விஷயமான சிவத்தையே வழுத்து முரிமையுடைய நால்வர் திருவாக்குக் கழிபெருஞ் சிறப்புடைத்தாமென்பதூஉம், நெய்யினும் நெய்யின்கட் சுவை மிக்க விழுப்பமுடைத்தாதல்போலச் சிவத்தை யுணர்த்தும் தமிழ்நான் மறையினுஞ் சிவஞானத்தை யுணர்த்தும் சிவஞானபோதநூல் வரையறுக்கலாகாப் பெருமாட்சி யுடைத்தாமென்பதூஉம், வேதமுஞ்சிவாகமமும் ஒன்றையொன்று அவாவாது தனித்து நடைபெறல் போலத் தமிழ் நான்மறையும் சிவஞானபோதவாகமமும் தனித்தனியே நடவாது தம்முட்பொருந்தி நடப்பதா மென்பதூஉம், தமிழ்ப்பாஷையொன்றே சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமுமுடைய ஞான நூல்களை யுடையதாகுமென்பது காட்டு முகத்தாற் றெய்வத் திருக்குறள் நூலொன்றே சுருங்கத் தெளிக்கு முறையை நன்கு நிலைபெறுத்துமென்பதூஉம், அதிதீவிர பக்குவமுடையார் பொருட்டு இயற்கைநெறி நூல்களும் மந்த பக்குவ முடையார் பொருட்டுச் 'செயற்கைநெறி' நூல்களும் ஆன்றோரான் வகுத்தெழுதப்பட்டனவென்பதூஉம், 'செயற்கைநெறி' நூல்களினுள்ளவெல்லாம் 'இயற்கைநெறி' நூல்களுட் காணக்கிடக்கும்: 'இயற்கைநெறி' நூலினுள்ளன 'செயற்கைநெறி' நூலுட்காணப்படா வென்பதற்குத் திருக்குறள் ஒன்றே சான்றுமென்பதூஉம், இத்தகைய திருக்குறள் நூலினும் சிவஞானபோதம் மிகச் சுருங்கிய ஞான முழுமுதல்நூலாமென்பதூஉம், இஞ்ஞான நூலிலே ஒவ்வொரு சூத்திரமும் இன்னின்ன பொருள்களை உணர்த்துமென்பதூஉம், இத்துணைச் சுருக்கமாக முடிபொருளை உணர்த்துதலே சான்றோர்க் கெல்லா மொப்பமுடிந்ததா மென்பதூஉம் ஒருவாறு விளக்கப்பட்டன. ஓம்சிவாயநம! ஓம்சிவாயநம! ஓம்சிவாயநம!

# மூன்றும் உபந்நியாசம்.

## 1

## மெய்கண்டதேவர்.

உலகத்திலுள்ள மக்கள் தமக்குள்ள அறியாமை தேயப்பெற்று அறிவு மிகுதியுடையராய் விளக்கமுற்று வரும்போது, தம்மறிவாற் பலவும் நுணுகியறியப் புகுந்து அவ்வறிவுக்கு முழுமுதற் கடவுள் நிலையும் தம்முடைய நிலையும் புலப்படாமையினால் அவை இல்பொருள்களே யாமென்று உறுதிசெய்துவிடுவர். கடவுள்நிலைமக்கள் அறிவுக்குப்புலப்படுவதன்று. மக்களுக்குப்பொருளுண்மை அறிவிப்பது அறிவு மாத்திரமேயென்று நினைதல் வழுவாம். உயிருடையனவெல்லாம் பொருளுண்மை அறிதற்கு இருவகை நிலைகள் இருக்கின்றன; அவை அறிவுநிலை உணர்வுநிலை என்பனவாம். அறிவுநிலையும் பொறிவழிப்படுவதூஉம், பாவனை வழிப்படுவதூஉமென இருதிறப்படும். மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பஞ்சேந்திரிய வழிவரும் அறிவு பொறி வழிப்படுவதாகும். இப்பஞ்சேந்திரிய வழிவந்த அறிவு அனுபவங்கொண்டு பஞ்சேந்திரியங்களுக்கும் அனுபவம் ஆகாததனை அறியும் அறிவு பாவனை வழிப்படுவதாகும். சத்தப் பரிசரூபரசகந்தங்கள் ஐந்தும் பொறிவழியே விளங்கும் அறிவுநிலை என்னும், ஒருவனுக்கு 'அறிவுண்டு' 'விருப்பமுண்டு' என்றற் றொடக்கத்தான் வரும் அனுபவ அறிவு பாவனை வழியே விளங்கும் அறிவுநிலை என்னும் யாம் இனிது உணர்கின்றோம்.

இனி ஒரோவொரு காலத்து எம் அகத்தே ஓர் இன்பந் தோன்றப் பெற்றக்கால் அவ்வின்பம் பொறிவழிவரும் அறிவானும், பாவனைவழிவரும் அறிவானும் அறியப்படாத இயல்பினதாய் நிகழ்வதை இனிது உணர்கின்றோம். அவ்வின்பம் நிகழும்பொழுது முன் அறிந்த அவ்விருவகை அறிவு நிலைகளும் ஒரு சிறிதாயினும் நிலைபெறமாட்டாவாய் ஒழிகின்றன. அவ்வின்பம் எமக்குப் புலனாயதைப் பிறர்க்குக் கூறுபவழி 'அதனை உணர்ந்தேம்' என்கின்றோம். பொறிகளாலும் பாவனையாலும் அறியொணாதப் பிறர்க்குக் கூறுங்கால் 'யாம்

அதனை அறிந்தேம்' என்கின்றோம். ஆகவே, ஆன்ம அனுபவமெல்லாம் அறிவும், உணர்வும் என இருவகையாய் அடங்கும். பின்னும் ஒருகால் நுணுகி யறியப்படுமாயின், அறிவுநிலை உணர்வு நிலையுள் அடங்கப்பெறுவதென்பதும், உணர்வுநிலை அறிவுநிலையில் அடங்கப் பெறுதென்பதும் நன்கு பெறப்படும். அதுகிடக்க.

இனி எமதறிவால் அறியப்படுவனவெல்லாம் பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்சேந்திரியங்களும் அப்பஞ்சபூத மயக்கமான இப்பிரபஞ்சமும் இவற்றின்கட்பட்ட உயிர் வருக்கங்களுமே யல்லது பிறிதில்லை. முழுமுதற் கடவுளும் எம் அறிவால் அறியப்படுவதாயின் அதுவும் இப்பிரபஞ்சத்துட் பொருள் போல ஏகதேச இலக்கணமுடையதாகவேண்டுமாகலின், அஃதெம் அறிவு அனுபவத்திற்குப் புலப்படும் பொருளென்றல் ஒருவாற்றானும் ஏலாது.

இனி எமதுணர்வோ இப்பிரபஞ்சத்துட் பொருளொன்றனையும் பற்றுவதன்றாய், அதன்மேற் கடந்து விளங்குவதாகலின் இவற்றிற்கெல்லாம் அதீத வஸ்துவாய் விளங்கும் பரம்பொருளை அதுவே அனுபவித் துணர்தற்குரிமை உடையதாகும். எம் அகத்து ஒரோவழித்தோன்றும் பேரின்பானுபவமே சிவானுபவமென் றறியற்பாற்று. சிவம் என்னும் முழுமுதற் பொருள் பேரின்ப நிலையாயுள்ள தென்பது பற்றியே

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருந்தாரே" என்னுந் திருவாக்கும் எழுந்தது.

இங்ஙனம் உணர்வுநிலையான் மாத்திரம் அனுபவித் துணரற்பாலதாகிய சிவ பரம்பொருள், அதனினுங் கீழ்த்தரமான அறிவு நிலையாற் குறிக்கப்படுதல் எவ்வாற்றானும் இல்லை. ஆகவே, சிற்றறிவினரான மக்கள் தம்நூலறிவானும் இயற்கை நுண்ணறிவானும் அப்பரம்பொருளை அறிவேமெனப் புகுந்து அதனைக் கண்டறியாமையின் இடர்ப்பட்டு மயங்கி அஃதில் பொருளென ஆரவாரவுரைவிரித்தல் ஒரு சிறிதும் பொருந்தாது. அவர் தம்மறிவையே மேம்படுத்

துக்கொண்டு அவ்வறிவினும் மேற்பட்ட நிலைக்கண் விளங்குவதான தமது உணர்வு நிலையின் அருமை பெருமையைச் சிறிதாயினும் உணர்ந்தாரில்லை. இவ்வாறு அவர் அறிவு நிலைக்கண் மாத்திரம் எய்தி அதன் மேலுச்சிக்கண்ணதான உணர்வு நிலையிற் சேரமாட்டாது வருந்தி இடர்ப்படுங்காலத்து, அவர்க்கு அது கைகூடுமாறு செய்து காட்டவல்ல சான்றோர் இந்நில வுலகத்தில் அவதரிப்பர். அறிவுநிலையி லுள்ளாரை எடுத்து அன்பு நிலையிற் கூட்டுதற்குரியார், அறிவு மாத்திரம் மிக உடைய நம்மனோர்போலாது அவ்வறிவே யன்றி உணர்வுநிலை முற்றும் அனுபவித்தாராகற் பாலார். அறிவு நிலையினுள்ள நம்மனோர் குழந்தைகள் போலப் பருவ முதிர முதிரச் சிறிது சிறிதாய் அறிவு கூடப்பெறுது, குழவிப் பருவந்தொட்டே அறிவுநிலை முழுதும் கரைகண்டு அதன்மேல் உணர்வு நிலையிற் சென்று வைகுவர். நம்மனோர் குழந்தைகளிடத்துப் போலப் பிள்ளைச் செய்கைகள் அவர்களிடத்துக் காணப்படமாட்டா. அவர்களிடத்துக் காணப்படுங் குறிகுணங்களெல்லாம் நம்மனோர் அறிவனுபவத்திற்கு முற்றும் மாருயிருக்கும். கழிகாமுகராயினூர் தங்காதற் கிழத்திமாரிடத்துச் செய்யும் இலீலா விநோதங்க ளெல்லாம், அஃதில்லார்க்கு மிகப்புதுமையா யிருத்தல்போல, உணர்வு நிலையில் வைகி ஆண்டு வரம்பின்றி விரிந்த பேரின்ப வெள்ளத்துட்டிளைத்து இறுமாந்திருப்பார் குணச் செயல்களெல்லாம் நம்மனோர் குணச்செயல்களுக்கு முற்றும் ஒவ்வாதனவாகவே காணப்படும்.

எம்மினிய நண்பர்காள்! அறிவு மிகுதியு முடையராய் விளங்கிய நஞ்செந்தமிழ் முதுமக்களை அவ்வறிவின்மேற்பட்ட அன்புநிலைக்கண் உயர்த்திக்கொண்டுபோய் இரட்சித்து அவரைச் சிவானந்தவமிழ்து நுகர்வித்த தெய்வப் பெரியார் யார் என்று வினவுதிராயின் அவர்தாம் மெய்கண்டதேவர் என்றறிமின்கள்! இற்றைக்கு அறுநூற்றைம்பது வருடங்களுக்கு முன் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பபிள்ளையார் அருமைப் புதல்வியைத் திருவெண்காட்டிலிருந்த அச்சுதன் என்பார் மணந்து இல்லற நெறி வழாது இருவரும் சைவுரிமையிற் சிறந்து வாழ்ந்து வந்தனர். சடையப்ப பிள்ளையாரது சைவ வேளாள குடும்பம் தமிழ் நாடெங்கும் மிகப் பிரசித்தி பெற்ற தொன்றும். சடையப்ப பிள்ளையார் கணக்கிடப்பிடாத செழுஞ் செல்வமுடையா ரென்றும், இவர் தங் காலத்திருந்த சோழ

மன்னனுக்குப் பெருவிருந்தியற்றின னென்றும், அவனோடு மைத்து
னக்கிழமை பூண்டு அவனாற் பெரிதும் பாராட்டப்பட்டனனென்றும்,
தமிழ்ப் புலவர் பலர்க்கும் பொருட்டிரள் நல்கி அவராற் றமிழ்ப்
பாஷையை மிக வளம்படுத்து வந்தன னென்றும், இளம் பருவத்தே
மிக வறுமைப்பட்டுத் தம்பால் எய்திய கம்பர்க்கு ஊண்கொடுத்து
உடைகொடுத்துக் கல்வியறிவு கொடுத்துப் பாதுகாத்தன னென்றும்
பலவாகத் தமிழ் நாடெல்லாம் அவர் பெரும் புகழை மீக் கூறுகின்
றது. இங்ஙனஞ் சடையப்ப வள்ளலார் குடும்பம் ஞானநிலை கூடு
தற்குக் கருவியான தமிழ் மொழியைப் பல்கச் செய்தன் மாத்திரை
யில் அமைதிபெறாது, அந்த ஞானநிலையினையும் விளக்குதற்கு விரும்
பின குறிப்பைப் புலப்படுத்தலே அச்சடையப்ப வள்ளலாரின் அரு
மைப் புதல்வியார் மணிவயிற்றில் மெய்கண்டதேவர் திருவவதாரஞ்
செய்தருளுவாராயினர். இவர் திருவவதாரஞ் செய்தருளிய வரலாறு
சிறிது கூறுதும்.

சடையப்ப பிள்ளையார் அருமைப் புதல்வியாரும் அவர் காதற்
கொழுநன் அச்சுதன் என்பாருந் திருப்பெண்ணாகடத்தில் மிக ஒரு
மித்துவாழ்ந்து வருநாளில் தமக்கு நீண்ட நாளாகப் புதல்வர்ப்பேறு
வாயாமைகண்டு மனம் வருந்தி, "மங்கல மென்ப மனைமாட்சி மற்ற
தன், நன்கலம் நன்மக்கட் பேறு" என்ற திருவாக்கைச் சிந்தித்துப் புதல்
வர்ப்பேறிலமாயின் நம் இல்வாழ்க்கை வறிதாமன்றே! என்செய்வேம்!
ஈசா! என எண்ணி எண்ணி வாடுவர். இங்ஙனம் வாடுவார்க்கு
ஒருநாட் சந்தியில் ஒரு கருத்துத் தோன்ற அவர் திருஞானசம்பந்
தப் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருமுறையை
எடுத்துப் பூசித்துப் புதல்வர்ப்பேற்றை விரும்பிக் கயிறு சாத்திப்
பார்க்க அவர்க்குப்

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண்டா வொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர் தம்மைத் தோயாவாந் தீவினையே" என்

னுந் திருவாக்குத் தோன்றுவதாயிற்று. அதுகண்டு அவர் பேரு
வகை யடைந்து திருவெண்காட்டிற் றிருக்கோயில்கொண் டெ
ழுந்தருளியிருக்கும் பெருமானையும் பெருமாட்டியாரையும், ஆண்

டுள்ள 'முக்குளநீர்' என்னுந் தீர்த்தத்திற் படிந்தெழுந்து நாடோறும் பூசித்து வழிபாடு இயற்றி வருவாராயினர். இவ்வாறு வழிபாடு இயற்றிவரச் சின்னாளில் அச்சுதனார் அருமை மனைக்கிழத்தியார் கருக்கொண்டார். கொள்ள, அப்பரிசுத்தமானகரு நாளும் பிறை மதிபோல் வளர்ந்து பத்துத் திங்களும் முற்றி ஆண்மகவுக்குரிய கர சரணாதி அவயவங்கள் வடிவுறத் திருந்திப் பேரழகு கனிந்து பச்சிள ஞாயிறு தோன்றினாற்போற் றிருவவதாரஞ் செய்தது.

இங்கொன்று கவனிக்கற்பாற்று. உலகை நல்வழிப்படுத்தற் குப் பிறக்கும் பிள்ளைகளெல்லாம் தாய் தந்தையர் மணஞ்செய்து நெடுநாட் கழிந்தபின் அவர் வருந்தி வருந்தி இறைவனைவேண்டிக் குறையிரக்கப் பின் பிறக்கின்றனர். இஃது உலகிற் பெரும்பான் மைவழக்கமாய்க் காணக் கிடக்கின்றது. தாய் தந்தையர் வருந்தி வேண்டாப் பருவத்தே பிறக்கும் பிள்ளைகள் தாய் தந்தையர்க்குரிய குணங் குறிகளாதல் அவர்க்கு முற்பட்ட மூதாதையர்க்குரியகுணங் குறிகளாதல் மாத்திரம் வாய்ப்பப் பெறுகின்றனரல்லது வேறு விசேடமுடையராக இருக்கக் காண்கின்றிலேம். வேண்டாப் பரு வத்தே அவர் வெறுங் காமவயப்பட்டு ஒழுகுகின்றாராகலின், அக்கா மமேவுதலைநின்ற அக்காலத்துத் தோன்றும் பிள்ளைகள் சாமானிய மக்களிலக்கண முடையரா யிருக்கின்றனர். தாய் தந்தையரது நினைவின் றோற்றங்கள் அக்காலத் துற்பத்தியாங் கருவிற் பதிந்து நிலைபெறுகின்றன. புணர்ச்சிக் காலத்து விந்துவும் நாதமுங்கூடிக் கருவுற்பத்தியாம்போது தாய் தந்தையர் மாட்டு யாதொன்று பாவிக் கப்பட்டது அஃது அக்கருவின் அறிவும் வடிவுமாமெனப் பிண்டோ ற்பத்தி நூல்களால் நன்கு வலியுறுத்தப்பட்டது. புணர்ச்சிக் கால த்துக் கொழுநனும் மனைவியும் பரிசுத்த சிந்தை யுடையராய் நறும ணம் அளைந்து குழலோசை யாழோசைகேட்டு நன்கு சித்திரிக்கப் பட்ட வுருக்கள் கண்டு இங்ஙனமெல்லாம் மனமகிழ்ந்து அளவளாவு தல்வேண்டுமென இன்ப நூல்களும் இனிது காட்டின. நல்ல தாய் தந்தையர் மாட்டு உலகுதிருத்தும் புத்திரரைத் தோற்றுவித்தற்குச் சங்கற்பித்த இறைவன் றிருவருளானது, அவர்க்கு முற்பருவத்தே மிக்குத்தோன்றும் வெறுங்காம வின்பமெல்லாம் நுகர்வித்து ஒழித் து அவரைச் சுத்தி செய்தற்பொருட்டு அவரது அம்முற்பருவத்தே அப்புத்திரரைத் தோற்றுவியாதாகும். மணஞ்செய்த சில வருடங்க

ளெல்லாம் ஆராக்காம மின்பந் துய்த்து ஒழித்துப் பருவ முதிர முதிர, அவ்வெறுங்காமநினைவு கீழ்ப்படப் புத்திரர்ப் பெறவேண்டும் சுத்தஅன்புணர்வு தலைப்படுமாகலின் அவரதுபிற்பருவமே சற்புத்திரப்பேற்றிற்குத் தகவுடைத்தாகும். இன்னும் அப்புத்திரப் பேற்றைவேண்டும்போதெல்லாம் தெய்வவுணர்வும் உடன் நிகழுமாகலின் அப்பிற்பருவம் மிகவும் பரிசுத்த முடைத்தாய்த் திகழும். இவ்வாறு காமம் முதலிய தாமதகுணங்கள் வலி யொழிந்து நிற்பச் சுத்த அன்புணர்வும் அதனோடு ஒற்றுமையுடைய தெய்வவுணர்வும் தலையெடுத்துத் திகழும் அப்பிற் பருவத்திலே முன் சங்கற்பித்த முதல்வன் திருவருளானது பிரேரேபிக்க உலகு வழிப்படுத்தும் நற்புதல்வர் திருவவதாரஞ் செய்திடுவ ரென்க. இவ்வுண்மை கடைப்பிடித்தன்றே தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும்

"தக்கார் தகவில ரென்பதவரவ

ரெச்சத்தாற் காணப்படும்" என்று அருளிச் செய்வாராயிற்று. பெற்றார் பரிசுத்தமுடையரா யிருந்தகாலைத் துற்பத்தியான புதல்வராயின் அப்புதல்வர் தக்காராய் மேம்பாடுற்று விளங்குவர்; அவர் பரிசுத்த மில்லாதனான் றுற்பத்தியாயினராயின் அவர் தகவிலராய் உலகத்தாராற் பழிக்கப்படுவர் என்பது தேற்றமாம்.

ஆகவே, அச்சுதனாரும் அவர் காதற் கிழத்தியாரும் மணங்கூடியபின் நெடுநாட் பிள்ளைப்பேறின்றி யிருந்தது அவர்பால் மிகப் பரிசுத்தமான ஒரு சிவஞானக் குழந்தையை உற்பவித்தற்பொருட்டுச் சங்கற்பித்த சிவபெருமான் திருவருளானது அவர் தம்மைச் சுத்தஞ் செய்தற்காகவே செய்வித்ததா மென்பதும், பின்னர் அவர் மகப்பேறுவேண்டிக் குறையிரந்து தீர்த்தமாடிச் சிவாலயவழிபாடியற்றிச் சுத்த அன்புணர்வும் தெய்வவுணர்வும் தலைப்பட்டுநின்றுழி அவர்க்கு அம்மகவைத் தந்துதவியது அவ்விறைவன் அருட்குறிப்பா மென்பதும் இனிது பெறற்பாலனவாம்.

இனி இங்ஙனம் திருவவதாரஞ் செய்த புதல்வர் திருவருட் பிரேரகத்தாற் றோன்றியவராதல்பற்றி, அவர்க்குத் திருவெண்காட்டிறைவர் பெயர் சூட்டிச் சுவேதவனப் பெருமான் என்று பெற்றோரும் மற்றோரும் அழைப்பாராயினர். வரம்பின்றி விரிந்த செல்வவளத்தாற் பொலிந்த அவ்வச்சுதனார் மனையில் நந்தாமணி விளக்க

மாய்ச் சுவேதவனப் பெருமான் என்னும் அப்பிள்ளையார் சிறந்து வளர்வாராயினர். அப்பிள்ளையார் வடிவழகையும், நோக்கழகையும், திருமுக விலாசத்தையும், ஆம்பற்செவ்வாய் நகையழகையுங் கண்டு களித்த அப்பெற்றோரும் மற்றோரும் பெற்ற கண்களே கண்கள்; அவர் செய்த புண்ணியமே புண்ணியம். அப்பிள்ளையார் உருத் தோற்றச் சிறப்பினை நினையுந் தோறுங் கல்லினும் வல்லென்ற எம் மனமுங் கசிந்துருகுமாயின், அவரோடு உடனிருந்து அவரை ஆரக் கண்டு அனுபவித்த அன்னோர் புண்ணியச் சிறப்பை என்னென்று கூறவேம்!

இனி அச்சுதனார்க்கு மைத்துனரும் சடையப்ப வள்ளலார் புதல்வருமாய்த் திருவெண்ணெய் நல்லூரிலிருந்தவர்க்குப் பிள்ளைப் பேறில்லாமையால், அவர் தந்தங்கையார் மணிவயிற்றிற் றிருவவதாரஞ்செய்த சுவேதவனப்பெருமானைச் சுவீகாரஞ் செய்துகொள்ள நிச்சயித்துத் தங்கருத்தைத் தம்மைத்துனர்க்குந் தங்கைக்குந் தெரிவித்தார். அவரிருவரும் அதனை மறுக்கமாட்டாராய் இசைந்து, பின் தம் அருமைப்புதல்வரைப் பிரிந்திருக்க ஒரு கணமுந் தரியாமையால் தாமும் திருவெண்ணெய் நல்லூர்க்குச்சென்று சடையப்ப வள்ளலார் அருமைத்திருமாளிகையிலேயே வசிப்பாராயினர். இது முதல் சுவேதவனப் பிள்ளையார்க்குநிலையான இருப்பிடம் திருவெண்ணெய் நல்லூராகவே விளங்கிற்று. பிள்ளையார்க்கு நன்மாமனும் பெற்றோரும் பிள்ளையார் திருமேனிப் பாதுகாப்பிற் பெரிதுங் குறிப்புடையராயினர்.

இவ்வாறு பெருந்தவமாற்றிய நன்மாமற்கும் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும்பெருங்களிப்புச் சிறக்க நல்கியவாறே சுவேதவனப் பெருமான் கண்ணிமைபோற் போற்றப் பெற்றுவளர்ந்துவர, அவர்க்கு மூன்றும்ஆண்டு நிரம்பிற்று. இவர் ஏனைச்சிறுமகாரோடுகூடித் திருவிளையாட்டுச்செய்யுங்காலத்தும் அவர்மற்றவர்போல்ஒருகுறிப்புமின்றித் தோன்றியவாறெல்லாம் விளையாடாது, ஒரு புறத்தே அமைதியோடுமிருந்து ஆழ்ந்த சிந்தனையுடையரா யிருத்தலும், அதுவிட்டால் மணலைக் குவித்து அதன்மேல் இலையைக் கிள்ளி யிடுதலுஞ் செய்திடுவார். இங்ஙனம் இவர் விளையாடா நிற்ப ஒருநாள் தெருவழியே சென்ற பரஞ்சோதி முனிவர் என்னும் ஆன்றமைந்த துறவி ஒருவர் இப்பிள்ளையை நோக்க அவருள்ளம் இப்பிள்ளை வயப்பட்டு

ஒருங்கி நின்றது. நின்றதாக அவர் சிந்திப்பார் "என்னே! இப்பிள்ளை யைக்காண்டலும் என்னுள்ளம் வேறு செல்லாது இதனிடத்தே நிலை பெறுகின்றது; இப்பிள்ளையின் றோற்றமோ சிவபெருமான் றிருவ ருட் டோற்றம்போ லிருக்கின்றது; இஃதிக் குழந்தைப் பருவத்தி லேயே அமைதியும் ஆழ்ந்த சிந்தனையுமுடையதா யிருக்கின்றது, மணலைக்குவித்து அதன்மேற் பச்சிலையைக்கிள்ளியிடும் இதன்செ யலை நோக்கினால் இது சிவலிங்க பூசை செய்யுங் குறிப்புடையதாய்த் தோன்றுகின்றது; இஃது ஏனை மகார்போற் சாமானியமாக வின் றித் தெய்வீக விசேடமுடைத்தாய்க் காணப்படுகின்றது" என்று அதனருகிற்போய் அருட்கடைக்கண்ணோக்கஞ் சாத்தி அதன் சிரத் தின்மேற் றன் கரத்தைச் சேர்த்தி அநுக்கிரகித்தார்; அநுக்கிரகித் தலும் முன்காணப்படாது மறைந்து நின்ற தீச்சுடர் சூரியனைக் கண்டலும் சூரியகாந்தத்தில் விளங்கித் தோன்றினாற்போல, அப் பிள்ளையார்மாட்டு அந்தரங்கமாய் நின்ற சிவஞானமனைத்தும் ஒருங் கெழுச்சி பெற்று விளங்குவதாயிற்று. விளங்கவே, சுவேதவனப் பெருமான் பரஞ்சோதி முனிவரென்னுஞ் சிவஞானியார்அருமைபெ ருமையுணர்ந்து வந்தனைவழிபாடியற்ற, அம்முனிவர்பெருமான், முன் னே இறைவன் றிருப்பெருந்துறையிற் குருந்தமர நீழலிற் குரு வடிவங்கொண் டெழுந்தருளி மாணிக்கவாசகருக்குப் பன்னிரண் டுகூறாய் உபதேசித்தருளிய சிவஞானபோதம் என்னும் ஞானசாத்தி ரத்தை இப்போதிவர்க்கு உபதேசித்து "அன்பனே! இப்பன் னிரண்டு விஷயங்களையும் பன்னிரண்டு சூத்திரங்களாகச் செய்து இவ்வுலகமெங்கும் ஞானக்கறை விளக்கி ஆன்மாக்களை உய்வித்தி டுக" என்று கட்டளையிட்டுப் போயினார்.

ஞானாசிரியன் கட்டளையிட்ட வண்ணமே சுவேதவனப் பெரு மான் என்னும் அப்பிள்ளையார் அப்பன்னிரண்டு விஷயங்களையும் பன்னிரண்டு செந்தமிழ்ச் சூத்திரங்களாகச் செய்து, அச்சூத்திரங்கள் ஒவ்வொன்றற்கும் அதிகாரணங்கள் வகுத்துக் கருத்துரையும் வார்த் திகப் பொழிப்புரையும் உதாரணப்பாட்டுக்களும் இயற்றி அச்சிவ ஞானபோத நூற்பொருள் யார்க்குந் தெற்றென விளங்குமாறு விரித்து உரை நிகழ்த்துவாராயினார். தேமழலை மொழி ததும்புந் திருவாயால் மூன்றுவயது குழந்தையாயிருக்கும் சுவேதவனப் பெரு மான் அரிய பெரிய ஞான நுண்பொருள்களைத் தெள்ளத்தெளிய

விளக்குதலைக் கண்ட அவர் பெற்றோரும் தாய் மாமனும் பிறரும் வரம்புகடந்த வியப்பும் உவப்பும் எய்தினர். மிகச்சிறுபிள்ளையான நம்பெருமான் உரைமுடிபுக் கெட்டாத அறிவுநூற் பொருள்களை விரித் துபந்நியசிக்கின்றார் என்பது கேட்டலும், தமிழ் நாட்டிலுள்ள சான்றோரும், கற்றோரும், துறவோரும், பிறரும் பெரிதும் வியப் படைந்து பிள்ளையார் ஞானோபந்நியாசங் கேட்டற்பொருட்டுப் பல திசைகளினின்றும் வந்து குழுமினர். பிள்ளையார் எழுந்தருளிய திருவெண்ணெய் நல்லூர் ஞானமகள் நடமிடும் ஞானஅரங்காயிற்று; சடையப்பவள்ளலார் திவ்விய மாளிகை ஞானக்களஞ்சியமாய் விளங் கிற்று. சுவேதவனப்பெருமா னாகிய பிள்ளையாரோ உபந்நியாசங் கேட்கவரும் சான்றோர்க்கெல்லாம் பொருள்மயக்கந் தீர்த்து உண் மைப்பொருளை உள்ளவாறே விளங்கக்காட்டி எல்லாம் வல்ல ஞானா சிரியராய் அமர்ந்திருந்தனர்.

இங்ஙனம் இருக்கும் நாட்களில் திருத்துறையூரிலே வேதோப நிடத ஷடதரிசனப் பொருள்முழுதும் உணர்ந்து, அவற்றின்கட் பட்ட மயக்கப்பொருளெல்லாம் விலக்கித் துணிபுபொருள் ஒருப்படு வித்தற்குரிய பெருஞ்சாதனமான இருபத்தெட்டுச் சிவாகமங்களும் துறைபோகக் கற்றுத் தமக்கு நிகர்வார் யாருமின்றிப் பெருந்தத்துவ ஞானியாராய் விளங்கிச் 'சகலாகமபண்டிதர்' என்னுஞ்சிறப்புத் திரு நாமம் பெற்ற அருணந்தி சிவாசாரியர் என்னுஞ் சிவவேதியர் ஒருவர் இருந்தார். இவர்பால் ஞானநூல் விசாரஞ்செய்யும் சீடர் அளவின்றி யிருந்தனர். அச்சீடர்களிற் பெரும்பாலோர், திருவெண்ணெய் நல் லூரில் ஞானோபந்நியாசஞ் செய்துபோதரும் சுவேதவனப் பிள்ளை யார் அருமை பெருமையைக் கேள்வியுற்று அவ்வூர்க்குச் சென்று பிள்ளையார் அருளிச்செய்யும் ஞானோபதேசப் பொருள் கேட்டு "ஈதொப்பதோர் புதுமை யாண்டுங்கண்டிலேம்" என்று பெரிதும் வியப்புற்றுப் பிள்ளையார் பக்கலேயிருந்து, முன் அருணந்தி சிவா சாரியார் பால் தமக்குத் தெரியப்பெறாத இரகசிய ஞானநுண்பொரு ளெல்லாம் ஈண்டுப் பிள்ளையார்பா லுசாவி உசாவி ஐயம் முற்றும் நீங்கப்பெற்றாராய்ப் பேருவகை எய்தித் தம்மை மறந்து மேவினர். அருணந்தி சிவாசாரியாரோ தம்பக்கலிருந்த சீடர் பலரைக் காணா ராய் ஏனைச் சிலரைநோக்கி "மற்றையோர் எங்குச்சென்றார்" என்று வினவ, 'அவரெல்லாம் திருவெண்ணெய் நல்லூரில் சிறுபிள்ளையான

சுவேதவனப்பெருமான் செய்யும் சிவஞானபோத உபந்நியாசங் கேட்கப்போயினர்,' என்று கூறினர். அது கேட்டலும் "பேசத்தெரியாத சிறுபிள்ளை ஞானோபந்நியாசஞ் செய்வதாவது, அதனைக்கேட்க நம் சீடர் சென்றதாவது, ஈதென்னை" என்று இகழ்ந்து கூறி, உண்மை தெரிதற்பொருட்டுத் தாமே திருவெண்ணெய் நல்லூர்க்குச் சென்றார்.

சென்று சடையப்பபிள்ளையார் மாளிகையில் நோக்கத் திரள் திரளான அறிவுடையோர் சுவேதவனப்பெருமான் என்னுஞ் சிறு பிள்ளையார்பா லிருந்து அவர் செய்யும் ஞானோபதேசங் கேட்டலும், தம்முடைய சீடர்களும் ஆங்கவர்போ லடக்க வொடுக்கமாயிருந்து உண்மைப்பொரு டெளிதலுங்கண்டு பொறாராய் மனம்புழுங்கினர். தம்முன்னாசிரியரான சகலாகமபண்டிதர் வரக்கண்ட சீடரெல்லாரும் எழுந்திவர்க்கு உபசாரஞ் செய்தனர். உடனே, அருணந்தி சிவாசாரியார் செருக்கால் வெகுண்டு "நீவிர் இப்போது யாது உசாவுகின்றீர்கள்?" என்று கேட்ப, அவர்கள் "ஆணவமல விசாரஞ் செய்கின்றேம்" என்றார்கள். சிவாசாரியார் நம் சுவேதவனப் பிள்ளையாரை வினாக்கள் கேட்டு வெற்றிகொளல் வேண்டுமெனக் கருதிப் பிள்ளையாரை நோக்கி "ஆணவமலத்தின் சொரூப இலக்கணம் யாது?" என்று வினவினர். அதுகேட்ட பிள்ளையார் சிவாசாரியாரது அதி தீவிர பக்குவத்தினையும், அவரிப்போது அழுக்காற்றால் செருக்குற்று வினாவுதலையுங்கண்டு இரங்கி, அவரை அநுக்கிரகித்து ஆட்கொளத் திருவுளங்கொண்டு தம தருட்கடைக்கண் நோக்கால் அவர்க்குள்ள ஆணவவலியை அடக்கி ஆணவமல சொரூபமாவது இப்போது நீர் கேள்வி கேட்டு நிற்குநிலையே தான் என்னுங்குறிப்புத் தோன்ற அவர்முடிமுதல் அடிகாறும் ஒருமுறை நோக்கிப் பின்வாளா விருந்தனர். சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியார் எல்லா ஞானநூற்பொருளும் முற்றுணர்ந்து அறியாமை தேயப்பெற்று அதி தீவிரபக்குவமுடையரா யிருத்தலில், பிள்ளையார்சாத்திய அருட் கடைக்கண் நோக்கமானது தீப் பஞ்சுத்துய்யிற் படுமாறுபோல் மிக இலேசில் அவரறிவிற் றோய்ந்து அவரைப் பரிசுத்தஞ்செய்த தாகச் சிவாசாரியரும் பிள்ளையார்எல்லாம் வல்ல தெய்விகஞானாசிரியராம் உண்மை உணர்ந்து, தாங்கேட்ட வினாவே ஆணவசொரூபமாதல் குறிக்கப்பட்ட நுணுக்கத்தை நினைந்து நினைந்துருகி அடி

யற்ற பனைபோல் பிள்ளையார் திருவடித் தாமரைகளில் விழுந்து "எங்கள் சிவஞானச் செல்வமே! புழுத்தலைநாயிற் கடைப்பட்ட என்னையுமாட்கொள்ள வெழுந்த என் அருட்குருமணியே! அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டும். என்னையும் ஆட்கொண்டருளி உய்வித் தருளல்வேண்டும்." என நாத்தழுதழுப்ப மெய்ந்நடுங்கக் கண்ணீர்ஒழுக மொழிந்து கிடந்தார். பிள்ளையார் "அன்பரே! அஞ்சற்க" என உரை கூறி அவரிருகரங்களையும்பற்றி யெடுத்து அவர்க்குச் சிவஞானபோதநூல் நுண்பொருள் முழுதும் புலங்கொள அறிவுறுத்தருளினர்,

இனி அச்சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரப்பொருட் சுருக்கமாகச் சூர்ணைக்கொத்தொன்றும் கற்பார்க்கெளிதாகப் பிள்ளையாரால் அருளிச்செய்யப்பட்டது. அச்சிவஞானபோதநூலை ஓதுவாருக்உசாவுவாருமே எங்குமாயினர். ஆண்டில்முதியராயும்சகலாகம பண்டிதரெனஎங்கும் புகழ்பரக்கப் பெற்றவராயுமுள்ள அருணந்தி சிவாசாரியாரே பிள்ளையாரைத்தமக்கு ஞானகுரவராய்க் கொண்டாரென்றசொற்பரவப் பரவத்தமிழ்நாடெல்லாம் ஒருங்குதிரண்டு திருவெண்ணெய் நல்லூர்க்குச்சென்று பிள்ளையாரைத்தரிசித்து அவர் திருவாயினின்றபோதரும் மணிமுத்துக்களாம் பரநாதவொலிகளைக் கேட்டுச் சிவானந்த மெய்தப்பெற்றோராய் உய்ந்தனர்.

இனி வேதாந்தசூத்திரத்திற் குறைகண்டசங்கராசாரியர், இராமாநுசாசாரியர், மாத்துவாசாரியர் முதலியபிறபல உரைகாரராலும் மெய்ப்பொருளுணரப்படாதுகிடந்த அத்துவிதஇலக்கணமாய் சொற்பொருள்வகையால் இனிதுவிரித்துச் சுவேதவனப்பிள்ளையார் சிவஞானபோதவார்த்திகப்பொழிப்புரைக்கண்மெய்ப்பொருள்தெருட்டினாராகலின், தமிழ்நாடுமுற்றும் அவ்வருமைபெருமைகண்டு நம்பெருமான் சுவேதவனப்பிள்ளையாரை அத்துவித மெய்கண்டான் என்று சிறப்புப் பெயரிட்டழைப்பதாயிற்று. இச்சிறப்புப்பெயர் உலகவழக்கில் மெய்கண்டதேவரென வழங்கப்பெறுவதாயிற்று. இதுதாயுமான சுவாமிகள்,

"பொய்கண்டார்காணாப் புனிதமெனு மத்துவித

மெய்கண்டநாதனருள் மேவுநாளெந்நாளோ" என்றுகூறியவாற்றானும் அறியப்படும்.

இனி மெய்கண்டதேவர் திருவாய்மலர்ந்தருளிய இச்சிவஞான போத பன்னிரண்டுசூத்திரங்களும் வடமொழியில் இரௌரவாகமத் திலேபாசவிமோசனப் படலத்திலுள்ளனவென்றும், அவற்றையே இவர் தமிழில் மொழிபெயர்த்துச் செய்தனரென்றும் ஒருசாரார் உரைப்ப. முன்னோரொருவர் ஒன்றுஎழுதிவைத்தனராயின் அது பொருந்துமா பொருந்தாதாவென்று ஆராய்வதின்றி அவர்எழுதிய தனைஅங்ஙனமே கூறிப்போவதே நம்மனோர்க்கு வழக்கமாயிருக் கின்றது. மற்றுநம்பெருமான் சுவேதவனப்பிள்ளையார் அருளிச் செய்த சிவஞானபோத சூத்திரங்கள்பன்னிரண்டும் வடமொழிச்சிவ ஞானபோதத்தின் மொழிபெயர்ப்புத்தாமா வென்று ஆராயப்புகுந்த வழி அவையிரண்டற்கும் பேதங்கள்பல காணப்பட்டமையால் அஃது அதன்மொழிபெயர்ப்பன்றென்பது துணிபாயிற்று. இனிவடமொ ழிச்சூத்திரங்கள் பன்னிரண்டாயினும் இரௌரவாகமத்திற் பாசவி மோசனப்படலத்துள்ளவாவென்று அவ்வாகமம்வல்லாரை உசாவிய வழி, அவைஆண்டிருந்ததற்கு அரியையுமில்லையென்றும், அப்படலத் தில் அப்பெற்றியவாம் சூத்திரங்கள் சிறிதுங்காணப்படவில்லையென் றும் அவர்கூறுகின்றார். இன்னும்மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோதம் மொழிபெயர்ப்புநூலாயின், அதற்குச்சிறப்புப் பாயிரம்உரைத்தருளிய சகலாகமபண்டிதரும் மெய்கண்டதேவர்க் குப்பிரதமசீடருமான அருணந்திசிவாசாரியர் அச்சிறப்புப்பாயிரச் செய்யுட்கண் அதுமொழிபெயர்ப்புநூலென்று கூறிவொர்; மற்று அவர்அதனை அவ்வாறுகூறாது

"மயர்வறநந்தி முனிகணத்தளித்த
உயர்சிவஞானபோத முரைத்தோன்
பெண்ணைப்புனல்சூழ் வெண்ணெய்ச்சுவேதவனன்
பொய்கண்டகன்ற மெய்கண்டதேவன்" என்று அதனைமுதனூ லாகவே யியற்றியருளினரென்று கூறுதலாலும், சிவஞானசித்தியார் பாயிரத்தும்

"போதமிகுத்தோர் தொகுத்த பேதைமைக்கே
பொருந்தினோரிவர்க்கன்றிக்கதிப்பாற் செல்ல
ஏதுநெறி யெனுமவர்கட்கறியமுன்னாள்

இறைவனருணந்திதனக்கியம்பநந்தி
கோதிலருட்சனற்குமாரர்க்குக் கூறக்
குவலயத்தினவ்வழியெங் குருநாதன்கொண்டு
தீதகலவெமக்களித்த ஞானநூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தியென்றே" என்று அவ்வா
றேகூறுதலாலும், சிவஞானபோதஞ் சிவஞானசித்தியென்னும் முத
னூல் வழிநூல்கட்குச் சார்புநூலியற்றிய உமாபதிசிவாசாரிய
சுவாமிகளும் சிவப்பிரகாசப்பாயிரத்தில்

"தேவர்பிரான் வளர் கயிலைக்காவல்பூண்ட
திருநந்தியவர்கணத்தோர் செல்வர்பாரிற்
பாவியசத்திய ஞானதரிசனிகளடிசேர்
பரஞ்சோதிமாமுனிகள் பதியாய்வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்டதிறலார்மாறு
விரவுபுகழருணந்தி விறலார்செல்வத்
தாவிலருண்மறைஞான சம்பந்தரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மையோரே" எனவும்

"தெரித்தகுருமுதல்வருயர் சிவஞானபோதஞ்
செப்பினர்பின்பவர்புதல்வர் சிவஞானசித்தி
விரித்தனர்மற்றவர்க டிருவடிகள்போற்றி
விளம்பியநூலவை யிரண்டும்விரும்பிநோக்கிக்
கருத்திலுரை திருவருளு மிறைவனூலுங்
கலந்துபொதுவுண்மை யெனக்கருதியானு
மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்தநூறு
மாசில்சிவப்பிரகாச மாகுமன்றே" எனவுந்தமதுமெய்கண்ட
சந்தானமரபும், அச்சந்தானநூல்வந்த வரலாறும் நன்கெடுத்துக்
கூறுதலாலும், சந்தானசாரியராதல் அவர்க்குப்பின் அம்மரபில்வந்த
சீகாழிச்சிற்றம்பலநாடிகள் தாயுமானசுவாமிகள் முதலியோராதல்
அதுமொழிபெயர்ப்புநூலென்று யாண்டு முரைப்பக்காணாமையா
னும், தமிழிற்காணப்படும் அரியபெரியநூல்களையெல்லாம்வடமொழி
யிலிருந்துவந்தனவெனநாட்டுதற்கு வடமொழிமாட்டுத் துரபிமானம்
வைத்தார் சிலர்தமக்குத்தோன்றியவாறு நம்பெருமான் மெய்கண்ட
தேவரருளியமுழுமுதனூலையும் மொழிபெயர்ப்புநூலென்று கூறிய

வுரை போலியுரையாமென்று கடைப்பிடிக்க. தலபுராணங்களெழுது வோரெல்லாம் தாமெழுதுமவை வியாசர்இயற்றிய இப்புராணத்துள் ளன, அப்புராணத்துள்ளன வென்றுகட்டிச்சொல்லுதல்போல, யாரோ வொருவர்தமிழில் நம்பெருமானருளிய சிவஞானபோதசூத்திரச் சிறப்பைக்கண்டு அவற்றை ஒரோவிடத்துப் பிறமொழிபெயர்த்து அங்ஙனமியற்றியபோலிமொழிபெயர்ப்பை இரௌரவாகமத்திலுள் ளதென்றுகட்டிவிட்டார். இவ்வுண்மையுணராத பின்னோர்அதனை மெய்யுரையெனவேநம்பி இழுக்கினரென்க.

இனி நம்பெருமானருளிச்செய்த சிவஞானபோத நூல் வேதாக மங்களிற்பரந்த பொருட்சாரமாயியற்றப்பட்டதல்லது அவற்றுள் ஒரோவிடத்து ஏகதேசமாய்அடங்குவதன்று. வேதாகமமுதலிய எல்லாநூற்பொருளும் இதன்கண் அடங்கும்; இஃது அவ்வேனைய வற்றின் அடங்காது. அப்பெற்றியுணர்ந்தே ஆன்றோரும்

"வேதம்பசுவதன்பால் மெய்யாகமநால்வர்
ஓதுந்தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யினுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ்நூலின்றிறம்" என்றிதன்பெருமை தேற்றுவாராயிற்று. சமயாசாரியசுவாமிகளான மாணிக்கவாசகருக்குச் சிவபெருமான் அருட்குருவடிவங்கொண்டு குருந்தமரநீழலில் உபதேசித்தருளியதும்இச்சிவஞானபோதமே. கயிலாயத்திலெம்பெருமான் திருநந்தி தேவர்க்குபதேசித்ததும், அவர்சனற்குமாரர்க்குபதேசித்ததும், அவர் சத்தியஞானதரிசனிகட்குபதேசித்ததும், அவர்பரஞ்சோதிமுனிவர்க் குபதேசித்ததும், அவர்மெய்கண்டதேவர்க் குபதேசித்ததும் இச்சிவ ஞானபோதமேயாம். சிவபெருமான்முதற் பரஞ்சோதிமுனிவரீறாக அவர்மாட்டெல்லாம் பன்னிரண்டுபதேச விஷயவுருவாகமாத்திரமிருந்தஅச்சிவஞானபோதம், மெய்கண்டவள்ளலாரிடத்துத் தமிழ்ச் சூத்திரவடிவம்பெற்றுக் கருத்துரை, வார்த்திகவுரை, உதாரணச்செய் யுள், அதிகரணப்பகுப்பு, சூரணைக்கொத்துமுதலியஅலங்காரவிசேட முடைத்தாய் நடைபெறலாயிற்றென்க.

பின்னர் மெய்கண்டதேவர் தாமியற்றியருளிய சிவஞானபோ தப்பொருள் விளக்கவிரிவுரைபோலஒருநூலியற்றுகவென்று தம்பிர

தம்சீடர் அருணந்திசிவாசாரியசுவாமிகட்குக் கட்டளையிட்டாராக லின்அவரவ்வாறே சிவஞானசித்திப் பெயரியவழிநூல் அமைத்தரு ளினாரென்க.

பின்னர் அருணந்திசிவனார் சிவஞானபோதம், சிவஞானசித்தி இரண்டனையும் தம்பிரதமசீடர் திருக்கடந்தை மறைஞானசம்பந்தர்க் குபதேசித்தருளினார். பின்னர்மறைஞானசம்பந்தர் அவ்விரண்டனை யும் திருக்கொற்றங்குடி உமாபதிசிவனார்க்கறிவுறுத்தருள உமாபதி சிவனார் அவையிரண்டன்பொருளைவிரித்துச் சிவப்பிரகாச முதலிய எட்டு ஞானநூல்களருளிச்செய்தனர். இங்ஙனம்வாராநின்றது மெய் கண்டபரம்பரை என்க.

---

திருச்சிற்றம்பலம்.

# அத்துவித சொரூபம். II



'அத்துவிதம்' என்னுஞ்சொல் கேவலாத்துவிதம், சுத்தாத்து விதம், விசிட்டாத்துவிதம் என்னுஞ்சொற்றொடர்களிலே சேர்த்துச் செய்யுள்வழக்கினும் உலகவழக்கினும் வழங்கப்பட்டுவருகின்றது. இச்சொல்லை சொல்லாராயும் நெறியானும்பொருளாராயும் நெறியா னும்பரிசோதனைசெய்து உணர்ந்துகொள்ளல் வேண்டும்.

இனிஇச்சொல்லைப்பகுக்குமிடத்து நத்விதீயம்என்றாகிற்கும். இவற் றுள்முதல்நின்ற நஎழுத்துஅன்மை இன்மை மறுதலைஎன்னும் பொ ருள்களைப்பயப்பதோர் உபசர்க்கமாம். பின்நின்றசொல் இரண்டென் னும்பொருளைத்தருவதோர் எண்ணுச்சொல்லாம். இவையிரண்டும் புணருங்கால் ந என்னும்அவ்வுபசர்க்கத்தில் ந் என்னும்மெய்யெழுத் துப்போக அம்மெய்யின்மேலேறிநின்ற அ வென்னும் உயிரெழுத்து மாத்திரம்நின்று அத்விதீயம் என்றாகும். இவ்வத்விதீயம் என்னுஞ் சொல்செந்தமிழ்வழக்கில் அத்துவிதம்என்று திரிபெய்திவரும். இனி அவ்வுபசர்க்கமெய்யில் ஏறிநின்ற அகரவுயிர்நிற்ப ந் எனும்மெய்கெடு தல்பாணினிமுனிவர் தமதட்டாத்தியாயிஇலக்கணத்தில்இரண்டாம்

பாதத்து ஆறாவது சூத்திரத்தின்கண் ஓதியவாற்றால் இனிதறியப் படும். இனி இவ்வுபசர்க்கம் அன்மைப்பொருளையுணர்த்துதல் அப்பிராமணன் அசைவன் அநேகர் அஞ்ஞானி என்றற் றொடக்கத்துச் சொற்களால் அறியப்படும்; இவைமுறையே பிராமணன் அல்லாதவன் சைவனல்லாதவன் ஏகன் அல்லாதவர் ஞானியல்லாதவன் எனப்பொருளுணர்த்தும். இஃது இங்ஙனம் அன்மைப் பொருளையுணர்த்துதல் உயர்திணை அஃறிணைப்பொருட்பெயர்களோடு சேர்கின்ற வழியேயாம். இனி யிஃது இன்மைப்பொருளை யுணர்த்துதல் அஃறிணைப் பண்புச்சொற்களோடு இணங்குகின்ற வழியேயாம். இஃது அமலம் அகளங்கம் அயோக்கியம் அசலம் என்றற் றொடக்கத்தனவற்றால் அறியப்படும்; இவைமுறையே மலம் இன்மை களங்கம் இன்மை யோக்கியம் இன்மை சலனம் இன்மை என்னும்பொருள்களையுணர்த்தாநிற்கும். அஃறிணைப்பொருளுள்ளும் இவை குணத்தை யுணர்த்தி பின் உயர்திணைப்பொருளுக்கு அமலன் அகளங்கன் அயோக்கியன் அசலன் என்று பெயராங்கால் அக்குணங்களையில்லாதவன் என்றேபொருள்குறிக்கும். ஆகவே, இவை அஃறிணையுள்ளும் உடைமைப்பொருளான குணவின்மையைக் குறிக்கவேவருவனவாமாதலால், அவ்வுபசர்க்கம் இன்மைப்பொருளுணர்த்தும் வழியெல்லாம் பண்புச்சொற்களோடுமாத்திரம் இணைந்துவருமென்றல் துணிபொருளாம் இனிமேலே குறிக்கப்பட்டவாறு இது பிராமணன்முதலான பொருட்பெயரை யறிவிக்குமிடத்தெல்லாம் அன்மைப்பொருளை யுணர்த்துவதென்பதூஉம் இதனோடு இயைவித்து அறியற்பாற்று. இனிக் குணப்பெயருள்ளுங் குணிப்பெயருள்ளும் ஒன்றனோடொன்று மறுதலைப்பட்டு இரட்டைமொழிகளாய் நிற்பனவற்றுள் ஒன்றனைச் சுட்டுமிடத்து இந்நகரவுபசர்க்கம் மறுதலைப்பொருள்பயப்பதாய் நிற்கும். இது அசத்தியம் அஞ்ஞானம் அசாதாரணம் அசேதனம் என்றற் றொடக்கத்தனவற்றால் தெற்றெனத்தெளியப்படும். இவைமுறையே சத்தியத்தோடு மறுதலைப்பட்ட அசத்தியத்தினையும், ஞானத்தோடு மறுதலைப்பட்ட அஞ்ஞானத்தினையும், சாதாரணத்தோடு மறுதலைப்பட்ட அசாதாரணத்தினையும், சேதனத்தோடு மறுதலைப்பட்ட அசேதனத்தினையுமுணர்த்துவனவாம். இச்சொற்கள் மக்களிரட்டை மாவிரட்டைகாயிரட்டைபோல் ஒன்றற்கொன்றினமாய் இரண்டேயாய்நிற்றலால் இவற்றுள் ஒன்றனையொருசொல் லுணர்த்தவே, ஏனை

யதனை அச்சொல்லோடிணைந்தஉபசர்க்கம்உணர்த்தி இவ்வாறுமறுத லைப்பொருட்கண்ணே வருவதாகும். இனி உண்மையான்நோக்கும் வழி இம்மறுதலைப்பொருளும் மேலேகாட்டிய அன்மைப்பொருட் கண்ணே அடங்குவதன்றிப்பிறிதில்லை நன்று சொன்னீர், இம்மறு தலைப்பொருளையுணர்த்தும் உபசர்க்கஅவசரமும் அன்மைப்பொருட் கண்ணே அடங்குவதென்று மாத்திரம் கூறுவதென்னை? அஃது இன்மைப்பொருட்கண் அடங்குவதென்றுரைத்தல் ஆகாதோ வெ னின்,—நன்றுவினாயினாய், அன்மையென்பது ஒருபொருளைமறுத்து வேறோர்பொருளை நாட்டுவதாம், இன்மை யென்பது அப்பொரு ளின்இருப்பைமறுத்து அதன்அபாவத்தைநாட்டுவதாம். 'இவன்சாத் தனோ?' என்று வினாயினானுக்கு அவன்சாத்தன் அல்லன் கொற்றன் என்றெழுந்த மறுமொழி வினாவப்பட்ட அவ்வுயர்திணைப் பொருள் சாத்தனல்லன் என்றுமறுத்துக் கொற்றன் என்டானை அறிவுறுத் தியது. இனி 'அங்கே சாத்தன் உளனோ?' என்று வினாயினானுக்கு அங் கே சாத்தன்இலன் என்றெழுந்தவிடை சாத்தன் என்னும் உயர் திணைப்பொருள் அங்கில்லாமையை உணர்த்தி அதன் அபாவத்தை யே அறிவுறுத்தியதாம். 'இவன் சாத்தனோ?' என்று முன்னெழுந்த வினாவில் வினாவப்பட்ட பொருள் ஒன்றிருப்ப அப்பொருளின் உண் மைமாத்திரம் அறியப்படாது நின்றது; அதற்கெழுந்த சாத்தனல் லன் கொற்றன்என்னும் விடை அப்பொருளினிருப்பை யுடன்பட்டு அப்பொருள் கொற்றனும் என அதன் உண்மையைமாத்திரம் அறி வுறுத்திநிற்பதாயிற்று. இதனால், அன்மைப்பொருள் ஒரு திரவியத் தின் இருப்பை யுடன்பட்டு அதன் சொரூபவுண்மையினை மாத்தி ரம் அறிவிப்பதாம்என்றுஇனிது பெறப்படுமென்க. இனி 'அங்கே சாத்தன் உளனோ?' என்று பின்னெழுந்த வினாவில் சாத்தன் என்னும் உயர்திணைப் பொருட்சொரூபஞ் சிறிதும் வினாவப்படுதலின்றி அப் பொருளின் இருப்பே அறியவேண்டுவதாய் நின்றது; அதற்கு விடையாய் எழுந்த அங்கே சாத்தன் இலன் என்பது வினவப்பட்ட அவ்வுயர்திணைப்பொருள் அங்கில்லையென மறுத்து அதன் அபா வத்தை நாட்டுவதாயிற்று. இதனால் இன்மைப்பொருள் ஒருதிரவியத் தின் இருப்பை யுடன்படாது அதனைமறுத்து அதன் அபாவத்தை நாட்டுதற்கண்ணேமாத்திரம் வருவதாமென்று துணியப்படுமென்க. இதனால் வினாவும் பொருளினிருப்பறியப்பட்டு அதன் சொரூபம்

அறியப்படாமையின்கண் வருவதூஉம், பொருட்சொரூபம் அறியப்பட்டு அதன் இருப்பு அறியப்படாமையின்கண் வருவதூஉம் என வினாஇரு திறப்பட்டுநிற்றல்காண்க. இதனாலன்றே தொல்காப்பியத்திற்குரைகண்ட ஆசிரியர் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் 'பொருட்பிழம்புமாத்திரமுணர்ந்து அதன் உண்மை யறியப்படாமையினும், உண்மை மாத்திரமுணர்ந்து பிழம்பறியப் படாமையினும் வினாநிகழும்' என்று அங்ஙனம் உரை கூறுவாராயினதூஉமென்க. இதுநிற்க.

இனி அவ்வசத்தியம் அஞ்ஞானம் என்பவற்றின்கண் நின்று மறுதலைப் பொருளுணர்த்திய ந எனும் உபசர்க்கம் அன்மைப் பொருட்கண் அடங்குமாறு யாங்ஙனமெனிற் காட்டுதும். ஞானத்தோடு மறுதலைப்பட்டபொருள் அஞ்ஞானத்தின் அபாவமாயினன்றே ஆண்டு இன்மைப்பொருள் கூறல்பொருந்தும்? ஞானம் இன்மையே அஞ்ஞானம் என்றும் பிரகாசமின்மையே அந்தகாரம் என்றுங் கூறுதல் ஒருவாற்றானும் பொருந்தாதாம். அபாவப்பொருளாயின் அதற்குக் குணமுந்தொழிலும் இல்லையாம். இது தருக்கசங்கிரக வுரையிலே தருக்கசாத்திரியாரான அன்னம்பட்டர் உரைகூறுமாற்றானும் இனிதுபெறப்படும். இனி அஞ்ஞானம் என்னுந் திரவியத்திற்கு அறியாமைக் குணமும் சீவான்மாக்கள் அறிவை விளங்கவொட்டாது தடைசெய்து நிற்குங்கிரியையும், அந்தகாரத்திற்குக் கருமைக்குணமும் கண்ணைமறைத்து அதனறிவியக்கத்தைத் தடைசெய்து நிற்குங் கிரியையும் பிரத்தியக்கமாக அறியக்கிடத்தலால் அவை யில்பொருளாகாது உள்பொருள்களேயாம். அற்றேல் தருக்கசாத்திரியாரான அன்னம்பட்டர் அந்தகாரத்தினைத் திரவியமென்றுரையாது 'அஃது ஆலோகத்தின் அபாவம்போன்ற ஓர் இல்பொருள்' என்றுரைகூறியதென்னையெனின்;—அவர் அவ்வாறுகூறியது ஒருவாற்றானும் பொருந்தாதாம்; என்னை? இக்காலத்துப் பௌதிகசாத்திரிகளெல்லாரும் தம்மதிநுட்பத்தால் இயற்றிய பல்நுண்ணிய இயந்திரசகாயங் கொண்டு பிரகாசிக்கின்ற கிரணங்களிலெல்லாம் அதிசூக்குமமான அந்தகார அணுக்கள் இயங்குதலைப் பிரத்தியக்கமாகக்கண்டு போதருகின்றன ராகலின், ஒளியைப்போல இருளும் உள்பொருளாமென்றே துணியப்படும். இந்நுண்பொருள் வடநூல் தென்னூல் முடிபு முழுதும் ஒருங்குணர்ந் துரைஎழுதிய ஆசிரியர் சிவாக்கிரயோகிகள் சிவஞானசித்தியாருரையுள் அந்தகாரம் உள்பொருளென்றே நாட்

டியமுடியும் இக்காலத்துப் பௌதிகசாத்திர முடிபோடு பெரிதும் இணங்குகின்றது. இங்ஙனமாகலின், இதனுண்மை யறியாதுகூறிய அன்னம்பட்டருரை ஈண்டைக்குச் சிறிதும் பொருந்தாதென்று துணியப்படும். இது நிற்க.

அவ்வாறு மேற்காட்டிய முறையான் சத்தியம், ஞானம் என்பவற்றோடு மறுதலைப்பட்ட அசத்தியம் அஞ்ஞானம் என்பனவெல்லாம் உள்பொருள்களையே குறிப்பனவாயாகலின் அவையெல்லாம் இன்மைப்பொருட்கண் அடங்குமாறில்லை யென்பதும், அவை யன்மைப் பொருட்கண் அடக்கமுறுதலே பொருத்தமா மென்பதும், அதனான் மறுதலைப்பொருள் அன்மைக்கண் அடங்க ந வென்னும் உபசர்க்கம் உணர்த்தும்பொருள் அன்மையின்மை யென்னும் இரண்டேயா மென்பதும் பெறப்படுவனவாம் என்க.

இனி இந்நகரத்தா லுணர்த்தப்பட்ட அன்மை இன்மை யென்னும் இருபொருள்களுள் ஈண்டெடுத்துக்கொண்ட 'அத்துவிதம்' என்னுஞ் சொல்லின்கண் நகரம் எப்பொருளை உணர்த்துமெனின்,- அஃது அன்மைப்பொருளை யுணர்த்துவதாமென்க. 'துவிதம்' என்பது இரண்டு என்னும் பொருளை உணர்த்துவது. இரண்டு என்னும் பொருட்பெயர் இருமை என்னும் பண்பைத்தானுடையதாக இருத்தலின், இவ்வெண்ணுப் பொருட்பெயர்மேல் வரும் நகரம் அன்மைப் பொருளையல்லது, வேறுபொருளை உணர்த்தாது. என்னை? பண்பை யுணர்த்துங் குணப்பெயர்மேல் வரும் நகரமாத்திரம் இன்மைப் பொருளைக் காட்டுமென்று மேலேயுரைத்து விளக்கினே மாகலின் என்க. இன்னும் இவ்வெண்ணுப் பொருட்பெயர்மேல் வரும் நகரம் யாண்டும் அன்மைப்பொருளையே விளக்குமென்பதற்கு அநேகம் என்னுஞ்சொல் ஒன்றில்லையென்னும் இன்மைப் பொருளைச் சுட்டாது ஒன்றல்லாத பலவென்பதனைக் காட்டுதலே சான்றுமாகலானும், ஆசிரியர்சிவஞானயோகிகளும் சிவஞானபோத வுரையின்கண் "எண்ணுப்பெயர்மேல் வந்தநகரம் அன்மைப்பொருண்மாத்திரையே யுணர்த்திப் பொதுமையினிற்பதன்றி ஏனைச்சொற்களின்மேல் வந்த நகரம்போல இன்மை மறுதலைப் பொருள்களையுணர்த்துதல் வழக்கின் கண் இன்மையின்" என்று ஆராய்ந்து நிறுவினமையானும் 'அத்துவிதம்' எனுஞ்சொல் 'இரண்டு அன்மை' என்றே பொருளுணர்த்து மென்றல் கரதலாமலகம்போற் பெறப்படுவதாம்.

இனி இதற்கு இப்பொருள் காணமாட்டாதார் 'அத்துவிதம்' என்னும் பொருட்பெயர்மேல் வந்த நகரத்திற்கு 'இரண்டின்மை' எனப் பொருள்கொண்டு இரண்டு என்பதன் இருப்பை மறுத்து அதற்கு 'ஒன்று' என்றே பொருளுரைத்தார். இனி ஒன்று என்பதனை உணர்த்துதற்குச் சமஸ்கிருதபாஷையில் 'ஏகம்' என்னுஞ் சொல் உண்டாகலின் அதனையே 'அத்துவிதம்' என்னுஞ் சொல்லும் உணர்த்து மென்றல் மிகைபடக்கூறுதல் என்னுங் குற்றமாயொழியும். உலகத்தில் பரந்துபட்டுக்கிடக்கும் எல்லாப் பாஷைகளிலும் ஒருபொருளை யுணர்த்துதற்கு ஒருசொல்லேயன்றி இருசொற்கள் கிடையா. அற்றேல், தமிழில் 'மலை' என்பதனை யுணர்த்த வரை, விலங்கல், அடுக்கல் முதலியபலசொற்கள்காணப்படுதலும், இவ்வாறே நிகண்டு முதலியவற்றில் ஒரேபொருளையுணர்த்தும் பலசொற்காணப்படுதலும் என்னையெனின்;—மேலே காட்டிய அச்சொற்களெல்லாம் ஒரேபொருளினை உணர்த்தாது பல்வகைத் தோற்றமும் அமைதியும் உற்றுவிளங்கும் பலவற்றை உணர்த்துவனவாம். வரையென்பது மூங்கிற்காடு அடர்ந்திருக்கும் மலையினையும், விலங்கல் என்பது நீளச் சென்று குறுக்கிட்டுக் கிடக்கும் மலையினையும், அடுக்கல் என்பது பாறைகள் ஒன்றன்மேல் ஒன்று அடுக்கடுக்கா யிருக்கும் மலையினையும் சுட்டுவனவாம். இவ்வாறே தமிழிலும், வடமொழி முதலான பிறபாஷைகளிலும் ஒரேபொருட்குப் பெயர்கள்போலத் தோன்றும் பலசொற்களும் அப்பொருட்பேதங்கள் பலவற்றையும் அறிவித்தற்குச் சிறப்பாயிட்ட வேறுவேறுபெயர்களாம். இங்ஙனம் ஒருபொருட் பல்பெயராய் வழங்குவனவற்றின் பேதம் அறியமாட்டாராய்ப் பிற்காலத்துப் புலவரெல்லாம் தமக்குத் தோன்றியவாறே அச்சொற்களைப் பிரயோகம் பண்ணுவாராயினர். பண்டைக்காலத்துச் செந்தமிழ்ச் சங்கவிலக்கியங்களில் அச்சொற்களெல்லாம் பொருட்பேதந் தோன்ற மிகநுட்பமாய்ப் பிரயோகிக்கப்பட் டிருக்கும் அருமைபெருமைகள் அச்சங்கவிலக்கியங்கள் பெரும்பாலனவற்றிற்கு விழுமிய உரைகண்ட ஆசிரியர் நச்சினார்க்கினியார் ஆண்டாண்டு அச்சொற்பொருணயங்களை நன்கெடுத்து வகுத்து உரையுரைக்கு மாற்றால் இனி தறியற்பாலனவாம். ஆகவே, ஒன்று என்னும் பொருளைக் குறிப்பதற்கு வடமொழியில் 'ஏகம்' என்னுஞ்சொல் உண்மையினால் அப்பொருளையே யுணர்த்துதற்கு 'அத்துவிதம்' என்னுஞ்சொல்லும்

எழுந்ததென்றலும், 'ஏகம்' 'அத்துவிதம்' என்னும் அவ்விருசொற்களும் தமக்குட் பேதஞ்சிறிதுமின்றி ஒருபொருளையே யுணர்த்திக் கொண்டு நிற்குமென்றலும், ఏకమేవాద్వితీయం బ్రహ్మ என்னும் வாக்கியத்துள் நின்ற அவ்விருசொற்களுக்கும் ஒருபிரயோசனமு மின்றி ஒரே பொருளைக் கற்பித்தலும் மிகைபடக் கூறுதல் நின்றுவற்றுதல் என்னுங் குற்றங்களுக்கிடனாய் ஒழியும் என்க.

இனி அதுவேயுமன்றித் தமிழ்வடமொழிமுதலான பாஷைகளில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்றற்றொடக்கத்து எண்ணுப் பொருள்களைக் குறிக்க ஒன்று, இரண்டு முதலான ஒவ்வோர் சொற்களே காணப்படுகின்றன வன்றி வேறுபிற காணப்படுகின்றில. ஒன்று என்பதற்கு ஏகம் என்னும் ஒரேசொல்லும் இரண்டு என்பதற்குத் துவிதம் என்னும் ஒரேசொல்லும், மூன்று என்பதற்குத் திரிதம்என்னும் ஒரேசொல்லும், நான்குஎன்பதற்குச் சதுர்த்தம் என்னும்ஒரேசொல்லும், ஐந்தென்பதற்குப்பஞ்சஎன்னும்ஒரேசொல்லுங் காணப்படுதலல்லாமல், வேறுசொற்கள் காணப்படாமையால், பிறவற்றிற்கின்றி இவ்வேகம் என்னும் ஒருபொருட்குமாத்திரம் 'அத்துவிதம்' என மற்றொரு பெயருமுண்டென்றல் பாஷாதத்துவம் இனைத்தென்றறியாதார் கூறுங்கூற்றாயொழியும். அதுகிடக்க.

இனிப் பொருளாராயும் நெறியால் வைத்துப்பார்க்கு மிடத்தும் அவ்வத்துவிதம் என்னுஞ்சொல் ஒன்றெனப் பொருள்படுமாறில்லையாம். சுருதியுட்போந்த "ఏకమేవ రుద్రో న ద్వితీయాయ తస్థే" "ఏకమేవాద్వితీయం బ్రహ్మ" "శివమద్వైతం శాంతం చతుర్థం మన్యంతే" என்றற்றொடக்கத்து வசனங்கள் உருத்திரன் ஒருவனே உளன் இரண்டாவதில்லை எனவும், பிரமம் ஏகமாயும் அத்துவிதமாயுமுளதெனவும், அத்துவிதமாயும் சாந்தமாயும் நான்காவதாயுமுள்ள சிவத்தின் வேறுவதொன்றில்லை எனவும் பரம்பொருட்டுணிவு பெறுவிக்குங்கால், அதனை 'ஏகம்' 'அத்துவிதம்' என்ன இரண்டுசொற்களால் விளக்குதலானேயே அஃது அவ்விருசொல்லானும் அதன் இருவகை இலக்கணத்தைஉரைக்கப் புகுந்ததென்பதுபெறப்படவில்லையா? தத்துவங்கடந்தபரம்பொருளியல்பு உணர்த்தும்வழியெல்லாம் சுருதி 'ஏகம்' என்றேயொழியாது, 'அத்துவிதம்' எனவும் மேலும் ஒருசொற் கூட்டிக்கூறுதலால் அச்சொல்லால் வேறுமொருதுட்பந்தெரிக்குங்கருத்

தூப்பற்றியேயன்றே? அற்றன்று, பிரமம் ஒன்றேயுளதென்றுமேலு
மேலும் வற்புறுத்துதற் பொருட்டாகவே சுருதி அங்ஙனங்கூறிற்
றன்றி 'அத்துவிதம்' என்னுஞ்சொல்லால் வேறுமொருநுட்பந்தெரி
த்தற் பொருட்டன்றெனின்;— ஒன்றனையே மேலுமேலும்வற்புறு
த்தவேண்டினுர் அப்பொருட்குரிய அச்சொல்லையேமறித்து மறித்
துங்கூறுவர்; இவ்வியல்பு தமிழ்வடமொழிமுதலான எல்லாப்பாஷை
யிலக்கணங்களுக்கும் ஒப்பமுடிந்ததொன்றேயாம்; அவனே அவனே
சாத்தன், கொற்றன் அதனைஉண்ணவே உண்ணவே செய்வான்
என்னும் உதாரணங்களானும் இதுதெளியப்படும். கடவுள்ஒன்றெ
ன்றே தெளிவிக்கவேண்டுவோரும் 'ஒன்றே, ஒன்றேகடவுள்' என்றே
கூறுப. இதுபோலச்சுருதியும் கடவுள் ஒன்றென்றுமாத்திரம் உறு
தியுரைநிகழ்த்தவந்ததாயின் 'ஏகம் ஏகம் பிரமம்' என்றேகூறிடல்
வேண்டும். அங்ஙனமன்றிச்சுருதி பிரமம்ஒன்றென்று வற்புறுத்து
தலோடு அதன்வேறுமோர் இலக்கணத்தையுங் குறித்தற்பொருட்
டே 'ஏகமேவாத்விதீயம்' எனக்கிளந்தோதுவதாயிற்று. அற்றேல்,
பிரமம்ஒன்றேஉளதென நிறுத்தக்கருதிய அதன்பொருள் ஆற்றல்,
'அத்துவிதம்' என்னுஞ்சொல்லுக்கு வேறுபொருள் கற்பித்தலாற்
குறையுமெனின்;— நன்றுசொன்னுய், தேற்றப்பொருள்படுந்தமிழ்
ஏகாரத்தோடொப்பதான 'ஏவ' எனும்இடைச்சொல் 'ஏகம்' என்ப
தனேடு இயைந்துநின்று 'பிரமம்ஒன்றே' எனப்பொருளுணர்த்திய
தாகலின், அப்பொருளாற்றல் ஆண்டுக்குறையுமாறு சிறிதுமில்லை
என்க. அற்றன்று, 'அவனே அவனேசாத்தன்' என்புழித்தேற்றே
காரம் அவன்என்பதனேடு சேர்ந்துநின்றவிடத்தும், மேலும்வலியுண்
டாதற்பொருட்டு 'அவனே' என்பது இரட்டித்து வந்தவாறுபோல
'ஏகமேவ' என்றவிடத்தும் மேலும் அப்பொருளாற்றல் தோன்று
தற்பொருட்டு 'அத்துவிதம்' எனுஞ்சொல் வந்ததெனின்;—அவ்
வாறு வரல்வேண்டினும், மேலே உதாரணவாக்கியத்தில் 'அவனே'
என்பதே பின்னும் இரட்டித்து வந்தவாறுபோல 'ஏகமேவ' என்
பதே பின்னுமிரட்டி "ஏகமேவ ஏகமேவ பிரமம்" எனவரற்பால
தல்லது, 'ஏகமேவாத்விதீயம்பிரம்மா' என வரற்பாற்றன்று எனமறுக்க.
அல்லதூஉம், 'அவன்' என்பது இரட்டியவழி 'ஏ' காரம்
இரண்டிடத்தும் புணர்ந்து 'அவனே அவனே' எனநிற்றல்போல
'ஏவ' என்பதும் இரண்டிடத்தும் புணர்ந்து 'ஏக மேவாத்விதீயமே

வப்ரம்மா' எனநிற்றல்வேண்டும்; மற்று அவ் 'ஏவ' எனும் இடைச் சொல் மேலைச்சுருதிவாக்கியங்களில் 'ஏகம்' என்பதனோடு மாத்திரம் புணர்ந்துநிற்பக் கண்டாமன்றி, 'அத்துவிதம்' என்னுஞ் சொல்லோ டு புணர்ந்துநிற்பக் காணாமையாலும், அங்ஙனம் பொருள் செய்தல் அவ்வாக்கியக் கருத்துக்கு முற்றும் முரணாமென்பது கடைப்பிடிக்க.

இனிச், சுருதி வேறுஎப்பொருள்கூறக்கருதி 'அத்துவிதம்' எனுஞ்சொல்லை ஆண்டுப்பிரயோகிப்ப தாயிற்றெனின்;—அப்பிரமம் என்னும் முழுமுதற்பொருள் எனை உலகு உயிர்களோடு ஒற்றுமை யுற்றுப் பிரிப்பின்றி நிற்றலை உணர்த்துதற் பொருட்டாகவே அஃ தச்சொற்பிரயோகஞ் செய்ததென்க. அற்றேல், அவ்வுலகுயிர்க ளோடு பிரிப்பின்றி நிற்கும் அவ்விறைவனும் அவையுஞ் சமமாவான் செல்லுமேயெனின்;—அங்ஙனம் பிரிப்பின்றி நிற்பினும் இறை வன் அளவிறந்த ஆற்றலும் முற்றறிவும் முழுமுதன்மையு முடைய னாகலானும், எனை ஆன்மாக்கள் சிறியசத்தியும் சிற்றறிவும் உடைய வாய் முதன்மை யில்லாவாயிருத்தலானும், மற்றை உலகங்கள் அறி வில்லாத சடப்பொருள்களாதலானும் அவனும் அவையும் அவ்வாறு சமமாவான் செல்லுதலில்லை யென்க. இது தெரித்தற்கன்றே 'அத்விதீயம் ப்ரம்ம' என்னுது, 'ஏகமேவாத்விதீயம் ப்ரம்ம' எனச சுருதி 'ஏகம்' என்னுஞ் சொற்கூட்டிக் கூறுவதாயிற்று. 'பிரமம் ஏக மேவ' என்றமையானே இரண்டு பிரமங்கள் இல்லை, பிரமம் ஒன்றே யுள்ளது என்பது துணியப்படுவதாயிற்று. சேர்முதலாயின பலராற் செய்யப்படுதல்போல, அநிர்வசித்திரமான இப்பிரபஞ்சமும் கடவு ளர் பலராற் செய்யப்படுவதென்னும் அநேகேசுரவாதத்தை மறுத் துக் கடவுள் ஒன்றே உள்ளதென நிறுவுதற்பொருட்டுச் சுருதி 'ஏக மேவ' எனுஞ் சொற்பிரயோகஞ் செய்வதாயிற்றெனும் உண்மை யைச் சைவசித்தாந்த பரமாசாரிய மூர்த்திகளான மெய்கண்ட தே வர்,

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்றநீபாசத் தோடுளைகாண்—ஒன்றின்றால்
அக்கரங்களின்று மகரவுயிரின்றேல்
இக்கிரமத் தென்னு மிருக்கு" என இனிது தெருட்டியருளி னமை காண்க. 'ஏகமேவ' என்ற அச்சொற்களால் பரப்பிரமத்தோடு

சமம்பெறுவ தில்லையெனவும், அப்பிரமம் தான் ஒன்றேயாய் உள்ள தெனவும் மிகநுண்ணியபொருள் நிலைபெறுத்தப்பட்டவாறு காண்க.

இனி அப்பிரமம் தான் ஒன்றேயாய் நிற்பினும், எனை உலகுயிர்களை அசைவித்தற்பொருட்டும் அறிவித்தற்பொருட்டும் அநாதி தொட்டு அவற்றோடு வேறறக்கலந்து நின்றுபகரித்தலின், அங்ஙனங் கலந்து நிற்கும் உண்மையினைத் தெருட்டவே பொருட்டன்மையால் ஒன்றாய் நிற்கும் அப்பிரமத்தைச்சுட்டிச் சுருதி 'அத்விதீயம்' எனவும் மொழிந்திடுவதாயிற்று. பொருட்டன்மையால் தான் ஒன்றேயானபிரமம் எனை உலகுயிர்களோடு சம்பந்தமுறாது தனித்துநிற்பதாயின் 'அத்விதீயம்' என்னுஞ் சொற்பிரயோகம் வேண்டாமல் 'ஏகமேவ ப்ரம்ம' என்று மாத்திரமே கூறவமையும். அங்ஙனந் தான் வேறு உலகுயிர்கள் வேறெனத் தனித்தனியே நிற்றலின்றி, இறைவன் அவற்றோடு உடனுடனாய்க் கலந்துகொண்டிருத்தலின் ஏகமாகிய அப்பிரமத்தைச்சுட்டி அத்விதீயமென்னுஞ் சொற்பிரயோகம் எழுந்ததென்க. பாலும் நீரும் தனித்தனியே நிற்குமாயின் பால்ஒன்று நீர் ஒன்று என்றும் அவை தனித்தனியே இருபொருள்கள் என்றுங் கூறல் பொருந்தும்; அங்ஙனமின்றிப் பாலுநீரும் ஒன்றுகூடியவழி அக்கலப்பினை ஒன்றெனவாவது இரண்டெனவாவது கூறல் சிறிதும் பொருந்தாதாம்; அக்கலப்பினை இரண்டல்லதெனக் கூறுதலே பொருத்தமாம். இதுபோலப்பிரமம் தான்வேறு உலகுயிர்கள் வேறெனத் தனித்தனியே நிற்பின் அவை தம்மை வேறுவேறு இருபொருள்களெனக்கொண்டு 'துவிதம்' என வழங்கல் பொருந்தும்; மற்று அப்பிரமம் அவ்வாறின்றி அநாதிதொட்டு உலகுயிர்களோடு உடனாய்க் கலப்புற்று நிற்றலின் அவை தம்மை ஒன்றெனவாவது இரண்டெனவாவது கூறுதல்பொருந்தாமையின், அவை கலப்பால் இரண்டல்லவாய் நிற்குமியல்பு தெரித்து 'அத்விதீயம்' எனச் சுருதி கூறுவதாயிற்றென்க.

இனி அன்மைப்பொருள் ஒன்றனைமறுத்து வேறொன்றனைகாட்டுவதாகலின், பிரமமும் உலகுயிர்களும் வேறுவேறு நிற்குமெனத் துவிதவாதிகள்கூறுந் தனிநிலையினைமறுத்து, அவையிரண்டும் ஒன்றோடொன்றுஅளாவிநிற்குங் கலப்புநிலையினை இவ்வத்துவிதமெனுஞ் சொல்லுணர்த்துவதாயிற்று. இவ்வத்துவிதமென்னுஞ் சொல் அன்மைப்பொருளையன்றி வேறுபொருளுணர்த்தாதென்பதுமுன்னரே இனிதுவிளக்கப்பட்டதுகாண்க.

இனி இவ்வத்துவித இரகசியார்த்தத்தை உணர்த்தவே தக்கணா மூர்த்திவடிவாய்எழுந்தருளிய இறைவனருட்கோலம் சின்முத்திரை பிடித்துக்காட்டியதென்க. அச்சின்முத்திரையிற் பெருவிரலோடு சுட்டுவிரல்சேர்ந்து ஒருசக்கிரவடிவு தோன்றுகின்றது. பெருவிரலுஞ் சுட்டுவிரலுந்தனித்தனியேநிற்பிற் பெருவிரல்ஒன்று சுட்டுவிரல்ஒன்றுஎனவும், அவைதனித்தனி இருபொருள்கள்எனவுங்கூறுதற்குப்பொருந்தும்; அங்ஙனமன்றி அவ்விரலிரண்டும் ஒன்றுகூடிஒரு சக்கிரவடிவாய்நின்றவழி அக்கூட்டுறவை ஒன்றெனவாவது இரண்டெனவாவதுகூறுதல் ஏலாது. அங்ஙனங்கூறல் ஏலாமையால் அவ்வொன்றுக்கும் இரண்டிற்கும் நடுநின்ற இயைபைச்சுட்ட ஒன்றனையும் இரண்டனையும் உணர்த்தாத அத்துவித மெனுஞ்சொல் ஆன்றோரால் அமைக்கப்பட்டதென்க. இனி இவ்விரற்கூட்டத்திற் பெருவிரலேபிரமமாம், சுட்டுவிரலே ஆன்மாவாம்; இவைஇரண்டன் கூட்டுறவேமுத்தியாம்; அம்முத்திக்கூட்டுறவே அத்துவிதமுத்தி யெனப்பெயர்பெறுவதாம். இங்ஙனம் இச்சின்முத்திரைக்கண் அத்துவிதமுத்தித்தன்மை சொல்லானன்றி வெறுங்கைகாட்டால்அறிவுறுக்கப்பட்டமையினாலன்றோ அக்குருவைச்சுட்டி "எல்லாமாயல்லதுமாயிருந்ததனை யிருந்தபடியிருந்துகாட்டிச், சொல்லாமற் சொன்னவை" என்று ஆன்றோர்கூறுவாராயினரென்க. இச்சின்முத்திரையின்பொருள் இதுவாதல் உணரமாட்டாதார் இதற்குத்தோன்றிய வாறெல்லாம்வேறுவேறு பொருள்கூறி இழுக்குறுவர். அதுகிடக்க.

இனி அத்துவிதம் எனும் அச்சொல்லுக்கு இன்மைப்பொருள் கூறுதலடாதாயினும், உலகுயிர்களெல்லாம் வெறும்பொய்ப்பொருள்களென்றுகோடலொகலின், பிரமம்ஒன்றே சத்தியமாய்உள்ளதுஏனைய இல்லை எனப்படுதற்கு ஏற்ப அத்துவிதமென்னுஞ் சொல்லுக்கு இவ்விடத்து மாத்திரம் 'இரண்டின்மை' எனப்பொருள் கொள்வேமென ஏகான்மவாதிகள் கூறுவராயெனின்;—அவர் கூறுவது ஒருவாற்றானும் பொருந்தாமை சிறுமகார்க்கும் விளங்கற் பாலதேயாம். உள்பொருள்களாய் உண்மை அனுபவப் பொருள்களாய்த் தோன்றும்உலகுயிர்களை இல்பொருள்களென்றற்குப் பிரமாணமின்மையானும், சுவேதாசுவதரோபநிடதம் "[illegible]" என்றும் "[illegible]" என்றும் கூறுமாற்றால் ஈசன் அநீச

ஞன ஆன்மாஇருவரும் பிறவாதவர்என்பதூஉம், பரமான்மா சீவான்
மாஎன ஒரேபெயரான்வழங்கப்படும் இருபறவைகள் மாயைஎன்னும்
ஒரே மரத்திலுள்ளன என்பதும் இனிது பெறப்படுதலானும்,
சுருதியோடு முரணுமற் கூறவேண்டுமென்னும் அவருரையே அவர்
க்கு இழுக்காய் முடிதலானும் அவருரை பொருந்தாதென்க.

என்று இதுகாறுங்கூறியவாற்ருல் மெய்கண்டதேவர் இற்றை
க்கு அறுநூற்றைம்பது வருடங்கள் முன் வெண்ணெய் நல்லூர்ச்
சடையப்பபிள்ளையார் அருமைமகளார் மணிவயிற்றிற் றிருவவதா
ரஞ்செய்து மூன்று வயதிலேயே அருள்ஞானமூர்த்தியாய்ச் சிவஞா
னபோதச் செம்பொருண் ஞானநூல் அருளிச்செய்து உலகைவழிப்
படுத்துவாராயின ரென்பதூஉம், அவர் அருளிச்செய்த அவ்வரிய பெ
ரிய சிவஞானபோதநூல் சுத்தச் செந்தமிழ்நூலாகுமே யல்லது
பிறர் கூறுமாறுபோல் மொழிபெயர்ப்பு நூலாகாதென்பதூஉம்,
அவர் மெய்ப்பொருள்கண்ட 'அத்துவிதம்' என்னுஞ்சொல் அன்மை,
இன்மை, மறுதலை என்னும் மூன்றுபொருள்களுள் அன்மைப் பொ
ருளையே உணர்த்துமல்லது வேறுபொரு ளுணர்த்தாதென்பதூஉம்,
அதனைப் பொருள்வகையால் ஆய்ந்து பார்க்கும் வழியும் சுருதி பிர
மத்தை ஏகமென்றே கூறியொழியாது 'அத்துவிதம்' என்றுங் கூறி
னமையால் அச்சொல்லால் அதன் வேறுயோர் இலக்கணத்தை
உணர்த்தல் வேண்டியே அச்சொற்பிரயோகஞ் செய்வதாயிற்றென்
பதூஉம் பிறவும் ஈண்டுவிளக்கப்பட்டன. ஓம் சிவாயநம! ஓம் சிவாய
நம! ஓம் சிவாயநம!

திருச்சிற்றம்பலம்.

# தமிழ் நான்மறையின் தெய்விக உண்மை.

வடமொழிக்கண்ணுள்ள நான்மறைபோலத் தமிழ்ப்பாஷை யின் கண்ணுள்ள நான்மறைகளின் தெய்விகவரலாற்றினை இன்றெ டுத் துபங்கியசிக்கப் புகுகின்றமையின் இங்ஙனம் இன்று விஷயத் திற்குப் பெயர்தரப்பட்டது. நான்மறை நற்பொருள்கள் எந்தப் பா ஷையிலே வழங்கப் பெறுமாயினும், தம்மைக் கேட்பார்க்கும் உணர் வார்க்கும் அவர் நெஞ்சினை உருகச்செய்து அவர் அறிவினைக் கரைத் துச் சிவானந்தப்பேற்றினைப் பெறுவிக்கும் நலம் உடையனவாம். அற்றாயினும், அவை தாம் தாம் வழங்கப்பெறும் பாஷையின் இயற் கை யமைதியழகானும் ஒருசிறப்பு எய்தப்பெற்றுத் தம்மைப்பயில் வார் அறிவோடு ஒற்றுமைப்பட்டு எளிதிலே அனுபவிக்கப் படுந்தன் மையவாய்ப் பொலிவடையும். உலகத்திலே பரந்துபட்டுக் கிடக்குந் தொள்ளாயிரம் பாஷைகளுள் ஒருபகுப்பு நாரிகேளபாகத்திலும், ஒரு பகுப்புத் திராட்சபாகத்திலும் பொருந்துவனவாய் இருக் கும். வேனிற்காலத்து வழிசெல்வான் ஒருவன் இடையே பசி யாலுந் தாகத்தாலும் மிக வருந்தி ஆண்டு ஒருசார் உயர்ந்து ள்ள ஒருதென்னை மரத்தின்மேற் பிரயாசையுடனேறி அதன்றலை யிற் காய்த்துத் தொங்குங்குலைப் பருங்காய் ஒன்றைப் பறித்துக் கொண்டு கீழ் இறங்கி அக்காயின்மேல் மட்டைகளை யெல்லாம் உரித் தெடுத்துப் பின் ஓட்டையும் உடைத்துக் கொண்டு உள்ளிருக்குந்தண் ணீரையருந்திப் பருப்பையுண்டு பசிதாகந் தீர்வுறக் கண்டாயன்றே! அதுபோல்வதோர் அமைதியுடைய பாஷை நாரிகேளபாகப்பற்றி வந்ததொன்றாம். தென்னைமரந் தன்பாற்கொள்ள தேங்காயினை எளிதிலே பறித்துக்கொள்ள வொவாது மிகஉயர்ந்து நிற்றல்போலத் தன்கண்ணுள்ள அரியபெரிய நற்பொருள்களைத் தன்னைப்பயில் வார் எளிதிலே அறிதற்கு ஒவ்வாது எழுத்தமைதி சொல்லமைதி கள் மிகவுங் கடினமாயிருத்தலும், அவ்வெழுத்தமைதி சொல்லமை திகளைத் துறைபோகக் கற்றவிடத்தும் பறித்துக் கொள்ளப்பட்ட தேங்காயின் மேன்மட்டைகளை உரிக்கவேண்டுவதுபோலப் பொ ருள் பல திறப்படத்தோன்றும் வாக்கியங்களிற் பொருளிதுவென்று நிச்சயித்தற் பொருட்டாம முயற்சைப் பொய்ப்பொருடருஞ் சொல்

லடுக்குகளையெல்லாம்விலக்கிக்கொண்டு அவ்வாக்கியஉண்மையமைதி கண்டபின்னும் உரித்ததேங்காயின் ஓட்டைக் களையவேண்டுவது போல அவ்வாக்கியத்தின் பொருட்சாரத்தை யுணரவேண்டுதலும் உடைத்தாய்அதன்பிறகு தன்உண்மைப்பொருளைக்காட்டும் பாஷை நாரிகேளபாக அமைதியினை யுடையதென்று தெளியப்படும். இனி இங்ஙனமெல்லாம் வருந்தவேண்டாது தன்றலைக்குமேற்றொங்கும் கொடிமுந்திரிப்பழக்குலையினைப் பறித்து அதன்கண்ணுள்ள மிகவுந்தித்திப்பான பழங்களைத் தான் வேண்டுமட்டும் புசித்து ஒருவன் பசியுந்தாகமுந் தீர்ந்தாற்போல, மிக இலேசிலே கற்றற்குரிய எழுத்தமைதி சொல்லமைதி வாக்கியவமைதி பொருளமைதிகளை யுடைத்தாய்த் தன்னைக் கற்பானுக்குத் தன்கண்உள்ள உண்மை நூற்பொருளை மிகவும் இரசிக்க ஊட்டும் பாஷை திராட்சபாக அமைதியினையுடையதென்று துணியப்படும்.

இப்பரதகண்டத்தின் வடக்கே வழங்கும் சமஸ்கிருத பாஷையும் இதன்தெற்கே வழங்கும் செந்தமிழ்ப்பாஷையும் தம்மைப்பயில்வார்க்குத் தங்கண்உள்ள சாத்திர வுண்மைப்பொருளை அறிவுறுத்துச் சிவானந்தப்பேற்றை எய்துவிக்குஞ் சிறப்புடையவாயினும், இவற்றுள்ஒன்று நாரிகேளபாகஅமைதியும் மற்றொன்று திராட்சபாக அமைதியும் பெற்றுப் பிரகாசிக்கின்றன. சமஸ்கிருத பாஷைக்கு மூலமொழியான ஆரியபாஷை ஒன்றே பல்லாயிர வருஷங்களுக்கு முன் ஆடவரானும் மகளிரானும் பிள்ளைகளானும் வீடுகடோறுந் தெருக்கடோறும் நகரங்கடோறும் வழங்கப்பட்டு வந்தது. இனி அவ்வாரியபாஷையினை வழங்கும் ஆரியமக்கள் இப்பரதமா கண்டத்திற்கு வடமேற்கே தாம் வசித்த பிரதேசங்களை விடுத்து இப்பரதகண்டத்துட் புகுந்தகாலத்துத் தமக்கெதிரிலே மிகவும் நாகரிகவழக்கடைந்து பிரகாசிக்கும் தமிழ்ப்பாஷையினைக்கண்டு அதிலுள்ள இலக்கணஇலக்கியஅமைதிகளை யெல்லாம் பார்த்துத்தமது ஆரியபாஷையினை நூல்வழக்கிற்கு ஏற்றவிதமாகத் திருத்தி அங்ஙனம் எல்லாநலங்களும் பொருந்தத்திருத்தப்பட்டதென்னுங்காரணம்இனிதுதோன்ற'சமஸ்கிருதம்'என்னும்பெயருஞ் சூட்டினார். இங்ஙனந் திருத்திச்செய்யப்பட்ட சமஸ்கிருதபாஷை நிரம்பவும் பிரபலமாய்வழங்கவே, இதற்குமூலமொழியான ஆரியபா

ஷை இறந்துபட்டது. நூல்வழக்கினுள்ளே நிரம்பவும்பிரபலப்பட்டு வந்தசமஸ்கிருதபாஷையின் எழுத்தின்சப்தபேதங்கள் அவற்றைத் திருத்தமாய்க்கற்றோரானன்றி, மற்றைஆண்மக்களானும் பெண்மக்களானும் பிள்ளைகளானும் உச்சரிக்கவாராமையால் சமஸ்கிருதபாஷை எஞ்ஞான்றும் உலகவழக்கிற்பயின்று வந்ததேயில்லை. அதுகற்றோர்க்குரிய நூல்வழக்கின்மாத்திரம் பயின்றுவருவதாயிற்று. இவ்வாறு மூலமொழியான ஆரியம் இறந்துபட்டமையானும், அதனினின்றுந் தோன்றியசமஸ்கிருதம் உலகவழக்கிலின்றி நூல்வழக்காய்மாத்திரம் இருந்தமையானும் சமஸ்கிருதபாஷையினைக்கற்போர்மிகவும் இடர்ப்படுவோராயினர். உயிரெழுத்துக்களிலே ரு லுவென்னும் உயிர்மெய்யெழுத்துக்களைப் பிறழவைத்தும், க் ச் ட் த் ப் என்னும்வல்லொற்றுக்களை மனிதர்க்கு இயற்கையேதோன்றும் உச்சாரணஇலேசாற் கூறாது அவையொவ்வொன்றனையும் எடுத்தும்படுத்தும்நலிந்தும்உச்சரித்துச்செயற்கையான் வேறுவேறுமூன்றெழுத்தாக்கியும், கீழ்வாய்ப் பல்நுனியை நாவின்நுனி இயற்கையேபொருந்தத்தோன்றும் ஸ என்னும் ஒலியைச் செயற்கைப்படுத்து அந்நாவின் நுனியைக் கீழ்வாய்ப் பல்லின்அடியைப் பொருந்தவைத்துச்சரித்து ஶ எனும் எழுத்தாக்கியும், அந்நாநுனியை மேல்வாய்அண்ணத்தைப்பொருந்த இலேசாகவையாது அடர்த்தி அழுத்திவைத்துச்சரித்து ஷ எனும்எழுத்தாக்கியும், இவ் ஷ் க் என்னும் இரண்டெழுத்தையுங் கூட்டி க்ஷ எனும் ஓர் எழுத்தாக்கியும் இங்ஙனம் எழுத்திலக்கணம்எல்லாம் இயற்கையாய் ஓதற்கும் உணர்தற்கும்பொருத்தமின்றிச் சமஸ்கிருதபாஷையிலே அமைக்கப்பட்டிருக்கின்றன. இனிச் சொல்லிலக்கணமோவெனில் ஒவ்வொருபெயரும் வினையும் ஒருமைபன்மை என்பனவற்றை இயற்கையே உணர்த்தும் தமிழ்முதலான பாஷைகளிற்போலாது, ஒருமை இருமை பன்மை என்பவற்றை உணர்த்தும் விகுதிகள் பல உடையனவாய்த், தமிழ்முதலானஇயற்கைப்பாஷைகளில் உயர்திணையில் ஆண் பெண் பலர் எனும் பாற்பகுப்பும் அஃறிணையில் ஒன்று பல என்னும்பாற்பகுப்பும் அமைந்தவாறு போலாது சமஸ்கிருத மொழிகள் ஒவ்வொன்றும் உயர்திணையில் ஆண் பெண் பாற்பகுப்பை உணர்த்துவதன் மேலும் அலிப்பால் ஒன்றுணர்த்தியும், அஃறிணையில் ஒருநியதியுமின்றி அறிவில்லாத கல் மண் பழம் பூ மேகம் கடல் முதலியவற்றிற்கும் ஆண் பெண் அலி

என்னும் பாற்பகுப்பு ஒரு பிரயோசனமுமின்றி யுணர்த்தியும் இவ்வாறு அவற்றையெல்லாம் உணர்த்தும் அளவிறந்த விகுதிகளையுடையதா யிருக்கின்றது. இனி வாக்கியஅமைதிகளோ வென்றூற் குணம், தீர்க்கம், விருத்திமுதற் பல திறப்பட்ட சந்திகளுடையனவாயும் பலபொருட்கு இடந்தருவனவாயும் பொருள்மயக்கம்மிகுதியுமுடையனவாயும் இவ்வாக்கியப்பொருளை நிச்சயித்தற்கு மீமாஞ்சைமுதலானசாத்திரக்கருவியினை இன்றியமையாதுவேண்டிநிற்பனவாயும் இருக்கின்றன. இனி இவ்விடர்ப்பாடெல்லாம் மிகமுயன்று நீக்கிக்கொண்டுபோய்ச் சுலோகங்கள் விருத்தங்கள்முதலானபாவகைகளை ஓதும்வழியும் மெல்லென்ற ஓசையின்பாற்றோன்றுது க் ச ட் த் ப் என்னும் சுதாத்த, அநுதாத்த, சுவரிதம் என்னும் வல்லோசைவேறுபாடுகள் மிக விரவியும் ஸ் ஹ் ஷ் ஜ க்ஷ முதலான அனுகரணஒலிகள் மிகவிரவியும் அவை ஓதுவார்க்கும் உணர்வார்க்கும் சித்தவிருத்தியினை ஒடுக்கி அவர்ஆன்மஅறிவினை நெகிழச்செய்து அவ்வறிவின்கண் ஊறிச்சுரந்தொழுகும் இன்பத்தினைப் பயக்கமாட்டாவாய், அச்சித்தவிருத்தியினை மிகுதிப்படுத்திக் குரோதங் கோபம்உக்கிரமுதலான தாமதகுணங்களை எழுப்பிவிடுகின்றன. இங்ஙனஞ் சமஸ்கிருதபாஷை உலகவழக்கின்கண் உச்சரித்துவழங்குதற்குஏலாமையினாலே நூல்வழக்கின்மாத்திரம் பயிலப்படுவ தொன்றுகையால் அதில் உள்ள ஒவ்வொருசொற்களும் புதிதுபுதிதாகக் கற்கற்பாலவாயிருத்தலானும், கற்குமிடத்தும்எழுத்துச் சொல் சொற்றொடர் பா என்னும் வகைகளாற் பெரிதும் இடர்ப்பாடுடைய நாரிகேளபாக அமைதியுடையதாய் இருத்தலானும் அவ்வடமொழிக்கண் உள்ள நான்மறைகள் சில்வாழ்நாட்பல்பிணிச் சிற்றறிவுடையார்க்குச் சிறிதும் பயன்படுவனவல்லாம். இதுபற்றியன்றே,

"கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல— தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீர்பிரித்துப்
பாலுண் குருகிற் றெரிந்து" என்று அறநூலும்விதிப்பதாயிற்று.

இனித் தமிழ்ப்பாஷையோ வெனின் எல்லாமனிதர்க்கும் இயற்கையில்எழும் பன்னிருயிரெழுத்துக்களும் பதினெண் மெய்

யெழுத்துக்களும் இலேசாகஅமைந்த எழுத்திலக்கணமும், இரு திணையைம்பான் மூவிடங்களையுணர்த்துஞ் சொல்லிலக்கணமும், இவற்றாற் றொடுக்கப்பட்டுப் பொருள் எளிதிலே புலப்படுக்குஞ் சொற்றொடரிலக்கணமும், நீர்மடையிற் றெளிந்தநீர் நிரம்பி மொழுமொழுவென் றொழுகினாற்போன்ற செய்யுள் ஓசை யின்பமு முடைத்தாய் இப்பரதகண்டத்துள் ஆரியர்வருதற்குமுன்னும் இமய முதற்குமரியீறாக நடைபெற்றதாய், அதுவந்தபின்னுஞ் சமஸ்கிருத முண்டாவதற்குச் சகாயம்பலபுரிந்து அஃதோடு உடன்அளவளாவி அவையிரண்டும் வழக்குவீழ்ந்தபின்னும் நடைபெற்று இன்றுகாறும் வழங்குவதாய் விளங்காநிற்கின்றது. இது நன்றுவிளக்கும் பொருட்டே தத்துவசாத்திர பண்டிதரான சுந்தரம்பிள்ளை

''பல்லுலகும் பலவுயிரும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருண் முன்னிருந்தபடியிருப்பதுபோற்
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவின்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே'' என்று

வைத்துக்கூறினார். இங்ஙனந் தமிழ் உலகவழக்குடையதாய் நடை பெறுகின்றமையின் அப்பாஷையின் சொற்கள்பெரும்பாலனநம்மால் வருத்தமின்றி அறியப்பட்டன வாகின்றன. உலகவழக்கில்லாத வடமொழியை நாடோறும் வழுவாமல் முறையாய்க்கற்று அப்பாஷை யிற்புலமையடையவேண்டும் நல்லறிவாளன்ஒருவனுக்குக் குறைந்தது பத்துவருஷங்கள்செல்லும்; இப்படியே நம்முடையசாதியார்க்குள் வழங்குதலில்லாத ஆங்கிலபாஷையினைக்கற்றுப்புலமையடைதற்குக் குறைந்தது பத்துவருஷஞ் செல்வது எல்லாரும் பிரத்தியக்க மாக அறிந்த உண்மையேயாம் இனி உலகவழக்கிலுள்ள நமதுசெந் தமிழ்ப்பாஷையைக் கற்றற்கோ மந்தபுத்தியுடையானுக்கு ஐந்துவரு டமும், தீவிரபுத்தியுடையானுக்கு மூன்றுவருடமுமாத்திரம் போது மானவையாம். இன்னும் எழுத்துச்சொல்லிலக்கணங்கள் வரையறை யின்றி ஒருநியதிக்குஅகப்படாதுவிரிந்த சமஸ்கிருதமுதலிய இலக் கணங்கள் போலாது, தமிழில் தொல்காப்பியம் முதலான அரிய பெரிய இலக்கணங்கள் ஓர்வரம்புகடைப்பிடித்துப்போதிக்கும் பெருமை நிரம்பினவாம். இது,

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப்பசுந்தமிழேனை
மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்படக் கிடந்ததா எண்ணவும்படுமோ" என்றும்,

"மறைமுதற் கிளந்தவாயான் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்றே
அறைகடல் வரைப்பிற்பாடை யனைத்தும் வென்றாரியத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய்வத்தை யுண்ணினைந் தேத்தல்செய்வாம்"
என்றும் ஆன்றோர் கூறுவாராயினர்.

இனி இதன்கண்ணுள்ள ஓசை யின்பம் மற்றை எந்தப்பாஷை யினும் இல்லையென்றதனை வலியுறுத்துவாம். க் ச் த் ப் ட் என்பன வற்றை எடுத்தல், படுத்தல், நலிதலாகிய சுதாந்த அனுதாத்த சுவ ரிதவகைபற்றி உச்சரிக்கும் வல்லோசையும், மெல்லோசையினைக் கெடுத்துத் தோன்றும் ஸாஷுறக்ஷ என்னும் அனுகாரணக் குறிப் போசையும் தமிழ்ப்பாஷையின்கண் இல்லாமையின் இப்பாஷை முழுவதூஉம் ஓசையின்ப முடைத்தென்பது துணியப்படும். அதுவேயுமன்றித் தனி மெய்யெழுத்துக்களை முதலிற்கொண்டு க்ரமம் ந்யாசம் ப்ரபலம் என்றற் றொடக்கத்தான் வருந்தி யுச்ச ரிக்கும் முயற்சியின்றி, இச்சொற்களை உச்சரிக்க வேண்டி வந் துழியும் அவற்றோடு உயிர் எழுத்துச் சேர்த்துக் கிரமம் நியா சம் பிரபலம் என்பனவாக இலேசாக்கிச் சொல்லும் நெறியு முடைத்தாகலின் தமிழ் ஓசையின்பந் தனக்கே உரித்தாகவுள் ளதென்பது தெற்றெனவிளங்கும். தமிழ்ப்பாஷை முழுவதூஉம் இங்ஙனம் ஓசையின்ப முடைத்தாய் நடைபெறு மாயினும், இதன்கட் செய்யுட்கள் இயற்றும் நல்லிசைப்புலவர் இப்பாஷையின் கண்ணும் உள்ள வல்லோசையினைப் பெரும்பான்மையான் விலக்கி மெல்லோசை நிரம்பத் தோன்றவே சொற்பொறுக்கி யமைத்துப் பலதிறப்பாக்கள் இயற்றுவாராயினர். ங் ஞ் ண் ந் ம் ன் ய் ர் ல் வ் ழ் ள் ற் என்னும் பதின்மூன்றெழுத்துக்கள் மிகப் பயின்றுவருஞ் சொற்களை தமிழ்ப்பாட்டுக்களிலெல்லாம் பெரும்பான்மையாற் கா ணப்படுவனவாம். இஃது,

"அம்மையேயப்பா வொப்பிலா மணியே யன்பினில்விளைந்தவா ரமுதே, பொய்ம்மையேபெருக்கிப் பொழுதினைச்சுருக்கும் புழுத் தலைப்புலையனேன்றனக்குஞ், செம்மையேயாயசிவபுரமளித்தசெல்வ மேசிவபெருமானே, இம்மையே யுன்னைச்சிக்கெனப்பிடித்தேன் எங் கெழுந்தருளுவதினியே" என்னுந்திருவாசகத் திருவாக்கினும்,

"தனித்தனிமுக்கனிபிழிந்து வடித்தொன்றாக்கூட்டிச் சருக்க ரையுங்கற்கண்டின்பொடியுமிகக்கலந்தே, தனித்தநறுந்தேன்பெய்து பசும்பாலுந்தெங்கின் றனிப்பாலுஞ் சேர்த்தொருதீம்பருப்பிடியும் விரவி, இனித்தநறுநெய்யளைந்தேயிளஞ்சூட்டினிறக்கியெடுத்தசுவை க்கட்டியினுமினித்திடுந்தெள்ளமுதே, யனித்தமறத்திருப்பொது வில்விளங்குநடத்தரசேயடிமலர்க்கென்சொல்லணியாமலங்கலணிந்த ருளே" என்னும் இராமலிங்கசுவாமிகள் அருளிச்செய்த பாடலினுங் கண்டுகொள்ளப்படும். தமிழ்ப்பாஷையில் இங்ஙனம் நிகழும் மெல் லோசையினுள்ளும் இன்னுஞ்சாரமாய்ச் சொற்சுவை பழுத்தொழுக வருவதோர் ஓசையுண்டென்றும், அஃதொருகாப்பியம் முழுவதூஉம் பயின்றுவருமாயின் அது தோல் என்னும் வனப்பாமென்றும் தெய் வப் புலமைத் தொல்காப்பியனார்.

"இழுமென்மொழியான் விழுமியது நுவலினும்
பரந்தமொழியானடிநிமிர்ந்தொழுகினுந்
தோலெனமொழிப தொன்மொழிப் புலவர்" என்று அருளிச் செய்வாராயினர். தமிழ்மொழியின் வரம்புகண்டு சங்கவிலக்கியங் கட்கும் தொல்காப்பியத்திற்கும் உரைகண்ட ஆசிரியர் நச்சினார்க் கினியர் சீவகசிந்தாமணி யுரையிலே "இக்காவியம் முழுவதூஉம் அங்ஙனம்வந்த தோல் என்னும் வனப்புடையதென்க" என்றுரை கூறினார். இஃதொருகால் அச்சீவகசிந்தாமணியினை நோக்கும் நுண் ணறிவாளர்க்கும் இனிது விளங்கற்பாலதேயாம். இத்தோல் என்னும் வனப்புப் பெரும்பான்மையும் ழகரவொலிபற்றி வருவதாமென்பது ஆசிரியர் தாங்கூறும் அவ்விலக்கணத்திற்கு இலக்கியமாக அச்சூத்தி ரத்திலேயே அதனைப் பொருத்திக் காட்டியவாற்றானும் அறிந்து கொள்ளப்படும். இனி இந்த ழகரவொலியோடு ஒப்புமையுடைய ள, ல, ர, ற, ன், ண், ந், முதலியனவும் ஒன்றினமுடித்தல் தன்னினமு டித்தலென்னு முத்தியாற்கொள்ளப்படுமெனவாம். இத்தோல் என் னும் வனப்பு இங்ஙனங் கனிந்தாகிற்றல்,

"கற்பாலுமிழ்ந்தமணியுங்கழுவாதுவிட்டால்
நற்பாலழியுநகைவெண்மதிபோனிறைந்த
சொற்பாலுமிழ்ந்தமறுவுமதியாற்கழூஉவிப்
பொற்பாவிழைத்துக்கொளற்பாலார்புலமைமிக்கார்"

"காய்மாண்டதெங்கின்பழம்வீழக்கமுகினெற்றிப்
பூமாண்டதீந்தேன்றொடைகீறிவருக்கைபோழ்ந்து
தேமாங்கனிசிதறிவாழைப்பழங்கள்சிந்தும்
ஏமாங்கதமென்றிசையாற்றிசைபோயதுண்டே" எனவருஞ் சிந்தாமணிப்பாட்டுக்களிற் காணப்படும். இவ்வாறு ஓசை யின்பம் பெரிதுடைத்தாய்த்தோன்றும் சிந்தாமணிக்கு எதிர் நிற்கவல்லதான பெருங்காப்பியநூல் தமிழில் பெரியபுராணத்தை யன்றிப் பிறிது காணப்படுவதில்லை. இது,

"ஞானத்தின்றிருவுருவை நான்மறையின்றனித்துணையை
வானத்தின்மிசையன்றிமண்ணின்வளர்மதிக்கொழுந்தைத்
தேனக்கமலர்க்கொன்றைச்செஞ்சடையார்சீர்தொடுக்குங்
கானத்தினெழுபிறப்பைக்கண்களிப்பக்கண்டார்கள்"

"கடையுகத்திலாழியின்மேன் மிதந்ததிருக்கழுமலத்தினிருந்த செங்கண், விடையுகைத்தார்திருவருளால்வெற்பரையன்பாவைதிரு முலைப்பாலோடும், அடையநிறைசிவம்பெருகிவளர்ஞானங்குழைத் தூட்டவமுதுசெய்த, உடையமறைப்பிள்ளையார்திருவார்த்தை யடி யார்களுரைப்பக்கேட்டு" எனவரும் பெரியபுராணத் திருவாக்கான் நன்கறியக்கிடக்கும். இனி அன்பே உருவாய் அழுதழுது குழைந்து ருகிய மாணிக்கவாசகப்பெருமான் றிருவாய்மலர்ந்தருளிய திருவாக் குகளிலெல்லாம் இந்த மெல்லோசையின்பம் நிரம்பித் துளும்புகின் றது. அது,

"தெளிவளர்வான்சிலைசெங்கனிவெண்முத்தந்திங்களின்வாய்ந்
தளிவளர்வல்லியன்னாய்முன்னியாடின்யானளவா
ஒளிவளர்தில்லையொருவன்கயிலையுகுபெருந்தேன்
றுளிவளர்சாரற்கரந்துங்கனேவந்துதோன்றுமென்னே"

"யாழுமெழுதியெழின்முத்தெழுதியிருளின்மென்பூச்
சூழுமெழுதியோர்தொண்டையுந்தீட்டியென்றொல்பிறவி

எழுமெழுதாவகைசிதைத்தோன்றில்லையூரிளமாம்
போழுமெழுதிற்றொர்கொம்பருண்டேற்கொண்டுபோதுகவே"

'விழியாற்பிணையாம்விளங்கியலான்மயிலாம்மிழற்றும்
மொழியாற்கிளியாம்முதுவானவர்தம்முடித்தொகைகள்
கழியாக்கழற்றில்லைக்கூத்தன்கயிலைமுத்தம்மலைத்தேன்
கொழியாத்திகழும்பொழிற்கெழிலாமெங்குலதெய்வமே" என்னுந்
திருச்சிற்றம்பலக்கோவைத் திருவாக்குகளுட்காண்க. மாணிக்கவாச
கப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருவாக்குகளின் இவ்வுண்
மையை யுணர்ந்தன்றே இராமலிங்கசுவாமிகள்,

"சேமமிகுந்திருவாதவூர்த்தேவென்றுலகுபுகழ்
மாமணியேநீயுரைத்தவாசகத்தையெண்ணுதொறுங்
காமமிகுகாதலன்றன் கலவிதனைக்கருதுகின்ற
ஏமமுறுகற்புடையாளின்பினுமின்பெய்துவதே"

"வான்கலந்தமாணிக்கவாசகநின்வாசகத்தை
நான்கலந்துபாடுங்கால்நற்கருப்பஞ்சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்துசெழுங்கனித்தீஞ்சுவைகலந்தென்
ஊன்கலந்தென்னுயிர்கலந்திங்குவட்டாமலினிப்பதுவே"

"வருமொழிசெய்மாணிக்கவாசகநின்வாசகத்தி
லொருமொழியேயென்னையுமென் னுடையனையுமொன்றுவித்
[துத்
தருமொழியாமென்னிலினிச்சாதகமேன்சஞ்சலமேன்
குருமொழியைவிரும்பியயல்கூடுவதேன்கூறுதியே"

"பெண்சுமந்தபாகட்பெருமானொருமாமே
லெண்சுமந்தசேவகன்போலெய்திய நம்வைகைநதி
மண்சுமந்துநின்றதுமோர்மாறன்பிரம்படியாற்
புண்சுமந்துகொண்டதுநின்பொருட்டன்றோ புண்ணியனே"

"வாட்டமிலாமாணிக்கவாசகநின்வாசகத்தைக்
கேட்டபொழுதங்கிருந்தகீழ்ப்பறவைச்சாதிகளும்
வேட்டமுறும்பொல்லாவிலங்குகளுமெய்ஞ்ஞான
நாட்டமுறுமென்னிலிங்குநானடைதல்வியப்பன்றே" என்றிங்
ஙனமெல்லாம் அதன்பெருமை விரித்துரைப்பாராயினர்.

இனி இப்பெற்றித்தான மெல்லோசையின்பமே இத்தமிழ்ப்பாஷையின் தெய்விகவுண்மையினை விளக்குவதென்று காட்டுவாம். உலகத்திலுள்ள சப்தபேதங்களையெல்லாம் வகுத்துப் பார்த்தால் அவை வல்லோசை மெல்லோசை குறிப்போசை யெனமூன்றாயடங்கும். ஒருவன் மிகவுங் கோபங்கொண்டு பேசுவனாயின் அவன் அப்போது மிக உரத்துக்கூவுதலைக் காண்கின்றோம்; ஒருவன் ஓர் ஆற்றாமையால் வருந்தும்போது ஹா உஸ் என்று ஆவிபோக்குதலைக் காண்கின்றோம்; ஒருவன் இங்ஙனமின்றி அமைந்து ஆழ்ந்த சிந்தனையுடையனாயிருக்கும்போது மிக இனியசொற்களினாலே சாந்தமாய்ப் பேசக்காண்கின்றோம். இவ்வாறு காண்டலினாலே சத்துவகுணம் மிகுந்தவிடத்து மெல்லோசை தோன்று மென்பதும், இராசதகுணம் மிகுந்தவிடத்துக் குறிப்போசை தோன்றுமென்பதும், தாமதகுணம் மிகுந்தவிடத்து வல்லோசை தோன்றுமென்பதும் இனிது பெறப்படும். தாமத இராசத குணங்களை ஒடுக்கிச் சத்துவ குணத்தை நிலைபெறுவித்தலே இறைவனுடைய பேரின்பானுபவத்தை எய்தற்குரிய சாதனமாகும். இன்னும் உலகத்தின்கட் சமாதான வாழ்க்கையை விரும்பிச் சீவகாருணிய ஒழுக்கம் பூண்டு நடப்பானுக்குச் சத்துவ குணமும் அதன்வழித்தோன்றும் மெல்லோசையுமே இன்றியமையாது வேண்டற் பாலனவாம். தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் "இன்சொ லினிதீன் றல் காண்பா னெவன்கொலோ வன்சொல்வழங்குவது" "இனியவுளவாகஇன்னாதகூறல் கனி யிருப்பக் காய் கவர்ந்தற்று" என்று திருவாய் மலர்ந்தருளினார். சாந்த குணமாய் இனிய சொற் பேசுவானைக் கண்டால் எத்துணைத் தீயகுணமுடையாரும் தாமுஞ் சாந்தப்பட்டு அமைந்தொழுகக் காண்கின்றேம். கடுகடுத்து உக்கிரமாய்ப் பேசுவானைக் கண்டால் எத்துணைப் பொறுமை யுடையாரும் தாமும் கோபித்துப் பேசுகின்றார். துன்பங்களால் ஆற்றாது வருந்துவாரைக் கண்டால் யாரும் துன்புறுகின்றார். ஆகவே, சத்துவ முதலிய குணங்களுள்ளும் அவற்றின் காரியமான ஓசைகளுள்ளும் ஒருவரிடத்து எது தோன்றுமோ அதுவே பிறரிடத்துந் தோன்றுவதாகும். இது கண்டே பட்டினத்தடிகள்

"நல்லாரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுளதோ வகமும் பொருளும்

இல்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சியேகம்பனே" என்று அருளிச்செய்தார். ஆகையால், தமிழ்ப்பாஷை யொன்றே சத்துவ குணத்தோடு ஒற்றுமைப்பட்ட மெல்லோசை யின்ப முடைத்தென்று காணப்படுதலால், அப்பாஷையின் பயிற்சி யொன்றே விரிந்து செல்கின்ற நமது சித்தவிருத்தியினை ஒடுக்குமுகத்தால் தாமத இராசத குணங்களைக் கீழ் அடக்கிச் சத்துவ குணத்தை மிகுவித்து நிலைபெறச் செய்து சிவானந்தப் பெரும் பேற்றை எய்துவிக்கும். வடமொழிக்கண் உள்ள நான்மறைகள் அரிய பெரிய இரகசியார்த்தங்கள் பல அடக்கி வைத்திருப்பினும் அவைகளையுடைய சமஸ்கிருதபாஷையின் நாரிகேளபாக அமைதியினாற் பெறுதற்கு மிகவும் அருமையுடையதாவதன் மேலும், அப்பாஷையின்கண் மிகுதியாயுள்ள வல்லோசைகுறிப்போசைகளானவை அவற்றைப் பயில்வார்க்குத் தாமதகுண இராசதகுண சொரூபமாயுள்ள சித்த விருத்தியினை மிகுவித்தலால் சத்துவகுண காரியமான அன்பு தோன்றமாட்டாதாகும். அன்பு தோன்றாதாகவே

"அன்புஞ்சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பேசிவமாவ தியாரு மறிகிலார்
அன்பேசிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பேசிவமா யமர்ந்திருந்தாரே" என்ற அருமைத்திருவாக்கின்படி அவ்வன்போடு அபேத சம்பந்தமாயுள்ள சிவமுந்தோன்றப் பெறாதாகும். அதுகண்டே

"விளங்கிழை பகர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோசிறந்த தென்குவி ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவாசக மிங்கொருகா லோதிற்
கருகன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி

யன்ப ராகுகரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே" என்று சிவப்பிர
காச சுவாமிகளும் அருளிச் செய்வாராயிற்று.

இனி, இம்மெல்லோசை யின்பத்தோடு, அன்பு மயமாய் நிற்ற லின் இத்தெய்வச் செந்தமிழ்ப்பாஷை பிரணவ சொரூபமா யிருக்கு மென்பதூஉங் காட்டுவாம். ஆகாயத்தின் இயற்கைச் சத்தமாய் எல்லாச் சத்தபேதங்களுந் தோன்றுதற்கு முன் விளங்காநின்ற சூக்குும ஓசையாய் இருப்பது ஓ என்னும் பிரணவ நாதமேயாம். இது செயற்கையா யெழுஞ் சத்த பேதங்களை யெல்லாந்தடுத்துச் சங்கைக் காதில் வைத்துக் கேட்பின் இனிது புலப்பட்டு விளங்கும். இப் பிரணவ நாதத்தின்கட் குறிப்போசை வல்லோசைகள் சிறிதுமின்றி மெல்லோசையே தோன்றுதல் அனுபவத்தால் இனிதுணரப்படுவ தேயாம். இங்ஙனம் மெல்லோசை மாத்திரையே சொரூபமாகவு டைய பிரணவத்தின் தூல காரிய சப்த சமூகமே தமிழ்ப்பாஷையா மென்பது அத்தமிழ்ப் பாஷையின்கண்ணுள்ள மெல்லோசை யின் பத்தால் இனிது துணியப்படும். தமிழும் மெல்லோசையே சொரூ பமாகவுடையது பிரணவமும் மெல்லோசையே சொரூபமாகவுடை யது; ஒன்று தூலகாரியமாம் ஒன்று சூக்கும காரணமாம். இங்ங னந் தமிழும் பிரணவமும் தூலசூக்கும பேதத்தால் இரண்டாயும், பொதுமையான மெல்லோசை வகையால் ஒன்றாயும் நிற்கு மென் றறியப்படும். இங்ஙனம் பிரணவம் தமிழ்ப் பாஷைக்கே இயற்கை யுரிமை யுடைத்தென்பது சமஸ்கிருத முதலிய எல்லாப் பாஷை களினும் அஃது ஓ என்னுந் தமிழ் எழுத்தால் எழுதப்பட்டு வழங்கு தலே சான்றாம். இன்னுஞ் சப்தத்தைக் குறிக்கும் ஓசை ஒலி என் னுஞ் சுத்தச்செந்தமிழ்ச்சொற்கள் ஓ என்னும் அப்பிரணவ எழுத்தி னையே முதற்கொண்டு நிற்குமாற்றானும், சப்தம் நாதம் முதலான சமஸ்கிருதச் சொற்கள் அவ்வெழுத்தின்றி நிற்கு மாற்றானும் பிர ணவம் தமிழுக்கே உரித்தென்பது நாட்டப்படும்.

இவ்வுண்மைகளால் மெல்லோசையும் அன்பும் பிரணவ சொரூ பமும் சிவமும் ஒன்றேயாதல் இனிது பெறப்படுதலின் இவற்றோடு அபேத சம்பந்தமுடைய தமிழ்ப்பாஷை தெய்வத்தன்மையுடைய தென்பது நாட்டப்படும். இங்ஙனம் இப்பாஷை தெய்வமாட்சி

யுடைத்தாய்ப் பிரணவ சொரூபமாய் நிற்றலினாலன்றே திருஞான சம்பந்தப்பெருமானும் திருநாவுக்கரசுகளும் சுந்தரமூர்த்திகளும் மாணிக்கவாசகப்பெருமானும் என்னும் நால்வர் சமயாசாரியரும் தம் அருமைத் திருவாக்குகளை இதன்கண்ணே திருவாய்மலர்ந்தருளி, அவ்வாற்றாற் சிவானுக் கிரகத்தினை ஆகருஷணஞ் செய்து அற்புதங்கள் பலவியற்றிச் சைவத்தை நிலைநாட்டி உலகை உய்வித்தருளினார். இத்தகைய பெருமை வடமொழி முதலான மற்றைப்பாஷைகளுக்கின்றென்பது,

"தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்டபாலனை யழைத்ததும் எலும்பு பெண்ணுருவாக்
கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

என்னுந் திருவாக்கா னறியப்படும். இராமலிங்க சுவாமிகளும், '

"முன்புறுநிலையும் பின்புறுநிலையு முன்னினின் றுளமயக்குறுங் கா, லன்புறுநிலையாற் றிருநெறித்தமிழ்கொண் டையநீத்தருளிய வரசே, யென்பு பெண்ணுருவோடின்னுயி ரதுகொண்டெழுந்திடப் புரிந்துலகெல்லா, மின்புறப்புரிந்த மறைத்தனிக்கொழுந்தே யென்னுயிர்க் குயிரெனுங்குருவே"

'இலைக்குள நீரழைத்ததனி லிடங்கருற வழைத்ததன்வாய்த்
'தலைக்குதலை மதலையுயிர் தழைப்பவழைத் தருளியநின்
கலைக்கும் வடகலையின்முதற் கலைக்குமுறு கணக்குயர்பொன்
மலைக்குமணு நிலைக்கு முரு வன்றெண்டப் பெருந்தகையே" என்

றத் தமிழ் வேதமாட்சி நன்கெடுத்து விளக்கினார்.

இன்னும் இவ்வுண்மைகள் எல்லாம் தமிழ்என்னும் அப்பாஷையின் பெயரினுள்ளேயே அமைந்து கிடக்கின்றன. த் அ ம் இ ழ் என்னும் ஐந்தெழுத்துக்களால் அமைந்தது அச்சொல். இவற்றுள் அ, இ என்பன உயிரெழுத்துக்கள், த் ம் ழ் என்பன மெய்யெழுத்துக்கள். தமிழிலுள்ள உயிரெழுத்துக்களும் அ இ என்னும் இரண்டில் அடங்கும், பதினெட்டு மெய்யெழுத் தோசைகளும் த் ம் ழ் என்னும் இம்மூன்றில் அடங்கும். எல்லாப் பாஷையின் எழுத்துக்களுக்கும் அகரமே முதல் எழுத்தாகும். அது தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் "அகரமுதல வெழுத்தெல்லா மாதிபகவன்முதற்றேயுலகு" என்றருளிச் செய்தமையானும்,

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளேகாண்—ஒன்றின்ருல்
அக்கரங்களின்ரும் அகரவுயிரின்றேல்
இக்கிரமத் தென்னு மிருக்கு" என்னுஞ் சிவஞானபோதத் திருவாக்கும்,

"ஒன்றெனமறைகளெல்லா முரைத்திட வுயிர்களொன்றி
நின்றனனென்றுபன்மை நிகழ்த்துவதென்னையென்னில்
அன்றவைபதிதா னென்றென்றறையு மக்கரங்கடோறும்
சென்றிடும் அகரம்போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" என்னுஞ் சிவஞானசித்தித் திருவாக்குங் கூறினமையானுங் காண்க.

அஃதியற்கையே அண்ணத்தையேனும் இதழ்களையேனுந் திறத்தலால் புலப்பட்டும் புலப்படாமலும் தோன்றுகின்றமையால் அதனையே எல்லா எழுத்துக்களுக்கும் முன்னிறுத்தினர். இ என்பது அவ்வகரம் உற்பத்தியானபின் நாவின்றொழிலால் அடுத்துத்தோன்றுகின்றமையின் அவ்வகரத்தின்பின் இகரம்நின்றதென்க. அற்றேல், ஓ மென்னும்பிரணவம் அ உ ம் என்னும் எழுத்தோசைகூடிய தொன்ருகலின் தமிழ் என்றதன்கண் உயிரும் அ உ எனநிற்றலே பிரணவமரபாமெனின்;—அற்றன்று, அ, இ என்னும் இரண்டக்கரங்கள்தோன்றியபின்னரே உகரப்பிறப்பதாகும்; ஆகையால், அவ்வோகாரத்தின்கண் இகரம் அந்தர்ப்பாவமா யிருக்குமென்றுணரப்படும். அற்றேல் உகரமாயினும் தமிழ்என்றதன்கண் இருத்தல்வேண்டுமேயெனின்;—தமிழ் என்பதில் இகரம் ஒரோவழி உகரமாகவும் உச்சரிக்கப்பட்டுத் திரிதலால் இகரமுள்வழி அதன்கண் உகரமுண்டென்றும், உகரமுள்வழி யதன்கண் இகரமுண்டென்றுந் துணியப்படும். தமிழ் என்பது எல்லாரானும் உச்சரிக்கப்படும்வழித் தமுழ் என உலகவழக்கின்கண் வருதலும் இதனை வலியுறுக்கும். அற்றேல், தமுழ் என்றே வழங்காது நூல்வழக்கில் தமிழ் என்று போந்தவாறென்னையெனின்,—பஞ்சாக்கர மந்திர நடுமொழியான சிவ என்பதில் இ அ என நிற்பதற் கிணங்கத் தமிழ் என்பதினும் அவ்வாறுயிர்கள் நின்றன. அற்றேல், இ அ என்ற முறையே நில்லாது மாறி அ இ எனத் தமிழில் நிற்றல் என்னையெனின் தூலபஞ்சாக்கரம் சூக்கும பஞ்சாக்கரம் காரணபஞ்சாக்கரம் மகாகாரணபஞ்சாக்

காம் முத்திபஞ்சாக்கரம் என்னும் அம்மந்திர வழக்குமுறை ஐந்த னுள் மகாகாரண பஞ்சாக்கரம் வசி எனநிற்குமாகலின் அதற்கேற் பத் தமிழ் என்பதில் அ இ நிறுத்தப்பட்டது. அல்லதூஉம் உலக வழக்கின்கண் இறுதிநின்ற மெய்யில் உகரச்சாரியை ஏறித் தமிழு என்றும் நிற்பதுளதாகலின், உகரம் இம்மொழிக்கண் உண்டெ ன்றே துணியப்படும். இங்ஙனமாகலின் தமிழ் என்பதன்கண்நின்ற அ இ என்னும் உயிர்கள் பிரணவ வியட்டி எழுத்துக்களாமென்று துணிக.

இனி த் ம் ழ் என்னும் மெய்யெழுத்துக்களுள் த் என்பது வல்லோசையினையும் ம் என்பது மெல்லோசையினையும் ழ் என்பது இடையோசையினையும் குறித்துநின்றன. இனிவல்லெழுத்துக்கள் ஆறனுள் ஏனையைந்தினையும் ஒழித்து த் என்பதனை எடுத்தவாறென் னையெனின்;— தமிழ்ப்பாஷை மெல்லோசையினையே தனக்குரித் தாக உடையதென்பதனைவிளக்குதற்பொருட்டு த் என்பதனைக்காட் டிலும் வல்லென்றுஒலிக்கும் அவ்வைந்தெழுத்தினையும்விட்டு வல்லெ ழுத்தாறனுள்ளும் மெல்லோசைப்பட நிற்கும் த் என்னும் எழுத்தை நிறுத்தினார்.

இனி ம் என்னும்எழுத்து மெல்லோசையினைக் குறிப்பதாம் மெல்லெழுத்துக்கள் ஆறனுள் இதனைமாத்திரம் எடுத்ததென்னை யெனின்;— ம் என்பது குழந்தைப்பருவத்து இயற்கையாய்முதலிற் றோன்றும்மெய்எழுத்தாகலானும், அதுபிரணவத்தின் ஈற்றில்நிற்ற லானும் அதுவேஅங்ஙனம் நிறுத்தப்படுதற்கு இயைந்ததாகும்.

இனி ழ் என்னும்எழுத்து இடையோசையினைக் குறிப்பதொன் றாம். இடையெழுத்துக்கள் ஆறனுள் ழ் என்பதனைமாத்திரம் எடுத் ததென்னை யெனின்;—ஏனை ஐந்திடையெழுத்தோசைகள் எல்லாப் பாஷைகளுக்கும் பொதுவாய்நிற்ப இவ் ழ் ஒன்றுமேதமிழுக்குச்சிற ப்பெழுத்தாய் நிற்றலானும், தமிழின்கண்மெல்லோசை யின்பத்திற் கு இஃது இன்றியமையாததாய் முன்னிற்றலானும் இதனையெடுத்தா ரென்க.

இனித் தமிழ்ப்பாஷையின்கண் ஸ ஶ ஷ ஹ முதலான குறிப் போசையின்றாகலின் மெல்லோசையினையே யிருவகைப்படுத்து ஒன்றை மெல்லோசைஎனவும், அம்மெல்லோசையினும் இன்னும்

மெல்லென்றுசுருங்கி இசைக்குமொலியை இடையோசையென்றும் நிறுத்தி வல்லோசைஒன்றுங்கூட்டி மெய்யோசை மூன்றென்பாராயி னூர். தமிழின்கண் இராசதகுணத்திற்குரிய குறிப்போசையில்லாமை யான் அதனையொழித்துச் சுத்தசத்துவகுணத்தினையே ஏற்றக்குறை ச்சல்பற்றி இருவகைப்படுத்து இடையோசையினைக்குறிக்கும் ழகர த்தைச்சுத்தசத்துவ குணத்திற்கும், மெல்லோசையினைக் குறிக்கும் மகரத்தைஅதனிற்சிறிதுகுறைந்தசத்துவகுணத்திற்கும் தகரத்தைத் தாமதகுணக்கலப்புச் சிறிதுடைய சத்துவகுணத்திற்கும் அடை யாளங்களாக நிறுத்தினூர். தமிழ்முழுவதூஉஞ் சத்துவகுணத்தையு டையபாஷையாகலின் ழகரம் சத்துவத்திற் சத்துவமா மென்றும், மகரம் சத்துவத்தில் இராசதமாமென்றும், தகரம் சத்துவத்தில்தாம தமாமென்றும் அறியற்பாற்று.

இன்னும் இத்தமிழ் என்னும்மொழியில் ழகரம் சுத்தசத்துவ குணத்திற்கடையாளமாகலின் அதனையுயிரெழுத்தோடுசேராது தனி யேயிறுதிக்கண் நிறுத்தி யருளினூர். த் ம் என்னும் எனையிரண் டும் இராசததாமதக் கலப்புடையனவாகலின் அக்குணங்களின் ஆற் றலை மெலிவித்தல்வேண்டி அ இ என்னுஞ் சுத்தவயிந்தவமான பிர ணவஎழுத்துக்கள் கலந்துநின்றனவென்க. உயிர்எழுத்துக்கலவா மூன் மெய்யெழுத்துக்கள் தாங்கொண்டிருந்த அரைமாத்திரையினை யும், அவைகலந்தமாத்திரையானே யிழந்து அவ்வுயிரெழுத்துக்க ளின் சொரூபமாய்நிற்கும் என்னுந் தமிழிலக்கணநுட்பத்தை உற்று நோக்குமிடத்து, த் ம் என்னுந் தாமதஇராசதகுணக்கலப்புடைய சத்துவஎழுத்துக்கள் அ, இ என்னும் பிரணவஉயிரெழுத்துக்களைக் கலக்கப்பெற்றமையானே தமக்குள்ள அவ்வசுத்தகுணக்கலப்பு நீங் கிச்சுத்தசத்துவ வெழுத்துக்களாய்நிற்கும் என்பதூஉம், அவையங்க னம்நிற்கவே தமிழ்ப்பாஷைமுழுவதூஉஞ் சுத்தசத்துவகுணசொரூ பத்தையுடையதா மென்பதூஉம் நன்றுதெளியப்படும்.

அற்றேல், த் என்ற வல்லோசையினைமுதலில் வைத்துக்கூறிய தென்னையெனின்;— ஓர் ஒலிதோன்றும்போது தோன்றுமிடத்தே வல்லென்றெழுந்து வரவரச்சுருங்கித் தூரத்திலுள்ளார்க்கு மெல்லெ ன்றிசைக்குமாகலின் அம்முறையே வல்லென்றிசைக்குந் தகரத்தை முன்னும், அதனிற்சுருங்கி மெல்லென்றிசைக்கும்மகரத்தை அதன்

பின்னும், அதனினுஞ்சுருங்கி மெல்லென்றிசைக்கும் ழகரத்தை யிறுதிக்கண்ணுமாகவைத் தோதினர். இலௌகிகமுறையிலே தாம தகுணவயப்பட்டுச்செல்லும் நமதுசித்தவிருத்தியினைச் சிறிதுசிறிதா க ஒடுக்கிக்கொண்டுபோய்ச் சுத்தசத்துவத்திலேகிறுத்துவது தமிழ் மொழியாமென்பதனையும் அம்முறைதெரிப்பதாயிற்று. இங்ஙனந்தமி ழ்ப்பாஷையின் நுட்பங்கள்பலவும் அதன்பெயர்க்கண்ணேதொகுத்த டக்கிச்செய்தமையின், தமிழ்தெய்விகத்தன்மை பெரிதுடையபிரண வமொழியாமென்பது தெற்றெனத் தெளியப்படும். இவ்வுண்மை யுணர்த்துதற்கன்றே திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம்அருளிச் செய்த முதற்பதிகத்தின் முதன்மொழியாய்நின்ற 'தோடு' என்ப தன்கட் பிரணவஎழுத்தான ஓகாரத்தை த் என்னும்தமிழ்ப்பெயர் முன்னின்ற எழுத்தின்கட்சேர்த்துச்சரித்து அப்பிரணவம்தமிழுக் கேசிறப்பாக உரித்தென்பது காட்டியருளினர்.

இனி இத்துணைப்பெருமையுந்தமிழுடைத்தாதல்பற்றியே இரா மலிங்கசுவாமிகள் "இடம்பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசத் தையும் பெருமறைப்பையும் போதுபோக்கையும் உண்டுபண்ணு கின்றஆரியமுதலிய பாஷைகளில் எனக்கு ஆசைசெல்லவொட் டாது, பயிலுதற்கும் அறிதற்கும் மிகலேசுடையதாய்ப்பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும்இனிமையுடையதாய்ச் சாகாக்கல்வியைலேசி லறிவிப்பதாய்த்திருவருள்வலத்தாற்கிடைத்த தென்மொழியொன்ற னிடத்தே மனம்பற்றச்செய்து அத்தென்மொழிகளாற் பலவகைத் தோத்திரப்பாட்டுகளைப் பாடுவித்தருளினீர்" என்றருளிச்செய்வா ராயினர்.

இங்ஙனந் தெய்விகத்தன்மையுடைய செந்தமிழ்ப்பாஷையிலே யுள்ள தேவாரதிருவாசகங்களாம் நான்மறைகள் பொற்கலத்திற் பெய்துநிரப்பிய இனியபாலமிழ்தம்போல் பெரிதும்பயனுடைத்தாம், வடமொழிக்கண்ணுள்ள நான்மறைகள் மட்கலத்திற்பெய்துநிரப்பிய பால்போல் எல்லார்க்கும் பயன்படுதலுடைத்தன்றாம். அதுநிற்க.

இனி வடமொழிநான்மறைகள் கன்மகாண்டம் உபாசனகாண் டம் ஞானகாண்டம் எனமுத்திறப்பட்டு பசுமேதம் பரிமேதம் முதலியகன்மபாகங்களையே மிகவிரிப்பனவும், முப்பத்தாறுதத்து வங்களுட்பட்ட 'ப்ருதிவ்யோபவ ஆபச்சர்வ அக்நேருத்ர வாயுர்ப்பீம' என்றற்றொடக்கத் தனவாக இந்திரன் பிரமன்முதலிய காரிய

மூர்த்திகளை மிகவும் உபாசிப்பனவுமாய்க்கொண்டு, தத்துவங்கடந்த பிரமவிசாரணையைச் சிறுபான்மையே சொல்வதாம். இனித்தமிழ் நான்மறைகளோவெனின் முப்பத்தாறு தத்துவங்களின் மேற்பட்டு விளங்கும் சிவம் என்னும் முழுமுதற்பொருளையே உபாசிக்கும் ஞானகாண்டப்பொருளொன்றேயுடையனவாம். இந்தஞானகாண்டமும் ஆகமவழியால் சரியை, கிரியை, யோகம், ஞானமென நாற்றிறப்பட்டு நிற்கும். இது தாயுமானசுவாமிகள்

"விரும்புஞ்சரியைமுதல் மெய்ஞ்ஞானநான்கும்
அரும்புமலர்காய்கனிபோலன்றேபராபரமே" என்றருளிச்செய்தமையானும் இனிது விளங்கும். ஆகவே, ஞானத்திற் சரியையைக் காட்டும் தாசமார்க்கத்தை யுணர்த்துதற்பொருட்டுத் திருநாவுக்கரசுசுவாமிகளும், ஞானத்திற்கிரியையையுணர்த்தும் புத்திரமார்க்கத்தை விளக்குதற்பொருட்டுத் திருஞானசம்பந்த சுவாமிகளும், ஞானத்தில் யோகத்தை யுணர்த்தும் சகமார்க்கத்தை விளக்குதற்பொருட்டுச் சுந்தரமூர்த்திசுவாமிகளும், ஞானத்தில் ஞானத்தையுணர்த்துஞ் சன்மார்க்கத்தை விளக்குதற்பொருட்டு மாணிக்கவாசக சுவாமிகளும் அவதரித்தருளினர் என்க.

என்றிதுகாறும் விளக்கியவாற்றான் தமிழ்ப்பாஷை யொன்றே சத்துவகுண ஓசை புலப்படுத்திப் பிரணவாகாரமாயிருத்தலால் இப்பாஷை தெய்விகத்தன்மையுடையதென்பதும், இப்பாஷையின்கண் சமயாசாரியர் திருவாய்மலர்ந்தருளிய தேவார திருவாசக அருந்தமிழ் மாமறைகள் இதில் அமைதரப்பெற்றமையானே ஒருபெருஞ் சிறப்புப் பெறுவவாயினவென்பதும், வடமொழிநான்மறைகள் சத்துவவோசையின்மையோடு பலதிறப்பட்ட காரியப்பிரமோபாசனை வலியுறுத்திநிற்றலின் அவை பரப்பிரமசுத்தகாரண சிவபரம்பொருளை மாத்திரம் வலிபெறக்காட்டும் தமிழ்நான்மறைகளோடு ஒப்புப்பெறாவென்பதும், எனவே தமிழ்நான்மறைகளாம் தேவார திருவாசக மாட்சி அளப்பரிதாமென்பதும் இனிது பெறப்படும் என்க. ஓம் சிவாயநம: ஓம்சிவாயநம: ஓம்சிவாயநம:

---

# சிவராஜயோகம்.

'யோகம்' என்பது பொருந்துதல்என்னும் பொருளைத்தரும் ஓர் வடசொல்லாம். பொருந்துதல் என்ற மாத்திரையிலேலே பொருந்து கின்ற பொருளும், பொருந்தப்படும் பொருளும், பின் பொருந்து தற்குக்காரணமும், முன்பொருந்தா திருந்தமைக்குக் காரணமும், ஒன்றை மற்றொன்றனோடு பொருத்துகின்ற உபகாரசத்தியும், பொருந்தியபின் விளையும் பயனும் ஆகிய இவையெல்லாம் பெறப்படுதல் வேண்டும். ஆகவே பொருந்துகின்ற பொருள் சீவான்மாவும், பொருந்தப்படும் பொருள் பரமான்மாவும், பின்பொருந்துதற்குக் காரணம் பிரமானந்த வேட்கையும், முன்பொருந்தாதிருந்தமைக்குக்காரணம் ஆணவமலமறைப்பும், பொருத்துகின்ற பொருள்இறைவனோடு தாதான்மிய சம்பந்தப்பட்டுநிற்கும் அனுக்கிரகசத்தியும், பொருந்திய பின் விளைவது சிவானந்தப் பெருக்குமாகுமென்பது முடிக்கப்படும். இதனை ஓர் உதாரண முகத்தான் விளக்குமிடத்து, ஒருவனுக்கும் ஒருத்திக்கும் சையோகம் நிகழ்ந்தது என்றக்கால் கூடுகின்ற புருஷனும் கூட்டப்படுகின்ற ஸ்திரீயும், அவன் அவளைக்கூடுதற்குக் காரணமாகிய காமவேட்கையும், முன் அவளைக்கூடாதிருந்தமைக்குக் காரணமாகிய அவளை அறியாமையும், அவளை அவனோடுகூட்டுவித்து உபகரிக்கின்ற தோழியும், கூடியபின் அவர் இருவரும் அனுபவிக்கின்ற காமநுகர்ச்சியின்பமுமாகிய இவையெல்லாம் அச்சையோகம் என்னுஞ் சொல்லாற் பெறப்படும் அன்றே? இதுபோலவே சீவான்மா பரமான்மாவோடு சம்பந்தப்பட்டு ஐக்கியமாய் நிற்கும் நிலை அறியற் பாலதாம்.

இனிச் சீவான்ம பரமான்ம ஐக்கிய நிலையால் உண்டாம் பிரயோசனம் நிரதிசய இன்பமே யாகலின், யோகாப்பியாசஞ்செய்தலின் கருத்துச் சிவானந்தத்தைப்பெறுதல் ஒன்றேயாம். இனி 'ஆனந்தம்' என்பது அறிவுடைய பொருள்களின் சேர்க்கையால் உண்டாவதேயல்லது, அறிவில்லாத சடப்பொருள்களின் சேர்க்கையால் நிகழ்வதன்று. அறிவில்லாத பொருள்கள் ஒன்றோடொன்று சேர்ந்து நின்று இன்பானுபவமெய்தக்கண்டார்யாருமில்லை. மாங்கனியும்பலா

ப்பழமும் ஒன்று சேர்ந்து ஆனந்திப்பதில்லை, மகிழம்பூவும் மல்லிகையும் ஒன்றோடொன்று இயைந்து இன்பமெய்துவதில்லை, புல்லாங்குழலும் யாழும் தம்மில் இணங்கி ஆனந்தமடைவதில்லை. இனி அறிவில்லாத பொருளாயினும் அஃது அறிவுடையபொருளைச்சேருமாயின் அப்பொருளினியல்பை யறிந்து இன்பதுன்பம் எய்துவது அறிவுடைய பொருட்கண்ணேயாமென்பது எட்டிப்பழத்தையும் பின் வாழைக்கனியையும் நுகர்ந்தானுக்கு அவ்வக்கணங்களிலுண்டாகும் இன்பதுன்ப வேறுபாட்டினால் நன்கு அறியப்படும். எனவே, ஆனந்தமுகிழ்ப்பு அறிவுப்பொருளின்கண்ணே தோற்றமாம் என்பதூஉம், அங்ஙனந்தோற்றமாவதும் இருபொருட் சையோகத்தான் மாத்திரமே யாமென்பதூஉம் இனிதறியற்பாலனவாம். ஓர் அறிவுப்பொருளும் பிறிதோர் அறிவில்பொருளும் சேர்ந்தக்காலும் அவ்வறிவுப்பொருளில் ஆனந்தம் சனிக்கக்காண்கின்றோமாகலின், ஆனந்தப்பேற்றிற்கு இரண்டும் அறிவுடைப்பொருளாக நிற்றல் வேண்டாம்; "இன்பங்கொடுத்தலிறை யித்தைவிளைவித்தல்மலம்" என்பதனால்முத்தியில்ஆணவமலமேஆன்மாவிற்குஇன்பத்தைத்தருமென்று சைவசித்தாந்திகளும் கூறுதலால் ஆணவமும் அவ்வாணவத்தோடு சம்பந்தப்பட்டு அநாதியே ஒற்றுமையுடைத்தாயிருக்கும் ஆன்மாவும் என்னும் அவ்விரண்டில் ஆணவமே, ஆன்மாவின ஆனந்தப்பேற்றிற்குக்காரணமாம், இதனைத்தருதற்குப்பரயான்மா வென மற்றொரு பொருள் வேண்டாம் என்றால் என்னை எனின்.—வாழை, மா, பலா என்னுங் கனிவகைகளையும், மகிழம்பூ மல்லிகைப்பூஎன்னும் பூவகைகளையும், குழல்யாழ் என்னும் ஓசை வகைகளையும் சுவைத்தறிந்த கணத்தும், முகந்தறிந்த கணத்தும், கேட்டறிந்த கணத்துமன்றி மற்றைக்கணங்களிலே அவற்றாற் பெறப்படும் இன்பம் நிலைபேறுடையதாய்த் தோன்றாமையானும், சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும் பஞ்சேந்திரியங்களால் அனுபவிக்கப்படும் அவ்வின்பங்களெல்லாம் ஏகதேச விளக்கமுடையனவா யிருத்தலால் மறித்து மறித்தும் தொடர்ச்சியாய் அனுபவிக்குமிடத்து அவை வெறுக்கப்படுதலானும், சடப்பொருட் சையோகத்தால் நேருமின்பம் நிலையில்லாதனவாமென்பது நன்கு தெளியப்படும். ஆணவம் என்பதும் வாழை, மா, பலா என்றற்றொடக்கத்துச்சடப்பொருள் போல்வதோர் அசே

தனப்பொருளே யல்லது வேறல்லாமையால் அதனுற்றரப்படும் ஆன ந்தம் ஏகதேச மாத்திரையாய்ச் சிலகாலம் நிலைபெற்று நின்று, பின் ஆன்மாக்களுக்குத் துன்பத்தையே பயக்குமென்றல் தேற்றமாம். இன்னும், இவ்வசேதனப்பொருளால் ஆன்மாவிற்கு நிகழும் ஆனந் தத்தைக்காட்டினும் பன்மடங்கு பெரிதாய்ப் பிறிதோர் ஆன்மா வினுண்டாம் சையோகம் தோன்று மென்பதற்கு ஒருவன் தன் காமக்கிழத்தியோடு நுகருமின்பமே சான்றுமென்க. ஆகையால், ஆணவமே ஆன்மாவிற்கு இன்பத்தைத்தர வல்லதென்று அவ்வாறு ஆசங்கித்தல் ஒருசிறிதும்பொருந்தாது. "சத்தமுதலைந்துந் தன்வழி த்தான்சாரிற், சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ" என்ற திருவாக்கும் ஈண்டு அறியற்பாலதாம். அற்றேல், "இன்பங் கொடுத்தலிறை யித்தை விளைவித்தல் மலம்" என்னும்திருவாக்கின் கருத்து என்னையோவெனின்,—காமக்கிழவனுங் கிழத்தியும் இன்ப நுகருங்காலத்துப் பஞ்சேந்திரிய அனுபவமான பழம் பூ முதலா யின வெல்லாம், அவர்காமவின்பத்தினை மிகுதிப்படுத்துதற்கு அனு கூலமான உபகரணங்களாதல் போலப் பரமான்மாவின்கண்ணுள்ள பேரின்பக்கிழத்தியோடு சீவான்ம சிற்சத்தி இரண்டறக்கலந்து நிர திசயானந்தம் எய்துங்கால் ஆணவமலம் உடன்நின்று உபகரணமாய் அவ்வின்பத்தினை மிகுதிப்படுத்துமென்பதே அத்திருவாக்கின் உண் மைக்கருத்தாமென்க. இதுபற்றியே,

> "பெற்றசிற்றின்பமே பேரின்ப மாயங்கே
> முற்ற வரும்பரி சுந்தீபற
> முளையாது மாயையென் றுந்தீபற"

> "பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
> டோரின்பத் துள்ளானென் றுந்தீபற
> உன்னையே யாண்டானென் றுந்தீபற" எனுந்திருவாக்குக

ளெழுந்தன.

இனி ஏகான்மவாதம், சத்தப் பிரமவாதம், கிரீடாப்பிரமவாதம் பாற்கரியவாத மென்னும் கேவலாத்துவிதவகைபற்றிப் பரமான் மாவாகிய பிரமம் ஒன்றேயுள்ளதென்றும், அதுவே சரீரங்கடோ றும் வேறு வேறு ஆன்மாக்கள்போல அவினயித்தலல்லது சீவான்மா

என வேறோர் அறிவுப்பொருளில்லையென்றும், சீவான்மாப் பொய்யான மாயையின் வயத்தால் உண்டாகும் பிராந்திஞானத்தைக் கழித்துத் தன் உண்மைச் சொரூபத்தைப் பிரமமென்றே நிச்சயப்படுத்திக்கொள்ளுமிடத்து அப்பிரமத்தின் சுதந்திரகுணமான ஆனந்தமயமாயே விளங்குமென்றும், இப்படிக் காண்டலே யோகமல்லது அதற்குச் சீவான்ம பரமான்ம ஐக்கிய நிலை என்று பொருளுரைப்பது பொருந்தாதென்றும் கூறிஞலோவெனின்; 'யோகம்' என்னுஞ் சொற்பொருளுக்கு இக்கேவலாத்துவிதக்கொள்கை ஒருவாற்ருனும் பொருந்தாமையானும், சருவவியாபகப் பரம்பொருளாயுள்ள பிரமம் ஏகதேச சுபாவலக்ஷணமுடைய சீவான்மா வாகுமென்றல் அனுபவ விரோதமாயிருத்தலானும், அல்லதவ்வாருகுமென்று கொள்ளுதற்கு ஓர் காரணம் இல்லாமையானும், மாயையே பிரமத்தை அவ்வாறு ஏகதேசப்படுத்து மெனின் சருவசத்தியுமுடைய பிரமத்தைக் காட்டிலும் வெறுஞ்சூனியப்பொருளான மாயை பேராற்றலுடைத்தாம் என்று பெறப்பட்டு முன்பின் முரணும் முடிதலானும், முன்னே சத்தி குவிந்து மாயையின் வயப்பட்டு நின்ற பிரமம் திரும்பவும் ஒரு காலத்து அதனைச்செயித்துத்தன் சுதந்திரவுரிமையைக் கைக்கொள்ளுமெனின் அத்தகைய ஆற்றலுடைய அப்பிரமம் முன்னமே அவ்வாறு அதனைச்செயித்துச் சீவத்தன்மை எய்தாது நிற்றல் அமையுமாகலானும், அவ்வாறு கூறுதல் ஒருவாற்ருனும் பொருந்தாதென்று மறுக்கப்படும்.

மேற் கூறியவாற்ருல் ஆனந்த விளைவிற்கு ஏதுவான சைதன்னிய ஆன்ம ஒருமைப்பாடே யோகம் என்பது ஆன்ருேர் துணிபாம். இதற்குப் பிரமாணம்,

இந்தியவிடயந்தன்னெடுசிவணல்யோகமென்பார்சிலர்சிலர்தாஞ்
சிந்தனையுயிரோடடைதல்நல்யோகமென்பரீதன்றியுஞ்சிலர்தாம்
முந்தியபிராணனபானனேடடைதலென்பரிம்மொழிந்தவையனைத்
அந்தமில்யோகமல்லநற்சிவன்பரத்துடனடைவதேயோகம் [தும்

மாயநட்டோரையுமாயாமலமெனுமாதரையும்
வீயவிட்டோட்டிவெளியேபுறப்பட்டுமெய்யருளாந்
தாயுடன்சென்றுபின்ருதையைக்கூடிப்பின்ருயைமறந்
தேயுமதேநிட்டையென்ருனெழிற்கச்சியேகம்பனே.

இனிப் பொருந்துகின்ற பொருள் சீவான்மாவும் பொருந்தப் படும் பொருள் பரமான்மாவும் என இருவேறு ஆன்மாக்களிருப்புக் காணப்படினன்றி யோகமென்ப தில்லையென்று காட்டப்பட்டமை யின் அவை யிரண்டும் அநாதிநித்திய சைதன்னிய வஸ்துக்களாகு மென்பது துணியற்பாலதாம். இதற்குப் பிரமாணம் சிவராசயோக கைவல்லிய சிவானந்தானுபவ சருவைசுவரிய சம்பன்னசிரேட்ட சிவஞானவள்ளலாரான திருமூலர் அருளிச்செய்த திருமந்திரத்திரு முறையுள்,

> பதிபசுபாசமெனப்பகர்மூன்றிற்
> பதியினைப்போற்பசுபாசமநாதி
> பதியினைச்சென்றணுகாபசுபாசம்
> பதியணுகிற்பசுபாசம்நில்லாவே." எனவருமாற்றால் நன்

கறியப்படும். ஸ்ரீ தாயுமானசுவாமிகளும் இவ்வாறே,

> ஒருவனாவன்யானைகெடக்குடத்துட்செங்கை யோட்டுதல்போல்
> யான்பேதையுப்போடப்பை
> மருவவிட்டும்கர்ப்பூரமதனிற்றீபம்வயங்கவிட்டும்
> ஐக்கியமுன்னிவருந்திநிற்பேன்
> அருளுடையபரமென்றேஅன்றுதானேயானுளனென்றும்
> எனக்கேயாணவாதி
> பெருகுவினைக்கட்டென்றும்என்றுறைகட்டிப்பேசிய
> தன்றேயருணூல்பேசிற்றன்றே." என்று அருளிச்செய்த

மையுங் காண்க. வடமொழியிற் சுவேதா சுவதரோபநிடதத்து நான்காம் அத்தியாயத்து ஆறும்மந்திரமான "ద్వా సుపర్ణా సయుజా సఖాయా సమానం వృక్షం పరిషస్వజాతే। తయోరన్యః పిప్పలం స్వాద్వత్త్యనశ్నన్నన్యో అభిచాకశీతి ॥" என்பது "எப்போதும் ஒரேபெய ரான் வழங்கப்படும் இரண்டு பக்ஷிகள் அந்த ஒரேமரத்தில் வசிக்கின்றன; அவற்றுள் ஒன்று அவ்வத்திமரத்தின் இனிய பழத்தை நுகருகின்றது, மற்றொன்று சாட்சி மாத்திரையாய்ச் சுற்றிலும் நோக்கிக்கொண் டிருக்கின்றது" என்னும் அந்த ரங்க வாக்கிய நெறியினால் மாயை என்னும் விருக்கத்திற் சீவா ன்மா பரமான்மாவென்னும் இரண்டும் ஏககாலத்துள்ளனவாக

அவற்றுட் சீவான்மா மாயையினுல் அனுபவத்திற்கு வரும் இருவினைப்போகங்களான கனிகளை நுகர்ந்துகொண்டிருப்பபரமான்மா அவ்விருவினையால் அதுபோல் துடக்குருது தான்சாட்சிமாத்திரையாய் இருக்கின்றதென்றதூஉம், முதல் அத்தியாயத்து 8-ஆமந்திரமான సంయుక్తమేతత్ క్షరమక్షరంచవ్యక్తావ్యక్తంభరతేవిశ్వమీశః। అనీశశ్చాత్మాబధ్యతేభోక్తృభావాత్ జ్ఞాత్వాదేవంముచ్యతేసర్వపాశైః॥ என்பதும், ஒன்பதாம் மந்திரமான జ్ఞాజ్ఞౌద్వావజావీశనీశావజాహ్యేకాభోక్తృభోగార్థయుక్తా। అనంతశ్చాత్మావిశ్వరూపోహ్యకర్తాత్రయంయదావిందతేబ్రహ్మమేతత్॥ என்பதும் "பிரிட்பின்றி நிற்குங்கால் விளங்கியும் விளங்காமலும் அழிந்தும்அழியாமலும்இருக்கும் இவ்விசுவத்தை ஈசன் தாங்குகின்ருன்; அநீசனுன ஆத்மாவானவன் போக்தாவாய் அனுபவிக்கின்றநெறியினுலேபந்திக்கப்படுகின்ருன்;முதல்வனையுணரும் ஞானத்தாலே அதுசருவபாசங்களினின்றும் விடுபடுகின்றது" "அவற்றுள் ஒன்று ஞானசொரூபியாய் உள்ளது மற்றையது அஞ்ஞானவுருவாயுள்ளது; ஈசன் அநீசன் இருவரும் பிறவாதவர்; அங்ஙனமாயினும் ஒன்று சருவசக்தியுமுடையது மற்றையது அவ்வாருகாதது; பிரகிருதியோ போக்தாவோடும் போகத்தோடுங் கூடிநின்று அதுவும் பிறப்பின்றியே உள்ளது; அனந்தமான ஆத்மாக்கள் விசுவரூபமுடைமையினுல் அகர்த்தாவாயிருக்கின்றன; இங்ஙனம் பிரமம் திரிவித சம்பந்தமுள்ளதா யிருப்பதனையுணர்வோன் பாபங்களினின்றும் விடுவிக்கப்படுகின்ருன்" என்றதூஉம் பதி பசு பாசங்கள் மூன்றும் அநாதி நித்தியப் பொருள்களாமென்றலை வலியுறுத்தற்கே எழுந்தன.

இங்ஙனம் பரமான்மா சீவான்மா இரண்டும் ஏககாலத்தே ஆதியந்தமில்லாத் தனித்தனிப்பொருள்களாய் நிற்பினும், ஒன்று ஞானப்பிரகாசமாயுள்ளது ஒன்று அஞ்ஞான அப்பிரகாசமாயுள்ளது; ஒன்று அருட்டிரு மேனியுடையது ஒன்று மருட்டிருட் சரீரமுடையது; ஒன்று சருவசக்தியுமுள்ளது ஒன்று அற்பசக்தியே யுடையது; ஒன்று சருவவியாபக சருவஞ்ஞத்துவமுள்ளது ஒன்று ஏகதேசவியாபக ஏகதேசஞத்துவமுடையது; ஒன்று இயற்கையே பாசரகிதமாயுள்ளது ஒன்று இயற்கையே பாசசகிதமாயுள்ளது; ஒன்றுபேரானந்

தப் பிழம்பாயுள்ளது ஒன்று பெருந்துன்பக் களஞ்சியமாயுள்ளது. இங்ஙனம் சிவன் சீவன் என்னும் அவ்விரண்டும் தம்முள் எவ்வாற்றானும் மாறுபட்ட சுபாவமுடையனவாய் இருத்தல் பற்றியன்றே சிவயோகானுபூதிச் செல்வரான தாயுமானவர் "அருளுடைய பரமென்றோ அன்றுதானே யான் உளனென்றும்" எனப் பரம்பொருட்கு அருளுடைய என்னும் விசேடணந்தந்தும், "எனக்கே யாணவாதி பெருகுவினைக் கட்டென்றும் என்றற்கட்டிப் பேசியதன்றே யருணூல் பேசிற்றன்றே" எனச் சீவனுக்கு "ஆணவாதி பெருகுவினைக் கட்டு" என்னும் விசேடணந்தந்தும் அவற்றின் வேறுபாடு தெரித்து இனிதோதுவாராயிற்று. இன்னும் இச்சீவான்ம பரமான்மவேறுபாடு இனிது உணர்த்துதற்கன்றே வேதசிவாகமமுடிநிலைச் சுத்தாத்துவித வைதிகசைவசித்தாந்த தாபன பரமாசாரிய சுவாமிகளான ஸ்ரீமந் மெய்கண்ட தேவநாயனார் தாமருளிச்செய்த சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்து,

"நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்—அற்புதம்போல்
ஆனா வறிவா யளவிறந்து தோன்றானோ
வானேமுதல்களையின் வந்து" எனவும்

"சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்டவினியுளது சத்தேகாண்—சுட்டி
உணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்" எனவும் அருளிச்செய்ததூஉம் என்க. இன்னும் இந்நுண்மையை எம்போன்ற மந்தவதிகாரிகட்கும் உணர்த்தி அறிவுகொளுத்தும்பொருட்டுக் காமிகம், யோகசம் முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களையும் புலங்கொள அறிந்த ஸ்ரீமது அருணந்தி சிவாசாரியசுவாமிகள்

"சீவனுமிச்சாஞானக்கிரியையாற்சிவனையொப்ப
னாவனென்றிடினாதிமலமிவற்றினைமறைக்குங்
காவலனிவன்செய்கன்மத்தளவினிற்கொடுப்பக்காண்பன்
பாவியாம்புத்திமுத்திப்பயன்கொளும்பணியிற்றாகும்"

"சிவன்சீவனென்றிரண்டுஞ்சித்தொன்றாமென்னிற்
சிவனருட்சித்திவனருளைச்சேருஞ்சித்திவன்றான்
பலங்கெடுபுத்திமுத்திபண்ணுஞ்சித்திவற்றிற்
படியுஞ்சித்தறிவிக்கப்படுஞ்சித்துமிவன்றான்
அவன்றனையறியுஞ்சித்தாதலினாலிரண்டு
மணைந்தாலுமொன்றாகாதநனியமாயிருக்கு
மிவன்றானும்புத்தியுஞ்சித்திவனுமோபுத்தி
யிதுவசித்தென்றிடிலவனுக்கிவனுமசித்தாமே" எனவும்விளக்கியருளினாரென்க. ஆகவே,இங்ஙனம் பெறப்பட்ட சீவான்மா பரமான்மா இரண்டில் பொருந்துவது சீவான்மாவும் பொருந்தப்படுவது பரமான்மாவு மாகலின் அவை ஒரே யிலக்கணமுடைய ஒருபொருளாகாது வேறுபட்ட விலக்கணமுடைய வேறுவேறுபொருள்களாமென்றே துணியப்படும் இதற்குப் பிரமாணம்.

"அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையா
லுப்பெனப் பேர்பெற் றுருச்செய்த தவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்து ளடங்குமே" எனுந் திருமந்திரத்துட் காண்க.

இனிச் சீவன் சிவத்தோடு பொருந்தல் வேண்டுவது என்னை என்று விசாரிக்குமிடத்துச் சிவானந்தப்பேற்றின் பொருட்டாகவே யல்லது வேறில்லை என்பது முன்னே விளக்கப்பட்டது. எங்கெங்கு இருவர்க்குள்ளே கூட்டுறவு உண்டாகுமோ அங்கெல்லாம் ஆனந்த விளைவுண்டாமென்றும், எங்கெங்கே ஆனந்த விளைவில்லையோ அங்கெல்லாம் அவ்விருவர் தமக்குள்ளும் பிரிவினையே நிகழுமென்றும் அறிதல்வேண்டும். நேசகுணம் என்பது இருவரையும் ஒருவராக ஒட்டுவித்து ஆனந்தத்தை விளைவிப்பதன்றி வேறென்னை? விரோத குணம் என்பது அவ்விருவர் தமக்குள்ளும் அவ்வானந்தம் நிகழவொட்டாது தடைசெய்து அவர் தம்மை வேறுவேறாகப் பிரிவிப்பதன்றி வேறென்னை? பேரறிவினாற்சிறந்த ஒருபெரியாரைக் கண்டவிடத்து அவர்பாற்சென்று அவர் கூறும் அரிய பெரிய விஷயங்களை உணர்ந்து அவரோடு அளவளாவி இன்புறுதற்கு எம்மனம் மிக

விழைகின்றது. அறிவில்லாரைக் கண்டவிடத்து அவர்பாற் செல் லுதலால் யாதுதுன்பம் உண்டாமோ என்றஞ்சி அவரை விட்டுப் பிரிந்துபோவதற்கு மிகவும் விரும்புகின்றேம். இதனுல் நேசகுணம் உண்டாவதற்கு ஒருவரிடத்துள்ள அறிவுவிளக்கமாகிய ஞானமே இன்றியமையாது வேண்டற்பாலதா மென்பதூஉம், விரோதகுண முண்டாவதற்கு ஒருவரிடத்துள்ள அஞ்ஞானமே காரணமாமென்ப தூஉம் இனிதுவிளங்கும். அறியாமை வயப்பட்டுப் பிறப்பு இறப்புக்க ளென்னும் பெருந்துக்கசாகரத்திலே கிடந்து அலையும் எம்போல் வார்க்குப் பேரறிவாளரைக்கண்டால் அவரோடு அளவளாவுதற்கு மனவெழுச்சியுண்டாதல்போல, எல்லாஞானத்திற்கும் ஓர் நிலைக்களை ய் உள்ள சருவேசுவரன் ஒருவன் உண்டாகலின் அவனைத் தலைக் கூடி எமக்குள்ள அறியாமையினையும் பிறப்பிறப்புத் துன்பங்களையும் தொலைத்துக்கொள்ளல்வேண்டும் என்னும் ஓர்அவாவும் இடையறுது நிகழ்கின்றது. ஞானமுடையார் இவரென்றறிந்தால் அன்றி ஞான முடையாரை யணைந்து அவரால் அறிவுகொளுத்தப்படுத லில்லாமை போலச் சருவேசுரனுக்குள்ள வியாபகஞானம் ஒருசிறிதாயினும் விளங்க அறியப்பட்டாலல்லது அதனைப் பெறுதற்கு மனவெழுச்சி செல்லமாட்டாது. இனித் தாயின் மிகச்சிறிதாகிய கருப்பையினுள் ளே புகுந்தநாட்டொடங்கிக்கரசரணுதி அவயவங்களெல்லாம் இனிது பொருத்தப்பட்டுப் பத்துமாதங்கழிந்து பிறக்குஞ் சிசுவினுற்பத் தியைக் காணும்போதும், பிறந்தஅச்சிசுக்களுள்ஒருபாலனஆண்டன் மையும், ஒருபாலன பெண்டன்மையுமாய்வகுக்கப்பட்டபேதஅமைப் பினைக் காணும்போதும்,சூரியமண்டிலம் சந்திரமண்டிலம் செவ்வாய் மண்டிலம் புதன்மண்டிலம் பிருகஸ்பதிமண்டிலம் சுக்கிரமண்டிலம் சனிமண்டிலம்பூமண்டிலம்முதலானகோளகைகளும்யாற்றின்மணலை அளவிடினும்அளவிடப்படாத கணக்கிறந்தநட்சத்திரமண்டிலங்களும் பூதாகாயவியாபக அந்தரத்திலே அம்மனைகள் சுழன்முற்போலச் சுழ ன்றுகொண்டு தத்தங்கதிவழுவாமல் தத்தமக்குள்ள ஆகருஷணசக்தி யால் இழுக்கப்பட்டுச் சஞ்சரித்தலைக் காணும்போதும், இவற்றின் இயக்கத்தால் வேனிற்காலத்து வெப்பமிகுந்து தாவரப்பொருள்க ளெல்லாம் தளிர்த்து அரும்புதலும், கார்காலத்து மழைபொழிதலும் குளிர்காலத்துக் குளிர்மிகுதலும் பனிக்காலத்துப் பனிப்பெய்து

மரஞ்செடி கொடிகளெல்லாம் இலையுதிரப்பெற்று வெறியவாய் நிற்றலுந் தவருமல் முன்வருடத்தில் நிகழ்ந்ததுபோலவே இவ்வருடத்தில் நிகழ்தலும், இவ்வருடத்தில் நிகழ்வதுபோலவே யினிவரும் வருடத்து நிகழ்வதூஉங் காணும்போதும், இவற்றின் கதிகளினுலே சரீரங்கடோறும் வசிக்கும் ஆன்மாக்களெல்லாம் உண்பன உண்டும் தின்பன தின்றும் நக்குவன நக்கியும் பருகுவன பருகியும் விழுங்குவன விழுங்கியும் உடுப்பன உடுத்தும் முடிப்பன முடித்தும் கட்டுவன கட்டியும் கவிப்பன கவித்தும் பூசுவன பூசியும் போகம்பலப்பல பலப்பலவாறு நுகர்ந்தும் இன்புற்றுந் துன்புற்றும் இறந்தும் பிறந்தும் வருவதனை எல்லாங் காணும்போதும் இங்ஙனஞ் சருவத்தையும் அமைத்த சருவசக்தியுமுள்ள சருவஞ்ஞனை ஈசுரனுடைய பேரற்புதஞானம் யாங்காணுமிடத்துங் கேட்குமிடத்தும் உண்ணுமிடத்தும் உறங்குமிடத்தும் உணருமிடத்துமாகிய எல்லாவிடங்களினும் புலப்பட்டுத் தோன்றுதலை இனிது விளங்கக் காண்கின்றேம் அல்லேமோ! இங்ஙனம் இறைவனுடைய ஞானசத்தி அண்டபிண்ட சராசரங்கள் எல்லாவற்றினுள்ளும் புலப்பட்டு விளங்குதல் பற்றியன்றே திராவிட சுருதியுள்ளும்,

'இருநிலனுய்த்தீயாகிநீருமாகியியமானனுயெறியுங்காற்றுமாகி
அருநிலையதிங்களாய்ஞாயிருகியாகாசமாயட்டமூர்த்தியாகிப்
பெருநிலையுங்குற்றமும்பெண்ணுமாணும்பிறருருவுந்தம்முருவுந்தா [மேயாகி
நெருநலையாயின்ருகிநாளையாகிநிமிர்புன்சடையடிகள்நின்றவாறே''
என்றும்,

''நிலனீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனுயமைந்தனேடெண்வகையாய்ப்புணர்ந்துநின்ருன்
உலகேழெனத்திசைபத்தெனத்தானெருவனுமே
பலவாகிநின்றவாதோணேக்கமாடாமோ'' என்றும் திருவாக்குகள் எழுந்தன. இனிக்கீர்வாண சுருதியுள்ளும்''పృథివ్యాభవఆపశ్శర్వ అగ్నేరుద్రోవాయు ర్భీమఆకాశస్యమహాదేవఆత్మానఃపశుపతిఃసూర్యస్యోగ్రఃచంద్రస్యసోమః '' என்று பெறப்பட்ட வாக்கியத்தினுல் இவ்வுண்மைவலியுறுத்தப்பட்டது.

இங்ஙனம் ஞானகரனை ஈசுரன்றன்மை அறிவு குறைந்தார் முதல் அறிவுமிகுந்தார்ஈறான எல்லாமக்களானும் நன்கறியக் கிடத்தலின், அவனுடைய ஞானப்பிரகாசத்தினைத் தாமும்பெற்று இன்புறல்வேண்டி எல்லாரும் விழைவுடையராய் இருக்கக் காண்கின்றோம். இதனல் ஞானம் காரணம் ஞானத்தின்காரியம் இன்பம் அல்லது ஆனந்தம் என்றறியற்பாற்று. இது

"பாராதிபூதநீயல்லையுன்னிப்பாரிந்திரியங்கரணநீயல்லை
யாராயுணர்வுநீயென்றான்ஐயனன்பாயுரைத்தசொல்லானந்தந்
தோழி" என்றெழுந்த திருவாக்கினுனும் நன்குணர்த்தப்பட்டது.

இன்னும் அறிவுடையோராற் குறிக்கப்பட்ட "நூற்பொருள்களை அறியுமிடத்தும், யான் தேகமுமல்லேன் பஞ்சேந்திரியங்களு மல்லேன் அவற்றை யியக்கும் மனம் சித்தம்புத்திஅகங்கார மென்னும் அந்தக் கரணங்களுமல்லேன் இவற்றின் வேறான பிராணனும் அல்லேன் இவற்றின் வேறாய்ச் சச்சிதானந்த சொரூபியாய் விளங்கும் பிரமமே நான் என்று அறியுமிடத்தும் முறையே தோன்றுகின்ற பாசஞான பசுஞானங்களானும் ஆனந்தம் விளையுமாயினும், அவ்வானந்தங்களெல்லாம் ஏகதேச ஞானங்களாற் றோன்றிய ஏகதேச ஆனந்தங்களேயாமல்லது, பதிஞானத்தான்மாத்திரம் பெறப்படுவதாய்த் தனக்கோர்வரம்பின்றி விரிந்த வியாபகத்ததான சிவானந்தத்தோடு அவை ஒப்புப்பெறுவாகலானும், அவையும் ஒருசிலகணங்கள் மாத்திரமே நிலைபெற்றழிவனவாமாதலானும் அவையெல்லாம் கழிக்கப்படுவனவேயாமென்பதூஉம், சிவானந்தவிளைவிற்கோ ரொப்பற்ற காரணமான பதிஞானமே யாவரானும் விரும்பற் பாலதொன்றாமென்பதூஉம்,

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்
பார்ப்பரியபரம்பரனைப்பதிஞானத்தாலே
நேசமொடுமுள்ளத்தேநாடிப்பாத
நீழற்கீழ்நில்லாதே நீங்கிப்போதி
ஞசைதருமுலகமெலாமலைத்தோரமென்
றறிந்தகலவந்நிலையே யாருமின்னும்
ஓசைதருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க
வுள்ளத்தேபுகுந்தளிப்ப னூனமெலாமோட"

"வேதசாத்திரமிருதி புராணகலைஞானம்
விரும்பசபைவைகரியாதித்திறங்கண்மேலா
நாதமுடிவானவெல்லாம்பாசஞான
நணுகியான்மாவிவைகீழ்நாடலாலே
காதலினுன்பிரமமென்னுஞானங்
கருதுபசுஞானமிவனுடலிற்கட்டுண்
டோதியுணர்ந்தொன்றொன்றாவுணர்ந்திடலாற்பசுவா
மொன்றாகச்சிவனியல்பினுணர்ந்திடுவன்காணே" என்னும் சிவ
ஞானசித்தித்திருவாக்கான்உணரப்படும். இங்ஙனம்சிவானந்தப்பேற்
றைவிரும்புதல் எல்லா ஆன்மாக்களிடத்தும் முறைமுறையே நிகழக்
காண்டலால் இஃதொன்றே சிவயோகந் தலைப்படுதற்குரிய காரண
மாம் என்க. உலகத்தின்கண் எல்லாச்சௌகரியங்களும் பெறுதற்
குக் காரணமான திரவியோபகரணத்தால் மனிதனுக்கு வேண்டப்
படும் எல்லாநலங்களுஞ் சிறிதுங்குறைவின்றி வாய்க்கப்பெற் றிருப்
பினும், மனிதனுடைய அறிவுவிளக்கத்திற்கு இன்றியமையாச் சிறப்
பினவான பலநூல் நுண்ணறிவுகளெல்லாம் ஒருங்கே வாய்க்கப்
பெற்றிருப்பினும் எம் வாழ்நாட்களின் இடையிடையே அவற்றை
யெல்லாம் ஒருபொருளாக நினையாது வெறுத்து அவற்றின்மேற்பட்
டுத் தன்னையுந் தன்றலைவனையும் அறியும் பதிஞானம் மிக்கெழுந்து
தோன்றுகின்றது. இது,

"வேத மோதிலென் சாத்திரங் கேட்கிலென்
நீதி நூல்பல நித்தல்பயிற்றிலென்
ஓதியங்கமோ ராறுமுணரிலென்
ஈசனையுள்கு வார்க்கன்றியில்லையே"

"நீற்றைப்புனைந்தென்னநீராடப்போயென்னநீமனமே
மாற்றிப்பிறக்கவகையறிந்தாயில்லைமாமறைநூல்
ஏற்றிக்கிடக்குமெழுகோடிமந்திரமென்னகண்டாய்
ஆற்றிற்கிடந்துந்துறையறியாமலலைகின்றையே" என்னும்உண்
மைத் திருவாக்குகளானும் அறியப்படும்.

"தெய்வசகிதம்பரத்தேவாவுன்சித்தந்திரும்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே

மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே" என்பதும்
அது. இவ்வாறு பாசஞான பசுஞானங்களாற் றோன்றும் இன்பத்
தும், பஞ்சேந்திரிய விஷயானுபவங்களிற்றோன்றும் இன்பத்தும்,
உவர்ப்புப் பிறந்து அவற்றை வெறுக்குஞ்சமயத்தில்

நானுரென்னுள்ளமார்ஞானங்களாரென்னையாரறிவார்
வானோர்பிரானென்னையாண்டிலனேன்மதிமயங்கி
ஊனுருடைதலையிலுண்பலிதேரம்பலவன்
தேனார்மலர்க்கழற்கேசென்றூதாய்கோத்தும்பீ" என்ற வண்

ணம் 'இவ்வித விசித்திரபேதங்களோடு தோன்றும் இவ்வுலகம்
யாவை? இதன்கண் ஒருசரீரத்தைப்பெற்றுச் சிலநாள் இங்கிருந்துண்
டுலாவிப் பின் இதனை விட்டொழியும் நான் யார்? என்னறிவை
விளக்குதற் குபகரணங்களான மனஞ் சித்தம்புத்தி யகங்காரம் என்
பன யாவை? இவற்றையெல்லாம் வகுத்த தலைவன்யார்?' என்றற்
றொடக்கத்தாற் பதிஞானம்நிகழாநிற்கின்றது. இப்பெற்றித்தானபதி
ஞானமொன்றே ஏனை எல்லாவற்றினும் மிக்குச்சென்று சீவான்மா
வைப் பரமான்மாவோடு அத்துவிதப்படுத்தி நிற்பதென்றுணர்க.

இனி இப்பதிஞான வழித்தோன்றும் பிரமானந்த வேட்கை
சீவான்மாக்களிடத் தியற்கையே யுள்ளதாகவும், அஃதெஞ்ஞான்றும்
ஒரே தன்மையாக விளங்காது இடையிடையே மாத்திரம் மின்மினி
யொளிபோல் தோன்றுவதென்னையெனின்; தூலரூபமாய் விளங்
கும் கண்ணின்கண்உள்ள பிரகாசம் சூரியப்பிரகாசத்தோடு அத்து
விதப்பட்டுநின்று விளங்கவொட்டாது தடைசெய்து அவற்றிடை
யே தோன்றி அக்கண்ணொளியை மறைத்துக்கொண்டு அக்கண்
ணின் வேறன்றாய் நிற்கும் படலம் என்னும் நோய்போலச், சூக்கும
சித்துருபமாய் விளங்கும் சீவான்மாவின்கண்உள்ள ஞானசத்தி
அதிசூக்குமசித்தான பரமான்மாவின் பரஞானசத்தியோடு அத்து
விதமாய் நின்று பிரகாசிக்கவொட்டாது தடைசெய்து அவற்றிடை
யேதோன்றி அவ்வான்ம சிற்சத்தியினை மறைத்துக்கொண்டு அவ்
வான்மாவின் வேறன்றாய் அதனோடு அநாதிசையோக முற்றுத்
தோன்றுவது அறியாமையினைச் செய்யும் ஆணவமலமாம். இது சிவ
ஞானசித்தியாரில் ஆன்மவிலக்கணங் கூறும் வழி எழுந்த

"அசித்தருவியாபகம்போல்வியாபகமருவமன்றாய்
வசித்திடவருய்வியாபியெனும்வழக்குடையனாகி
நசித்திடாஞானச்செய்தியநாதியேமறைத்துநிற்கும்
பசுத்துவமுடையனாகிப்பசுவெனநிற்குமான்மா" என்னுந் திரு வாக்கானும்,

"ஆணவத்தோடத்துவிதமானபடிமெய்ஞ்ஞானத்
தாணுவினோடத்துவிதஞ்சாருநாளெந்நாளோ" என்பதனானும் அறியற்பாலதாம். கேவல சகல சுத்தம் என்னும் மூன்றவத்தையுள் எல்லாக் கருவிகளோடுங்கூடி அறிவுவிளங்கப் பெறுகின்ற இச்சாக் கிராவத்தையிலேயே மறதிமுதலிய அறியாமைக்குணங்கள் எல் லார்க்கும் உண்டாதல் துணியப்படுதலானும், இக்கருவிகளின் இயக் கம் முறைமுறையே குறைந்து ஒடுங்குகின்ற சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அவத்தைகளில் அவ்வறியாமைக் குணம் முறைமுறையே மிகுந்துபோய் இறுதிக்கண்ணின்ற துரியா தீத அவத்தையில் ஆன்மாக் கேவலம்அறியாமை வயப்பட்டுப் பாம்பு தீண்டவரினும் வாளறுக்க நேரினும் ஒன்றுந் தோன்றாமற் பிணம்போற் கிடத்தல் ஒருவனயர்ந்துறங்கும் உறக்கத்தே காணப் படுதலானும் அறியாமைக்குணத்தைச் செய்யும் இவ்வாணவம் ஆன் மாக்களெல்லாரிடத்தும் உண்டென்பது பிரத்தியக்கமாக அறியப் படுவதாம்.

இனி ஐக்கவாதசைவர் மதம்பற்றிப் பிரகாசத்தின் சூனியமே அப்பிரகாசத்தைச்செய்யும் அந்தகாரமாயினாற்போல ஆன்மாவின் ஞானசூனியமே அறியாமையினைச் செய்யும் ஆணவமாமெனின்;— அபாவமான சூனியப்பொருளுக்குக் குணமுந்தொழிலு மில்லையாம் எனத் தருக்கசாத்திரியாரான அன்னம்பட்டரும் உரைகூறினாராக லின் சூனியப்பொருளாயின் அந்தகாரத்திற்குக் கருமைக்குணமுங் கண்ணைமறைக்குந் தொழிலும் இலவாதல் வேண்டும். அவை யிரண் டும் அவற்றிற்குண்மை பிரத்தியக்கமாகத் துணியப்படுதலால் அவர் கூறிய அந்தகார உவமை ஒருசிறிதும் பொருந்தாமையானும், முன் ஒரு சூனியமாய்க்கிடந்த ஆன்மஞானசத்தி பின் ஒருகாற்றோன்று மென்றல் சற்காரியவாதங்கூறுஞ் சாங்கிய பௌதிகசாத்திரவிரோத மாமாகலானும், ஆணவத்திற்கு அறியாமைக்குணமும் அறிவை

மறைக்குந் தொழிலுங் காணப்படுதலால் அது ஞானசூனியமான அபாவப் பொருளாமென்றற்கு ஒருசிறிதும் ஏலாமையானும் அவர் கூறும் அவ்வுரை பொருந்தாதென்பது நன்குபெறப்படும்.

இனிப்பாடாணவாத சைவர்மதம்பற்றி ஆணவம் அறியாமைக் குணத்தினையுடைய ஓர் தனித்திரவியமாதலின்றி, ஆன்மாவின்கணுள்ள ஞானத்தைப்போல் அஃது அதற்கு மற்றொரு குணமாமெனின்;—குணத்தையுடைய ஒரு திரவியத்திற்கும் அவ்வாறே குணத்தையுடைய மற்றொரு திரவியத்திற்கும் இடையே நிகழும் சம்பந்தம் சையோக சம்பந்தமெனவும், ஒருகுணத்திற்கும் அக்குணத்தையுடைய பொருளுக்கும் பிரிவின்றியுள்ள சம்பந்தம் தாதான்மிய சம்பந்தமெனவும் வழங்கப்படும். திரவியத்திற்கும் திரவியத்திற்கும் இடைநிகழும் சையோகசம்பந்தம் ஒருகாலத்துப் பிரிதலுமுண்டென்பது கடல்நீரைக் காய்ச்சியவிடத்து நீரும் உப்பும் வேறுவேறாகப்பிரிந்து கிடத்தலினாற் காணப்படுதலானும், ஒரு திரவியத்திற்கும் அதன்குணத்திற்குமுள்ள தாதான்மிய சம்பந்தம் அவ்வாறு பிரிக்கப்படுவதன்றென்பது உப்பும் அதன்குணமான உவர்ப்புச சுவையும் வேறுவேறு தனித்து நில்லாமையின்கண் வைத்துக்கண்டு கொள்ளப்படுதலானும், ஆணவம் ஆன்மாவிற்கு ஒருகுணமாயின் அஃது அதனினின்றும் எஞ்ஞான்றும் பிரிக்கப்படாததாகல்வேண்டும். இனி, அறியாமைக்குணம் சிறிது சிறிதாகத் தேய்ந்துபோதல் மனிதப்பருவ மொவ்வொன்றினுங் காணப்படுதலால், அஃது ஆன்மாவோடு தாதான்மிய சம்பந்தமுடைத்தென்று கூறுதல் ஒருவாற்றானும் பொருந்தாதாம். ஆகவே, ஆணவம் ஒருதிரவியமாய் ஆன்மாவோடு அநாதிசையோகம் உற்றுநிற்றதென்பது பெறப்படும். இனி இவையிரண்டின் சையோகம் ஒருகாலத்து நிகழ்ந்ததெனின் அதற்கு முன் அறிவுமயமாய் நின்ற ஆன்மாவினை அது புதிதாக வந்து பற்றுதற்குக் காரணம் பெறப்படாமையானும், அங்ஙனம் பற்றுதற்கும் அஃதறிவில்லாத அசேதனப் பொருளாதலின் அது முடியாமையானும், ஆன்மாவே யதனைப்பற்றியதெனின் ஆனந்தமயமாய் விளங்கும் சிவத்தைப்பற்றாது அஃதவ்வாணவவல்லிருளைப் பற்றுதற்குப் பிறிதோர் காரணமின்மையானும், அங்ஙனம் அதனைப் பற்றுதலே ஆன்மாவினியற்கையெனின் பின் எக்காலத்தும் அதுசிவத்

தைப்பற்றுதொழிய வேண்டுமாகலானும், சிவமே அவையிரண்டனை யும் அங்ஙனம் பொருத்தியதெனின் அறியாமையினை யான்மாவின் கட் பொருத்துதல் சிவத்திற்குக் கருணையின் றென்பதுபட்டு அஃ தவன் இறைமைக்கு இழுக்காமாதலானும் பாரிசேடவளவையான் அவையிரண்டும் அநாதிசையோக முடைத்தென்பது துணியப்படும். இது,

"நெல்லிற்குமியும் நிகழ்செம்பினிற்களிம்பும்
சொல்லிற்புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மமன்றுளவாம் வள்ளலாற்பொன்வாள்
அலர்சோகஞ்செய்கமலத்தாம்."

"ஒன்றதாயநேகசத்தியுடையதாயுடனாயாதி
யன்றதாயான்மாவின் றன்னறிவொடுதொழிலையார்த்து
நின்றுபோத்திருத்துவத்தைநிகழ்த்திச்செம்பினிற்களிம்பேய்ந்
தென்றுமஞ்ஞானங்காட்டுமாணவமியைந்துநின்றே" என்னுந்
திருவாக்குகளானு மறியப்படும். இங்ஙனம் ஆன்மாவோடு அநாதிசை யோகமுற்றுநிற்கும் ஆணவமறைப்பே ஆன்மாச்சிவத்தோடு பொருந் தா திருந்தமைக்குக் காரணமாம்.

இனி, ஆன்மாவின் அறிவை ஏகதேசப்படுத்தி அணுத்தன்மைப் படுத்திவந்த ஆணவமலத்தின் வலியை இறைவனுடைய அனுக்கிரக சத்தியானது பிறவிகடோறும் ஒடுக்கிக்கொண்டு அவ்வான்மசிற் சத்தியினை முறைமுறையே விளங்கச்செய்து உபகரித்து வருகின் றது. இந்த மனிதப்பிறவியில் மாத்திரம் பிறசென்மங்களுக் கில்லாத பகுத்தறிவுகாணப்படுதலால், இப்பகுத்தறிவின் முயற்சியால் ஒரு வன் அவ்வனுக்கிரகசத்தியின் பெருந்துணையை நிலைபெறுவித்துக் கொண்டு ஆணவத்தைச்செயித்துச் சிவானந்தத்திற் றோயுமாற்றைக் காட்டுவதே சிவராஜயோகமாம். கருநெல்லிப்பழம் தன்னையுண்டா னுக்கு நரைதிரை மூப்புப்பிணி சாக்காடுகளை நீக்குமாயினும் அதன் பெருமையை யறியாது அது பழுத்துத்தொங்கும் மரத்தின்பக்கத் தே நாடோறும் வசிப்பானொருவன் அதனான் மிக்கபயன்பெறாதது போலவும், கண்ணுள்ளானுக்கு அவன் கண்ணையும் விளக்கி உலகத் துப் பொருள்களையும்விளக்கித் தோன்றும் சூரியனொளியிற் கண் ணில்லானொருவன் நாடோறும் வசிப்பினும் அவன் அதனாற் பயன்

பெருமைபோலவும் இறைவனுடைய அனுக்கிரகசத்தியும் அநாதி தொட்டுச் சீவான்மாவோடு ஒற்றித்துநிற்பினும் அச்சீவான்மா ஆணவத்தான் மறைக்கப்பட்டு அறிவின்றிக்கிடத்தலான் அஃது அவ்வனுக்கிரக சத்தியின் பெருமையையறிந்து பயன்பெறாதாயிற்று. மனிதப்பிறவியை ஒழித்து ஒழிந்த ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிர் காறுமுள்ள சருவசெந்துக்களும் அவ்வனுக்கிரகசத்தியினை அறியமாட்டாவாகலின், அவை யிழிந்த சென்மங்களென்று வகுக்கப்பட்டன. இனி மனிதப்பிறவி யொன்றுமாத்திரமேயொருவன் அவ்வனுக்கிரக சத்தியின் பெருமையுணர்ந்து அதன்வழிநின்று ஆணவத்தைச்செயித்துக்கொள்ளுதற்குச் சாதனமாவதாகலின், இவ்வரிய பிறவியின்கண் உள்ளா ரெல்லாரானும் இலேசாக வருத்தமின்றிச் செய்யப்படுவது பற்றி இது ராஜயோகமென்று வழங்கப்படுவதாயிற்று. எனவே சீவான்மாவின்கணுள்ள அறியாமையினைச் சிறிது சிறிதாக அகற்றி அதன் அறிவை விளக்கி யிறைவனுடைய ஞானசத்தியிற் றோய்விக்கும் முயற்சியே இராஜயோகமென்று பெறப்படும்.

இனி ஆன்மாக்களுக்கு அறிவை விளங்கச்செய்யும் சரீரங்கள் ஐந்தாம். அவை தூலசரீரம், சூக்குமசரீரம், குணசரீரம், கஞ்சுகசரீரம், காரணசரீரம் எனபனவாம். இவற்றிற்குப் பிரமாணம்,

"மாயையின்வயிற்றுண்மன்னிவருஞ்செயன்ஞானமிச்சை
ஏயுமக்கலாதிமூன்றுலேகதேசத்தினேய்ந்திங்
காயுமுக்குணங்களந்தக்கரணங்களாதியெல்லாங்
காயபெத்தங்களாகிக்கலந்துடனிற்குமான்மா"

"சூக்குமதேகியாகித்தூலரூபத்தின்மன்னிச்
சாக்கிரமுதலாயுள்ளவவத்தையுட்டங்கியெங்கும்
போக்கொடுவரவுமெல்லாம்புரிந்துபுண்ணியங்கள்பாவ
மாக்கியும்பலன்களெல்லாமருந்தியுநிற்குமான்மா" என்னுந்திருவாக்குகளாம். இவ்வைந்துசரீரங்களு மறித்தும் ஓர்வகையால் அன்னமயகோசம் பிராணமயகோசம் மனோமயகோசம் விஞ்ஞானமய கோசம் ஆனந்தமயகோசம் என ஐவகைப்பெயரானும் வழங்கப்பெறும். இவை முறையே பால்நுரைபோலவும் பாம்புரிபோலவும் நுண்ணிய ஆடைபோலவும் தெளிந்த பளிங்குபோலவும் தெளிவில்லாக் கற்போலவும் அதிசூக்கும சூக்குமதர சூக்கும தூல தூலதரமாய் ஒன்றினொன்று நுண்ணியதாயிருக்கும். இதற்குப் பிரமாணம்,

"மருவானந்தம்விஞ்ஞானமனோபிராணனன்னமய
முருவாந்தன்மையுண்டாய்முன்னொன்றுக்கொன்றுசூக்குமமாய்
வருமாமன்னமயம்பற்றிமாயைமுதற்காரணமாகும்
அருவாயான்மாவைங்கோசத்தாரப்புண்டவற்றினகம்புறமாம்".

முதலில் ஒரு கற்சுவரானும், அதன்பின் தெளிவான ஒருபளிங்குச் சுவரானும், அதன்பின் மிக மெல்லியது ஓர் ஆடையானும், அதன் பின் பாம்புரிபோல்வதோர் பொருளானும், அதன்பின் பால்நுரை போல்வதோர் பொருளானும் வளைக்கப்பட்ட ஒருவீட்டின் நடு வில் ஒருவன் இருந்தாற் போலக், கற்சுவர் போன்ற தூலதேக உறையும் பளிங்குச்சுவர் போன்ற சூக்குமதேக வுறையும், மெல்லாடை போன்ற குணசரீர வுறையும், பாம்புரி போன்ற கஞ்சுகசரீரவுறையும், பால்நுரைபோன்ற காரணசரீரவுறையுமாகிய ஐவகையுறையினையுங் கவித்துக்கொண்டு சீவான்மா வசிக்கின்றது. இங்ஙனம் வகுக்கப்பட்ட அன்னமயகோசமென்கிற தூலசரீரத்தின் கண்ணின்று ஆன்மாவின் அறிவு விளங்கப்பெறுகின்ற அவசரம் சாக் கிரம் என்றும், பிராணமயகோசமென்கிற சூக்குமசரீரத்தில் அத னறிவு விளங்கப்பெறுகின்ற அவசரம் சொப்பனமென்றும், மனோ மயகோசமென்கின்ற குணசரீரத்தில் அதனறிவு விளங்கப்பெறு கின்ற அவசரம் சுழுத்தியென்றும், விஞ்ஞானமயகோசமென்கிற கஞ் சுகசரீரத்தில் அதனறிவு விளங்கப்பெறுகின்ற அவசரம் துரியம்என் றும், ஆனந்தமய கோசமென்கின்ற காரணசரீரத்தில் அதனறிவு விளங்கப் பெறுகின்றஅவசரம் துரியாதீதமென்றுஞ் சொல்லப்படும். சீவான்மா ஆணவமல வயப்பட்டுத் தன்சூக்கும அறிவுத்தன்மையிழ ந்து தூலரூபமாய்நிற்றலால் அதன்அறிவைமெல்லமெல்லஎழுப்புதற் குச்சாதனமான சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும்பஞ்சஞானேந்திரியங்களும்,சத்தம் பரிசம்ரூபம் ரசம் கந்தம் என்னும் பஞ்சதன்மாத்திரைகளும்,வாக்கு பாதம் பாணி பாயு உபத் தம்என்னும் பஞ்சகன்மேந்திரியங்களும்,மனம் சித்தம்புத்தி அகங்கா ரம் என்னும் நான்கந்தக் கரணங்களும், பிராணன் அபானன் உதா னன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும் பத்துவாயுக்களும், வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம் என்னும் ஐந்து கன்மங்களும், புருடனும் ஆகிய

முப்பத்தைந்து கருவிகளும் இனிது பொருந்தப்பெற்ற தூலதேகத்தின்கண் நின்று தூலமாய் அறிவுவிளங்கப்பெறும். இங்ஙனம் தூல அறிவு விளங்குதலையே சாக்கிரம் என்றது. ஆன்மாவின் தூலரூபமான அறிவை விளக்குதற்குரிய கருவிகள் சூக்குமசரீரத்தில் இருபத்தைந்தும், குணசரீரத்தில் மூன்றும், கஞ்சுகசரீரத்தில் இரண்டும், காரணசரீரத்தில் ஒன்றுமாக முறையே ஒடுங்குதலின் அவ்வச் சரீரங்களில் நின்று சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அவத்தைகளை எய்தும்போது ஆன்மாவின் அத்தூலவறிவும் முறைமுறையே விளங்குதலொழிந்து சுத்த ஆணவசொரூபமான அஞ்ஞானமயமாய்க்கிடக்கும். இவ்வாறு சீவான்மாவின் தூலவறிவும் முறைமுறையே ஒடுங்கிச் சுத்த அஞ்ஞானமயமாய் நிற்கும் அவசரத்தினையே கீழாலவத்தை என்பர்.

இனி இறைவனுடைய அருட்சத்தியானது சுத்த சொயம்பிரகாசமாய் ஆன்மாவினையும் அவ்வான்மாவினைப்பொதிந்த ஆணவத்தினையும் அவ்வான்மாவிற்கு ஐந்துசட்டைகளான பஞ்சகோசத்தினையும் வியாபித்துக்கொண்டு பேரொளிப் பிழம்பாய் நிற்பினும் கற்சுவரினும் பளிங்குச்சுவரினும் மெல்லாடையினும் நுண்ணியபாம் புரியினும் பால்நுரையினும் வியாபிக்குஞ் சூரியனொளிபோல் அவ்வப்பொருட்டன்மையாற் றூலசூக்குமபேதப்பட்டுத் தோன்றும். இங்ஙனம்ஜடரூபமான மாயையினுஞ் சித்துரூபமான ஆன்மாவினும் அடிப்படையாய்ச் சருவவியாபியாய் நிற்கும் இவ்வருட்சத்தியினாலேயே இவையெல்லாப்பொருளும் பக்குவப்பட்டு மேன்மேல் அபிவிருத்திஎய்தி வருகின்றன. இங்ஙனம் உடன்நின்று உபகரித்து வரும் அருட்சத்தியின் சொயம்பிரகாசசொரூபம் தூலதேகத்தையொழிந்த மற்றைச்சரீரங்களில் முறைமுறையேவிளங்கித்தோன்றி வியாபகமாய் நிற்றலை யறியாத மானுடர் அந்தோ! பிறப்பு இறப்புத் துன்பசாகரத்தினின்றும் மீண்டு எவ்வாறு பிழைப்பர்! இவ்வருட்சத்தியானது ஆன்மாவைக் கவித்துக்கொண்டிருக்கும் ஆணவத்தை விலக்கி அதன்அறிவை எழுப்புதற்பொருட்டுச் சுத்தமாயையைக் கலக்கிஅது தன்னால் அவ்வான்மா ஆணவத்தில் வீணே உறங்கிக்கிடக்கவொட்டாது அதற்கு முயற்சியைத் தோற்றுவியா நிற்கின்றது. இத்திருவருட் சத்தியின் வியாபாரம் புறத்தே அண்டமாகிய சரீரத்திலும், அகத்தே பிண்டமாகிய இத்தேகத்தினுள்ளுங் காணப்படும்.

மிகவுஞ் சூக்குமமான சுத்தமாயை ஓர் இயக்கமின்றிக் கிடப்பதனை அவ்வருட்சத்தி வியாபரித்துக் கலக்கியவழி அம்மாயையில் பாம்பு மண்டலித்தாற்போலச் சுழல் சுழலாய் ஓ ரியக்கமுண்டாயிற்று. அவ் வியக்கத்தினால் பரமாணுக்களுண்டாய் அவ்வணுக்கள் ஒன்றோ டொன்று ஒட்டி இம்முறையே கட்புலனாய் விளங்கும் இப்பிரபஞ்ச பேதங்கள் எல்லாந் தோன்றின. ஐரோப்பா கண்டத்திற் பிரபல பௌதிக சாத்திர பண்டிதராய் விளங்கும் குருக்ஸ் என்பவர் அதி நுண்ணிய இயந்திர சகாயங்களால் இப்பிரபஞ்ச வுற்பத்தியினை ஆராய்ந்தபோது பூதாகாயத்திற் பாம்புமண்டலித்தாற்போன்ற இவ் வியக்கங் காணப்படுகின்றதென்றும் இவ்வியக்கமே இப்பிரபஞ்ச உற் பத்திக்குக் காரணமா மென்றும் முடிவுரைகூறினார். இங்ஙனம் இச் சுத்தமாயையிற் றோன்றும் சுழிந்த இயக்கம் இப்பிரபஞ்ச உற்பத்தி க்கு ஆதாரமாய் நிற்றலை விளக்குதற் பொருட்டே இவ்வுலகத்தை ஆதிசேடன்என்னும் பாம்புதாங்குகின்றதெனஆன்றோர் உரைப்பா ராயினர். ஆதிசேடன் என்றது சுத்தமாயையின் பரமா காயத்திற் றோன்றிய மண்டலித்த இயக்கமேயா மென்பதும், அவ்வாதிசேடன் மேல் இப்பிரபஞ்சந் தங்குமென்றது அந்த மண்டல இயக்கத்தினை ஓராதாரமாகக்கொண்டு எழுந்து இப்பிரபஞ்சம் நிலை பெறுதலையே யாமென்பதும் அறியற்பாலன.

இனி அகத்தே பிண்டமாகிய இத்தேகத்தினுள்ளும் இத்திரு வருட்சத்தி வியாபரிக்குமாறு காட்டுதும். இப்பிண்டமாகிய சரீரத் தில் எழுபத்தீராயிரம் நாடிகள் இருக்கின்றன. அவற்றுள்ளும் ஆயி ரத்தெட்டே சிறந்தன. அவற்றுள்ளும் நூற்றெட்டுச் சிறந்தன. அவற்றுள்ளும் இடை பிங்கலை சுழுமுனை காந்தாரி அத்தி சிகுவை அலம்புடை புருடன் குகு சங்கினி என்னும் பத்து நாடிகளே சிறந் தன. அவற்றுள்ளும் இடை பிங்கலை சுழுமுனை என்னும் மூன்றுமே சிறந்தன. இம்மூன்றனுள்ளும் சுழுமுனை நாடியே சிறந்ததாகும். இது மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னும் ஆறுதார சக்கரங்களையும் ஊடுருவிக்கொண்டு பிரமரந்திரம் வரையில் பரமாகாய சொரூபமாயும் சுத்ததேசோமய மாயும் விளங்கா நிற்கும். இது சரீரத்திற்குப் பிராண நிலயமாய் விளங்குவதென்றும், இந்நாடியில் ஓர் ஊசி நுனை படுமாயினும் இச் சரீரம் நிலைபெறாதழியுமென்றும், அத்தனை நுண்ணியதா யிருத்தலி

ளுலேயே இதனைத் தேகமத்தியத்தில் வைத்துச் சுற்றிலும்பலவகை யான காவலரண்கள் வகுக்கப்பட்டிருக்கின்றனவென்றும் ஆங்கிலத் தில் தேக தத்துவ சாத்திரிகளும் கூறுகிற்பர். இப்பெற்றியதான இச்சுழுமுனை நாடியில் வியாபிக்கும் பரமாகாயத்தினையே தகராகாய மென்றும், இதன்கட் புண்டரீக வீட்டில் அங்குட்ட மாத்திரையாய்ப் பேர் ஒளிப்பிழம்பாய் விளங்கும் பரமபுருடனை உபாசித்தலையே தக ரோபாசனை யென்றும் இங்ஙனந் தகர வித்தையி னியல்பை விரித் துச் சாந்தோக்கிய உபநிடதமுங் கூறுகிற்கும். இனி யிப்பரமாகாசத் தினிடையில் எழுந்தருளி யிருக்கும் பரமபுருஷனை நடராச மூர்த் தியின் தாண்டவ நடனமே அப்பரமாகாயத்தைக் கலக்கும் திருவ ருட் சத்தியின் வியாபாரமாம். அப்போ தப்பரமாகாயத்திற் றோன் றிய மண்டலித்த இயக்கமே மூலாதாரத்திற் பாம்பு மண்டலித்தாற் போலச் சுழன்று கிடக்கும் குண்டலி சத்தியாம். அவ்வாறு அந்த மண்டல இயக்கந் தோன்றுங் காலத்து உடன் றோன்றும் வாயுவே அம்மூலாதாரத்தின்கட் டோன்றும் பிராண வாயுவாம், அப்பிராண வாயு வேக இயக்கத்திற் றோன்றும் அக்கினியே அம்மூலாதாரத்தின் கட்டோன்றும் அக்கினியாம். இவ்வக்கினியே இத்தேகம் நிலை பெறுதற்கு இன்றியமையாதனொன்றாய் விளங்குகின்றது. இங்ஙன மான இப்பிண்ட சரீரத்திற்கு அக்கினி ஒரு காரணமாய், அவ்வக்கி னிக்குப் பிராணவாயு ஒருகாரணமாய், அப்பிராணவாயுவுக்கு அக் குண்டலி சத்தி ஓர்காரணமாய், அக்குண்டலி சத்திக்கு நடராசதாண் டவ நடனம் என்கின்றஅருட்சத்தி வியாபாரம் இறுதிக் கண்ணின்ற தாரக காரணமாய் அமையுமென்க. இவ்வாறு இவ்வண்டத்தும் பிண்டத்தும்வியாபரிக்கும் திருவருட் சத்தியின் வியாபாரம் ஒப்ப ஒருபெற்றித்தாய் விளங்குதலாலன்றே,

> "இடைபிங்கலை யிமவானோ டிலங்கை
> நடுநின்றமேரு நடுவாஞ் சுழுமுனை
> கடவுந் தில்லைவனங் கைகண்ட மூலம்
> படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே"

> "நாடரு நடுவினாடி நலங்கிளர் தில்லை நேர்போய்க்
> கூடுமங் கதனின் மூலைக் குறியுள ததற்குத் தென்னர்
> மாடுறு மறைகள் காணு மன்னுமம்பலமொன் றுண்டங்
> காடுது மென்று மென்று னென்னையா ளுடையவையன்"

"இடம்படு முடம்பின்மூலத் தெழுந்தநற் சுழுனைநாடி
யுடன்கிளை ரொளியேயாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசையாகி நிலைவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம்பலமதாகும்" என்னும்உண்மைத் திருவாக்குகள் எழுந்தன.

இன்னும் இப்பிண்டத்தின்கண் நடைபெறுகின்ற இவ்வருட் சத்தி வியாபாரமெல்லாம் நுண்ணறிவினரான ஆங்கில நன்மக்களாற் செய்யப்பட்ட கைக்கடிகார யந்திர அமைதியோடு ஒத்து நிற்றல் பெரிதும் வியக்கற் பாலதொன்றாம். கைக்கடிகாரயந்திரத்துள் சாவியினால் முறுக்கப்படும் சுழல்வில்லே குண்டலி சத்தியாம்; அச்சுழல் வில்லின் விரிவால் திருப்பப்படுகின்ற ஆறு சக்கரங்களுமே குண்டலி சத்தியின் இயக்கத்தால் இயங்குகின்ற மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னும் ஆறாதார சக்கரங்களுமாம்; இவ் வாறுசக்கரங்களையும் மேற்கவித்துக்கொண்டு மணி குறிக்கப்பட்டிருக்கும் வட்டச் சிறு தட்டமே மூலாதாரமுத லாறுசக்கரங்களையும் மேற்கவித்துக்கொண் டிருக்கும்பிரமரந்திரமாம்; அவ்வட்டச் சிறு தட்டத்தின் நடுவிலுள்ளமுள்ளாணியே அப்பிரமரந்திர நடுவிற் செல்லும் சுழுமுனை நாடியாம்; அம்முள்ளாணிமேல் இடையறாது சுழன்றுகொண் டிருக்கும் நிமிஷமுள்ளும் மணிமுள்ளுமே அச்சுழுமுனையைச் சார்ந்துள்ள இடை பிங்கலையில் ஓவாது இயங்கும் உசுவாச நிசுவாசங்களாம்; பன்னிரண்டுமணிக்கு அவ்விரண்டு முள்ளும் ஒன்று சேர்ந்து நிற்றலே அவ்விரண்டு நாடியினுஞ் செல்லும் அவ்வாயு சுழுமுனையிற் சென்று ஒன்றுபட்டு நிற்பதாம். இன்னும் அக்கடிகார யந்திரத்திற் சுழல் வில்லின் சுருக்க விரிவுகளே அக்கடிகார முட்கள் நடைபெறுதற்குக் காரணமாய் நிற்றல்போல, இப்பிண்ட சரீரத்தின்கட் குண்டலி சத்தியின் சுருக்க விரிவுகளே சுவாசம் நடை பெறுதற்குக் காரணமாம். இவ்வாறே அண்டத்தினும் வைத்துணரற்பாற்று. இது நிற்க.

இனி, இங்ஙனமெல்லாம் இறைவன் றிருவருட்சத்தி ஆன்மா ஆணவத்தில் மயங்கிக் கிடக்க வொட்டாது எழுப்பி அறிவு கொளுத்தற் பொருட்டு அவற்கு மிக ஒற்றுமையுடைய ஒருபிண்ட சரீரமும் அப்பிண்ட சரீரம் உலாவுதற்கோர் அண்ட சரீரமும், தோற்றுவித்து

அனுக்கிரகஞ் செய்வதாயிற்று. இவ்வாறு அனுக்கிரகிக்கப்பெற்ற சீவர்கள் தமக்கு அச்சத்தியின் கருணைப் பிரேரகத்தால் எழுப்புவிக்கப்பட்ட அறிவு முயற்சியினைத் தூலதேகத்தின்கட்சாக்கிராவத்தையிலே மாத்திரம் வைத்துக் கழித்து விடுகின்றனர். இத்தூலதேகம் ஒருகாலத்து ஓரிடத்து நிற்கும் ஏகதேச பரிமாண முடையதாகலின் இத்தூல தேகத்தின் வழிவைத்த அறிவு முயற்சிகளெல்லாம் ஒரு வரம்புக்குட்பட்ட ஏகதேச சுபாவமுடையனவாய் அழிந்து ஒழியும். இத்தூல சரீரத்தும் இத்தூல வுலகத்தும் சுத்த அறிவு மயமாய் மறைந்து விளங்கும் அவ்வருட் சத்தியின் பிரவாகத்திற் படிந்து பேரின்ப நுகர்ந்து கிடத்தலும் இவர்க்கு இல்லையாய்ப்போம். மண்ணுக்கும் பெண்ணுக்கும் பொன்னுக்குமாய் அழியும் இவ்வறிவு முயற்சியால் இத்தூல சரீரம் அழிந்து திரும்பத் திரும்பப் பிறவித் துன்பங்கள் விளையாநிற்கும். இதுபற்றியே ஆன்றோர்,

"யானேதும்பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கென்கடவேன்
வானேயும்பெறில்வேண்டேன் மண்ணாள்வான்மதித்துமிரேன்
தேனேயுமலர்க்கொன்றைச் சிவனேயெம்பெருமானெம்
மானேயுன்னருள்பெறுநாளென்றென்றேவருந்துவனே"

"காடுங்கரையுமனக்குரங்குகால்விட்டோடவதன்பிறகே
ஓடுந்தொழிலாற்பயனுளதோ ஒன்றாய்ப்பலவாயுயிர்க்குயிராய்
ஆடுங்கருணைப்பரஞ்சோதி யருளைப்பெறுதற்குஅன்புநிலை
தேடும்பருவமிதுகண்டீர் சேரவாருஞ்செகத்தீரே" என்று அருளிச்செய்ததூஉமென்க.

இனி இத்தூல தேகத்தின்கட்டோன்றும் அறிவுமுயற்சிகளைப் பரக்கவிட்டால் அறிவு முதிர்ச்சியுண்டாகாது. அம்முயற்சிகளைக் குவித்து ஒருவழியாக்குவித்தால் அறிவுமுதிர்ச்சி யுண்டாகின்றது. ஒருயாற்றிற் பெருகிவரும் பெருவெள்ளத்தை இடையிலே மறித்துக் கரைஎழுப்பினால் அது தன்போாற்றலால் அக்கரையினை யுடைத்துக்கொண்டு அப்புறம்போம். அவ்யாற்றின் இருபக்கத்தும் பலவாய்க்கால் நெடுகவெட்டுவித்து அத்தண்ணீர்ப்பெருக்கை அவற்றிற் போக்குவித்தால் அத்தண்ணீர் வேகமும் ஆற்றலும் அடங்கி அழிந்துபோகின்றன. அதுபோல, ஆன்மாவின் அறிவுமுயற்சிகள் பஞ்சேந்திரியங்களாங் கால்வாய்களின் வழிச்சென்று வீணேஅழிந்து

போகின்றன. அம்முயற்சிகளை அவ்வாறன்றி ஒருவழிப்படுத்துவே மாயின் அவையெல்லாம் ஒருங்குதிரண்டு நம் அறிவை மிகுதிப் படுத்துமென்பதில் ஐயமென்னே?

இனி இச்சரீரத்தின்கண் இயங்கும் பிராணவாயுவே இவ்வறிவு முயற்சிகட்கெல்லாங் காரணமாயிருத்தலால் அதனை வெளிவிடுதல் உள்ளிழுத்தல் உள்நிறுத்தல் என்னுங் கிரியையினையுடைய இரேசக பூரககும்பகங்களாம் பிராணாயாமத்தால் அதனைத் தன்வயப்படுத்தும் ஹடயோகாப்பியாசம் குருமுகமாகவன்றிச் செயற்பாலதன்றாக லானும், அங்ஙனஞ்செயும்வழியும் அதுபெரியதோர் வருத்தத்தினை விளைவிப்பதல்லது நுண்ணறிவு முதிர்ச்சியினைப் பயவாதாகலானும் அம்முறை கொள்ளற்பாலதன்றாம். பிராணவாயுவாகிய காரணத்தை ஒடுக்கி அம்முறையே காரியங்களான சித்தவிருத்தியினை ஒடுக்குதல் தூலமுறையாகலானும், அதுதானும் அனுபவத்திலின்றாகலானும் அதனை யொழித்துச், சூக்குமமுறையால் சித்தவிருத்தியினை யொடுக்கி அவ்வழியே பிராணவாயு முதலியவற்றை ஒடுக்கும் ராஜ யோகாப்பியாசமே யாவரானுஞ் செயற்பாலதாம் நன்முறையும் அனு பவமுமாமென்க. ஒருவன் ஒருபொருளை யாழ்ந்துசிந்திக்குங்கால் அவனையறியாமலே பிராணவாயு அவனிடத்தே ஒடுக்கமுறுகின்றது. இவ்வாறு நாடோறும் அனுபவத்திற்காணப்படுவதாய் இலேசான ராஜயோகவழி நிகழும் பிராணாயாமமே செயற்பாற்றென்பது,

"ஆரியனல்லன்குதிரையிரண்டுள
வீசிப்பிடிக்கும்விரகறிவாரில்லை
கூரியநாதன்குருவினருள்பெற்றால்
வாரிப்பிடிக்கவசப்படுந்தானே"

"வளியினைவாங்கிவயத்திலடக்கிற்
பளிங்கொத்துக்காயம்பழுக்கினும்பிஞ்சாந்
தெளியக்குருவின்றிருவருள்பெற்றால்
வளியினும்வேட்டுவெளியனுமாமே"

"ஏற்றியிறக்கியிருகாலும்பூரிக்குங்
காற்றைப்பிடிக்குங்கணக்கறிவாரில்லை
காற்றைப்பிடிக்குங்கணக்கறிவாளர்க்குக்
கூற்றையுதைக்குங்குறியதுவாமே" என் றதனை உண்மை

ளர்ந்தோர் அருளிச்செய்தமையால் இனிது விளங்கும். இவ்வாறு இத்தூலதேகத்தின்கட்டோன்றும் அறிவை ஒருவழி நிறுத்தவே அதற்குக்காரணமான பிராணவாயுவும் ஒருவழிநிற்குமாகலின் அருட்சத்தியின் வியாபாரத்தாற்றோன்றும் அம்முயற்சிகளால் ஆன்மாவுக்கு அறிவுமிகத்தோன்றி ஆணவத்தைச் செயித்துக்கொள்ளுமென்க. அங்ஙனஞ் செயித்தவழி ஆன்மாவின் ஞானப்பிரகாசத்திற்குத் தூலதேகமுதலியவற்றி லமைந்த கருவிகளின் சகாயம் ஒருசிறிதும் வேண்டப்படாவாம். அது சருவவியாபியாய் விளங்கும் அருட்சத்தியின் பரஞானப்பிரகாசத்தினைப் பெற்றுத் தானுஞ்சருவ வியாபியாய் விளங்கும் என்க.

இனித் தூல சரீரத்தில் அறிவு முயற்சிகள் பலதிறப்பட்டுச் செல்கின்றனவாகலின் அவை தம்மை யெல்லாம் ஒடுக்கிப் பரிசுத்தமான ஒரு பொருளிலே லட்சியம் வைத்தல் வேண்டும். இங்ஙனம் பலவகை யவயவங்களினும் பல திறப்பட்டு நிகழும் முயற்சிகளை யெல்லாம் ஒரு பரிசுத்த உருவில் நிறுத்துங் குறிப்பினையே திருவங்கமாலையில் அப்பர் சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளினார். இவை தாம் யோகத்திற்சரியை யோகத்திற் கிரியை யெனப் பெயர்பெறும். இவ்வப்பியாசம் வழுவாமல் அனுட்டிக்கப் படுமாயின் தூலதேகத்தின்கட் பகிர்முகப்பட்டுப் புறத்தே செல்கின்ற அறிவு அகத்தே அந்தர் முகப்பட்டுக் குவிந்து விளங்கும்; அங்ஙனம் விளங்குமாயின் மறதி முதலான ஆணவ காரியங்கள் அகலுகின்றன. எங்கெந்தப் பொருளில் மனம் அழுந்தி நிற்கவில்லையோ அந்தந்தப் பொருட்சொரூபம் அறியப்படாமையின் அவை மறக்கப்படுகின்றன. எங்கெங்கு மனம் அழுந்துகின்றதோ அங்கெல்லாம் அப்பொருட் சொரூபம் இனிது விளங்கல் அனுபவத்தில் அறியப்படுகின்றமையின், அகத்தும் ஒரு திவ்விய வஸ்துவில் லட்சியம் வைக்க வைக்க அப்பொருள் இனிது புலப்படும் என்க.

இனி இவ்வாறு தூல சரீர வழிவைத்த அறிவு முயற்சிகள் குவிந்து ஒருவழிநின்ற மாத்திரையினாலே, இதுகாறுஞ் சொப்பனாவத்தையிற் சூக்கும சரீரத்தின்கண் நின்று அனுபவித்த அனுபவங்கள் மறக்கப்பட்டது போலாகாமல் நன்கு விளங்கித் தோன்றும்; கற்சுவர் போன்ற தூல தேகத்தில் விளங்கித் தோன்றாது மறைவாய்

நின்ற அனுக்கிரக சத்தியானது தெளிவான பளிங்குச் சுவர்போன்ற சூக்கும சரீரத்தில் புலப்பட்டுத் தோன்றாநிற்கும்; இதுகாறுந் தூல சரீரத்தின் கண்ணவான ஏகதேச கரணங்களின் உதவியை வேண்டி நின்ற ஆன்மாவானது அவற்றான் விளங்கிய தூலவறிவை அகற்றிச் சூக்கும அறிவு எய்துகின்றமையின் அச்சூக்கும அறிவின்கட் பிரதி பலன மாதற்குரிய அத்திருவருட் சத்தியின் பிரகாசத்தால் அச்சூக்கும சரீரத்தின் நின்றவாறே பலதேசத்தின்கண் நிகழ்வனவும் பிறவும் அறிகுவன். இச்சூக்கும சரீரம் பௌதிகாகாயத்தில் இயங்க வல்லதாகலின் அவன் வேண்டுமிடமெல்லாம் அது கணத்திலே இயங்கும். இச்சூக்கும சரீரத்தில் தன்னுணர்வு மிகப் பெற்றோனுக்கு, இத்தூல சரீரம் பழுதாய்ப்போன பின் கழிக்கப்படும் ஒருகஞ்சுகம்போல் வருத்தமின்றிக் கழிக்கப்படுவதேயாம். அவன் வேண்டின் புதியவோர் கஞ்சுகம்போன்ற புதுவுடம்பும் எய்துவான். இன்னும் அச்சூக்கும சரீரத்தின் நின்றவாறே இவ்வுலகத்தி லுள்ளார்க்கு உற்பாதங்கள் முதலியவற்றை அறிவிக்கவேண்டின் அவன் மற்றொருவனுடம்பில் ஆவேசித்து அவர்க்கு அவற்றை அறிவுறுத்துவன். தூல தேகத்தில் நின்ற காலத்து அறிவு முயற்சிகளை ஒடுக்காது கழித்து அத்தூல தேகத்தையுங் கழித்து உணர்வு சிறிதுமின்றிச் சூக்குமதேகத்தில் அந்தரத்தே இயங்கும் பேய் கூளி முதலிய வற்றிற்கும் அவன் சகாயம் புரியவேண்டின் அங்ஙனமே செய்து அவற்றையெல்லாம் நற்பிறவியிலுய்க்க வல்லனாவன். இவ்வாறு இச் சூக்குமசரீரத்தில் தன்னுணர்வு மிகப்பெற்றோன் உலகிற் கியற்றும் நலங்கள் அளவிறந்தனவாம்.

இனி இச்சூக்கும சரீரத்தினும் அறிவு முயற்சிகள் பலதிறப்படுதற்குரிய கருவிகள் பல விருத்தலால் அவற்றையும் ஒடுக்கித் தன் அறிவையும் ஆண்டு ஒருவழி நிறுத்திச் சிவராஜயோகம் அப்பியசிக்கவே அவன் அறிவு இன்னும் நுணுகி விளங்குமாகலின் அதனாற்றான் உணர்வு மிகப்பெற்று அச்சூக்கும சரீரத்தின்கண் உள்ள கருவிகளின் உதவி வேண்டானாய் அச்சூக்குமத்தின் மேற்பட்ட குண சரீரத்தின்கண் இயங்க வல்லனாவன். இக்குண சரீரம் இப்பௌதிகாகாயத்தின்மேற் கவிந்து வியாபிக்கும் பூதாகாயசரீரத்தில் இயங்குவதாய் மெல்லாடை போல்வதாகலின் ஆண்டதிற் பிரதிபலனமாம் அருட்சத்தியின் பிரகாசம் இன்னும் அதிகமாய் மிக்குத் தோன்றா

நிற்கும். அவ்வருட்சத்தியின் பிரகாசத்தே படிதற்குரிய அறிவு முதிர்ச்சியுடையனானோன் இப்பௌதிகாகாயத்திற் றோன்றுவனவும், அதற்கு மேற்பட்ட சாரமான பரமாகாயத்திற் றோன்றுவனவும் ஒருங்கறிய வல்லனாவான் என்க.

இனி இக்குண சரீரத்திலும் ஆன்ம அறிவு முயற்சிகள் முத்திறப்படுதற்குரிய மூன்று கருவிக ளிருத்தலின் அவற்றையும் ஒடுக்கி அதனான் அறிவு முறுகித் தன்னுணர்வு மிகப்பெற்றோன் அக்குண சரீரத்தின் உதவியை வேண்டானாய், அதற்குமேற் சூக்குமதரமாய் விளங்கும் கஞ்சுக சரீரத்தில் இயங்க வல்லனாவன். இக்கஞ்சுக சரீரம் பௌதிகா காயத்தினையும் அதனைக் கவிந்த பரமாகாயத்தினையும் தன்னுள் ளடக்கி அவற்றின்மேல் வியாபிக்கும் பரமாம்பரத்தில் இயங்க வல்லதாய்ப் பாம்புரிபோல்வதாகலின் அதன்கண் வியாபிக்கும் திருவருட்சத்தி இன்னும் விளக்கமாய்ப் புலப்பட்டுத் தோன்று நிற்கும். அவ்வருட் சத்தியிற் படிந்த அறிவுடையோன் பூதாகாய பரமாகாய பரமாம்பரங்களில் நிகழும் அரும்பே ரற்புதங்களெல்லாம் ஒருங்கறிவன் என்க.

இனி இக்கஞ்சுக சரீரத்தும் ஆன்ம அறிவு முயற்சிகள் இரு திறப்படுதற்குரிய இருவேறு கருவிகள் இருத்தலின் அவற்றையும் ஒடுக்கி அதனான் அறிவு மேன்முறுகப் பெற்றுக் கஞ்சுக சரீர வுதவியும் வேண்டானாய் அதன்மேற்பட்ட காரண சரீரத்தின்கண் இயங்க வல்லனாவன். இக்காரண சரீரம் பௌதிகாகாயத்தினையும் அதன்மேற்பட்ட பரமாகாயத்தினையும் அதன்மேற்பட்ட பரமாம்பரத்தினையும் வியாபித்துக்கொண்டு அவற்றின் மேல்விளங்குவதாய்ப் பாம்புரை போல அதிசூக்குமமாய் நிற்கும் சுத்தமாயாம்பரத்தில் இயங்கவல்லதாகலானும், அதில் அவ்வருட்சத்தி சொல்லொணாப்பிரகாசத்தோடும் விரிந்துபுலப்பட்டு விளங்குதலானும் அதன்கட்படிந்தஅறிவினையுடையோன் பூதாகாய பரமாகாயபரமாம்பர சுத்தமாயாம்பரங்களில் நிகழும் அற்புதங்களெல்லாம் அறிந்து ஆனந்த மெய்தற் குரியானாவனென்க.

இனிக் காரண சரீரமும் சுத்தமாயையிற் றிரண்ட அசேதனப் பொருளாகலின் ஆண்டதன் உதவியை வேண்டுவோன் அறிவும் சிறிதசேதனமாய்த் தடக்குறுமாகலின் அதனோடுண்டாம் தொடர்ச்சியையும் பற்றறக்கழித்து நான் எனதென்னும் உணர்சசி முழுதும்

அற்றுக் காண்பானுங் காணப்படுபொருளுங் காட்சியுமாகிய எல்லாம் சுத்த சித்துருவாய்ச் சருவ வியாபக ஆனந்தப் பொருளாய் விளங்குஞ் சுத்த சிவசத்தி மயமாய் விளங்கப்பெறுவன். இந்தச் சுத்த ஞானசத்தி வியாபகமே திருச்சிற்றம்பலம் என்றும், சிதாகாயமென்றும், சிதம்பரமென்றும் வழங்கப்படும். இச்சிதாகாயமானது பூதாகாய பரமாகாய பரமாம்பர சுத்தமாயாம்பரங்களாகியவனைத்தையும் தன் வியாபகத்துள்ளடக்கி, அவற்றைப்போல் அசேதனப் பொருளாகாமல் சுத்தஞானமயமாய் விளங்குதலின் இதன்கட் படிந்தோன் எய்தும் அறிவும் இன்பமும் இத்துணையென உரைக்கப்படாவெனக. இதனியல்பை உண்மையான் உணர்ந்த பட்டினத்துப்பிள்ளையார்

"அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தையைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப்பாலூறலுண்டேகிழ்ந்திருக்க
எட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே" என்றும்

"பூதங்களற்றுப்பொறியற்றுச்சாரைம்புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப்போராசைதானற்றுப்பின்முனற்றுக்
காதங்கரணங்களுமற்றவானந்தக்காட்சியிலே
ஏதங்களைந்திருப்பேனிறைவாகச்சியேகம்பனே" என்றும்

"பூதமுங்கரணம்பொறிகளைப்புலனும்பொருந்தியகுணங்களோர்
நாதமுங்கடந்தவெளியிலேநீயுநானுமாய்நிற்குநாளுளதோ [மூன்றும்
வாதமுஞ்சமயபேதமுங்கடந்தமனோலயவின்பசாகரனே
ஏதுமொன்றறியேன்யாதுநின்செயலேயிறைவனேயேகநாயகனே"
என்றும், அருளிச்செய்தமையானும்உயத்துணரப்படும்.இன்னும்இது
[துவாய்

"உள்ளதாய்விளங்குமொருபெருவெளிமேலுள்ளதாய்முற்றுமுள்ள
நள்ளதாய்எனதாய்நானதாய்த்தனதாய்நவிற்றருந்தானதாயின்ன
வின்னொளுவப்பாலப்படிக்கப்பால்வெறுவெளிசிவவனுபவமென்
றுள்ளுறவளித்தஞானசம்பந்தவுத்தமசுத்தசற்குருவே" என்று
ஸ்ரீமது. இராமலிங்கசுவாமிகள் கூறியவாற்றானும் விளங்கும்.

இங்ஙனம் அன்னமயகோசம் பிராணமயகோசம் மனோமயகோசம் விஞ்ஞானமயகோசம் ஆனந்தமயகோசம் முதலியவற்றிற் கேவல சாக்கிரம் கேவலசொப்பனம் கேவலசுழுத்தி கேவலதுரியம் கேவல

துரியாதீதம் எனும் பஞ்சாவத்தைகளை எய்தி முறை முறையே அறிவு சுருங்கி ஆன்மா அஞ்ஞானமயமாய் நிற்கும் கேவலாவத்தை போலாது, அவ்வச்சரீரங்களில் பிரகாசிக்கும் திருவருட்சத்திவழி நின்று மேன்மேல் அறிவு முறுகப்பெறும் அவசரங்கள் நின்மலசாக்கிரம் நின்மலசொப்பனம் நின்மல சுழுத்தி நின்மலதுரியம் நின்மல துரியாதீதம் எனப்பெயர்பெற நிற்கும் இங்ஙனம் அருள்வயப் பட்டுநின்று காண்டலே சிவராஜ யோகாப்பியாசம் எனப் பெயர் பெறும். இவ்வுண்மை தாயுமானச் செல்வனார்

"கண்ணாடிபோலவெல்லாங்காட்டுந் திருவருளை
யுண்ணாடியையாவுருகவைத்தலெக்காலமோ" எனவும்

"கைவிளக்கின்பின்னேபோய்க்காண்பார்போன்மெய்ஞ்ஞான
மெய்விளக்கின்பின்னேபோய்மெய்காண்பதெந்நாளோ"
[எனவும்

"அருளாலெவையும்பாரென்றானத்தையறியாதேசுட்டியென்
னறிவாலேபார்த்தேன்
இருளானபொருள்கண்டதல்லாற்கண்டவென்னையுங்கண்
டிலனென்னேடிதோழி" எனவும் அருளிச்செய்த

திருவாக்குகளானும் அறியப்படும். இவ்வருளில் முழுகிக் கிடப்பார்க்குத்தோன்றும் அற்புத ஆனந்தக்காட்சி ஒருவாற்றானும் உரைக்க வாராமையானன்றே

"ஆணி பொன்னம்பலத்தேகண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி" என்ற திருவாக்கும் எழுந்தது.

ஹடயோகாப்பியாசத்தில் மூர்ச்சையுற்று ஒரு சிறிது விளங்கும் இத்திருவருள் உணர்ச்சியினையே ஆங்கிலத்தில் மனோதத்துவ சாத்திரியாரான மையர்ஸ் என்பவர் 'அடிப்படை யுணர்வு' என்பர்.

என்று பேர்கூறியவாற்றால் பொருந்துதல் என்னும் பொருளைத்தரும் யோகம் என்பதனாற் பெறப்படுவது ஆனந்தமேயாமென்பதும், அவ்வானந்த வெழுச்சிக்கு இரண்டான்ம சையோகம் இன்றியமையாது வேண்டப்படுமா மென்பதும், அறிவில்லாத அசேதனப் பொருட் சையோகத்தானும் ஆன்மாவின்கண் ஆனந்தம் நிகழக்காண்டலின் ஆணவமே ஆன்மாக்களுக்கு அதனை விளைவிக்குமென்றல் சடப்பொருட்சையோகத்தான் உண்டாம் ஏகதேச வின்பம் விரை

வில் அழியுந் தன்மைத்தாம் என்னும் முறையால் வைத்து மறுக்கப் படுமென்பதும், அசேதனப் பொருட் சையோகத்தாற் றோன்று மின்பமெல்லாம் சேதனப் பொருட் சையோகத்தின்கண் நிகழும் இன்பத்திற்கு நிகராகாமையின் அவற்றினும் இதுவே எல்லாராலும் சிறந்தெடுத்து நாடோறும் பாராட்டப்படுகின்ற தென்பதும், 'இன் பங்கொடுத்தலிறை யித்தை விளைவித்தன்மலம்' என்னும் திருவாக் குப் பேரின்பானுபவத்தைப் பயப்பதற்கு ஆணவம் ஓர்உபகரணமாய் நிற்குமம் மாத்திரையே யுணர்த்த வெழுந்த தென்பதும், 'யோகம்' என்பதற்கு இங்ஙனம் பொருள்கொள்ளாமல் பிரமமே பிராந்திஞா னத்தாற் சரீரங்கடோறும் பிரதிபலிக்குஞ் சீவஉபாதியினைக் கழித் துத் தன்னைப் பிரமமாகக் காண்டலே அதன் பொருளாம் என்று கேவலாத்துவித வகைபற்றிக் கூறுவது சருவஞ்ஞத்துவ சருவகர்த் திருத்துவ குணங்களுடைய பிரமத்திற்குக் குற்றமாய் முடிதலின் அதுபொருந்தாதென்பதும், இங்ஙனமாகலின் 'யோகம்' என்னும் அச்சொல்லிற்குச் சீவான்ம பரமான்ம ஒருமைப் பாடென்றே முடிக் கப்படுமென்பதும், இங்ஙனம் பெறப்பட்ட சீவான்மாவும் பரமான் மாவும் தனித்தனி அறிவுப் பொருள்களாயினும் ஒன்று அநாதியே பாசவயப்பட்டு அறிவு மயங்கிக் கிடப்ப மற்றைப் பரமான்மா இயற் கையே பேர் அறிவுப் பிழம்பாய் விளங்குவ தென்பதும், பரமான்ம சைதன்னியம் தனக்கொரு சலனமுமின்றி இருந்தாங் கிருப்பச் சீவான்மாவே பலவகைச் சலனமுற்று ஆணவத்தை உதறி அதனைப் பொருந்து மென்பதும், இங்ஙனம் இருந்து அதனைப் பொருந்துவது சிவானந்தப் பேற்றின் பொருட்டேயாமென்பதும், ஆனந்தம் ஞான முதிர்ச்சியிற் றோன்றும் நேசகுணமாகத் துக்கமெனப்படுவது அஞ் ஞான முதிர்ச்சியிற் றோன்றும் விரோதகுணமாமென்பதும், ஆனந் தம் ஞான முதிர்ச்சியிற் றோன்றுவதாதல் அவ்வானந்தத்தோடு ஒரு மைப்பாடுடைய ஈசுரனது சருவஞ்ஞத்துவம் யாண்டும் விளங்குதலை அறியுமாற்றால் புலப்படுதல் பற்றித் தெளியப்படு மென்பதும், ஈசு ரனை யறியும் பதி ஞானத்தை யொழித்து ஒழிந்த பாசஞான பசுஞா னங்களாற் றோன்று மின்பம் இன்பமாகமாட்டா தென்பதும், இப் பதிஞானந்தானும் ஆன்மாக்களுக்கு இயற்கையாகவே எழுகின்ற தென்பதும், இப்பதிஞானமும் அதன் வழித்தோன்றும் பிரமானந்த வேட்கையும் ஒரே தன்மையாக விளங்க வொட்டாது ஆன்மாக்களு

க்கு இயற்கையேயுள்ள ஆணவமலம் இடையிடையே மறிக்கின்ற தென்பதும், இவ்வாணவம் எல்லார்க்கு முண்டாதல் சாக்கிரத்தில் நிகழும் அறியாமை மயக்கம் மறதி முதலிய அதன் காரியங்களாற் காணப்படுமென்பதும், இவ்வாணவம் ஐக்கவாதசைவர் கூறுமாறு ஞான சூனியமும் பாடாணவாதசைவர் கூறுமாறு குணப்பொருளு மாகமாட்டா தென்பதும், இதன் சையோகம் வேறொரு வாற்றாற் பெறப்படாமையின் அஃதான்மாவின்கண் அநாதியேயுள்ளதோர்குணிப் பொருளாமென்பதும், இவ்வாணவ குணத்தின் வலியை அடக்கிச் சீவனைச் சிவத்தோடு ஒற்றுமைப்படுத்துவதாகிய யோகாப்பியாசமே சிவராஜயோகமாமென்பதும், சீவனைப் பக்குவப்படுத்தி ஆணவத்தை நீக்கி வருகின்ற இறைவனருட் சத்தியே அறிவும் ஆனந்தமுமாய் நின்று ஆன்மாவுக்குப் பஞ்சகஞ்சுகவாயிலாய் அவற்றைச் சிறிது சிறிதாய் நுகர்வித்துப் பின் "அக்கஞ்சுகமெல்லாம் முழுதும் உருவி அதனைத் தன் வயப்படுத்திக்கொள்ளு மென்பதும், அங்ஙனம் உப கரித்து வருகின்ற திருவருட்சத்தியி னியல்பை அறிந்து அதனுட் படிந்து பேரின்பானுபவ மெய்துதலே சிவராஜயோகப் பயனு மென் பதும் இனிது விளக்கப்பட்டன. ஓம்சிவாயநம: ஓம்சிவாயநம: ஓம் சிவாயநம:

---

உ

திருச்சிற்றம்பலம்.

# ஹடயோக பிராணாயாமம்.



ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே.

'பிராணாயாமம்' என்னுஞ் சொல் பிராண ஆயாமம் என்று பிரிக்கப்பட்டு நின்று பிராணனைத் தடுத்தல் என்று பொருள் உணர்த்தும். 'பிராணன்' என்பது சத்து, சாரம், வலிமை என்னும் பொருள்களைத் தருவதொன்றும். வலியில்லாதவனை நோக்கி உலகத்தார் 'இவன் பிராணன் இல்லாதவன்' என்று கூறக் காண்டலால் அச்சொல்லுக்கு அப்பொருள் உண்டென்பது துணியப்படும். உயிர்கள் நடைபெறுவதற்குப் பிராண சக்தி இன்றியமையாது வேண்டப்படுதலால், இப்பிராணனையும் உயிரையும் ஒற்றுமைப்படுத்தி வழங்குதலும் 'இவன் பிராணன் போயிற்று' 'இவனுக்குப் பிராணன் வந்தது' என்றற் றொடக்கத்து வாக்கியங்களில் இனிது காணக் கிடக்கின்றது. இன்னும் உலகத்தில் உண்டாம் எல்லா அசைவுகளுக்கும் எல்லா இயக்கங்களுக்கும் இப்பிராண சக்தியின் உபகாரம் மிகவும் அவசிய முடைத்தாய் நிற்றலாலும், இத்தன்மையவான இயக்கங்கள் பெரும்பாலனவற்றிற்குக் காற்று ஒரு சககாரியா யிருத்தலாலும் இப்பிராண சக்தி காற்றோடு சேர்த்துப் 'பிராணவாயு' வென்றும் வழங்கப்படும். ஆகவே, அறிவுள்ள சேதனப்

பிரபஞ்சத்தின் இயக்கத்திற்கும் அறிவில்லாத அசேதனப் பிரபஞ்சத்தின் இயக்கத்திற்கும் இப்பிராண சக்தி ஒற்றுமையாய் உடன் நின்று உபகரிக்கும் தன்மை இனிதுபெறப்படும் என்க.

இனிச் சேதனுசேதனப் பிரபஞ்ச காரணமாய்விளங்கும் இப்பிராண சக்தியானது இப்பிரபஞ்ச நிமித்தகாரணனுன முழுமுதற் கடவுள் என்னும் திரவியத்தைநிலையமாய்க் கொண்டு நிற்பதாகும். 'சக்தி' என்பது திரவியம் வேறு தான் வேறு எனத் தனித்து நிற்பதன்றி அத்திரவியத்தோடு ஒன்ருய் நிற்பதாம். இதற்குப்

"பொன்னிறங் கட்டியினும் பூணினும் நின்ருற்போல்
அந்நிற மண்ணலு மம்பிகையும்—செந்நிறத்தன்
எந்நிறத்த னாயிருப்ப னெங்கள் சிவபதியும்
அந்நிறத்த னாயிருப்ப னாங்கு" என்ற திருக்களிற்றுப்

படியார் திருவாக்குப் பிரமாணமாம். காணவுங் கருதவும் உரைக்கவும்படாத முதல்வனுடைய நிலை அம்முதல்வன் பால் நின்றும் புலப்பட்டுத் தோன்றி இப்பிரபஞ்சமெல்லாம் ஒழிவின்றி இயங்குமாறு செய்யும் இப்பிராண சக்தி வாயிலாகவே அறியப்படுவதாகும். சக்தி அறியப்படவே அச்சக்தியின் வேறன்ருய் நிற்கும் முழுமுதற் கடவுளும் அறியப்பட்டதென்றே துணிபு.

இனி இப்பிராண சக்தியானது ஒன்ரோடொன்றைத் திரட்டிக் கூட்டுதலாகிய சிருஷ்டியும், அங்ஙனங் கூட்டியதனை நிலைப்பித்தலாகிய ஸ்திதியும், பின் நிலைப்பித்தவதனை வேறு வேறு பிரித்து விடுதலாகிய சங்காரமும் என்னும் முத்தொழிலை நடைபெறுவிக்கு மிடத்தெல்லாம் சுழல் சுழலான ஓரற்புத அசைவினை உண்டுபண்ணுகின்றதென இக்காலத்து அதியற்புத ஆராய்ச்சிசெய்யும் பௌதிகசாத்திரபண்டிதர் இனிது விளக்கிப் போதருகின்ருர்.

இனி இச்சுழல் சுழலான இயக்கத்தினைத் தோற்று விப்பதே குண்டலிசக்தி யென்று நம்முடைய சைவசித் தாந்த நூல்களிற் கூறப்பட்டுக் கிடத்தலால் இப்பிராண சக்தி குண்டலி சக்தி என்னும் வேறுவேறு பெயர்கள் எல்லாம்வல்ல இறைவன் அருட்சத்திக்கே பெயராமென் பது இனிது பெறப்படுகின்றது.

இத்தன்மைத்தாகிய இப்பிராணசத்தியானது அண்ட பிண்டங்களைச் செட்டித்து முதற்கால் சருவ ஆன்மாக்க ளுக்கும் அறிவை விளக்கி மிகுதியாய் நிகழச்செய்து அவ் வழியே அவ்வான்மாக்களை மேன்மேல் எழச்செய்து தத் துவங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்கும் சிவானந் தப் பெருந்திவ்விய சாகரத்திற் படிந்து அவ்வானந்தசத்தி மயமாயே நிலைபெற்று நிற்கும்படி செய்து போதருகின் றது. இங்ஙனம் ஆன்மாக்கள் உயிர்க்குயிராய் நின்று உப கரித்துவரும் பிராணசக்தியின் உபகாரத்தை நன்கறிந்து அவ்வுபகாரம் தம்மால் வீணே செலவு செய்யப்படாமல் அதனைத் தடுத்து ஆன்மாக்கள் தமக்கே உரிமையாக்கிக் கொள்ளும் முறையே பிராணாயாமம் என்று சொலப்படு வதாம். ஆன்மாக்கள் முழுமுதற் கடவுளைச் சென்றணுகி அதனின் வேறற நிற்றலே யோகமா மென்பது,

“இந்திய விடயந் தன்னொடு சிவனை யோகமென் பார் சிலர் சிலர்தாந், சிந்தனை சிவத்தோ டடைதல்நல் யோக மென்பரீ தன்றியுஞ் சிலர்தாம், முந்திய பிராண னபான னோ டடைத லென்பரிம் மொழிந்தவை யனைத்தும், அந்த மில்யோக மல்ல நற்சிவன் பாதத்துடனடைவதே யோகம்”. என்னுந் திருவாக்கால் துணியப்படும். எனவே, இப்பெற் றித்தாகிய யோகத்திற்குப் பிராணாயாமம் என்பது இன்றி யமையாத அங்கமாம்.

இனி ஒருவன் தன்னிடத்தமைந்த பிராண சத்தியை மனம் வாக்குக் காயம் என்னுந் திரிகரணங்களாலும் தான் வேண்டியவாறெல்லாஞ் சென்று பல திறத்தாற் செலவு செய்து அப்பிராண சக்தியினாற் பெறும் அரும் பெரும் பயனை இழந்துபோகாமல், அத்திரிகரணச்செயல்களையும் இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னும் எண்வகைப்பட்டமுறையால் தடுத்துத் தனக்கே சுதந்தரமாக்கி வலிவுறுமாகலின் இவ்யோகாங்கங்கள் எட்டும் பிராணாயாமம்என்றுஒரு சொல்லால் வழங்கல் இழுக்காதென்க. ஆயினும், அவை எட்டும் ஒன்றினொன்று வேறான கிரியைகள் பலஉடையனவாயிருத்தலால் அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெயரான் வழங்கப்பட்டன. இவ்வெண்வகை யோகாங்கங்களுள் பிராணாயாமத்தை மாத்திரம் பிராணாயாமம் என்று சிறப்பித்துக் கூறியவாறென்னையெனின்;—உலகத்தில் ஆன்மாக்கள் சரீரத்தில் இயங்குவதை அறிதற்குச் சுவாசஓட்டம் ஓர் இன்றியமையாத குறியா யிருத்தலானும், இச்சுவாசவாயு விடத்தே பிராணசக்தியின் செயல் புலப்பட்டு எல்லார்க்கும் எளிதில் விளங்கிக் கிடத்தலானும், அதுபற்றியே கற்றாரும் மற்றாரும் அதனைப் பிராணவாயுவென்று வழங்கக் காண்டலானும், யோகத்தினுள்ளும் இப்பிராணவாயுவைத் தடுக்கும் முயற்சியே இன்றியமையாத ஓர்அங்கமா யிருத்தலானும் பிராணாயாமம் அங்ஙனம் விசேடித்து வழங்கப்படுவ தாயிற்றென்க.

இனி இவ்வெண்வகை யோகாங்கங்களும் ஆன்மாக்களின் திரிகரணச்செயல்களைஒடுக்குமாறியாங்ஙனமெனில்? ஆன்மாக்களெல்லாம் ஒன்றை விரும்புதலாகிய இச்சையும் ஒன்றை அறிதலாகிய ஞானமும் ஒன்றைச் செய்தலாகிய

கிரியையும் என்னும் மூன்று சக்தியும் இதற்கையிலே உடையனவாகும். இது

"சீவனுமிச்சாஞானக்கிரியையாற்சிவனையொப்பன்
ஆவனென்றிடிலநாதிமலமிவற்றினைமறைக்குங்
காவலன் இவன்செய்கன்மத்தளவினிற்கொடுப்பக்காண்பன்
பாவியாம்புத்திமுத்திப்பயன்கொளும்பண்பிற்றாகும்"

என்னுஞ் சிவஞான சித்தித் திருவாக்கான் அறியப்படும். இவ்விச்சாஞானக் கிரியைகள் ஆன்மாக்கள் மாட்டு அநாதிதொட்டே உள்ளனவாயினும், கண் தானொன்றைப் பார்க்கும் ஆற்றலுடையதாய் நிற்பினும் தன் ஆற்றலை நிகழச் செய்விக்கின்ற சூரியனொளியை அஃது அவசியம் வேண்டி நிற்றல்போல அவை அவ்விச்சாஞானக் கிரியைகளைத் தம் மாட்டு விளங்கச் செய்விக்கின்ற பிராண சக்தியை இன்றியமையாது வேண்டிநிற்குமென்பதூஉம் இத்திருவாக்கான் வலியுறுத்தப்பட்டது. ஆகவே, தம் இச்சாஞானக்கிரியைகளுடன் ஒருமைப்பட்டு நின்று எல்லாம் வல்ல பிராண சக்தியானது அவற்றை எழுப்புவிக்குங்கால், அவை மனம் வாக்குக் காயம் என்னும் திரிகரணங்களின் வழியே செல்கின்றன. இவ்வண்ணம் இயங்காநின்ற மனம் வாக்குக் காயங்களையும் அவை வாயிலாய் நடைபெறும் இச்சாஞானக் கிரியைகளையும் ஒருவன் இடைவிடாது வீணே செலவுசெய்குவனாயின் இவை தம்மை நடைபெறுவித்து உபகரிக்கின்ற பிராண சக்தியின் உபகாரச் செயல் இவனுக்குச் சுதந்தரமன்றாய் ஒழியும். இவன் அதனைச் சுதந்தரப்படுத்திக் கொள்ளுங்காறும் இடையறாது வரும் பிறப்பிறப்புத் துன்பங்களிற் கிடந்து உழலுவன். ஆகவே, மனம் வாக்குக் காயம் என்னும் மூவகைக் கருவிகளின் வழியே நடைபெறுகின்ற ஆன்ம இச்சாஞானக் கிரியைகளை அடக்கும் யோகாங்க முறையே இயமம், நியமம் என்று வகுக்கப்பட்

டன. பிற உயிர்களைக்கொல்லுதலும், நடவாததொன்றைப் பிறர்க்குத் தீமை பயப்பச் சொல்லுதலும், பிறர் பொருளை அபகரித்தலும், அபகரிக்க எண்ணுதலும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளானும் வரைதுறையின்றி விரும்பப்பட்ட பொருள்களைப் பெற இச்சித்தலும் தெய்வத்தன்மை பொருந்திய பிராண சக்தியின் உபகாரத்தை வீணாக்குதலாய் முடியுமாதலின் அவைதம்மை அங்ஙனம் நடக்க வொட்டாமல் தடுக்கும் கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, வெஃகாமை, ஐம்பொறியடக்கல் என்னும் ஐந்து அறங்களும் இயமம் என்று வகுக்கப்பட்டன. தவம், தூய்மை, தத்துவநூலுணர்ச்சி, மனம் உவந்திருத்தல், தெய்வவழிபாடு என்னும் ஐந்தும் நியமம் என்று வகுக்கப்பட்டன.

இனிச்சரீரத்தின் வழிச்செல்லுகின்ற நடத்தல் இருத்தல் கிடத்தல் எழுதல் வளைதல் என்னும் ஐவகைக் கிரியைகளும் தாம்வேண்டியவாறு நிகழச்செய்வாராயின் ஆன்மாக்கள் பிராண சக்தியின் உபகாரத்தைப் பாதுகாக்கின்றார் ஆவர். ஆகவே, தாம் மேற்கொண்ட நல்லொழுக்கமுறைக்கேற்பத் தேகச் செய்கையைத் திருத்திக் கொள்ளும் உபாயம் ஆசனம் என்னும் யோகாங்கத்தின்பாற்படும். மற்றுத் தாம் மேற்கொண்ட பெருஞ் செயலான அமைதியேயாதலின், அம்மன அமைதிக்கு இயைந்ததாகப் பலவகையால் அமர்ந்திருக்கும் ஆசனம் என்னும் தேகக்கிரியை மாத்திரம் தழுவிக்கொண்டு மற்றைத் தேகக்கிரியைகளை யோகநூலார் விலக்கினார். ஆயினும், 'ஒன்றினை முடித்தல் தன்னினம் முடித்தல்' என்னும் நியாயத்தால் மற்றைத் தேகக்கிரியைகளைத்தடைசெய்து திருத்திக்கொள்ளுதலும் இவ்வாசனம் என்னும் யோகாங்கத்தின்கண்ணே அடங்கப் பெறுவதாகும்.

இனிப் பிராணாயாமம் என்பது பிராண வாயுவைத் தடைசெய்து நிறுத்திச் சரீரத்தைச் சுகமாக வைத்துத் தாம் வேண்டுங்காலமளவும் ஆயுளை நீட்டிப் பித்தலும், பயன் பெறுதற்குச் சாதனமான தேகத்தை இங்ஙனம்வலி பெறச் செய்யும் வாயிலாய் மன ஒருமை எய்துவித்தலுமா கும். ஆன்மாக்களின் அறிவு விருத்திக்கு இத்தேகம் இன் றியமையாச் சாதனமாவதாம். படலத்தான் மறைக்கப் பட்ட கண்ணுக்குக் கண்ணாடி சகாயமாய் நின்று கண்ணறி வைவிளக்குதல்போல, ஆணவம் என்கின்ற குற்றத்தான் மறைக்கப்பட்டு அறிவு மழுங்கிய ஆன்மாக்களுக்கு அவ்வ றிவைவிளக்குவதுமாயபகாரியமான இவ்வுடம்பேயாம். இது,

"மாயாதனுவிளக்காமற்றுள்ளங்காணாதேல்
ஆயாதாபொன்றையதுவதுவாய்—வீயாது
வன்னிதனைத்தன்னுண்மறைத்தொன்றுங்காட்டம்போல்
தன்னைமலமன்றணைதருன்"

"எழுமுடல்கரணமாதியிவைமலம்மலமதத்தாற்
கழுவவென்றுசொன்னகாரணமென்னையென்னிற்
செழுந்தவையழுலைசாணிஉவர்செறிவித்தழுக்கை
முழுவதுங்கழிப்பன்மாயைகொடுமலமொழிப்பன்முன்னோன்"

"நித்தமாயருவாயேகநிலையதாயகிலத்துக்கோர்
வித்துமாயசித்தாயெங்குங்வியாபியாய்விமலனுக்கோர்
சத்தியாய்ப்புவனபோகந்தனுகரணமுமுயிர்க்காய்
வைத்ததோர்மலமாய்மாயைமயக்கமுஞ்செய்யுமன்றே"

என்றற்றொடக்கத்துத் திருவாக்கான் நன்குதெளியப்படும்.

இனி இத்துணைச் சிறந்த சாதனமான இவ்வுடம்பின் நிகழ்ச்சி யெல்லாம் புறத்தே காணப்படும் இப்பிரபஞ்ச நிகழ்ச்சிகளோடு சம்பந்தப்பட்டே நடைபெறுவனவாகும்,

இங்ஙனம் இப்பிரபஞ்சமும் இதனோடொற்றுமைப்பட்டு நடைபெறும் சரீரமும் ஒன்றோடொன்று மிக்க சம்பந்த முற்று நிற்றலால் இப்பிரபஞ்சம் அண்ட சரீரம் என்றும் இவ்வுடம்பு பிண்டசரீரமென்றும் ஒற்றுமைப் பெயரான் வைத்து வழங்கப்படுகின்றன. இன்னும் இவ்வண்ட சரீரத் தினுள்ள அவ்வளவு அமைதிகளும் இப்பிண்ட சரீரத்திற் கும் ஒக்கும். அதனாலே இப்பிண்ட சரீரம் நிலைபெறுதற் குப் பிராணவாயு ஓர் இன்றியமையாத காரணமாய் நிற்றல் போல் புறத்தே இவ்வண்ட சரீரம் நடைபெறுதற்கும் வாயுவினியக்கம் இன்றியமையாததாகின்றது. சூரியனிடத் துள்ள பிரகாசசத்தும் சந்திரனிடத்துள்ள அமிழ்தசத்தும் இவ்வுலக நிகழ்ச்சிக்கு அவசியமான சாதனங்களாயினும், அவ்விரண்டு சத்துக்களையும் தன்னிடத்தே சுமந்துகொண் டுபோய் எங்கும் வியாபிக்கும் வாயுவில்லையானால் அவை பயன்படமாட்டாவென்பது துணிபொருளேயாம். சூரிய னது பிரகாச சத்தேறிய வாயுவைப் பகற்காலத்துள்ளிழுத் தும், சந்திரனது அமிழ்தசத்தேறிய வாயுவை இராக்கால துள்ளிழுத்தும் சருவ பிராணிகளும் பிராண வழியே உயிர் வாழ்க்கை செலுத்தி வருகின்றன. இவ்வாறு அண் டத்திற்காணும் நிகழ்ச்சிக்கு ஒப்பவே, இப்பிண்டத்தினி டத்தும் பிராணவாயுவானது இயங்கா நின்கின்றது நம்மு டைய பிண்ட சரீரத்தில் எழுபத்தீராயிரம் நாடிக ளிருக் கின்றன. அவற்றுள், இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினிஎன் னும் பத்துநாடிகளே சிறந்தன; அவற்றுள்ளும் இடைபிங் கலை சுழுமுனை என்னும் மூன்றுமே சிறந்தன இவைதம் முள் பிங்கலநாடி என்பது இடதுகாற் பெருவிரலிலிருந்து வலது நாசியிற் செல்லுகின்றது; இடாநாடி வலதுகாற்பெ ருவிரலிலிருந்து இடது நாசியிற்செல்லுகின்றது; சுழுமுனை

நாடி குதத்திற்கும் குய்யத்திற்கும் நடுவிலுள்ள மூலாதார முதல் சிரோமத்தியமான பிரமரந்திரம்வரையில் ஆறுதாரங் களையும் ஊடுருவிச் செல்கின்றது. இவற்றுட் பிங்கலை சூரிய நாடி என்றும், இடை சந்திரநாடி யென்றும், சுழுமுனை அக் கினிநாடி என்றும் வழங்கப்படும்.

இனிப் பிராணவாயு பிங்கலை நாடியிற் செல்லும் வழிச் சூரியகலை யென்றும், இடாநாடியிற்செல்லும் வழிச் சந்திர கலையென்றும், சுழுமுனை நாடியிற் செல்லும் வழி அக்கினி கலை என்றும் சொல்லப்படும். பிராணவாயு சூரியநாடியில் ஓடும்போது தேகத்தைப் போஷிக்கும் உடன்பாட்டு மின் சத்தும் சந்திரநாடியி லோடும்போது எதிர்மறை மின்சத் தும்கொண்டு செல்லுகின்றதெனை இக்காலத்துப் பௌதிக சாத்திரிகள் மிகநுட்பமாக ஆராய்ந்துரைகூறி வருகின்றார். இவர்கள் இதுகண்டு சொல்லுதற்குப் பலநூற்றாண்டுகளு க்கு முன்னரே நம் இந்திய தேசத்துச் சிவராஜயோகிகள் இதனைக்கண்டு கூறி யிருத்தலால் நம் முதுமக்கள்யோகானு பவ அறிவு தன்னிகரில்லாத் தன்மைத்தென்பது சொல்ல வும் வேண்டுமோ? சூரியநாடி சந்திரநாடி யிரண்டினும் ஒரே தன்மையான மின்சாரம் ஓடுமாயின் இத்தேகத்தின் உள்ளமைந்த கருவிகள் ஒன்றும் நிலைபெற மாட்டாவாய் ஒழியும். அங்ஙனம் அன்றிப் பிராணசக்தி என்னும் எம் அம்மையின் அனுக்கிரக இயக்கத் திறத்தினாலே, சூரிய நாடியிற் செல்லுஞ் சத்தி உடன்பாட்டு வகையாலும் சந்திர நாடியிற் செல்லுஞ் சத்தி எதிர்மறை வகையாலும் நடை பெற்று வருகின்றன. இவ்வாறு மாறிமாறிவரும் சுவாச ஓட்டத்தின் இயல்பைத் தெளிவாய் அறிந்து, புறத்தே அண்டத்திலிருந்து அகத்தே பிண்டத்தினுட் செல்கின்ற பிராணவாயுவை முறை தவறாமல் நடத்தித் தேகத்தைப் பாதுகாத்தலே பிராணாயாமத்தின் முக்கிய நோக்கமாகும்.

இந்நோக்கத்தை அறிந்து அனுட்டியாமையினாலன்றோ உல
கத்தில் வருடந்தோறும் கணக்கிறந்த மக்கள் நோய்வாய்ப்
பட்டுத் தம் அரிய சரீரத்தை இழந்து போகின்றனர். இப்
பிண்ட சரீரத்தை வகுத்த இறைவனது திருவருட் குறிப்
பானது இதனை நெடுநாள் நிலைகுலையாமல் வைத்துபகரிக்க
வேண்டுமென்பதேயாம். அவன் இதில் ஒழியாது இயங்
கும் வண்ணம் அமைத்த பிராணசக்தியின் தோற்றமே அவ
னது திருவருட் குறிப்பை நன்கு புலப்படுத்துகின்றது.
இத்தேகத்தில் எவ்வகைப்பட்ட நோயும் அணுகாமல் வைக்
கத் தகுந்த பிராணவாயு இயக்கமும், மற்ற உலக நிகழ்ச்சி
களும் இடையறாது நிகழாநிற்ப, இச்சரீர மாத்திரம் அவ்
வாறு இடையில் அழிந்தொழியக் காரணமில்லையன்றோ?
ஆ! மக்கள் இவ்வுண்மைகளைச் சிறிதாயினும் உணராமை
யினாலன்றோ தம் அருமைத் திருமேனியைத் தமநோக்கம்
ஈடேறுமுன் துறக்கின்றனர்!

‘நோய்’ என்பதுயாது? அஃது ஒருதனிப்பொருளா?
இல்லை, இல்லை. பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாய முத
லான தத்துவங்களின் தூல சூக்கும காரியங்களான அகக்
கருவி புறக் கருவிகளில் இயைபுகுன்றி நிலைகுலைதலே
‘நோய்’ எனப்படுவதல்லது அஃதொரு தனித் திரவியம்
அன்று. அக்கருவிகள் நிலைகுலையாமல் பாதுகாத்துவரின்
நோய் வருதற்கு வழி சிறிதும் இல்லை. அன்றி நிலை குலைந்
தாலும், அதனைச் செப்பஞ் செய்தற்குரிய அதியற்புத
பிராண சக்தியானது இதன்கண் இடையறாது இயங்குத
லால் அவ்வியக்கத்தை அறிந்து செம்மை செய்து கொள்
வானுக்கு நரைதிரை மூப்புப்பிணி சாக்காடு முதலான குற்
றங்கள் தேகத்திலணுகாவென்பது “காற்றைப் பிடிக்குங்
கணக்கறிவாளர்க்குக், கூற்றை யுதைக்குங் குறியதுவாமே”
என்னும் மேலைத் திருவாக்கினால் இனிது வலியுறுத்தப்பட்
டமை காண்க.

எல்லா வியாதிகளையும் இலேசிலே நீக்கத்தக்க பரம ஔஷதியாகிய பிராணசக்தியானது இங்ஙனம் அமைந்துகிடப்ப, இதனை விடுத்து அந்தோ! மனிதர் மருந்து மருந்தென்றும் மருத்துவன் மருத்துவனென்றும் அலைதல் என்னை! என்னை! இயற்கையாய் அமைந்த மருந்தை உண்ணல் ஒழிந்து, சிற்றறிவுடைய மக்களால் செயற்கையாய்ச் செய்யப்படும் மருந்தை நாடுதலாலன்றோ இஞ்ஞான்று நோய்கள் அளவின்றிப் பெருகி வருகின்றன! ஓ மக்கள் இச்செயற்கை மருந்தை அறவே ஒழிந்து இயற்கை மருந்தைக் கடைப்பிடிக்குநாள் எந்நாளோ!

இனிப் பிண்டத்திலுள்ள பிராணவாயு வியக்கத்தை அண்டத்திலுள்ள நிகழ்ச்சிகளோடு ஒப்பவைத்து அப்பியசித்தல் எல்லார்க்கும இன்றியமையாத கடமையாம். சூரியனிடத்துள்ள பிரகாச சத்தானது அதனிடத் தியற்கையிலுண்டாய் எல்லாப் பிராணிகளுக்கும் வலிமை தருகின்ற உடன்பாட்டு மின்சக்துடையதாம். சந்திரனிடத்துள்ள பிரகாசமானது அது தனக்கு இயற்கையி லுண்டாவதன்றாய்ச் சூரியனிடத்தினின்றும் பெற்றுக்கொளப் பட்டதாகும். இஃது இக்காலத்து நவீன வானசாத்திரிகளுக்கும் உடன்பாடான கொள்கையேயாம். ஆகவே, சந்திரனிடத்துள்ள பிரகாசம் சூரியனிடத்தினின்றும் வந்த பிரதிபலனமாகலின் அஃது ஆற்றல் குறைந்து அமிழ்தமயமாய்க் குளிர்ந்து காட்டுகின்றது. இச்சந்திர அமிழ்த சத்திலிருப்பது எதிர்மறை மின்சத்தாகும். ஆகவே, சூரியசத்து வியாபிக்கும் பகற்காலத்தும், சந்திரசத்து வியாபிக்கும் இராக்காலத்தும் அனுட்டிக்கற்பாலனவாகிய சுவாச முறைகள் பெரிதுங் கவனிக்கப்படுதல் வேண்டும். ஏனெனில், புறத்தே அண்டத்திற் காணப்படும் சீதோஷ்ணங்கள் அகத்தே பிண்டத்திற் சென்று தாக்குமாகலின், அகத்தே சீதோஷ்ணங்

களைச் சமம்பெற வைத்தற் பொருட்டுப் புறத்தே நிகழும் சீதோஷ்ண நிலைகளைக் கவனித்துச் சுவாச ஓட்டத்தைச் செம்மை செய்வித்தல் வேண்டும். சரீரத்தில் உஷ்ணம் மிகுதிப்பட்டால் இரத்தக் கொதிப்பு மிகுதியாய் இரத்தக் குழாய்கள் இரத்தாசயங்களிற் செல்லும் இரத்தம்பொங்கி யும் சுவறியும் நிலைகுலைந்து இசைவுகெட்டு அழியும். சீதம் மிகுதிப்பட்டால் இரத்த ஓட்டங் குறைந்து போதலோடு அவ்விரத்தம் ஆங்காங்குக் கட்டிகட்டியாய் உறைந்துஇறுகி அங்ஙனமே இசைவு கெட்டுப்போம். அவ்விரத்தத்தோடு கலந்து செல்லும் வாயு மிகுதிப்பட்டால் இரத்தக் குழாய் கள் அளவுக்குமேல் பருத்துக் கருவிகள் ஒன்றோடொன்று தாக்கி அங்ஙனமே நிலைகெட்டு அழியும் ஆகலின், இரத் தத்தை எப்போதுஞ் சுத்தப்படுத்தி வைத்துக் கொள்ளு தலே தேகம் நிலைபெறுதற்குரிய வழியாம். அவ்விரத்தம் சுத்திகரிக்கப்படுதற்கு அதனோடு கலந்து செல்கின்ற பிரா ணவாயுவே முக்கிய காரணமாம். அப்பிராணவாயு செவ் விதின் நடைபெறுதற்கு அதிலேறுகின்ற சீதோஷ்ண சத் துக்களே காரணமாம். இச்சீதோஷ்ணங்களைச் சமம்பெற நிறுத்திக்கொள்ளுதற் பொருட்டே தேரையர் என்னும் வைத்திய சாத்திரியார் "இரண்டடக்கோம் ஒன்றைவிடோம் இடதுகையிற் படுப்போம்" என்று இரவுக்காலத்து இடது கைப் பக்கமாய்ப் படுத்தலைச் சிறந்தெடுத்துக் கூறினார். இடதுகைப் பக்கமாய்ப் படுத்தலினால் வரும்பயன் என்னை யெனின்;—இடதுகைப் பக்கமாய்ப் படுத்திருக்குந் துணையும் பிராணவாயு சூரியநாடியி லியங்கிக்கொண்டிருக்கும். சூரிய னில்லாத இரவுக்காலத்தே அண்ட சரீரத்தில் உஷ்ண சத் துக் குறைந்திருத்தலினால், அதனோடு சம்பந்தமுள்ள இப் பிண்ட சரீரத்தும் அவ்வாறே உஷ்ணங் குறைந்து சீதம் மிகுதிப்படும். ஒன்று குறைந்து ஒன்று மிகுதிப்படுதலே சரீரநிலைகெட்டு நோய் உற்பத்தி யாதற்குக் காரணமென்

பது "மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர், வளி முதலா வெண்ணிய மூன்று" என்று ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுரும் கூறியவாற்றுனும் பெறப்படுதலின், அங்ஙனம் உஷ்ணங் குறைந்து சீதம் மிகாமைப் பொருட்டுப் பிராணவாயுவைப் பிங்கல நாடியிலியங்குமாறு செய்வித்தல் வேண்டும் இரவுக்கால முழுவதும் இவ்வாறு பிராணவாயு பிங்கலையில் நடக்குமாயின் சரீரசுகம் குன்றுதலில்லாது சமமாய் ஒத்து நடைபெறும்.

இனி விடியற்காலத்தே சூரியனுதயமாம்போது பிங்கல நாடியிற் சென்ற பிராணவாயுவைத் திருப்பி இடாநாடியியங்குமாறு செய்வித்தல்வேண்டும். சூரியனுதயமாங்காலத்தே மறைந்து கிடந்த உஷ்ணசத்து புலப்பட்டுத் தோன்றுதலின், அது சரீரத்திற்றுக்கு நிலைதலைப் செய்யாவண்ணம் குளிர்ந்த அமிழ்தத்தை வீசும் சந்திரநாடியில் பிராணவாயு இயங்கற் பாலதாம். பிங்கல நாடியிற் சென்ற பிராணவாயுவை வலதுகைப் பக்கமாய்ப் படுத்தலால் திருப்பி இடாநாடியிற் செலுத்தலாம்.

இனிப் பகற்காலத்தே மக்கள் இயங்கிக்கொண் டிருத்தலின் பிராணவாயுவைச் சீதோஷ்ண இயல்பறிந்து மாறி மாறி இயக்குவித்தல் அவர் தமக்கு முடியாத தொன்றும். ஆகவே, பகற்காலத்துச் சூரியகதியால் மாறிமாறித்தோன்றும் சீதோஷ்ண ஏற்றக்குறைச்சல் சரீரத்தைத்தாக்கி வருத்தாமைப் பொருட்டு ஒரு நாளிற் காலை, நண்பகல், மாலை என்னும் முக்காலத்தும் மும்முறை பிராணவாயுவை இடை பிங்கலை நாடிகளில் மாறிமாறி விடுத்துப் பிராணுயாமம் அப்பியசித்தல் ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். சந்திரநாடியினுற் பிராணவாயுவை உள்ளிழுத்து நிறுத்திச் சூரிய நாடியினுல் வெளிவிடுத்துப் பின் சூரிய நாடியினுல் அங்ஙனமே உள்ளிழுத்து நிறுத்திச் சந்திரநாடி

யினால் வெளிவிடுதல் ஒரு பிராணாயாமம் என்று வழங்கப்படும். பிராணவாயுவை உள்ளிழுத்தல் 'பூரகம்' என்றும், அதனை உள்நிறுத்தல் 'கும்பகம்' என்றும், அதனை வெளிவிடுதல் 'இரேசகம்' என்றுஞ்சொல்லப்படும். இவ்வியல்பினவான இரேசகபூரக கும்பகங்கள் இவ்விரண்டு கூடினதே ஒரு பிராணாயாமமென்பதற்கு மேலைத் திருவாக்கில் "வற்றியிறக்கி யிருகாலும பூரிக்கும" எனக் கூறியதே சான்றும் என்க.

இனி இப்பெற்றித்தாகிய பிராணாயாமஞ் செய்யத் தொடங்குங்கால் இடது நாசியில் தொடங்கல் வேண்டும். இவ்வுண்மை யறியாத மேற்றிசை விஞ்ஞானிகள் சிலர் வலதுநாசியில் தொடங்கல்வேண்டுமெனப் பிறழக்கூறுகின்றார். மகனைதநவரிய சிவராஜ யோகிகளான திருமூலர்

"ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பக மறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத்தி ரண்டதி ரேசகம்
மாறுத லொன்றின்கண் வஞ்சகமாமே" என்றும்

"வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத்திரண்டு மிரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க வுண்மையே"

என்றும் திருவாய்மலர்ந்தருளினமையால் வாம பாகத்திலுள்ள சந்திரநாடியிலேதான பிராணாயாமம் தொடங்கற்பாலதாம். பிறசான்றோரும்

"மதியிலி நான்கிரேசித்துவ தந்தவீரெட்டினிதேற்றி
விதியின்வழுவாதென்றெண்ணாது கும்பித்திலகுமெய்யோனிற்
பதினாறளவைவிடலில்லத்துமிவ்வாறியற்றிப்பகர்முறைபின்
கதிர்சான்மதியின்விடுதலொருபிராணாயாமங்கருதுகவே"

என்று கூறியதூஉங் காண்க.

இனி அங்ஙனம் தொடங்கும் வழி எட்டு மாத்திரை யளவு இடது நாசியினுல் வாயுவைக் கழித்துப் பதினுறு மாத்திரை உள்ளிழுத்து முப்பத்திரண்டு மாத்திரை உள் நிறுத்திப் பதினுறு மாத்திரை வலது நாசியினுல் வாயுவைக் கழிக்கவேண்டும். பின் வலது நாசியினுல் அங்ஙனமே பதினுறு மாத்திரை பூரித்து முப்பத்திரண்டு மாத்திரை கும்பித்து இடது நாசியிறுற் பதினுறு மாத்திரை இரேசித்தல் வேண்டும். இடது நாசியில் வாயுவை இரேசிக்குமபோது சூரியனைத் தியானித்தலும், வலது நாசியில் வாயுவை இரேசிக்கும்போது சந்திரனைத் தியானித்தலும் அவசியம் செயற்பாலனவாம். என்னையெனின், இடது நாசியிற்செல்லுஞ் சுவாசம் சீதம் மிகுந்திருத்தலால் அதனேடு உடன் செய்யும் சூரிய தியானம் அதனை அளவின்மிகவொட்டாது அடக்கிச் சமப்படுத்தும்; வலது நாசியிற் செல்லுஞ் சுவாசம் உஷ்ணமிகுந்திருத்தலால் ஆண்டுச் செய்யும் சந்திரதியானம் அவ்வுஷ்ணத்தை அளவின் மிகாதடக்கிச் சமம்பெறச் செய்யும் ஆகலின் என்க.

இனி இங்ஙனம் பிராணுயாமஞ் செய்யுமிடத்துமாத்திரை கணிக்குமுறை யாங்ஙனமெனின்;—மனிதர்க்கு இயற்கையிலே கண்ணிமைகள் ஒருகாற் பொருந்தும் நேரமே மாத்திரை எனப்படுவதாம். இம்மாத்திரைகளை ஒன்றிரண்டு மூன்று என்று எண்ணிக்கொண்டு பிராணுயாமஞ்செய்தல் கூடாதாகலின், அதனை இலேசாக்குதற் பொருட்டே மந்திரோச்சாரணமும் உடன் செயற்பாற்றென அறிவு நூல்கள் விதிப்பனவாயின. 'ஓ நமசிவாய' என்னும் மந்திரம் எட்டுமாத்திரைகளோடு கூடியதொன்றும். 'ஓ' என்னும் நெடில் இரண்டு மாத்திரையும், ந ம சி என்னும் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு மாத்திரையாக மூன்று மாத்திரையும், வா என்னும் நெடில் இரண்டு மாத்திரையும், ய என்

பது ஒருமாத்திரையுமாக எட்டு மாத்திரையளவாய் ஒலிக்கக் காண்டலின், இம்மந்திரத்தை இருகால் உச்சரித்துப் பூரித்தலும், நாற்கால் உச்சரித்துக் கும்பித்தலும், மறித்தும் இருகாலுச்சரித்து இரேசித்தலும் மிக இலேசான முறையாம். அல்லதூஉம், மந்திரங்கள் அதிருக்கும் நாத காரிய ஒலிகளே யல்லது வேறில்லை. ஒருவன் ஒரு நாண் முழுதும் பலதிறப்பட்ட எண்ணில்லாத சொற்களைப் பேசுதலால் பலதிறப்பட்ட விகாரமடைந்து இளைப்புறுகின்றான். ஆகவே, நாத தத்துவத்தில் அமைந்த பிராணசக்தியானது பலதிறப்பட்ட சொற்கள் வழியாய்ச் சென்று செலவழியுமாயின், அப்பிராண சக்தியால் நிலைபெறும் இச்சரீரம் மிக விரைவில் அழிந்தொழியும். அதுபற்றித் தான் ஒளவையார் "மிகைப்படக்கூறேல்" என்று திருவாய் மலர்ந்தருளினார். யாரும் தாங் கருதிய பொருளைச் சுருக்கமாகச் சில சொல்லிற் கூறல் வேண்டுமே யல்லது விரிந்த சொற்களாற் கூறுதல் அவரது பிராணசக்தியை அழிப்பதொன்றாய் முடியும். சொற் சுருங்கச் சுருங்க நாததத்துவத்தி லமைந்த பிராணசக்தியானது மிகுதிப்பட்டு இச்சரீரத்தைவலிபெறச் செய்து ஆன்ம ஞானத்தைச் சாலவும் மிகச் செய்யும். இது

"மூவகையணுக்களுக்கும் முறையினால் விந்துஞானம்
மேவினதில்லையாகில் விளங்கிய ஞானமின்றாம்
ஒவிட விந்துஞானம் உதிப்பதோர் ஞானமுண்டேற்
சேவுயர்கொடியினான்றன் சேவடி சேரலாமே" என்னுஞ்

சிவஞானசித்தித் திருவாக்கால் இனிதுணரப்படும். இன்னும் எந்த நூல் சிலசொல்லிற் பலபொருள் அறிவுறுக்கின்றதோ அந்த நூல் தன்னைப் பயிலும் ஆன்மாவின் பிராணசக்தியினை மிகச் செய்யும். இது, மிகச் சுருங்கிய நூலைப் பயில்வோனுக்கு ஆழ்ந்த சிந்தனையும் இன்பமும் உண்டாதலும், மிகவிரிந்த நூலைப் பயில்வோனுக்குச் சிந்தனை யில்லாமல்

இளைப்புண்டாதலும் பிரத்தியக்கமாகக் காண்டலின் சுருக்கமான நூலுக்கு விரிந்தநூல் சிறிதும் இணையாகமாட்டாதென்க. இதனலன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் திருவாய் மலர்ந்தருளிய தெய்வத் திருக்குறள் நூலைப் "பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ, பாரிலுள்ள நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ" என்று சிறந்தெடுத்து வேறு எந்தநூலும் இதற்கு இணையாகமாட்டாதென்று தெளிவுபெற எடுத்தோதினர் என்க.

ஆகவே, தம்கண்ணுள்ள பிராணசக்தியை மிகுவித்தற்பொருட்டுப் பிராணுயாமஞ்செய்யும்அறிஞர் பலசொற்கள் பலப்பலவாய்ப்பேசச் சிறிதும் இடந்தராமல் மௌனஞ் சாதித்தலும், யோகாப்பியாசஞ் செய்யுங் காலங்களிலெல்லாம் ஒரேசொல்லிற் றம்சிந்தனையை நிறுத்திப் பலகால் உச்சரித்துப் பிராணசத்தியை மிகுவித்தலுஞ் செய்து போதருகின்றார். மேலும், ஒரேசொல்லிற் சிந்தனையை நிறுத்த நிறுத்த, ஒருவரைதுறைபின்றியோடிப் பலவிகாரப்பட்டமனமானது அவ்விகாரத்தின் நீங்கிச் சாந்தமுற்று நிற்கும். அஃது அங்ஙனம் நிற்பவே ஆன்மாவின்கண் ணுள்ள பிராணசக்தியானது மனத்தின்வழியே பலமுகமாய்ஓடிச் செலவாகாமல் தடைப்பட்டு நின்று பெரும் பிரகாச முடைத்தாய்த் திகழும். மேலும், ஒருசொல்லை நினைந்தவழி அதன்பொருளும், ஒரு பொருளை நினைந்தவழி அதன்சொல்லும் ஒன்றோடொன்று ஒன்றுமைப்பட்டுத் தோன்றக் காண்டலின், சிவ என்னும் பரம்பொருட்பெயரை இடைவிடாதுச்சரிக்க உச்சரிக்க ஆன்மஅறிவு முழுதும் அதனிற்றேய்ந்து அதன்வயமாய்ப் பிரகாசிக்குமாகலின் பஞ்சாக்கரமுதலிய மந்திரோச்சாரணம் யோகாப்பியாசஞ் செய்வார்க்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும். இங்ஙனம் இடைவிடாத மந்திரோச்சாரணத்தில் நிற்பவர் தூலசூக்குமமான வினைமாயாகாரிய

ங்களின் வயப்பட்டு அறிவுமயங்காமல், சுத்த சூக்குமமான நாததத்துவத்தில் நிலைபெற்றுநின்று எல்லாஞானமும் ஒருங்கு விளங்கப் பெற்றாராய் வைகுவர். இஃது,

"ஓடிச்சென் றங்கே யொருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாத மெழுப்புவர்
தேடிச் சென் றங்கே தேனை முகந்துண்டு
பாடியு ணின்ற பகைவரைக் கட்டுமே" என்னும் திருமந்திரத் திருவாக்கான் நன்கு தெளியப்படும்.

இனி இவ்வாறு மந்திரோச்சாரணத்தோடு கூடியபிராணாயாமத்தை ஒருவன் இடைவிடாது பயிலப்பயில

"இடையில்விதியாலிரேசித்துப்பூரித்தியல்பிற்கும்பித்து
வடிவில்மதியந்தனையெண்ணிவலத்தால்விடுகவலப்பாலின்
அடையினியல்பாலிரேசித்துப்பூரித்ததனிற்கும்பித்துச்
சுடரோற்கருதிமதியின்விடிற்றாய்தாநாடிமும்மதியில்"

என்று கூறியவண்ணம் சரீரத்திலுள்ள எல்லாநரப்புக் குழாய்களும் இரத்தாசயங்களும் மூன்றுமாதத்தில் மிகவுஞ்சுத்திகரிக்கப்படும். அங்ஙனஞ் சுத்திகரிக்கப்படவே தேகமானது விஷதிரவியங்களோடு கலவாமல் இலேசாய்நோயின்றி வயங்கும். பெருஞ்சாதனமான இத்தேகம் இங்ஙனம் சுத்தமாய்வயங்கவே இதனை ஒருபெருங் கருவியாகக் கொண்டு போதரும் ஆன்மாவானது அறிவுவிளக்கம் பெறும். அறிவு விளங்கவிளங்க மூலாதாரத்திலுள்ள குண்டலிசத்தி எனப்படுகின்ற பிராணசக்தியானது மிக்கெழுந்து, ஆறாதாரங்களையும் ஊடுருவிக்கொண்டு தேக மத்தியத்தில் சுத்த அமிழ்தசத்தே நிரம்பி விளங்கும் சுழுமுனைநாடியி னுள்நுழைந்து மேலேறிச் சென்று அந்நாடியினுச்சியில் வயங்காநின்ற சந்திர மண்டில மெனப்படும் நாததத்துவத்தோடு ஒற்றுமைப்படும். இங்ஙனம் விந்துவும்நாதமும் ஒற்றுமை யுறு

மாயின் ஆன்மா எல்லாக்கருவி கரணங்களும் கழலப்பெற்ற சுத்தப்பேரானந்த நிலையிலே வைகிடும். இது

"விந்துவும் நாதமும் மேருவி லோங்கிடில்
சந்தியிலான சமாதியிற் கூடிடும்
அந்த மிலாத அறிவி னரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந்தானே" என்ற திருமந் திரத் திருவாக்கான் உணரப்படும். மேலும், அங்ஙனம் அக் கினி மயமாய் விளங்கும் விந்துதத்துவ மானது அமிழ்தமய மான நாததத்துவத்தைச் சென்று பற்றுதலும், அஃதுஉரு கித் தேகத்திலுள்ள சருவநாடிகளிலும் அமிழ்தம் சென்று பாயும். அவ்வமிழ்தத்தான் நிரப்பப்பட்ட சிவயோகியின் சரீரத்தினுள்,

"மணிக்கடல் யானை வார்குழல் மேகம்
மணிவண்டு தும்பி வளைபேரிகை யாழ்
தணிந்தெழு நாதங்க ளாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லாற் பார்க்க வொண்ணுதே." என்ற எல்லா அற்புத நாதங்களும் கேட்கு மாகலின், அவர்சரீரம் சுத்த ஞானமயமாயேவிளங்குமல்லது நம்மனோர்க்குள்ள பிரா கிருதசரீரம் போல்வதன்றாம். அவர்சரீரம் அவர் நினைந்த வாறெல்லாம் பூதாகாய பரமாகாயங்களில் வரைவின்றி இய ங்கும். இதுகண்டே சான்றோர்,

"பஞ்சகரணங்க ளெல்லாம் பதிகரணங்களாக
வஞ்சிபெறு மடியார்க்காயின் மன்னிய ஒருமைதன்னால்
இசையு மற்றவரி னன்றோர்க் கென்னுரை ஒம்புகென்னக்
கசிவறு மனத்தினேனுங் கட்டுரைப்பது மாண்பன்றே"
என்று கூறினர்.

இனி அகத்தே இப்பிண்டத்தினுள் நடக்கும்பிராணு யாமயோகாப்பியாசமுறையினையே எல்லாரும் இனிதறிந்து

கொள்ளுதற் பொருட்டுப் புறத்தே இவ்வண்டத்தினுள்ளும் வைத்து ஆன்றோர்விளக்கி இருக்கின்றார். இவ்வண்டத்தில் மூலாதார ஸ்தானமே திருவாரூராகும். இது,

“திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூழ் அண்ணா மலைமணி பூர நீவிர்
இருவருங் கண்ட மன்றம் இதயமாந் திருக்காளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமே காசி” என்னுந் திருவாக்கால் தெளியப்படும். அத்திருவாரூரில் சோமாஸ்கந்தமூர்த்தமே சத்துச் சித்தானந்த உருவாய் விளங்கும் பரம்பொருளைக் குறிப்பதாகும். அச்சோமாஸ்கந்த மூர்த்தியின் பாதத்தில் அமைக்கப்பட் டிருக்கும் பாம்பின் உருவே, அச்சிவபரம் பொருளால் இயக்கப்படும் குண்டலிசத்தியாம். அக்குண்டலி என்னும் பிராணசக்தியினால் இயங்கிக்

“கூடமெடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரற் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோல அஞ்செழுத்தாமே” என்ற வண்ணம் புறத்தே பன்னிரண்டங்குலம் பாய்ந்து அகத்தேஎட்டங்குலம் ஓடிப் பிராணவாயு நடை பெறுகின்றது. சோமாஸ்கந்ததிருநடனமும் பன்னிரண்டடி முன்னேறிப்போய் எட்டுஅடி பின்னுக்கு வாங்கி நடைபெறுதலால், இத்திருநடனம் அப்பிராணவாயு இயக்கத்தினையே குறிப்பிக்கின்றது. அச்சோமாஸ்கந்த மூர்த்தியினைத் தாங்கும் இருபக்கத்துத் தண்டுகளும் அப்பிராணவாயு வியங்கும் இடை பிங்கலை என்னும்இருநாடிகளைக் குறிக்கின்றன. மூலாதார ஸ்தானத்திலுள்ள திருவாரூரில் நடைபெறும் சோமாஸ்கந்ததிருநடனமே இயைபுடைத்தாய்த் தோன்றுதலின், ஏனைத் தலங்களில் நடைபெறுவது அதனை நினைப்பூட்டுதற் பொருட்டுப் பயன்

படுதலல்லது வேறு விசேடணை முடைத்தன்றாம். இப் பெற்றித்தான பிராணாயாம வமைதி சோமாஸ்கந்த தரிசன ஞ்செய்யுங்காலங்களிலும், பிறசமயங்களிலும் இடையறாது நினைவில் நிகழல்வேண்டும் என்க.

இனி இதுகாறுங் கூறிய இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நால்வகை யோகாங்கங்களும் ஹடயோக வித்தையின்பாற் படுவனவாகும். இந்நால்வகை யங்கங்களோடுகூடியஹடயோகத்தின்முடிபும்,பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் ஏனை நால்வகை யங்கங்களோடுகூடிய இராஜயோக முடிபும் தம்மில் ஒன்றேயாம். ஆயினும், இராஜயோகத்தின் முன்னதாகச் செயற்பாலது ஹடயோகாப்பியாசமேயாம். ஒருசாரார் ஹடயோகாப்பியாசத்தை மிகவுங்கடினபதமாகவைத்து அப்பியசிக்கின்றனராகலின், அதுகண்ட பிறர் அதற்கஞ்சி அதனை அப்பியசியாமல் நெகிழவிடுகின்றார். ஹடயோகாப்பியாசம் அவரவர்சரீரவன்மை மென்மைகட்கு ஏற்பச்செயற்பாலதே யல்லது, ஒருவர் செய்வதுபோலவே மற்றொருவருஞ் செயல்வேண்டுமென்பது நியதியன்றாம். இங்கே நம்மால் விளக்கப்பட்ட ஹடயோகாப்பியாச முறை யாவருஞ் சுலபமாகச் செயக்கூடியதாகலின், சரீரசுகம்பாதுகாத்து ஆன்ம ஞானத்தை விரிவுசெய்ய வேண்டுவோர்எல்லாரும் இதனை அவசியம்செய்தல்வேண்டும்.

இனி ஹடயோகத்தின் பாற்படும் நால்வகை யங்கத்தினும் செல்லும்பிராணாயாமம் தூலமுறையுள்ளதாய் நிற்பப் பிரத்தியாகாரம் முதலான ஏனை இராஜயோக நால்வகையங்கத்தினுஞ் செல்லும் பிராணாயாமம் சூக்கும முறைஉள்ளதாம். ஹடயோகத்தின்பாலதாம் பிராணாயாமம் தூலமான பிராணவாயுவைத் தடுத்து அதிலுள்ள பிராணசக்தியினை உரிஞ்சிஉடலுயிரில் ஏற்றுவதாகும். இராஜயோகத்தின்பால

தாம் பிராணாயாமம் சூக்குமமான மனத்தைத்தடுத்து அதி லுள்ள பிராணசக்தியினை உரிஞ்சி உடல் உயிர்களில் ஏற்று வதாம்.

இனி இவற்றுள் பிரத்தியாகாரம்என்பது சுழுமுனை நாடியைப் பற்றிக்கொண்டிருக்கும் மூலாதாரம் சுவாதிட்டா னம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்றுசொல்ல ப்படுகின்ற ஆறிடங்களில் அறிவைப் பதித்தலாம். இவற் றுள் மூலாதாரம் என்பது குதத்திற்கும் குய்யத்திற்கும் இடையிலுள்ளதாகும். இது மூன்றுகோண வடிவுடைத்தாய் விளங்கும் இவ்விடத்திலுள்ள பிராணசக்தி பாம்புமண்டலி த்தாற்போலச் சுழல் சுழலா யிருக்கும் நரம்பைப்பற்றிக்கொ ண்டிருக்கின்றது. இதனையே குண்டலியென வழங்குவர். இக் குண்டலியே விந்துதத்துவமென்றும், இதுவேபிரணவ வுரு வமென்றும் அறிவுநூல்கள் கூறுநிற்கும். தமிழில்எழுதப் படுகின்ற ஓ என்னும் பிரணவவடிவு வட்டப் புள்ளியும் ஒரு கோடும் உள்ளதாகும் இதனைப்பிள்ளையார் சுழியென்றுங் கூறுவர். இதுபோன்ற உருவுடையபிராணி யானையே யாக லின், அவ்வியானைவடிவாக ஆண்டுக் கடவுளைத்தியானித்தல் வேண்டுமென்பது எல்லாச்சாத்திரங்களுக்கும் ஒப்பமுடிந்த தொன்றும். இந்தவிடத்திலே அறிவை நிறுத்தப்பெறுகின் றவர்க்கு இறைவன் அருள்ஒளி வெளிப்பட்டுத் தோன்றி அவரோடு ஒற்றுமையுற்று ஒருருவாய்நிற்குமென

"எருவிடும் வாசலிருவிரன் மேலே
கருவிடும் வாச லிருவிரற் கீழே
உருவிடு சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடு சோதி கலந்துநின் றானே" என்னுந் திருமந்தி ரத்திருவாக்குக் கூறுநிற்கின்றது.

இனிச் சுவாதிட்டானமென்பது இலிங்கமூலத்தின் கண் ணதாயுள்ளது.

இனி மணிபூரகமென்பது நாபித்தானத்தின் கண்ணுள்ளது.

இனி அனாகதமென்பது இதயத்தானத்தின் கண்ணுள்ளது. இவ்விடத்தே கீழ்நோக்கிய வடிவாய்த் தொங்கும் தாமரை யொன்றுளது. அத்தாமரை முகுளத்தினுள்ளே அதிசூக்குமமான பரமாகாயமொன் றுள்ளது அவ்வாகாயத்தினிடையிலே அங்குட்டமாத்திரையனாகப் பரமசைதன்னியப்பிழம்பானது சோதிவடிவாய்த் துலங்குகின்றது. அப்பரமாகாயம் சுத்தஞான வுருவினதாம். அப்பரமாகாயத்தினிடை விளங்கும் சைதன்னியஅசைவே அச்சைதன்னியத்தின் ஆனந்ததாண்டவமாம். இங்ஙனம் அகத்தேபிண்டத்தினுட் காணுமாறே புறத்தே அண்டத்தினுஞ் சிதம்பரத்திற் காணப்படும். சிதம்பரமென்பது ஞானகாயமாம். அந்த ஞானகாயத்திற் பிரமவொளியின் அசைவே நடராஜமூர்த்தியின் திருநடனமாம். இத்திரு நடனத்தை அகத்தும் புறத்தும் ஒருங்கு காணப்பெறுவார்க்கு எல்லாத் துன்பங்களும நீங்கப் பெறுதலோடு சிவானந்தப் பெரும்பே றெய்தல் நிச்சயமாம்.

"நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம்வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்துந்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே" என்னுந்

திருமந்திரத்துட் காண்க. இந்தத்தியானமே சாந்தோக்கிய உபநிடதத்தில் தகரோபாசனைஎன்று சிறந்தெடுத்துக்கூறப்பட்டது.

இனிவிசுத்திஎன்பது கண்டத்தானத் துள்ளதாகும்.

இனிஆஞ்ஞைஎன்பது புருவமத்தியத்தி லுள்ளதாகும். இடா பிங்கலாஎன்னும் இருநாடிகளுங் கூடுமிடத்தே இஃதுள்ளதென்றும், இவ்விடத்தே கண்போன்றதோர் உறுப்பு

ள்ளதென்றும், அவ்வுறுப்புத்திறக்கப்படின் அதன்கண் உலகநிகழ்ச்சிக ளெல்லாம் ஒருங்கே விளங்கப் பெறும் எனவும் சாத்திரங்கள் விதிக்கின்றன.

இனித்தாரணை என்பது பிருதிவிதத்துவத்தை இதயத்திலும், ஜலதத்துவத்தைக் கண்டத்திலும், அக்கினிதத்துவத்தை உண்ணாக்கிலும், வாயுதத்துவத்தைப் புருவமத்தியத்திலும், ஆகாயதத்துவத்தை பிரமரந்திரத்திலும் நிறுத்தி உண்ணோக்குதலாம்.

இனித் தியானமென்பது கண் நாக்கு மூக்கு என்னும் மூன்றிடத்தும் இடைவிடாது சிந்தையை நிறுத்துதலாம். இது

"கண்ணாக்குமூக்குச் செவிஞானக் கூட்டத்துப்
பண்ணாக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு
அண்ணாக்கினுள்ளே யகண்டவொளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே" என்பத

னால் அறியற்பாலதாம்.

இனிச் சமாதி என்பது பிரமரந்திரத்தின் கண்ணதான நாததத்துவத்திலே விந்துதத்துவமானது சென்று பொருந்த ஆன்மாச் சிவத்தோடு அத்துவிதவியைபுற்றுநின்று ஆனந்த மெய்துதலாம். இது

விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்தமில்லாத அறிவி னரும்பொருள்
சுந்தரச்சோதியுந் தோன்றிடுந்தானே" என்பதனாலும்,

"அட்டாங்கயோகமுமாதாரமாறும்அவத்தையைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்செம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
எட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே." என்பதனாலும் தெளியற்பாலதாம்.

ஓம்

திருச்சிற்றம்பலம்.

# பக்தியோகம்.

---

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே"

அன்பென்பது ஆன்மாவுக்கு அனுபவ மாத்திரையாயுள்ள உள்ள நெகிழ்ச்சி. காந்தக கல்லிற் காணப்படாது மறைந்து கிடந்த ஆகருஷண சத்தியானது இருப்பூசியைக் கண்ட துணையானே புலப்பட்டுத் தோன்றுதல் போலவும், பசுவின் சரீரத்தே வியாபகமாய் மறைந்து நின்ற அமுத சத்துகள் கன்றைக் காண்டலும் ஒருங்கு திரண்டு பாலாய்ச் சுரந்து ஒழுகுதல் போலவுந், யாண்டும் விரிந்து விளங்குகின்ற சூரியோஷ்ணம் சூரிய காந்தக்கல்லிலே கட்புலனாய் வெளிப்பட்டுத் தோன்றுதல் போலவும் ஆன்மாவின் உண்மைக்குணமாய்க்கரந்துநின்ற அன்பானது தான்வெளிப்படுதற்குரியசாதனம் வாய்த்த வளவானே தானும் வெளிப்பட்டு நின்று பிரகாசிப்பதாகும்.

இனி இவ்வன்பைத் தோற்றுவிப்பது யாதோவெனின்;—அன்பே அன்பைத் தோற்றுவிப்பதாகும். பச்சை விறகைத் தீயிலிட்டால் அவ்விறகின்கண்ணுள்ள ஈரமும் தீயும் தம்மில் மாறுபட்ட சுபாவமுடையனவாகையால் அவை யொன்றோடொன்று பொருந்த மாட்டா. மடமானையுங் கொடும் புலியையும் ஓரிடத்துக் கூட்டினால் அவை தம்மில் மாறுபட்ட தன்மை யுடையனவாகையால் அவையும் ஒன்றோடொன்று பொருந்த மாட்டா. மற்றுக் காய்ந்த விறகையும் தீயையும் ஒன்று சேர்த்த வழி அவை யிரண்டும் ஒற்றுமைப்படுதல் போலவும், மானும் மானும் ஒன்று சேர்க்கப்பட்ட வழி அவை யிரண்டும் ஒன்றுபடுதல் போலவும் அன்பும்

அன்புமே ஒன்றுபடுமாகலின் அன்பே அன்பைத் தோற்றுவிக்கும் எனப்படுமாயிற்று. எம்மிடத்து உண்மை யன்புடைய எம் நேசரைக் கண்டவிடத்து எமக்கும் அன்புநிகழப் பெற்றதன்றோ? எம்மிடத் தன்பில்லா தெம்மை வெறுப்பாரைக் கண்டவிடத்து எமக்கும் வெறுப்பு நிகழப்பெற்றதன்றோ? இங்ஙனம் அன்புடையராதற்கு அன்புடையார் கூட்டுறவும் அஃதில்லாராதற்கு அஃதில்லாரது கூட்டுறவும் அனுகூலமாய் நிற்றலினாலன்றோ தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்.

"நிலத்தியல்பானீர் திரிந்தற்றாகுமாந்தர்க்
கினத்தியல்பதாகுமறிவு" என்றும்
"மனநலநன்குடையராயினுஞ் சான்றோர்க்
கினநலமேமாப்புடைத்து" என்றும் திருவாய் மலர்ந்தருளினார். அன்பே பழுத்தொழுகும் நல்லாரது இணக்கம் நம்மை அன்பிலே நிலைபெறச் செய்வதொன்றாகையால் அஃதொன்றே நம்மால் வேண்டற்பாலதாம். இஃது அற்புத வைராக்கிய சுத்த சிவஞான சிரேட்ட வள்ளலாரான பட்டினத்துப் பிள்ளையார்.

"நல்லாரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாதுவேறு நிலையுளதோ வகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சி யேகம்பனே" என்று
அருளிச் செய்தமையானும் நன்கு விளங்கும். எனவே, அன்பினைத்தோற்றுவிப்பதற்கு அவ்வன்பினை யுடையாரது நேசம் இன்றியமையாது வேண்டப்படுவதொன்றாம்.

இனி அன்பென்பதொரு குணம். குணம் யாண்டுந் தனித்து நில்லாதாகலின் அஃதறிவுடைய ஆன்மாக்களிடத்தே இயற்கையேயமைந்து கிடப்பதாம். ஆகவே அறிவுள்ளவிடத்தெல்லாம் அன்புமுடனிகழுமென்பதூஉம் பெறப்படும். அறிவில்லாவிடத்து அன்பு நிகழமாட்டாதென்பதற்கு வெகுண்டோன் மாட்டுங் கள்ளுண்டு களித்துமயங்கினோன் மாட்டும் அன்பு நிகழப்பெறாமையே உறுஞ் சான்றாம். அற்றேல், அறிவில்லாத பசு தன்கன்றைக்காண்டலும் பேரன்புடைத்தாய் அதனை நாவால் வருடுதலென்னையெனின்;— அதற்கு அறிவில்லையென்று சொல்லுதலடாது, மக்களிடத்து

மிக முதிர்ச்சியுற்றுத் தோன்றும் பகுத்தறிவே விலங்குகளிடத்துக் குறைந்தநிலையில் நிற்குமாகலானும், அவ்வாறில்லையாயின் அது தன் கன்றையும் தன் எசமானனையும் அறியமாட்டாதாகலானும் அதற்கும் பகுத்தறிவுண்டென்பது தேற்றமேயாம். அற்றாயின், மிருகங்களிடத்துத் தோன்றும் அன்பிற்கும் மக்களிடத்துத் தோன்றும் அன்பிற்கும் பேதமென்னையெனின்;— மிருகங்களிடத்து அறிவு நிகழுங்காலஞ் சிறிதும் அறியாமை நிகழுங் காலம் பெரிதுமாகலின் அச்சிற்றறிவைப் பற்றிக்கொண்டு தோன்றும் அன்பு அற்பநேரமே நின்று பின் அழியும்; மற்று மக்களிடத்து அறிவு நிகழுங் காலம் பெரிதும் அறியாமை நிகழுங் காலஞ் சிறிதுமாயிருத்தலின் அப்பேரறிவைப் பற்றிக்கொண்டு தோன்றும் அன்பும் பெருங்காலம் நிலைபெறுவதாம். அற்றேல், அறிவு அறியாமை என்னும் இரண்டும் தம்மில் மாறுபட்ட இருகுணங்களாகலின் இவையிரண்டும் ஓரான்மாவிலேயிருத்தல் யாங்ஙனம் பொருந்துமெனின்;— அற்றன்று, அறிவுதான் ஆன்மாவின் குணமாகுமன்றி யானை அறியாமை அதன் குணமாதல் சிறிதுமில்லை. அவ்வறியாமைக் குணத்தைச் செய்யும் ஆணவம் என்றுமலம் அநாதிதொட்டு ஆன்ம அறிவைப்பொதிந்துகொண்டிருத்தலின் அதற்கு அஃதுண்டாயிற்றேயல்லது, அஃது ஆன்மாவிற்கு இயற்கைக் குணமன்றென்பது கடைப்பிடித்தல்வேண்டும். இங்கு மக்களாய்ப்பிறந்தோரெல்லாரும் ஒருதிறப்பட்ட அறிவறியாமையுடையராகாது பலதிறப்பட்ட அறிவறியாமையுடையராயிருப்பக்காண்கின்றாம். ஒருகலாசாலையில் ஒருவகுப்பிற் படிக்கும் பிள்ளைகள் ஒரேதன்மையான அறிவுடையராகாது ஏற்றத்தாழ்வான அறிவுடையராயிருப்பது பிரத்தியக்ஷமாய்க் காணப்பட்டதொன்றாம். இவ்வாறு ஒருவர் மிக்க அறிவும் ஒருவர் குறைந்த அறிவும் உடையராக ஒருவர் அதுதானும் இவ்வாறாயிற்றற்குக் காரணம் என்னையென்று நுணுகி நோக்கும்வழி ஆன்மாக்களுக்கு இயற்கைக் குணமான அறிவு விளங்கவொட்டாவாறு தடைசெய்தும் சிறிது விளங்குமாறு அத்தடை நீங்கியும் உடனின்று ஆவரித்து வருகின்ற ஆணவமலம் ஒன்றுஉண்டென்று இனிதுபெறப்படும்.

இனி இவ்வாணவமலம் ஆன்மாவிற்கு ஒருகுணமாய் நிற்குமெனின் அஃதான்மாவை எக்காலத்தும் விட்டு நீங்காதாகலின்

அதற்கு அறிவுண்டாகாமை வேண்டும், மற்று அதன்கண் அறிவு சிறிதுசிறிதே தோன்றக்காண்டலின் ஆணவம் ஆன்மகுணமாக மாட்டாதென்பதூஉம், அஃதொருகாலத்தான்மாவை வந்துபற் றிற்றெனின் சடப்பொருளாகிய அது அறிவுப்பொருளாகிய ஆன் மாவை வந்து பற்றுதல் பொருந்தாமையானும், ஆன்மாவே அத னைப் பற்றியதெனின் இன்பக்கடலான சிவபரம்பொருளைப்பற்று தலொழிந்து துன்பக்கடலான ஆணவத்தை அறிவுடைய ஆன்மாப் பற்றியதென்றல் ஒரு சிறிதும் ஏலாமையானும், இறைவனே அவ் விரண்டனையும் ஒருங்கு பொருந்தவைத்தானெனின் அஃதவன் இறைமைக்கும் நடுவு நிலைமைக்கும் இழுக்காமாதலானும் பாரிசே டத்தால் அஃதான்மாவின்கண் இயற்கையே பொருந்திக் கிடக்கு மென்பதூஉம் நன்கு துணியப்படும். இது சித்தாந்த பரமாசாரிய ரான மெய்கண்டதேவர்,

"நெல்லிற் குமியும் நிகழ் செம்பினிற் களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே — வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத்தாம்" என்றருளிச்செய்த வாற் றானும் தெளியப்படும். எனவே, அறியாமையைச் செய்யும் ஆண வம் ஆன்மாவில் உடனிருப்பது பற்றியே நம்மனோர்பால் அறியாமை நிகழப் பெறுகின்றதே யல்லது அஃதான்மாவின் குணமாதல் செல்லாமையின் அவ்வறியாமை அறிவு என்னு மிரண்டும் இரு வேறு பொருட்குணங்களாதல் பெறப்பட்டது; ஆகவே அவை யிரண்டும் ஆன்மாவிற்கே உரியவென்று வினவுதல் போலியா மென்றொழிக. அது கிடக்க.

இனி இவ்வறியாமை யென்னும் அழுக்கு ஆன்மாவைவிட்டு ஒழியுமாறி யாங்ஙனமெனின்;— களிம்பு ஏறிய பாத்திரத்தைச் சாம்பலும் புளியுமிட்டுத் துலக்கத் துலக்க அதன்கண் உள்ள அக் களிம்பெல்லாம் நீங்கி அது பெரும்பிரகாசமாய் விளங்குதல்போல ஆணவக்களிம்பேறிய ஆன்மாவை மாயை கன்மமென்னும் வேறி ருமலங்களோடும் சேர்த்துத் தேய்க்கத்தேய்க்க அதன்கண் உள்ள அவ்வாணவமலமுங் கழிந்து ஆன்மாச் சுத்தசொயம்பிரகாசமாய் விளங்கப்பெறும். மாயையின் காரியமான இவ்வுடம்பே ஆன்மா

வின் இயற்கையறிவை எழுப்பி ஆணவகாரியமான அறியாமையைப் போக்குகின்றது. ஆணவம் ஆன்ம அறிவை மறைப்பது; மாயை அதன் அறிவை எழுப்புவது; ஆணவம் கண்ணை மறைக்கும் இருள் போல்வது; மாயை அக்கண்ணை விளக்கும் விளக்கம்போல்வது. இது சித்தாந்த நூலார்

"மாயா தனுவிளக்கா மற்றுள்ளஞ் சாரூதேல்
ஆயாதா மொன்றை யதுவதுவா—வீயாது
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்போல்
தன்னைமல மன்றணைத லான்" என்றருளிச்செய்தவாற்றாலறி யப்படும்.

இனி ஆணவவழுக்கைப் போக்குவதற்கு மாயையென்னும் பிறிதோரழுக்கு வேண்டிற்றென்னையெனின்;—அழுக்கே அழுக்கைப் போக்குவதென்னு முண்மை பிரத்தியக்கமாகக் காணப்படுவதாம். அழுக்கேறிய ஆடையிலுள்ள கறை போக்குதற் பொருட்டு வண்ணான் உழமண் முதலியன சேர்த்து ஆடையொலித்துப்பரிசுத்தஞ் செய்தல்கண்டாமாகலின் ஆணவக்கறையை விடுவிப்பதற்குமாயையின்றுணை இன்றியமையாது வேண்டப்படும். இதுபற்றியன்றே,

"எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற்
கழுவுவதென்று சொன்ன காரணமென்னை யென்னிற்
செழுநவை யறுவைசாணி யுவர்செறிவித் தழுக்கை [ன்"
முழுவதுங்கழிப்பன்மாயைகொடுமலமொழிப்பன்முன்னோ

என்னுந் திருவாக்கு மெழுந்தது.

இனி இங்ஙனம் ஆணவக்கறையை நீக்கிக் கொள்வதற்கு ஒரு பெருஞ் சாதனமாக இறைவனாற்றரப்பட்ட இச்சரீரம் இல்லையாயின் ஆன்மாக்கள்ஒருவர் ஒருவரைக்கூடிஅறிவுடையராய்அதனான் அன்பு நிகழப்பெற்று இன்பமெய்துதல் செல்லாது. ஆன்மாக்களுக்குச் சரீரங்கள் தரப்பட்டமையாலன்றே ஒருவர் ஏனையொருவரோடு கூடி அளவளாவப் பெறுகின்றனர். இருளைக் கண்டால் விளங்கப் பெறாதகண் ஒளியைக் கண்டதுணையானே விளங்குதல் போல ஆணவத்தால் அறிவு விளங்காத ஆன்மா இவ்வுடம்பு வாயிலாக ஏனையோரறிவுடையாரைக் கண்ட மாத்திரையானே அறிவு விளங்கப் பெறுகின்றது. இவ்வாறு அவ்வறிவு முதிர முதிர அம்

முதிர்ச்சியிலே அன்பு சுரக்கின்றது. இப்படி யெல்லாஞ் சரீரசம்பந்தத்தால் அறிவுமுதிர்ச்சியும் அன்புவிளைவும் நிகழல் பற்றியே பரிமேலழகியாருந் திருக்குறளுரையிலே 'அன்பெனப்படுவது இயைபுடையார்மாட்டுத்தோன்றும் உள்ளநெகிழ்ச்சி' என்றுரை கூறினார்

இனி இயைபுடையார் மாட்டுத்தோன்றுஞ் சம்பந்தம் வாயிலாக அன்பு முறைமுறையே நிகழப் பெறுமாற்றை விளக்குவாம். யாம் பச்சைப் பசுங் குழவியா யிருந்த பருவத்திலே நம்மைக் கருணை ததும்பவெடுத்துப் பாலூட்டிய எம் அம்மையை யறிந்தறிந்து அவளிடத்து அன்புடைய மாயினேம் அதன்பின் பிள்ளையாய் வளர்ந்த பருவத்திலே எமக்கு வேண்டும் ஆடையணிகலங்களெல்லாம் அணிவித்துக் கல்வி பயிற்றுதற்கு வேண்டுஞ் சாதனங்களெல்லாஞ்செய்வித்து உபகாரம் ஆற்றிவந்த தந்தையின் கருணைத் திறத்தை யறிந்தறிந்து அவன்பால் அன்பு நிகழப்பெறுவேமாயினேம். அதன்பின் கலாசாலையிலே வாலிபப்பருவத்தில் அறிவுநூல் பலவும் விளங்கப் போதித்துவரும் ஆசிரியரது பெருங்கருணைத் திறத்தை அறிந்து வியந்து அவர்மாட்டு அன்புடையமாயினேம்; பின்னும் அப்பருவத்திலே பயன் சிறிதுங் குறியாது எம்மோடு தோழமைகொண்ட நண்பர்தம் அன்பின் திறத்தை உணர்ந்துணர்ந்து அவர்மாட்டு அன்பு நிகழப் பெற்றேம்; பின்னும் அப்பருவத்திலே ஒருநன்மடந்தையை மணஞ்செய்துகொண்டு அவள் எம்பால் உடையளாய் வைத்தொழுகுங் காதற்கிழமையினை நினைந்துநினைந்து அவள்பால் அன்புடைய மாயினேம்; பின் இவற்றின்மேல் எம்தளர்நடைப்புதல்வர் மழலைச் சொற்கேட்டும் அவர் பொன்மேனி தீண்டியும் அவர் ஆம்பற்செவ்வாய் முத்தங்கொண்டும் ஆராவன்புடைய மாயினேம். ஏனையோர் மாட்டுச் செல்லும் அன்பைக்காட்டினும் புதல்வர்பாற் செல்லும் அன்பே நிரம்பவும் பரிசுத்த முடைத்தாம். மற்றையோரிடத்து ஒவ்வோர் பயன்பெறுதலால் அவர்பால் அன்பு நிகழப்பெறுவதாகப் புதல்வர்பால் மாத்திரம் பயன் சிறிதுங் குறியாத சுத்த வன்பு தோன்றுகின்றமையின் அதுவே ஏனை எல்லாவற்றினுஞ் சிறப்புடையதாகின்றது. மேலும் சிறுமகார் காமவெகுளி மயக்கந்தோன்றாப் பருவத்தினராகலின் அவர் சுத்த சிவசொரூபமுடையராவர்.

அவர்பால் நிகழ்த்து மன்பு சிவன்பால் நிகழ்த்து மன்பே யாதல் ஒருதலை. ஈதுணர்ந்த ஆன்றோரும்,

"படைப்புப்பலபடைத்துப்பலரோடுண்ணும்
உடைப்பெருஞ்செல்வராயினுமிடைப்படக்
குறுகுறுநடந்துசிறுகைநீட்டி
இட்டுந்தொட்டுங்கௌவியுந்துழந்தும்
நெய்யுடையடிசில்மெய்படவிதிர்த்தும்
மயக்குறுமக்களையில்லோர்க்குப்
பயக்குறையில்லைத்தாம்வாழுநாளே" எனவும்

"பொன்னுடையரேனும் புகழுடையரேனுமற்
றென்னுடையரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களை யிங்கில்லாதவர்"

"சொன்னகலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலு
மென்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலைக் கேளாச் செவி" எனவும்

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற" எனவும் அருளிச் செய்வாராயினர். இங்ஙனம் புதல்வர்மேற் செல்லுமன்பு மிகச்சிறந்தமையாலன்றே உலகத்தா ரெல்லார்க்கும் அன்பு விளைவிப்பான்வேண்டி நம்பெருமான் ஞானசம்பந்தன் மூன்று வயதுக் குழந்தையாய்வந்து சைவ சித்தாந்தம் விளக்கி யருளினான்.

இவ்வாறு இயைபுடையார் மாட்டுத்தோன்றும் அன்பு முறையேமுதிருந்தோறும், அறிவும் மேலுமேலும்மிக்குவிளங்குமாகலின் அவ்வறிவால் முன்பு அன்புசெயப்பட்டா ரெல்லாருநிலையின்றி யழிந்துபோஞ் சரீரத்திற்றோன்றியும் மறைந்துபோகுஞ் சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய சாமானிய ஆன்மாக்களென் றுகழித்து, இவ்வான்மாக்களை எல்லாம் அறிவித்துப் பேருபகாரம்புரிந்துவருகின்றவனுமுழுமுதற்சிவபரம்பொருளொருவனே நம்மால் அன்பு

செயப்படுதற் குரியானென்று கண்டு அவன் மாட்டே அன்பு நிகழ்த்துவார்.

"ஊருஞ்சதமல்ல உற்றார்சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல பெண்டிர்சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேசத்திலே
யாருஞ்சதமல்ல நின்றாள்சதங் கச்சியேகம்பனே" என்ற திருவாக்கு மிதற்குச்சான்றாம். எல்லாம்வல்ல இறைவன்மாட்டு அன்பு நிகழ்த்தவே, முன்பு தன்னுடைமையுடையா ரிடத்து மாத்திரம் அன்புசெய்து மற்றையோரிடத்து அன்பின்றியொழுகியவொழுக்கம் மாறி எல்லா ஆன்மாக்களையும் அவ்விறைவன் உருவாகக்கண்டு அவ்வெல்லாரிடத்துங் கரைகடந்த அன்புடையராயிருப்பர். ஏனையோர் மாட்டு அன்புசிறிதே நிகழல்போலாகாது, 'காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருகனியாய்' அன்பேயுருவாய்க்கொண்டு விளங்குஞ் சிவபிரான்மாட்டு அன்பு நிகழப்பெறின் அவ்வன்பு அவனால் வியாபிக்கப்பட்ட எல்லாப்பொருளினுஞ் செல்லுமென்ப துணர்ந்தே அன்பே யுருவான மாணிக்கவாசகப் பெருமான்

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்று திருவாய்மலர்ந்தருளுவாராயினர்.

தினைத்தனையேயுள்ள மலரிற் சுரக்குந்தேன் அத்தினையளவி னுஞ் சிறிதாயிருப்பதாகலின் அதனை நாவில்விட்டுச்சுவைத்தால் அது மிகுந்த இனிமைதாராது. பனைத்துணையாகப் பருத்த கருப்பங்கட்டியை உடைத்திடைத்துண்டால் அதுபேரினிமை பயக்கும். உலகத்திலுள்ள சருவ ஆன்மாக்களிடத்தும் தனித்தனியே விளங்கும் அன்பு மிகச்சிறிதாகலின் அவரோடுமாத்திரம்சம்பந்தப்படுவார்க்கு வரும் அன்புஞ் சிறிதாகவே யிருக்கும். ஒரு பொன் வள்ளத்தில் நிறைத்த அமிழ்தம் அவ்வள்ளத்தின்அளவேயிருக்குமல்லது அதன் மேற் படாது; ஒருபெரும் பொற் கடாரத்திலே நிறைத்த அமிழ்தம் அப்பொற்கடாரத்தினளவாய்ப் பெரிதாகவேயிருக்கும். இது

போல, ஏகதேச அறிவும் ஏகதேச வியாபகமுமுடைய ஆன்மாக்க ளிடத்து நிரம்பிய அன்பு சிறிதாகவும், வியாபக அறிவும் வியாபக இருப்புமுடைய சருவேசுரன்பால் நிறைந்த அன்பு வரையறை யின்றிப் பெரிதாகவும் இருப்பனவாம். ஆகவே, சிற்றறிவால்வருஞ் சிற்றின்பத்தை வெறுத்துப் பேரறிவால் வரும் பேரின்பத்தை விரு ம்பி அப்பேரின்பத்தைத்தர வல்லனை சிவபிரான் மாட்டு இடை யறாத நேசமுடையராய் ஒழுகுதலே உயிர்களுக்கு இன்றி யமையாப் பெருங்கடமையாம். இவ்வுண்மையினையே 'தினைத்தனை'' என்னும் மேலைத் திருவாக்கு வற்புறுத்துவதாயிற்று. இத்தனையுங் கூறிய வாற்றால் ஆன்மாக்க ளிடத்துள்ள அன்பின் நிலையுஞ் சருவேசுரனி டத்துள்ள அன்பினிலையும் விளக்கப்பட்டன.

இனி அளவால் வேறுபடினுந் தன்மையால் ஒன்றே யாகலின் ஆன்மாவின் அன்பினிலைக்குஞ் சருவேசுர னன்பினிலைக்கும் பேத மென்னையெனின்:—இறைவன்கண் ணுள்ள அன்பு என்றுந் தானே பிரகாசிப்பதாம் பிறிதொன்றனையும் பிரகாசிக்கச் செய்வதாம். ஆன் மாவின்கண் ணுள்ள அன்பு தானே பிரகாசிக்க மாட்டாதாம், பிறி தொன்று பிரகாசிப்பித்தாற் பிரகாசிக்கு மியல்பினை யுடைத்தாம். கண் தன்னியற்கையிலே ஒளியுடையதாயினும் இருளிற் பொருள் களைக் காணமாட்டாது. பின் அவ்விருள்நீங்கிக் கதிரொளி தோன்றி யக்கால்அக்கதிரொளியாற் றன்னொளி விளங்கப் பெற்றுப் பொருள் களையும் அக்கதிரொளியினையும் ஒருங்குகாணும். மற்றுக்கதிரொ ளியோ தானே விளங்குதலன்றியும் கண்ணொளியையும் விளக்குவ தாம். இதுபோல் இறைவ னொளியான அன்பும் தானேயும் விளங் கிப் பிறிதொன்றனையும் விளக்காநிற்ப ஆன்ம வொளியான அன்பு தானே விளங்கமாட்டாதாய் அவ்விறைவனொளி விளக்க விளங்கும் இயல்பிற்றும்.

"அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
அருளு மவனன்றி யில்லை—அருளின்
றவனன்றே யில்லை யருட் கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து'' என்னுந் திருவாக்கு மிதற்குச்

சான்றும். ஆகவே, கண்ணொளிபோன்ற ஆன்மஅன்பும் கதிரொளி போன்ற ஈசுரனன்புந் தம்முட் டன்மையினாலும் பேதமுடைத்தா தல் தெற்றெனத் துணியப்படும்.

இனிச் சூரியன் தன்னைநோக்கியவழிக் கதிரோனெனவும் தன் ஒளியை நோக்கியவழிக் கதிரெனவும் இருவேறுவகையான் வழங்கப் படுமாயினும் அவை யிரண்டுங் குணகுணிக ளாகலின் ஒன்றேயாதல் போல, இறைவன் தன்னை நோக்கிய வழிச் சிவமெனவும் தன்னன்பை நோக்கியவழிச் சத்தி யெனவும் இருவேறு வகையான் வழங்கப் படுமாயினும் சிவமுஞ் சத்தியும் குணகுணிக ளாதலின் ஒன்றேயாய் நிலைபெறும். இதனைப்

"பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றற்போ
லந்நிற மண்ணலு யம்பிகையுஞ்—செந்நிறத்த
ளெந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த னாயிருப்பனங்கு" எனவும்
"சத்தியுஞ் சிவமுமாய தன்மையில் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முயர்குண குணியுமாக
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கையெல்லாம்
இத்தைய மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்" எனவும்

சித்தாந்தச்செல்வர்தெருட்டின ரென்க. இவ்வுண்மைதேறுதார்சத்தி வேறு சிவம்வேறெனத் தாம்வேண்டியவாறெல்லாங்கொண்டு இடர்ப்படுவராகலின் அவர்க்கு அறிவுகொளுத்தல் வேண்டிப் பிரதமத்தி லெடுத்துக் கொண்ட

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தியாரு மறிகிலார்" என்னுந் திருவாக்கு அக் குணகுணி பாவ ஒருமையினை நன்கு வலியுறுத்துவ தாயிற்று என்க.

இனிச்சிவமுஞ் சிவசத்தியான அன்பும் ஒன்றேயாத லன்றியும் ஆன்மசத்தியும் அச்சிவசத்தியும் ஒன்றேயா மென்பதூஉம் 'அன்பே சிவமாவதியாரு மறிகிலார்' என்னும் அம்மேலைத் திருவாக்கினு லறிவுறுத்தப்படுகின்றது. யாங்ஙனமெனிற் கூறுதும். கதிரொளியை யின்றிக் கண்ணொளி விளங்கமாட்டாமைபோலச் சிவசத்தியையின்றி ஆன்மசத்தி விளங்கமாட்டா தென்பது மேலே பெறப்பட்டமையின் அவ்வான்ம சத்தியினேடு ஒருங்கியைந்து நின்று விளக்குஞ் சிவசத்தியும் அதனன் விளக்கமெய்தும் ஆன்மசத்தியும் இயைபினு லொன்றேயாதல்பற்றி 'அன்பே சிவமாவது' என்று திருவாய் மலர்ந்தருளினர். கண்ணுங்கதிரும் பொருட்டன்மையால் வேறேயாயினும், கண்

ணொன்றைக் காணும்வழிக் கதிரொளி உடனின்று காட்டுதலின்
அவையிரண்டும் ஒருமையுற்று நிற்கின்றன. அங்ஙனமாயினுங் கண்
கண்ணே கதிர்கதிரேயாம்; கண் கதிராகாது கதிர் கண்ணாகாது; ஆயி
னும் கதிர் கண்ணாயும் அதனின் வேறாயும்நிற்கும் அதுபோலச் சிவ
னுஞ் சீவனும் பொருட்டன்மையால் வேறேயாயினும், சீவன்ஒன்றை
விடயிக்கும்வழிச் சிவசத்தி சீவசத்தியை யுடனின்று விளக்குதலின்
அவை யிரண்டும் ஒருமையுற்று நிற்கின்றன; அங்ஙனம் நிற்பினுஞ்
சிவன்சிவனே சீவன்சீவனே; சிவன் சீவனாகான், சீவன் சிவனாகான்;
ஆயினுஞ் சிவன் சீவனாயும் அவனின் வேறாயும் நிற்கும் பெற்றியா
னென்க. இங்ஙனம் சிவசத்தி ஆன்மசத்தியோடு பேதமாதலுமின்றி
அபேதமாதலுமின்றித் துவிதமாதலுமின்றி ஏகமாதலுமின்றி இர
ண்டற நிற்றல்பற்றியே

“ఏకమేవరు ద్రోనద్వితీయాయ్యతస్థే”
ఏకమేవాద్వితీయంబ్రహ్మ”

என்னும் உபநிடத வாக்கியங்க ளெழுந்தன. சிவஞான சித்தியும்

“உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி நின்றன னீங்கா தெங்கும்’ என்றிவ்வியல்பை

நன்கெடுத்து விளக்கியது. இவ்வுண்மை யுணராத ஏகான்ம வாதி
கள் அத்துவித மென்பதற்கு ஒன்றென்று பொருள்கொண்டு பிர
மம் ஒன்றே யுள்ளதெனவும் இரண்டாவதொருபொருளில்லையென
வுந் தமக்குத் தோன்றியவா றெல்லா முரைப்பர். ஒன்றென்னும்
பொருளை யுணர்த்துதற்கு ஏகமென்னுஞ்சொல் லுண்டாகலின் மீட்
டுமதனை உணர்த்துதற்கு அத்துவிதமென மேலுமொருசொல் வே
ண்டல் மிகைப்படக் கூறுதல் என்னுங் குற்றமாம் மற்று அத்துவித
மென்னுஞ்சொல்லின் உண்மைப்பொரு ளியாதென்பார்க்கு ஒன்றை
உணர்த்துதற்கு ஏகமெனுஞ் சொல்லும் இரண்டை உணர்த்துவதற்
குத் துவிதமெனுஞ்சொல்லுங் காணக்கிடத்தலால் ‘அத்துவிதம்’ என்
பது இவையிரண்டின் வேறான பொருளுடைத்தாதல் நன்கு விளங்
கும். சிவம் உயிர்வேறு தான்வேறெனத் துவிதமாய் நில்லாமலும்,
சிவம் வேறுபொருளின்றித் தான் ஒன்றேயாய் நில்லாமலும் என்றும்

உலகுயிர்களோடு ஒன்றும் இரண்டு மாகாத ஓர் அற்புத இயைபுற்று நிற்றலின் அவ்வற்புத இயைபைக் குறிக்கவே 'அத்துவிதம்' என்னுஞ் சொற்பிரயோகங் காணப்படுவதாயிற்று. எனவே, அத்துவிதம் என்னுஞ் சொற்பொருள் ஒன்றும் இரண்டுமாகாத 'இரண்டன்மை' என்பதேயாகும். ஆகவே, பொருட்டன்மையால் வேறேயாயினுங் கலப்பால் ஒன்றேயாய் நிற்கும் அத்துவித இயைபு பற்றிச் சிவசத்தியும் அதனுன் வியாபிக்கப்பட்ட ஆன்மசத்தியும் ஒன்றென "அன்பேசிவ மாவதியாரு மறிகிலார்" என்பதனுன் வற்புறுத்தருளினுர் என்க.

இனி ஆன்மா ஆணவமலவயப்பட்டு அறிவிழந்து கிடக்கின்ற பெத்தக் காலத்தும் சிவசிற்சத்தி உடனின் றுபகரித்து வருமாயின் அதனை அது தெரிந்துகொள்ளாமை என்னையெனின்;- சூரியனெதிரிலே நின்றுலுங் குருட்டுக்கண் அச்சூரியனையும் ஏனைப் பொருள்களையுங் காணமாட்டாதவாறுபோல், ஆணவமலத்தாற் கவிக்கப்பட்ட ஆன்மாவும் தன்னேடுடனின் றுபகரித்துவருகின்ற சிவசத்தியைக் காணமாட்டாதாகும். கண்ணிற் காண்டற்குரிய ஆற்றலிருப்பினும் அது மேகபடலத்தாற் கவரப்பட் டிருத்தலின் கதிரொளியினுற் பயனெய்தா தாகின்றது. மற்று அப்படல நோய் பழுத்து முதிர்ந்தவுடன் பரிகாரி கருவிகொண்டு அப்படலத்தை உரித்தெடுக்கப் பின் அக்கண்ணெளி கதிரொளியைப்பற்றிக்கொண்டு விரிந்துவிளங்குதல் போல இறைவனும் மாயையென்னுங் கருவிகொண்டு ஆணவமலத்தின் முதிர்ந்தபக்குவங்கண்டு அதனைச்சேதித்ததுணையானே ஆன்மாவில் முன்உடனின்ற சிவசத்தியின் பிரோகத்தைப் பெறுதுகிடந்த ஆன்மசத்தி தலைப்பட்டெழுந்து அதனைப் பெற்றுக்கொள்ளும். இது

"அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணர்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்—அருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலவர்த்துந் தாமரைபோல்
நேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்" என்னுஞ் சிவஞான போதத்
திருவாக்கான் நன்கு விளக்கப்பட்டமை காண்க.

இனி அவ்வாணவத்தின் வேறுய்ப்பிரிந்த ஆன்மசத்தி சிவசத்தியோ டொருமித்து நின்றவழி அவையிரண்டும் ஒன்றுய்ப் போகுமென் றுரையாமோவெனின்;- உரையாம். பெத்தத்தில் நின்றவாறே முத்தியினும் ஆன்மாச் சிவத்தோடு அத்துவித இயைபுற்று நிற்குமேயல்லது தன்முதலிழந்து போமாறு சிறிதுமில்லை என்க. இஃது

"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்

தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்ற தாயுமான சுவாமிகள் திருவாக்கானுந் துணியப்படும். அற்றேல், பெத்தநிலைக்கும் முத்திநிலைக்கும் வேறுபாடென்னையெனின்;-பெத்தத்தில் ஆன்மாவின் அறிவுசெயல்க ளெல்லாம் ஆணவ வயப்பட்டுத் தோன்றும்; முத்தியில் அவையெல்லாம் சிவசத்தி வயப்பட்டு விளங்கும், அதுபற்றி ஆன்மா ஒருமுதலன்று மொழிந்த தில்லையாம். இரவின்கண் விளங்கித் தோன்றுகின்ற நட்சத்திர கணங்கள் சூரியன் றோன்றுதலும் தம் ஒளிமழுங்கி விளங்காவாயினும் அவை பகற்காலத்து முண்டென்பது நிச்சயிக்கப் படுதல்போலப், பெத்தக் காலத்து விளங்கிய ஆன்ம அறிவுசெயல்கள் முத்தியில் இறைவ னொளியான் விழுங்கப் பட்டு விளங்காவாயினும்ஆண்டும் அவையுண்டென்பது துணிபேயாம்.

"வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனுங்
கண்டடாய் மன்னுதலைக் காண்" என்றசிவஞானபோதத் திருவாக்கினையே புலப்படுத்துவதாகும். ஆகவே, பெத்தநிலை முத்திநிலை யிரண்டினும் ஆன்மா வொருதனி முதலாய் உண்டென்பது பெறப்படுமென்க.

இனி 'அன்பே சிவமாவ தியாருமறிந்தபின்' என்றதனால் அன்பே சுத்தசிவ சொரூபமாகு மென்பதூஉம், வினையான்மாக்க ளெல்லாரிடத்தும் விளங்கப் பெறும்அன்பும் அவற்றோடு உடனின்றுபகரித்து விளங்கி வருகின்ற சுத்தசிவசத்தியே யாகுமென்பதூஉம் கடைப்பிடித்தல் வேண்டுமென வற்புறுத்தவாறாயிற்று.

இவ்வுண்மையை அறிவார்க்கன்றி ஏனையோர்க்குச்சிவமாய் அமர்ந்திருக்கும் முத்திநிலைவாய்ப்பது கூடாதாகலின் 'அறிந்தபின்'என்று விசேடித்துக்கூறினார்.எனவே,ஞானத்தாலன்றிப்பக்தி உண்டாதல் இல்லையென்பதூஉம் இதனாற் பெறப்படுவதாகும். வேனிற்காலத்து வெப்பத்தால் வருந்தி விடாய்த்துச் செல்கின்றான் ஒருவன் பழக்குலை மிகுதியுமுடைய கொடிமுந்திரிப் பந்தரின்கீழ் இருப்பினும், அப்பழம் உண்ணப்படுவதெனவும் அதன் இனிய இரசம் நீர்வேட்கையைத் தணித்துத் தேகாரோக்கியத்தைத்தருவதெனவும்

அறியாதவனாயின் அதனாற் பயன் பெறாது வருந்திக்கிடப்பன். அதுபோலத் தன்மாட்டுள்ள அன்பென்னுங் குணம் சிவசத்தியோடு இயைந்து நிற்றலினாலே சுத்தசிவசொரூபமாகும் என்றுணர்ந்து ஞான விசாரணையினாலறிந்தாலல்லது அவனுக்குப்பக்தியோகானுபவம் சிறிதும் உண்டாகாது. அன்பு சிவசொரூப மாதலை ஞானவிசாரணையினால் உணராத ஆன்மாக்கள் எத்தனை கோடி கோடியாகச் சுத்த உலகப் பெருஞ் சேற்றில் விழுந்து புரண்டு மக்கள் யாக்கையாற் பெறும்பயனை இழந்துபோகின்றனர்! நாடோறும் பொருள்தொகுப்பதற்கென்றே அவர்கள்படும் பாட்டையும் அவர்கள் மிருகங்கள்போலஉண்டு உறங்கிக்கழித்தலையுங்கண்டு அவர்க்கிரங்கி ஞானோபதேசம் செய்ய முந்தும் பெரியார் பேருரைகளையும் அவர் கடைப்பிடியாது வறிதாக்குகின்றனர்! அந்தோ!

இனிப் பக்தி நிகழ்தற்கு ஞானம் ஏதுவாதலை உணராதார் சிலர் ஞானமேமுத்தி என்பார். ஞானம் என்பது ஒன்றனை அறியும் ஆராய்ச்சி அறிவாம். பக்தி என்பது அங்ஙனம் அறிந்ததனை அனுபவித்துநிற்கும் நிலையாம். திராட்சப்பழம் நிரம்பச் சுவை உள்ளதெனவும் அதனை உண்டாற் களை தீருமெனவும் அறிந்த அறிவு ஒன்று; அங்ஙனம் அறிந்தபின் அப்பழத்தைப் பறித்துச்சுவைத்து இன்புற்றிருந்த நிலை பிறி தொன்று. திராட்சப்பழத்தை அறிந்த அறிவே, அதனை உண்டால் விளையும் இனிமையைப்பயவாது. அதுபோல, அன்பு சிவசொரூபம் என்றறிந்த ஞான உணர்ச்சி பின் பக்தியைப் பயப்பதற்கு ஓர் ஏதுவாகுமேயல்லது அவ்வுணர்ச்சியே பக்திநிலையாதல் ஒருவாற்றானும் பெறப்படுவதில்லையென்க. ஆதலால் ஞானமே முத்தியாமென்பார் கூற்றுப் பொருந்தாதெனமறுக்க. அற்றேல், “ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர் என்றும்” “ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம் நல்லவாகமஞ் சொல்ல” என்றும் போந்த திருவாக்கின் கருத்தென்னை யெனின்; ‘சிவனடியைச்சேர்தல்’ பக்தியும் அதனைப் பயப்பதற்கு ஏதுவாவது ஞானமும் ஆகும்;என்பது தெற்றெனப் புலப்படுத்தற் பொருட்டே ‘ஞானமே சிவனடி’என்று உரையாமல் “ ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர் ” என்றுரை கூறினர். ‘ஞானத்தால் வீடு’ என்புழியும் வீட்டினை அடைதற்கு ஞானம் ஏதுவாமென்பதே பொருள்.

இனி எனை ஒருசாரார் ஞானமின்றியும் பக்தி நிகழு மென்று உரைப்பார். மேலேகாட்டிய திராட்சப்பழ வுவமையில் வைத்து அது பொருந்தாமை தெளியப்பட்டதாகலின் அவர் உரை வழுவுரையா மென்க. அற்றேல், கண்ணப்பநாயனார் முதலியோர் பால் ஞானமின்றியும் பக்தி நிகழக்கண்டதென்னையெனின் ; அவர்க்கு முன்னுண்டான பிறவியிலெல்லாம் ஞானத்துறையிற்படிந்து அதன்கண் எல்லை கண்டஅவரது தூய ஆன்மசக்தியானது அந்த ஞானத்தின் பெரும்பய னைப்பழுத்த மெய்ப்பக்தி நிலை வசப்பட்டு அவ்வண்ணமாய் நின்றதாகலின் அவ்வாறு அப்பக்திமாத்திரமே அவர்பால் நிகழ்வதாயிற் றென்க.

இனி 'அன்பேசிவமா யமர்ந்திருந்தாரே' என்றது அப்பத்தி நிலையிலுண்டாம் அனுபவத்தைத் தெரித்தது. உயிர் தன்னைஅன் பென்னுஞ்சிவசத்தியுருவாய்க்கண்டவழி, அவ்வுயிர்தான் இதகாறும் ஆன்மா, சீவன் எனப் பெயர்பெற்றுநின்ற நிலைகடந்து அப்பெயர் பெறுதற்கு உரியதன்றாய்ச் சிவம் என்னும் பெயர்பெற்று அச் சிவமேயாய் நிற்பதாயிற்று. அற்றேல், உயிர் என்று ஒருதனி முதல் ஆண்டு இல்லைபோலுமெனின் ;— அற்றன்று, உள்ளதொரு பொருள்இல்லாத சூனியப்பொருளாதல் யாண்டும் இல்லையென்னுஞ் சற்காரியவாதம் கடைப்பிடித்துரைக்குஞ் சைவசித்தாந்தத்திற்கு அஃது அடாதென்றொழிக. உயிர் ஆண்டு உளதாயினும் அது சிவசத்தியான் விழுங்கப்பட்டுச் சுத்த சிவவுருவாய் நிற்குமாகலின் ஆண்டதனை வேறுள்ளதுபோலவும், சீவத்துவ முடையதுபோலவும் வைத்து ஆன்மாவெனக் கூறுதல் இழுக்காமென்க. இதுபற்றியன்றே ஆசிரியர் திருமூலர்,

> " உரையற்றதொன்றை உரைசெயுமூமர்காள்
> கரையற்றதொன்றைக் கரைகாணலாகுமோ
> திரையற்றநீர்போற் சிந்தைதெளிவார்க்குப்
> புரையற்றிருந்தான் புரிசடையோனே " என்று

திருவாய்மலர்ந்தருளினார். இம்மெய்ப்பக்தி நிலையிலுண்டாம் சிவானுபவ வுண்மை அவ்வனுபவத்தின்கண் ஒன்றுபட்டு நின்ற மாணிக்வாசக சுவாமிகள்,

"வான்கெட்டுமாருதமாய்ந் தழனீர்மண்கெடினுந்
தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத்தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வுகெட்டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ"

"அவமாயதேவரவகதியிலழுந்தாமே
பவமாயங்காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாயசெஞ்சுடர் நல்குதலுநாமொழிந்து
சிவமானவாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ"

"முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப் பழவினைகள்பாறும்வண்ணம்
சித்தமலமறுவித்துச் சிவமாக்கியெனையாண்ட
அத்தனெனக்கருளியவா றார்பெறுவாரச்சோவே"

என்று திருவாய்மலர்ந்தருளிய அருமைத் திருவாக்குகளால் அறிவுறுக்கப்பட்டமை காண்க.

ஓம்.



திருச்சிற்றம்பலம்.

# பிரணவ இரகசியம்.

பிரணவம் என்பது எல்லாச் சத்தங்களுக்கும் மூலமாய்த் தோன்றும் இயற்கை நாதமாம். இதழ் நா பல் அண்ணங்களின் செயற்கையாற் பலதிறப்பட்டுத் தோன்றும் மற்றை எழுத்தோசைகள்போலாது, உலகத்தியற்கையாய் எழுந்து அவ்வோசைகளெல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாய் முன் நிற்பதாகலின் பிரணவ ஓசை கழிபெருஞ் சிறப்புடையதாயிற்றென்க. காதில் வைத்தறியக் கிடந்த வழிப் பிறந்த சங்கோசையும், கரை மருங்கு நின்றவழி அறியக் கிடந்த கடலோசையும் ஓ வென ஒலமிட்டிரைதல் காணப்படுதலால் இஃதொன்றுமே உலகத்தியற்கையாய்ப் பிறக்கும் இயற்கை நாதமென்பது பெறப்படும்.

இனி உலகத்துச் செயற்கையாற் றோன்றும் உயிரு மெய்யுமாகிய விகார ஒலிகளெல்லாம் புறத்தே தோன்றும் அறிவில்லாத உலக இயற்பொருள்களையும் அகத்தே ஆன்மாவின்கண் உண்டாம் உணர்வுவேறுபாடுகளையும் தெரிவிப்பனவாம். ஆகையால், அவ்விகார ஒலிவழிப்பட்டு நடைபெறும் ஆன்ம அறிவானது அவ்விகார ஒலிகளோடு ஒற்றுமைப்பட்டு அறிவுக்குக் கோசரமாகும் பலதிறப்பட்ட சேதனு சேதனப் பொருள் வயப்பட்டு நின்று தானும் பலமுகமாய் விரிந்து விகாரப்படுகின்றது. இதனால், ஆன்ம அறிவுக்குப் புலனாய்த் தோன்றுவன வெறுஞ் சத்தரூபமாய் விளங்குஞ் சத்தப் பிரவஞ்சமும், குணங்கள் திரண்ட வெறும் பொருள்மாத்திரையாய் விளங்கும் அர்த்தப் பிரவஞ்சமும் என இரண்டாமென்பதூஉம் இவையிரண்டனுள் அர்த்தப் பிரவஞ்சத்தை அறிவுபற்றியவழி அதனோடு இயைபுற்றிருக்குஞ் சத்தப் பிரபஞ்சமும், சத்தப் பிரபஞ்சத்தை அறிவு பற்றியவழி அதனோடு ஓர் இயைபுற்றிருக்கும் அர்த்தப் பிரபஞ்சமும் உடன்றோன்று மென்பதூஉம் இனிதுபெறப்படுவனவாம். இது, தெங்கு, மா, பலா, பனை என்றற் றொடக்கத்துப் பொருள்

களை நினைந்தவழி அவற்றை அறிவிக்கும் சொற்களும், அச்சொற்களை நினைந்தவழி அவற்றால் அறிவிக்கப்படும் அப்பொருள்களும் உடன் ரொன்றாதலில் வைத்துக் கண்கூடாய் அறியப்படும். ஆரியவேதோ பநிடதநூலாராய்ச்சியினும் மேனாட்டுத் தத்துவநூலாராய்ச்சியினும் மிகவல்லவராய் விளங்கிய மாக்ஸ் மூலபண்டிதரும் இவ்வுண்மையை இனிதறிந்து ஒரு சொல்லை நினையுங்கால் அதன் பொருளும், ஒரு பொருளை நினையுங்கால் அதன் சொல்லும் பிரிவின்றி ஒருங்கே உள்ளத்தில் தோன்றுமென்று நன்கு விளக்கி ஒருநூல் எழுதினார். ஆகவே, மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பஞ்சேந்திரிய வழிச்சென்று பொருள்களைப் பற்றும் மனமானது அங்ஙனம் பற்று தலால் ஆன்ம அறிவைப் பலவாறு விகாரப்படுத்தி அவ்வறிவை விரிந்து விளங்க ஒட்டாது அதன் ஆற்றலை இழப்பித்தலால், அம்மன ஓட்டத்தை ஒடுக்கவேண்டுவானுக்கு அவ்வர்த்தப் பிரபஞ்சத்தை ஓவாது நினைப்பிக்குஞ் சத்தப் பிரபஞ்சத்துட்பட்ட பலதிறப்பட்ட விகார ஒலி வழியே அறிவு செல்லாவாறு மறித்துச் சுத்தநாத மய மாய் விளங்கும் பிரணவ ஒலியிலே அதனை நிறுத்துதலே செயற்பா லதாம். தாயுமானச் செல்வரும்,

"காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோட" என்று இவ்வுண் மையை இனிது விளக்கி யருளினார்.

இனி இப்பிரணவ ஒலி சமட்டியும் வியட்டியுமாம் ஈரியல்பு முடைத்து. இதுதன்னை நோக்கியவழித் தான் இயற்கையின் எழும் ஓரொலியாய் நிற்றலிற் சமட்டி ரூபமும், பல்வேறு வகைப் பட்ட மற்றை எல்லா ஒலிகளும் தோன்றுதற்குத் தான் இடந்தந்து தானும் அவற்றுள் வியாபித்துப் பலவாய் நிற்றலின் வியட்டி ரூபமும் கொண்டு விளங்கா நிற்கின்றது. இதனை,

"ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனு மோங்காரத் துள்ளே யுருவரும்
ஓமெனு மோங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே" என்று திருமூல மகா யோகிகளும் இனிதெடுத் தருளிச் செய்தனர்.

இனி இவ்வோங்காரமாகிய பிரணவ வுருவே சிவந்தனக்குரிய உருவாகலின் அவ்வுருவம் ஒன்றுமாய்ப் பலவுமாய் நிற்றற்கு ஏற்ப அச்சிவமும் ஒன்றுமாய்ப் பலவுமாய் நிற்கு மென்க. இதனையே தாயுமானவர் மேற்காட்டிய திருவாக்கில் 'ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்

குயிராய் ஆடுங் கருணைப் பரஞ்சோதி' என்று வைத்து விளக்கினர். நடராசப் பெருமானின் சகளமங்கள அருட்கோல இயல்பினை உற்றறியும் வழி இவ்வுண்மை நன்கறியக் கிடக்கும். நடராசப் பெருமானைச் சூழ்ந்து விளங்குந் திருவாசியே ஓங்காரமான பிரணவ உருவாகும்; அத்திருவாசியி னிடையே பஞ்ச கிருத்திய ஆனந்த நடனம் புரியும் நடராசப் பெருமானே அப்பிரணவ அருமைத் திருமேனியின்கண் உருத்துத் தோன்றும் இறைவனாவன்; இது

''ஓங்காரமே நற்றிருவாசி யுற்றதனின்
நீங்கா வெழுத்தே நிறைசுடராம்—ஆங்காரம்
அற்றாரறிவ ரானம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்'' என்னுந் திருவாக்கானும் அறியப்படும்.

''நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்'' என்ற திருவாசகச் சுருதியின்படி ஒன்றுமாய்ப் பலவுமாய் நிற்கும் சிவமும், அச்சிவத்தோடு ஒற்றுமையுற்று அவ்வாறே ஒன்றுமாய்ப் பலவுமாய் நிற்கும் பிரணவமுந் தம்முள் அங்காங்கி பாவமாய் ஒன்றுபட்டு விளங்கலால், அச்சிவத்தால் இயக்கப் படுகின்ற பிரணவம் தான் எல்லா ஓசைகளையும் தன்கண் அடக்கிக்கொண்டு நிற்பதென்பது அதன் வியட்டி ரூபத்தை உற்றாராய வல்லார்க்கெல்லாம் நன்கு விளங்கும். ஓம் என்னும் இப்பிரணவ ஓசையானது அ, உ, ம் என்னும் மூன்றோசைகளைத் தன்னுள் அடக்கி நிற்பதாகும். ஒருவன் மூடியிருந்த வாயைத் திறந்த மாத்திரையினாலே அகர வோசை பிறவா நிற்கின்றது; அங்ஙனம் பிறந்த அவ்வோசையானது இரண்டிதழையுங் குவிக்கு முயற்சியாற் சிறிது விகாரமுறுத்தப்படுதலின் உகரந் தோன்றுகின்றது; அங்ஙனஞ் சிறிது விகார முறுத்தப்பட்டு நின்ற அவ்வோசை பின்னும் வாயை மூடும்வழி ஒட்டும் இதழ் முயற்சியால் மகரம் தோன்றுகின்றது. இனி இவ்வாறு அகரம் பிறந்து உகரம் தோன்றுதற்கு இடையே நாவின் றொழிலால் இகரம் பிறப்பதாகலின் அ, உ, ம் என்னும் இவ்வோசைகட்கு இடையே இகரம் மறைவாய் உண்டென்பது அழுங்கி அமிங்கி தமிழ் தமுழ் என இகரம் உகரமாய் உச்சரிக்கப்படுமாற்றால் இனிது பெறப்படும். இனிஇவ்வகரத்தின் நீட்டமே ஆகாரமும் இகரத்தின் நீட்டமே ஈகாரமும் உகரத்தின் நீட்டமே ஊகாரமுமாம். இனி இவ்வகரமும் இகரமும் புணர்தலால் எகரமும், இதன் நீட்டம் ஏகாரமும், அகரமும் உகரமும் புணர்தலால்

ஒகாரமும் இதன் நீட்டம் ஓகாரமும், அகர இகர யகரங்கள் புணர்தலால் ஐகாரமும், அ உ வகரங்கள் புணர்தலால் ஔகாரமுமாகஎல்லா உயிரெழுத்துக்களும் பிறந்தன. இனி அரை மாத்திரை யளவாய் ஒலிக்கும் மகர ஒற்றொலி குழந்தைப் பருவத் தெல்லார்க்கும் இயற்கையிற் றோன்றுவதாகலின் அஃது ஏனை எல்லா மெய்யெழுத்துக்களுந் தோன்றுதற்குக் காரணமாம்.

இனி இப்பிரணவத்தின்கண் விரவி ஒலிக்கும் அ உ ம் எனும் அம்மூன்றோசைகளும் சிருட்டி திதிசங்காரம் என்னும் மூன்று கிருத்தியங்களையும் அறிவிப்பனவாம். அகரம் முதன்முதற் றோன்றுகின்ற ஒலியாகலின் அது சிருட்டியினை உணர்த்துவதாகும்; உகரம் அங்ஙனந்தோன்றிய ஓசை சிறிது விகாரமுற்று நிலைபெறுவதாகலின் அது திதியினை உணர்த்துவதாகும். மகரம் முன்றோன்றிய அவ்வோசை ஒடுங்குவதாகலின் அது சங்காரத்தை உணர்த்துவதாகும்; ஆகவே, சிருட்டித் தொழிற்குரிய பிரமாவும் திதிக்குரிய திருமாலும் சங்காரத்திற்குரிய உருத்திரனும் எனும் மூவேறு சத்திகளுடைய மூன்று சத்தர்களும், இனி அம்மூன்றக்கரங்களுந் தோன்றுதற்கு நிலைக்களனான விந்துநாதம் என்னும் இரண்டு தத்துவங்களுக்கும் உரியரான மகேசுரசதாசிவரும் ஆகிய பஞ்சமூர்த்திகளும் இப்பிரணவ மந்திர உறையுளில் வதிதருவரென்க.

"எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வம்
அகர வுகரம் மகரத்தாம்" என்பதிதற்குப் பிரமாணம்.

இனி விந்துவும் நாதமும் என்னும் இரண்டும் அம்மற்றை மூன்றக்கரங்களுக்கும் நிலைக்களனவது யாங்ஙனமெனின்;—விந்து என்பது அசேதனப் பிரபஞ்சங்கள் அனைத்திற்குங் காரணமாகிய சுத்தமாயையாம். இஃது அருவாய்த் தன் கீழுள்ள எல்லாத் தத்துவ புவனங்களையும் வியாபித்துக்கொண்டுபுள்ளிவடிவினதாய்விளங்கும். இச்சுத்தமாயையினை உள்ளிருந்து இயக்கும் இறைவனருட்சத்தியினால், இதன்கண் ஓர் இயக்கம் உண்டாம். இப்புள்ளி இயங்கும்போது உண்டாவது ஓர் ஓசையாகலின் அவ்வோசையேநாததத்துவமாகும். அப்புள்ளி இயங்குங் காலத்து நீள உண்டாம் வடிவு வரிவடிவாகலின் அந்நாத தத்துவத்திற்குரிய வடிவு வரிவடிவேயாம்.

ஆங்கிலத்திற் பீசகணித சாத்திரம் வல்லாரும் புள்ளியென்பது அறிவாற் குறிக்கப்படுவதே யல்லது தான் ஒரு பரிமாண மில்லாததென்றும், வரியென்பது அப்புள்ளியின் இயக்கமே யல்லது அகலங்கனம் முதலிய பரிமாண மில்லாத தென்றுங் கூறினர். ஆகையால், அருவாய் அறிவால் மாத்திரங் குறிக்கப் படுகின்ற தன்மை யுடையதாகலின் சுத்தமாயை புள்ளி வடிவினதென்றும், அதன் இயக்கமாகிய நாதம் வரிவடிவினதென்றும் சித்தாந்த நூல்கள் கூறினமை பெரிதும் பொருத்தமேயாம் என்க. இனி இவ்வியட்டிப் பிரணவத்தின் கண்ணவான அ உ ம் என்னும் மூன்றக் கரங்களில் அகரமே விந்து வடிவாகிய புள்ளியாகும், உகரமே அவ்விந்துவின் இயக்கமான நாதத்தின் வரிவடிவாகும்; அவ்வரிவடிவின் கடைப் புள்ளியே மகரமாகும். பண்டைக்காலத்துத் தமிழ்ச் சிலாசாதனங்களில் அகரம் புள்ளிவடிவாகவும் உகரம் வரிவடிவாகவும் மகரம் பகரத்தினுட் புள்ளிவடிவாகவும் எழுதப்பட் டிருக்கின்றன. மகரம் பகரத்தினுட் புள்ளிவடிவாய் நிற்கு மென்பதை ஆசிரியர் நச்சினார்க்கினியருந் தொல்காப்பிய எழுத்ததிகார வுரையிலே இனிது விளக்கினர். இனித் தனிமெய் யெழுத்துக்களெல்லாம் தலையிற் புள்ளிபெற்று நிற்கு மென்றும், அவை அகர வுயிரோடு புணர்ந்தவழி அப்புள்ளி அவற்றுள் மறையுமென்றும் ஆசிரியர் தொல்காப்பியனர் "புள்ளிவிட்டவ் வொடு முன்னுருவாகியும், ஏனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தும்" என விளக்கியருளினமையானும் அகரம் புள்ளிவடிவினதென்பதும், அப்புள்ளி தனி ஒற்றெழுத்துக்களி னின்றும் வேறுபிரிந்து தனியே நிற்கும் வழியே அம்மெய்யெழுத்துக்கள் தனி ஒற்றுக்களென்று வழங்கப்படு மென்பதும், அப்புள்ளியோடு சேர்ந்து நின்றவழி அவை உயிர்மெய்யென வழங்கப்படு மென்பதும் நன்கு தெளியப்படும். ஆகையால், புள்ளிவடிவாகிய விந்து தத்துவமும் வரிவடிவாகிய நாத தத்துவமும் அம்மூன்றக்கரங்களுக்கும் நிலைக்களமா மென்க. இங்ஙனம் இதன் வியட்டி ரூபத்தைக் காணுமிடத்து இப்பிரணவமொழி எல்லா ஓசைகளும் பிறத்தற் கிடனாய்ச் சத்தப் பிரபஞ்ச மனைத்திற்குங் காரணமாய் நிற்றல் இனிதறியப்படுகின்றது.

இனி இப்பிரணவம் அர்த்தப் பிரபஞ்சத்திற்குங் காரணமாம். விந்து தத்துவ மெனப்படும் வட்டமான சுத்த மாயையை அதனுட் கலந்துநின்ற திருவருட் சத்தியானது கலக்கிய மாத்திரையினாலே அதன்கண் ஓர் சுழன்ற இயக்கமுண்டாம். இச்சுத்தமாயை இங்ங

னஞ் சுழன்ற இயக்க முடைத்தாய் நிற்கும் அவசரத்தினையே குண்டலி யென்று வழங்குவர். இவ்வாறதன்கண் உண்டாம் அச்சுழன்ற இயக்கத்தால் அம்மாயையின் அணுக்கள் அலையலையாய் எழுந்து ஒன்றை ஒன்று தாக்குதலின் ஒரு நாதமுண்டாம். தயிரை மத்திட்டுச் சுழற்றிக் கடைந்தவழி அதனிற் றிரண்டெழுந்த மதுரமான வெண்ணெய்போல அச்சுத்த மாயையின்கீழ் உள்ள அதோ மாயை அந்நாதத்தாற் கடையப்பட்டுத் தன்கண் உள்ள அணுக்களெல்லாம் ஒன்றோடொன்று ஒட்டிப் பிரகிருதி மாயையையும் அதன்கண் இவ்விவித அண்டபேதங்களையும் உற்பத்தியாக்கின. ஒரு தட்டிலே மிக நுண்ணிய பொடிகளைப் பரப்பி அற்புதமாக இயற்றின இயந்திர சகாயத்தால் ஒரு குழல்வழியாய ஓர் ஒலியைப் போக்கினுல் அவ்வொலி அத்தட்டின்கண் உள்ள பொடியிற்படிந்து அதனைப் பலவேறுருவுடையதாக்கும் உண்மையினை ஆங்கில தத்துவ சாத்திரிகளும் கண்டறிந் துரைக்கின்றனர். எனவே, விந்து வென்னுஞ் சுத்த மாயையில் உண்டாம் நாதமே இப்பிரபஞ்ச சிருட்டிக்கு ஏதுவாவதாம். இனி இச்சத்தத்தினோடு ஒருங்கொத்து உடன் நிகழும் அக்கினியே இப்பிரபஞ்சங்களைத் திரும்பவும் தத்தங் காரணங்களுள் ஒடுக்கிச் சங்கார கிருத்தியத்தை இயற்றுவதாகும். இம்முறையினை நடராசப் பெருமான் திருவுருவ அமைதிகளே நன்கு விளக்கும். நடராசப் பெருமான் திருக்கரத் தமர்ந்திருக்கும் வட்டமான தமருகவாயே சுத்தமாயையாம். அத்தமருகத்திற் றாக்கும் பெருமான் திருக்க்கரவிரல்களே சுத்தமாயையைக் கலக்கும் திருவருட் சத்தியாம். அங்ஙனந் தாக்கியவழி அத்தமருகத்திற் றோன்றிய நாதமே பிரபஞ்ச சிருட்டிக்கு ஏதுவாவதாம். அங்ஙனஞ் சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சஞ் சிலகால் நிலைபெறும் வண்ணஞ் செய்வதே அமைந்த திருகரத்தின் கிரியையாம்; இனிப் பெருமான் மற்றொரு கரத்தில் அமைந்த அக்கினியே அந்நாத தத்துவத்தோடு ஒன்றுபட்டுத் தோன்றிப் பிரபஞ்சங்களைச் சங்கரிக்கும் அக்கினி தத்துவமாம். பௌதிக சாத்திர பண்டிதர்களும் அக்கினி பொருள்களின் அணு ஆகருஷண சத்தியைக் குறைத்து அவற்றை அழிக்குமென்பர். இவ்வுண்மைகளெல்லாம்,

"பூமலிகற்பகப்புத்தேள்வைப்பும்
நாமநீர்வரைப்பின் நானிலவளாகமும்
ஏனையபுவனமும் எண்ணீங்குயிருந்

தானேவகுத்ததுன் தமருகக்கரமே
தனித்தனிவகுத்தசராசரப்பகுதி
யனைத்தையுங்காப்பதுன்னமைத்தகைத்தலமே
தோற்றுபுநின்றவத்தொல்லுலகடங்கலும்
மாற்றுவதாரழலமைத்ததோர்கரமே
ஈட்டியவினைப்பயனெவற்றையுமறைத்துநின்
றூட்டுவதாகுநின்னூன்றியபதமே
அடுத்தவின்னுயிர்கட்குஅளவில்பேரின்பங்
கொடுப்பதுமுதல்வநின்குஞ்சிதபதமே'' என்று குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்தவாற்றால் நன்கு விளங்கும்.

இங்ஙனம் நாதபிந்து வடிவமாகிய பிரணவம் அர்த்தப் பிரபஞ்சத்துள் இவ்வண்ட சரீரத்தின் சிருட்டி திதிசங்காரங்களுக்குக் காரணமா யிருத்தல் போலவே, இப்பிண்ட சரீரத்திற்குங் காரணமாய் நிற்பதாகும். இந்தப் பிண்டசரீரத்தில் மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னும் ஆதார சக்கரங்கள் ஆறும் இவற்றின் மேற்பட்ட பிரமரந்திரமென்னும் சக்கரமொன்றும் இருக்கின்றன. இவ்வாறாதார சக்கரங்களையும் ஊடுருவி வியாபித்துக்கொண்டு சுத்ததேசோமயமாயும் நாதவுருவாயும் இருக்கும் சுழுமுனை நாடியானது பிரமரந்திரமளவுஞ் செல்லுகின்றது. இந்தச் சுழுமுனை நாடியின் அடியில் மூலாதாரத்திலே சுழன்ற இயக்கத்தினையுடைய குண்டலிசத்தி யிருக்கின்றது. இதற்குப் பிரமாணம்

"மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலியுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே" என்பது திருமந்திரம். பாம்பு மண்டலித்தாற்போ லிருக்கும் இக்குண்டலி நாடியின் சுருக்க விரிவுகளாற் பிராணவாயுவும், அப்பிராண வாயுவினால் அக்கினியுமுண்டாய் இத்தேகத்தை நடை பெறுவிக்கின்றன. இக்குண்டலி நாடியாகிய சுத்தமாயையே பிரணவ ஓங்காரத்தின் கீழ்நின்ற அகரமாகிய புள்ளிவடிவாம்; அக்குண்டலி நாடிமுதற்கொண்டு பிரமரந்திரமளவுஞ் செல்லும் சுழுமுனை நாடியே அப்புள்ளியின்மேற் செல்லும் உகரமாகிய வரிவடிவாகும்; அச்சுழுமுனையின்மேற் கவிந்திருக்

கும் பிரமரந்திர வட்டமே அவ்வரிவடிவின்மேற் றோன்றும் மகரமாகிய புள்ளிவடிவாம். இங்ஙனம் புறத்தே வரிவடிவிற் காணப்படும் ஓகாரவடிவு அகத்தே இச்சரீரத்தினும் குண்டலியினும் சுழுமுனையினும் பிரமரந்திரத்தினும் வைத்துக் காணப்படும். இவ்வாறு இப்பிண்ட சரீரத்தின்கண் அமைந்த பிரணவத்தை ஆன்மாவானது அகமுகமாய் நின்று தரிசித்தற் பொருட்டு அதற்கு நினைவினை எழுப்பவே சிவாலயங்களிற் சிவலிங்க வுருவந் தாபிக்கப்பட்டவாறும். சிவலிங்கத்தில் வட்டமா யிருக்கும் வடிவே விந்து தத்துவமாகும்; அவ்வட்டத்தின் நடுவில் நீண்டு நிற்குங் குறியே வரிவடிவினதாம் நாததத்துவமாகும்; அக்குறியின் மேன்முனையே பிரமரந்திரமாம். இவ்விரகசியார்த்தங்கள் இனிது பொருந்தப்பெற்றபிரணவவுருவாம் சிவலிங்கப் பெருமானைப் புறத்தே தரிசித்த மாத்திரையில் இதனுண்மை யுணர்ந்தார்க்கு அகத்தே யுணர்வு மடங்கிச் சென்று அப்பிரணவம் அகத்தே அமைந்த முறையைக் குண்டலியினின்றும் தியானித்தவாறே முறைமுறையே எழும்பிச்சுழுமுனைநாடி வழிச்சென்று பிரமரந்திரத்திற் சென்றடங்கும். இதற்குப் பிரமாணம்,

"மேலைநிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை
மூலநிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏலவெழுப்பி யிவளுடன் சந்திக்கப்
பாலனு மாவான் பராநந்தி யாணையே" என்பது திருமந்திரம்.

இவ்வாறு பிரமரந்திரமாம் பிரணவ முடிபிற் சென்றடங்கும் அநுபவ நிலையினையே பட்டினத்துப் பிள்ளையார்

"வெட்டாதசக்கரம் பேசாதமந்திரம் வேறொருவர்க்
கெட்டாதபுட்ப மிறையாததீர்த்த மினிமுடிந்து
கட்டாதலிங்கங் கருதாதநெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே" என்றருளிச் செய்வாராயினர்.

இவ்வாறு இப்பிண்ட சரீரத்தினும் பிராணாதாரமாய் இப்பிரணவம் விளங்கா நிற்கின்றது. எனவே, சத்தப் பிரபஞ்சத்திற்கும் அசத்தப் பிரபஞ்சத்தினோடு இயைபுடைய அர்த்தப் பிரபஞ்சத்துள் இவ்வண்டபிண்ட சரீரங்கள் எல்லாவற்றிற்கும் இப்பிரணவ வொலி மூலகாரணமாய் விளங்கா நிற்கின்றது.

# இந்துசமய உண்மைகள்.

இப்பரதமாகண்டத்தில் தொன்றுதொட்டு நடைபெறுகின்ற சாருவாகம், பௌத்தம், சமணம், மாயாவாதம், வைஷ்ணவம், சைவமென்றற்றொடக்கத்துச் சமயங்களெல்லாம் இந்துசமயங்களென்றுபெயர்பெறுகின்றன. இவைதம்மையொழிய வேறு 'இந்துசமயம்' எனத் தனியேவழங்குவதொன்றுண்டோ எனவிசாரணைசெய்வாருள் ஒருசாரார் அத்தன்மையது ஒன்றில்லையென முடிவுரை யுரைக்கின்றார்கள். தாமரை, முல்லை, நீலோற்பலம், சண்பகம்முதலியவற்றின் வேறாகப் பூவென்பதுஒருபொருள் இல்லாமைபோலவும், குயில் மயில் புறா அன்னம் கோழிமுதலியவற்றின்வேறாகப் பறவை என்பதொன்றில்லாமைபோலவும், மான் மரை ஆ ஆடு எருமை குதிரை முதலியவற்றின்வேறாக மிருகமென்பதொன்றில்லாமைபோலவும் முற்குறிக்கப்பட்டசாருவாகம் முதலிய சமயங்களையொழிய வேறு இந்துசமயம் எனப்படுவதில்லையென்பதே அவர் கருத்தாம்.

இனி அவருரைக்கும்அவ்வுரை பொருந்துமோ வென்று உண்மையான் ஆய்ந்து ஆராயுமிடத்து அது பொருந்தாதென்று எமக்குத்தோன்றுகின்றது. தாமரை, முல்லை முதலியவற்றின்வேறாகப் பூவென்பதோர் பொருளும், குயில் மயில்முதலியவற்றின் வேறாகப்பறவை என்பதோர்பொருளும், மான்மரை முதலியவற்றின் வேறாக மிருகமென்பதோர் பொருளும் இல்லாமை உண்மையாயின் அவைதம்மைப் பூ பறவை மிருகமென வேறு பொதுப்பெயரான்வழங்குதல் என்னை? தாமரை, முல்லை என்னுஞ்சிறப்புப்பெய

ரே அமைவதாகவும் அவற்றைத்தாமரைப்பூ முல்லைப்பூ எனப் பொதுப்பெயருஞ் சேர்த்துக்கூறுதல் என்னை? தாமரைமுதலானபொருள் உலகத்தில்லாமலே அழிந்துபோயினும், பூ வென்னும்பொருள் எல்லாராலும் இனிதறியக்கிடக்குமன்றே? அல்லது வேறுசிலபுதுப்பூக்கள் தோன்றுமாயினும் அவையும் பூ வெனப் பெயர்பெறுதல்திண்ணமேயன்றோ? இதனாற் பொருள்களின் அருவநிலை உருவநிலை என்னும் இரண்டும்இனிதுபெறப்படுவனவாம். தாமரைமுல்லைமுதலானசிறப்புப்பொருளெல்லாம் கட்புலனுக்குவிளங்கித்தோன்றும் உருவுடைப்பொருளாயிருக்கின்றன. பூ வென்னும் பொதுப்பொருளோ அங்ஙனங்கட்புலனுக்கு விளங்குவதன்றாய் மக்கள் மனவறிவாற் பாவித்துணரப் படுவதாயிருக்கின்றது. பலதிறப்பட்ட பூக்களையும் பறவைகளையும் விலங்கினங்களையும் மனத்தால் தொகுத்துப்பார்த்து ஆய்புமிடத்து அப்பூக்களெல்லாவற்றிற்கும் பொதுவான சிலகுணங்களும் அப்பறவைகளெல்லாவற்றிற்கும் பொதுவான சிலகுணங்களும் அவ்விலங்கினங்களெல்லாவற்றிற்கும் பொதுவான சிலகுணங்களும் இனிதறியப்படுகின்றனவாகலின், அக்குணங்களாற்றிரண்ட அருவப்பொதுப்பொருளே உருவுடைய அச்சிறப்புப்பொருளுக்கெல்லாம் நிலைக்களனுமென்பதுதெளியப்படும். சுண்ணமும் மஞ்சளுங்கூடியவழிச் செவ்வண்ணம்உண்டாதல்போலப் பூ வென்னும் பொதுக்குணப்பொருளில்வேறுசிலசேர்ந்து தாமரைமுதலான சிறப்புப்பொருள்தோன்றுகின்றன. சிறப்புப்பொருளையெல்லாம் பகுத்தால் அவைதனித்தனிப் பொதுப்பொருளாய் நிலைபெறும். சிறப்புப் பொருளெல்லாம் அழிவெய்தும்; பொதுப்பொருள் அழிவெய்தமாட்டா. அன்னம்பட்டர் முதலானதருக்கசாத்திரிகளும் சாதிப்பொதுத்தன்மை என்றும் நித்தியமாமென்பர். இக்காலத்து இரசாயனசாத்திரிகளும் பொரு

ள்களைப்பகுத்துக் கலப்புச்சிறப்புப்பொருளெல்லாம் அழியு மென்றும், கலவாததனிப்பொருளெல்லாம் நித்தியமாமென்றுங் கூறுவர். எனவே, சாருவாகம் பௌத்தம்முதலியவற்றின்வேறாய் இவற்றிற்கெல்லாம் பொதுவான வியாபகஇலக்கணமுடைத்தாய் விளங்கும் இந்துசமயம் என்பதொன்று தனியேஉண்டென்பதூஉம், அங்ஙனம்பொதுவான அதன் கோட்பாடுகள்சில மிருந்துங்குறைந்தும் வேறுசில உடன் சேர்ந்தும் சாருவாகம்முதலிய மற்று அச்சமயங்களெல்லாம் உற்பத்தியாய் நடைபெறுகின்றன வென்பதூஉம் நன்கு பெறப்படும். ஆகையால், இந்துசமயம் என்பது பிராசீனகாலந்தொட்டு நடைபெறுகின்றஉண்மைச்சமயமேயல்லது பிறர் கூறுமாறுபோல் இல்லாததொன்றன்று. இவ்விந்து சமயத்தின் பிரிவுகளான சாருவாகம பௌத்தம் சமணம் மாயாவாதம் வைஷ்ணவம் சைவம் முதலிய சிறப்புச் சமயங்களெல்லாம் அழிந்தொழியினும், அன்றி வேறுசில சமயங்கள் புதிதேமுளைப்பினும் இவற்றிற்கெல்லாம்பொது வியாபகமாய் விரிந்து இவை தம்மையெல்லாம் தன்கண் அடக்கிக்கொண்டிருக்கும் இயல்புடையதான இந்துசமயம் என்றும் நித்தியமாய்விளங்கும்.

இனி இப்பெற்றித்தாகிய இந்துசமயத்தின் கோட்பாடுகள் யாவையோவெனின்; காணப்பட்ட இவ்வுலகினுக்குக் காணப்படாத முழுமுதற்கடவுள் முதலாய் உள்ளதென்பதும், அஃது அருவமாயும் உருவமாயும இவையல்லவாயும் இருக்குமென்பதும், அஃது என்றும நித்தியமாய்அறிவாய் இன்பமாய் இருப்பதாகலின் 'சச்சிதாநந்தம்' எனப்படும் என்பதும்,அஃது அருவமாய்த்தியானிக்கப்படுதலேயன்றியும் எல்லார்க்கும் வணங்குதற்கு இலேசான உருவத்திருமேனியுடன் விக்கிரகத்தின்கண்ணும் ஆராதிக்கப்படுமென்பதும், அதனை அறிந்து வழிபடுதற்குரிய ஆன்மாககள்அறி

வுடைய நித்தியப்பொருள்களாய்எண்ணிறந்தனவாய் இருக்குமென்பதும, இவ்வான்மாக்கள் தொன்றுதொட்டே அறியாமையைப்பட் டிருக்கின்றன வாகலின் இவைகள் அவ்விறைவனை வழிபடுமாற்றாற் பரிசுத்தமெய்தி அவனோடு ஒற்றுமைப்பட்டு இன்பநுகருமென்பதும், இவைகள் அறிவு முதிரமுதிர ஒருபிறப்பைவிட்டு மற்றொருபிறவியிற் செல்லுமென்பதும், இங்ஙனம் இவற்றிற்குரிய பிறவிகள் எண்ணிறந்தன வாகுமென்பதும, இவ்வான்மாக்கள் முற்பிறவியிற் செய்தவினை பிற்பிறவியில்வந்து புசிக்கப்படுமென்பதும், இவ்வான்மாக்களுக்கு உடம்பாயும் கருவிகளாயும் இடங்களாயும் போகமாயுமிருந் துபயோகப்படுகின்றஅறிவில்லாத ஜடப்பொருள் என்றும் நித்தியமாயுள்ள தென்பதும இதற்கு உரிய கோட்பாடுகளாம. இக்கோட்பாடுகளனைத்தும் இவ்விந்தியதேச[illegible]ரும் அநுசரிக்கப்பட்டு வருகின்றன. இவ்விந்திய தேசம் எங்கணுமுள்ள மக்கள் பெரும்பாலார் கடவுள் உண்டென்பதில் சுபாவத்திலே நம்பிக்கையுடையரா யிருக்கின்றனர். அதனை உருவத்திருமேனியில் வைத்து உபாசிக்கும் விக்கிரகவழிபாடும் இமயமலைச் சிகரமுதல் குமரிமுனை வரையிலும் பரந்து காணப்படுகின்றது. அவரவர் அநுபவிக்கும் இன்பதுன்பங்களுக்கு அவரவரே உரியர் பிறர் உரியராகார் என்று நாடோறும் வழங்குஞ் சொற்களைக் கேட்டலால், ஆன்மாக்கள் பலர் என்னும் உணர்ச்சியும் இவ்விந்திய தேசமெங்கும் பரவிக்கிடக்கின்றது. யான் துன்பப்படுதற்கு என்னுடைய அறியாமையே காரணம் என்று இங்குள்ளார் எல்லாரும் கூறுதலால், ஆன்மாக்களுக்கு அறியாமை இயற்கையே உள்ளதென்பதும் இவ்விந்தியாவிற்கே உரிய கொள்கையாம். இப்பிறப்பில் யான் அறஞ்செய்தால் மறுமையில் நற்பிறவியடைவேன், இப்பிறப்பில் யான் மறஞ்செய்தால் மறுமையில் யான் தீப்

பிறவி யடைவேன் என்று பலருங் கூறுதலால் அடுத்தடுத்துப் பிறவிகள் வருமென்பதும் இங்குள்ளார்க்கு உடன்பாடாகின்றது. ஒருவன் துன்புறுங்காலத்து இஃது யான் முன்செய்த வினைப்பயன் என்று அடுத்தடுத்து வழங்கக் காண்டலால் கர்மம் உண்டென்பதும் மற்றிவர்க்கு உடன்பாடாகின்றது. 'உள்ளதுபோகாது இல்லதுவாராது' என்னும் பழமொழி நாடோறுங் கேட்கப்படுதலால்இப்பிரபஞ்சம் மாயையிற்றோன்றிய தென்பதும், அம்மாயைசடமாய் என்றும்உள்ள நித்தியப் பொருளா மென்பதும் இந்தியர்க்குக் கருத்தாகின்றன. 'யான் என் அறியாமை விலகிக்கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமாவேனோ' என்று ஆங்காங்குப் பலருங் கூறுதலால் 'முத்தி' என்பது அறியாமை நீங்கப்பெற்று முதல்வன் அருளோடு ஒற்றுமைப் படுதலேயாமென்பது இவர் கொள்கையாகின்றது, நண்பர்காள்! இங்ஙனம் இக்கொள்கைகள் இவ்விந்திய தேசமெங்கும் பரவிவழங்குதல் நம்மனுபவத்திற் காணப்படுதலால் இவைதாம் இந்துசமயம் எனப்படுதற்குப் பொருந்துகின்றன.

இனி இந்துசமயப்பிரிவான மேற்கூறிய சமயங்களிலெல்லாம் இக்கொள்கைகள் சில குறைந்தும் வேறுசிலகூடியும் வேறுவேறுபெயர் பெற்று நிற்றலைக் காட்டுவாம். காணப்படுவதாய் அறிவில்லாத சடப்பொருளான இப்பிரபஞ்சம் உள்பொருளேயாம் என்னும் அதன்கொள்கையை மாத்திரம் வற்புறுத்திக் கடவுளும் ஆன்மாவும் கன்மமும் இல்லை என்று கூறுவதே சாருவாகமதமாம். இது

"பூதமதின்னொன்று பிரியப் புலனிறக்கு
நீதியினினிற்பன நடப்பனவுமுற்போல்
ஓதும்வகையாகி யுறுகாரியமுலந்தால்
ஆதியவையாமிதனை யறிவதறிவாமே" என்றும்

"இப்படியன் றிக்கன்ம முயிரினைறவே றுண்டென் று
செப்பிடு மவர்க்குமண்ணோர் செய்திடுங்குற்றமென்னோ
ஒப்பிலாமலடிபெற்ற மகனொருமுயற்கொம்பேறித்
தப்பிலாகாயப்பூவைப் பறித்தமைசாற்றினரே"

என்றும்

அவர் கூறுமாற்றால் அறியப்படும். அறிவென்பது நான்குந்தக் கூட்டத்தின் காரியமாய் உண்டாவதென்னுஞ் சாருவாகர் போலாது, சடப்பொருளின் வேறாக அறிவாகி யபுத்தி வேறுண்டென்று மாத்திரங்கூறிக் கடவுளும் ஆன்மாவு மில்லையென்பதே பௌத்தமதமாம். இதில் அறிவும் அறிவில்லாத சடமும் வேறென்னும் இந்துசமயக் கொள்கை வலியுறுக்கப் படுதல்காண்க

இனிச் சடப்பொருளும் அதனின் வேறாகிய அறிவும் அவ்வறிவினையுடைய சீவனும், அச்சீவனோடியைந்துவரும் இருவினைகளும் உள்ளனவென்று மாத்திரம் வற்புறுத்திக் கடவுள் இல்லையெனக் கூறுவதே சமணமதமாம்.

இனிப் பிரபஞ்சமும் இருவினையும் ஆன்மாவும் வியவகாரத்திலுள்ளன, பாரமார்த்திகத்திற் பரப் பிரமம ஒன்றே யுள்ளது ஏனைய வெல்லாம் பொய்ப்பொருளாம எனக்கூறுவதே மாயாவாதமாம். இதன்கட் கடவுள் அருவமென்றே வற்புறுத்தப்படுகின்றது. இது

"இருளிற் பழுதை யரவெனவே யிசையு மிரவி யிருங்கதிர்களருளப்பழுதை மெய்யாகி யரவும் பொய்யா மதுபோல மருளிற்சகமுஞ் சத்தாகி மருவித்தோன்று மாசில்லாத் தெருளிற்சித்தே சத்தாகும் பித்தாஞ் செகத்தின் செயலெல்லாம்" என்றும்,

"அறிவா யகில காரணமா யனந்தானந்தமாயருவாய்ச்
செறிவாயெங்குநித்தமாய்த்திகழ்ந்தசத்தாய்ச்சுத்தமதாய்க்
குறிதான் குணங்க ளொன்றின்றிக் கூறும்வேதந் தனக்களவாய்ப்

பிறியாதனுபூதிகந் தனக்காய் நின்றதந்தப் பிரமந்தான்'' என்றும் அவர்கூறுதலால் அறியப்படும்.

இனிப்பிரபஞ்சமும் ஆன்மாவும் வியவகாரத்திற் போலப் பாரமார்த்திகத்திலும் உள்பொருள்களேயாம் என்றும், ஆனால் இவை வாசுதேவன்வடிவேயாய் விளங்குமென்றும், அவ்வாசுதேவன் உருவமாகவே யிருப்பானல்லது அருவமாக இருப்பானல்லன் என்றுங் கூறுவதே வைணவமாம். இது

"மாயையா யுயிராய் மாயா காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து வாங்கிடு மவனுலன்றி
மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப்பின்னை
மாயைபோம் போனுன்மாயன் வைகுண்டம் வைப்பனன்றே'' என்றவர் கூறுமாற்றல் விளங்கும்.

இங்ஙனம் இம்மதங்களினெல்லாம் இந்துசமயக் கொள்கைகள் சிலபலகுறைந்தும் மிகுந்தும் வேறுபட்டும் நிற்றல் இனிதறியப்படும். இனி உலகம் உள்பொருளாதல்சாருவாகத்தானும், அறிவுஞ் சடமும் வேறுவேறாதல் பௌத்தத்தானும், சீவனும் இருவினையும் உளவாதல் சமணத்தானும், கடவுள் அருவசொரூபியாய் நிற்றல் மாயாவாதத்தானும், கடவுள் உருவத்திருமேனியுமுடையனாதல் வைணவத்தானும் பெறப்படுகின்றன வாகலின் இவையனைத்தும் இந்துசமயப் பிரிவுகளாதற்கு இயைந்தனவேயாம். மற்று இக்கொள்கைகளெல்லாம்தன்கண்முழுதும் அடங்கக்கொண்டு விளங்கும் இந்துசமயம் தான்சிறிதாயினும் ஏகதேசப்படுதலின்றித் தன்கட்பிரிந்த சமயங்களுமாய் அவற்றின்வேறுமாய் மேற்பட்டுத் தோன்றல் பெரிதுங்கவனிக்கற்பால தொன்றும். தன்னிற் பிரிவான மதங்களில் உள்ள குறைகளையெல்லாம் நிரப்பித் தான் எல்லாநிறைவுமுடையதாய்ப்பொலிகின்றது.

இனி இவ்விந்துசமய வியாபகப்பொருளைச் சிறிதுசிறி

தேவிசாரித்துப் போய்ப் பின் அவ்விந்துசமயமாவதிதுவென்
பது காட்டுவாம்.

## அறிவு.

சாருவாகர் மதம்பற்றிப் பிருதிவி அப்புத் தேயு வாயுவெ
னப்படுஞ் சடப்பொருள் ஒன்றுசேர்ந்தவழியே அறிவு தோ
ன்றும் என்பதற்கு இச்சரீரத்தின்கண் உட்கருவி புறக்கருவி
என்னும் அவயவங்களெல்லாம் ஒன்றுசேர்ந்தவழி அறிவு
தோன்றுதலும், அவ்வவயவங்கள் வேறு வேறு பிரிந்த
வழி அஃது அழிதலுமே சான்றாகலின் சித்து எனவுஞ்
சடமெனவும் பொருள்களைப் பகுத்தல்கூடாது சடமே
சித்தாம் என்று கூறுவது மெனின்; அவ்வவயவங்களெல்
லாம் ஒன்றுகூடிய இவ்வுடம்பு பிணமாய்க் கிடந்தவழி
அதன்கண் அவ்வறிவு நிகழக்காணாமையின் அது பொருந்
தாது. அற்றன்று, பிணவுடம்பில் அவயவ ஒருமைநோயாற்
பிறழ்ந்து போதலின் அதன்கண் அவ்வறிவு நிகழாதாயிற்
றெனின்;—தாமே ஒன்றுகூடி அறிவைத்தோற்றுவித்த
அவயவங்கள் பின் நோய்வாய்ப்பட்டு அவ்வறிவை யிழந்த
தென்றல் யாங்ஙனம் பொருந்தும்? அதுவேயுமன்றிச்சடப்
பொருள்களான அவை தாமே ஒன்றுசேருமாறு யாங்ங
னம்? காந்தம் இரும்பைத் தன்மாட்டு வலித்துக்கொள்ளுதல்
போல நான்கு பூதங்களும் ஒன்றை யொன்று வலித்துக்கொ
ண்டொருங்குகூடின வெனின்;—காந்தம் இரும்பைவலித்துக்
கொண்டால் பின்தானே அதனை விடமாட்டாது; அது
போல நான்கு பூதங்களும் ஒன்றை யொன்றுபற்றிக் கொ
ண்டால் பின் அவை தாமே பிரியமாட்டா; அங்ஙனம் பிரி
யாவாகவே அக்கூட்டுறவினின்றெழும் அறிவும் அழியா
தாய் என்றும் விளங்கிக்கொண்டிருத்தல் வேண்டும். சிறி
யகாந்தக் கல்லால் வலித்துக் கொள்ளப் பட்ட இரும்பூசி

பின் ஒருபெரிய காந்தக் கல்லை எதிர்ப்படின் அதனால் இழுக்கப்பட்டு அச்சிறிய கல்லை விடுதல் போல, நாற்பூதக் கூட்டுறவும் வேறொன்றாற் கலைக்கப்பட்டு முன்றோன்றிய அறிவு அழியுமெனின்;—அந்நான்கு பூதத்தினைத் தவிரப் பிறிதொன்று உண்டென்பது சாருவாகருக்கு உடம்பாடல்லாமையால் அந்நான்கு பூதக் கூட்டத்தினையுங் கலைக்க வல்லதான பிறிதொன்றுண்டென்றல் அவர்க்குப் பொருந்தாதாகும். அற்றன்று, அந்நான்கு பூதங்களுள் ஒன்று ஒருகாலத்துமிகவலியுடைத்தாயெழுந்து ஏனையவற்றின் கூட்டுறவை அழிக்குமென்று கோடுமாகலின் பிறிதொன்று வேண்டேமெனின்;—முன் அம்மூன்று பூதங்களோடும் ஒன்று சேருங் காலத்து மற்றை அந்நான்காம் பூதத்திற்கு அவ்வலிமை எங்கேபோயிற்று? முன் வலிசுருங்கிய பொருளே பின்வலி மிகுதியு முடைத்தாமெனின்;—அவ்வாறு முன் சுருங்குதற்கும் பின்அது பெருகுதற்குங் காரணம் என்னை; அஃது அதற்கு இயற்கையெனின்;—அங்ஙன முரைப்பின் ஒன்றே இயற்கையாக வேண்டு மல்லது தம்மில் மாறுபட்ட இரு குணங்கள் ஒருபொருட்கட் டோன்றுமெனல் சாருவாகர் மதத்திற்கே இழுக்காய் முடியும்; என்னை? இன்று ஒருசிறிய ஊசியை மாத்திரம் இழுக்குங் காந்தக்கல் நாளை ஒருபெரிய இருப்புச் சிலையை இழுக்குமெனல் வேண்டும்; இன்று பதினைந்து பாரஞ் சுமக்கும் ஒருகோல் நாளைப் பதினாயிரம் பாரஞ் சுமக்குமெனக் கூறல் வேண்டும்; இன்றுபத்தரை மாற்றுரைகண்ட ஒருபொற்கட்டி நாளை இருபதுமாற்றுரைகாணுமெனக் கூறல்வேண்டும். அங்ஙனங்கூறின் சாருவாகர் கூறும் இயற்கைமதம் முற்றும் போலியாய் முடியுமாதலின், அவயவங்கள் தாமே ஒன்றுகூடி அறிவைத் தோற்றுவிக்கு மென்றலும் பின்னொருகாற் பிரிந்து அதனை அழிக்கு மென்றலும் எவ்வாற்றானும் பொருந்தா.

இனிச் சடத்தினியல்பையுஞ் சித்தினியல்பையுஞ்சிறிதா ராய்ந்து பார்ப்பார்க்கும் அஃதொன்றி னொன்று தோன்று மெனல் பொருந்தாமை நன்கு விளங்கும். சடப்பொரு ளெல்லாம் ஒன்றோ டொன்று ஒட்டும், பின் தாமே பிரிய மாட்டா, பிறிதொன்று இயக்கினால் இயங்குந்தாமே இயங் கமாட்டா. கருவேலம் பிசினுங் கருங்கற் பொடியும் ஒரு ங்கு ஒட்டும் பின்பிரியா, காந்தம் இருப்பூசியைத் தானே இழுத்துத் தன்னோ டொட்டுவிக்கும் பின் இதனை விடுதல் செய்யாது, பந்தையெறிந்தால் ஓடும் தானே ஓடமாட்டாது. மற்று அறிவுப் பொருள்களோ தாமேயும் இயங்கும் பிறிதொன்றனையும் இயக்கும், தாமேயும் அறியும் பிறி தொன்றனையும் அறிவிக்கும். சிற்றெறும்பு தானேயும் இயங்குகின்றது தானே இயங்காப் பனைவட்டுச் சிறுதுண் டினையும் இழுத்துச்செல்கின்றது, புறுக்கள் தாமேயும் பறக் கின்றன தங்குஞ்சுகள் பறக்கும் படியும் கற்பிக்கின்றன. இவ்வாற்றால் அறிவில்லாச் சடத்தினியல்பும் அறிவுடைய சித்தினியல்பும் தம்முள் முற்றும் மாறுபட்டுக்கிடத்தலால் அது நாற்பூதக்கூட்டுறவிற் றோன்று மென்றல் ஒருவாற்று னும் பொருந்[illegible]. ஆகவே அறிவுஞ் சடமும் வேறுவே றென்னும் [illegible]சமயக் கொள்கையே பொருத்த முடைத் தாதல் இனி[illegible]பெறப்பட்டது; இப்பெற்றிநன்குணர்ந்த சிமத், அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்,

> "அறிவு பூதம தென்னின் வேறுபுறத்தறிந்தமை கண்டிலஞ்
> செறிவுதாறுடலத் தெனிற் சவமானபோதுடறேருமோ
> குறிகொளாதுடல் வாயுவானது கூடிடாமையி னென்னினீ
> பிறிதராதுயிர் நிற்கஞானமுறக்க மென்பிறவாத்தே".

'அறிவுடற் குணமென்னிலானைய தாதியந்த மெறும்பதா, முறு முடற் பெரிதானவற்றி னுதித்திடும் பெரிதாகவே சிறுவுடற் செறி ஞானமுஞ் சிறிதாயிடும் பரிணாமமும், பெறுமுடற்சிறிதாவ தென் பெரிதாவ தென்சில பேசிடே,,

என்று அவற்றின் வேறுபாடு நன்குதெரித்தோதினர்.

---

ஆமாட.

இனிப்பௌத்தர் மதம்பற்றி இவ்வுடம்பும் இவ்வுடம்பின் வேறாய் எல்லாவற்றையும் அறிவதாகிய அறிவும் உண்டு எனக் கொள்வதல்லது, இவ்வறிவின் வேறாகிய ஆன்மா வொன்றுண்டெனக் கூறல் பொருந்தா தெனின்;— அற் றன்று, அறிவென்பது பஞ்சேந்திரியங்கட்கும் புலப்படுவத ன்றாய்ச் சுத்த அனுபவ மாத்திரையாய் உள்ள தொன்றாம். யானிதனைக் கண்டறிந்தேன் அதனைக் கேட்டறிந் தேன் இதனைச் சுவைத்தறிந்தேன் அதனை முகர்ந்தறிந்தேன் அதனைத்தொட்டறிந்தேன் மற்றிதனை எண்ணியறிந்தேன் என்றவழி யெல்லாம அறியப்பட்ட பொருளும அதனை அறிந்த அறிவு நிகழ்ச்சியும் எவ்வகைச் சம்பந்தமுடையன? பொருட் சம்பந்தமா? குணசம்பந்தமா? பொருட்சம்பந்த மாயின் இந்நிலவுலகத்தில் நிற்கும் எனக்கும் இதற்கு நெடுந் தூரத்திலுள்ள செக்கர் வானத்திற்கும் எங்கே சம்பந்த முளது? மற்றுக் குணசம்பந்தம் என்றுரைப்பின் அதுபொ ருந்தும். சூரியன் அந்தரத்தில் ஓரிடத்திருப்ப அதன்பிர காசம் யாண்டும் விரிதலானும் ஒருகற்றூர் ஓரிடத்திருப்ப அவரதுபுகழ் யாண்டும் வியாபித்தலானும் குணத்தையு டைய பொருள் ஓரிடத்தே யிருந்ததாயினும் அதன்குணம் அவ்விடமாத்திரையின் வரையறைப்படாது மேலுமேலும் விரிந்து செல்லும் இயல்பினதாம். செக்கர்வான் அந்தரத் தே நெடுந்தூரத்திற் காணப்படுவ தொன்றாயினும் அதன் குணமான சிவப்புநிறம் தன்னைச்சூழ்ந்து வியாபிக்கும் ஆகாயத்தின் சூக்குமஅணுக்களை அசைவித்து அம்முறையே

கண்மேற்பரப்பிற் சென்றுதாக்க, அங்கே வியாபித்திருக்கும் அறிவானது அதனைப்பற்றுகின்றது. இனம் இனத்தையே பற்றும் என்னும் நியாயத்தால் குணரூபமான சிவப்பு நிறத்தை யறிகின்ற அறிவும் குணரூபமாகவே யிருக்க வேண்டுமென்பது துணியப்படும். இங்ஙனந் துணியப்படவே சிவப்பு நிறஞ் செக்கர்வானத்தை விட்டு வேறுதனித்து நில்லாமை போலக் குணரூபமான அறிவும் தான்றனித்து நில்லாதாய்ப் பிறிதொருபொருளைப் பற்றியே நிற்கும். அப்பொருள் யாதோவெனின் அதுவே ஆன்மா அல்லது உயிர் என்று பெறப்படும் என்க.

இன்னும் இவ்வறிவு ஆன்மாவுக்கு ஒருகுணமாமென்பது 'நான் அறிந்தேன்' 'என் அறிவு' என்னும் வழக்கில் நான் என்பதொரு பொருளும் அதனோடொற்றுமைப்பட்ட அறிதற்குணமும் பெறப்படுமாற்றால் இனிது துணியப்படும். 'அறிவு' குணமன்றிப் பொருளாயின் அவ்வாறதனை வழங்குதற்கு வேறொருவாற்றானும் ஒருகாரணம் பெறப்படுவதில்லை என்க. ஆகவே, பௌத்தர் கூறுமாறு அறிவு ஒருகுணிப் பொருளாக மாட்டாதென்பதும், அதனையுடைய ஆன்மா வேறுதனியே யுளதென்பதும் இனிது பெறப்படுகின்றன.

" உருவாதி கந்தங்க ளைந்துங் கூடி யொருவன் வேறொ
ருவனிலை யென்றுரைக்கும் புத்தா
உருவாதி யைந்தினையு முணர்பவர்யா ரென்ன வுணரும்
விஞ்ஞான மென்றாய் ஞான முணர்ந்தவரார்
உருவாதி பொருள்காட்டித் தனைக்காட்டுஞ் சுடர்போலுணர்வு
பிறிதினை யுணர்த்தித் தனையுணர்த்து மென்னின்
உருவாதி பொருளினையுஞ் சுடரினையுங் காணுமுலோ
சனம்போ லுணர்வுபொருளுணர்பவன் வேறுண்டே,,

என்றசிவஞானசித்தித் திருவாக்கும் இதனை வலியுறுத்தும்.

இனி ஏகான்மவாதிகள் மதம்பற்றி அறிவுடைய ஆன்மா ஒன்றே சரீரங்கடோறும் வேறுவேறாய்க் காணப்படுகின்றதென்றும், கடங்கடோறும் வேறுவேறாய்த் தோன்றும் சந்திரவிம்பம் அக்கடங்களுடைந்தவழி யில்லையாய்ச் சந்திரன் ஒன்றேநிலைபெறுதல்போல இச்சரீரங்களெல்லாம் போயவிடத்து ஆன்மா ஒன்றாகவே யிருக்கு மென்றுங் கூறுவதே பொருந்துமென்னின்;—அற்றன்று, சந்திரனிடத்துக்காணப்படும் ஒளிவடிவும் வட்டவடிவும் அதன்விம்பங்களெல்லாவற்றிலுங்காணப்படுதல்போலேயேகான்மாவினிடத்துக்காணப்படும் அறிவுஞ் செயலும் ஏனை யான்மாக்களிடத்துங்காணப்படுதல் வேண்டும். அங்ஙனமன்றி அவை ஒவ்வொருவரிடத் தொவ்வொருவாறாய்ப் பலதிறப்பட்டு நிகழக் காண்டலால் ஆன்மா ஒன்றென்னுமுரை ஒருசிறிதும் பொருந்தாது. அற்றன்று, சலத்தின் அசைவாற் சந்திர விம்பமும் அசைவதுபோற் றோன்றினும் சந்திரனுக்கு அவ்வசைவு வராமை போலச், சரீரத்தின் வினைகளாற் சரீரத்தி னுள்ளிருக்கும் ஆன்மாத் தொடக்குறுவது போற் றோன்றினும் ஏகனாகிய அவ்வான்மாவுக்கு இயற்கையில் அவ்வினைத் தொடக்கு இல்லையாமெனின்;— அஃதன்று இவ்வுவமை பொருந்தாது. ஆன்மாவின் சையோகமின்றி உடம்பு ஒருவினை செய்ய அவ்வினை ஆன்மாவின்கட் பற்றுவதாயினன்றேசலத்தினசைவையும் அதுபற்றுஞ்சந்திரவிம்பத்தையும் அவ்வாறுவமை கூறலாம்? ஆன்மசையோகமில்லாவுடம்பு சிறிதாயினும் வினையின்றிக்கிடத்தல் பிணவுடம்பின்கண் வைத்து இனிதறியப் படுதலால், உடம்பினால் ஆன்மாத் தொடக்குறுமென்றல் யாங்ஙனம் பொருந்தும்? இஃதுண்மையா னுணர்ந்த சைவசித்தாந்த முதலாசிரியர்,

"அவ்வுடலினின்றுயிர்ப்ப வைம்பொறிகடாங்கெடப்பச்
செவ்வினையவ்வுடலிற் சென்றடங்கி—அவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடனியல்லை மற்று,,
"கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக்காணுதே
"உண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்— கண்டறியு
முள்ளம்வேறுண்டா மொடுங்காதுடனண்ணி
னுள்ளதா முண்டிவினை பூண்" என்றருளிச் செய்தார்.

நாலடியாரிலும்.

"நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தெடுக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக்கால்" என்றிவ்வுண்மை தெருட்டப்பட்டது காண்க ஆகவே, உடம்பினைத் தொழிற்படுத்துவ துயிரேயல்லது உயிரினைத் தொழிற்படுத்துவது உடம்பன்றாம் அன்றாக, உயிர்கள் பலவாயும், பலதிறப்பட்ட வினைப்போகங்களுடையவாயும் இருக்குமென்பது கரதலாமலகம்போற் பெறப்படுவதாம். ஆதலால், அவர் கூறும் ஏகான்மவாதம் ஒருசிறிதும் பொருந்தாது.

---

## கன்மம்.

அற்றேலஃதாக, இனி உயிர்கட்குக் கன்மமுண்டென்பது எவ்வாறு துணியப்படுமெனின்;—தாய்வயிற்றிற் கருக்கொண்டு பிறக்கும் மகவு எவ்வகைக்குற்றமு முடையதன்றாகவும், ஒன்று தான்பிறந்த குடும்பத்தால் மிகவறுமைப்பட்டுப் பெருந்துன்ப மெய்துதலும் ஒன்று தான்பிறந்த குடும்பத்தால் மிக்க செல்வவளம்பொருந்தி இடையறாது இன்பந்துய்த்தலும், ஒன்று நல்லறிவுடையதாய்ப் பலராற்

பாராட்டப்படுதலும் ஒன்று தீயவறிவுடையதாய்ப் பலரால் இகழப் படுதலும், ஒன்று கலையறிவுநிரம்பிப் பெரிய வித்துவானென மதிக்கப்படுதலும் ஒன்று அஃதின் றிச் சுத்த மூடனென அவமதிக்கப் படுதலும், என்னையென்று சிறிது ஆராயப்படுமாயின், இவ்வகையான பலபேதங்களுக் கெல்லாம் இன்றியமையாத காரணம் ஒன் றிருத்தல் வேண்டுமன்றே? அக்காரணந்தான் யாதோவெ னின், ஆன்மாக்களுக்குப் பண்டுதொட்டே அமைந்து கிடந் த கர்மமேயல்லது பிறிதில்லையென்க. இவ்வுண்மை யு ணர்ந்தே பெரியாரும்,

> "பேறிழ வின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னும்
> ஆறுமுன் கருவுட்பட்ட தவ்விதி யனுபவத்தா
> லேறிடு முன்புசெய்த கன்மமீங் கிதனுக்கேது
> தேறுநீ யினிச்செய்கன்ம மேலுடற் சேருமன்றே"

என்று அருளிச்செய்தனர்.

## முற்பிறவி பிற்பிறவி.

இனி இப்பிறவியில் நிகழும் நிகழ்ச்சிகொண்டே ஆன் மாக்கட்கு முற்பிறவியும் பிற்பிறவியு முண்டென்பது துணி யப்படும். இன்று இவ்வுபந்நியாச சபை கூட்டப்பட்ட நிகழ்ச்சி யெல்லாம் இதற்கு முற்பட்டநாளில் யாம்செய்த செயல்களின் பயனும் அல்லவோ? இன்றுசெய்யும் இவ்வு பந்நியாச முயற்சிகளெல்லாம் இனிவரும் நாட்களில் இச் சைவசித்தாந்த மகாசமாஜம் மிகவுந்தழைத்தோங்கவும்அத னால் நாம் ஞானவின்பானுபவ மெய்தவும் பயன்படும் அல்லவோ? இதற்கு முன்நாட்களில் தன்தேகத்தின் கூறுபா டறிந்துஅதற்கியைய உண்ணும் உணவின் வரைகடந்து வேறுபல புதியஉணுக்களைத் தான் வேண்டுமட்டும் புசித் தான் ஒருவன் அப்போது அதன்பயன் அறியாது பின்

பத்துநாட் கழித்து இன்று வயிற்று நோயால் வருந்தும் போது இதுமுன் வரம்புகடந் துண்ட வுணவால் வந்த தென்றறியாது "இஃது எனக்கு எங்ஙனம் வந்தது? எங்ஙனம் வந்தது" என்றெண்ணி எண்ணித் துயருறுகின்றான். பின்மருத்துவனை வருவித்து மருந்து ஊட்டப்பெறுங்கால் அவ்வூட்டப் பெற்ற அக்கணத்தே யாயினும் அன்றி அந் நாளே யாயினுஞ் சுகம்பிறவா விடினும் அஃதுண்டபிற் கணத்தேனும் பின்னொருநாளுமே நோய்தீர்ந்து சுகமெய்தல் கண்டாமன்றோ? இங்ஙனமே யாம் இப்பிறவியில் இன்ப துன்பம் நுகருங்கால் இப்பயன்களைத் தந்த வினைகள் முற் பிறவியில் அமைந்து கிடந்தன வென்பதனை மறந்தோமாயினும், அவையுளவாதல் ஒருதலையேயாம். இனிமுற்பிறவியிற் செய்த தீவினைகளால் இப்பிறப்பில் எய்துந் துன்பங்களை ஞானவொழுக்கத்தாலும் பக்தியொழுக்கத்தாலுந் துடைத்துக்கொண்டால் இனிவரும் பிறவியில் இன்புறுதல் ஒருதலையாமன்றோ? அற்றேலஃதாக, முற்பிறவியிற் செய்தவினை இப்போ தொடருகிறதாயினும் நினைவுசெயக் கூடவில்லையேயெனின்; நன்றுசொன்னாய், 'நேற்றிரவு கறித்த கறியுங்குழம்பும் நுங்கள் வீட்டில் யாவை?' என்று உசாவினால் அவற்றை மறந்து விடைபகரத் தெரியாமல் விழிப்பார் நம்முள் எத்தனைபேர் உளர்! நேற்றுநீங்கள் காலை முதல் மாலைவரையிற் செய்தன வெல்லாம் சொல்லுகவென்றால் அது சொல்லத்தெரியாது விழிப்பார் எத்தனைபேர் உளர்! அஃதிருக்க, முற்றும் நினையப்படாவிடினும் முன்னாளிற்செய்த சிலவற்றையேனும் பின்னாளில் நினைகின்றாமே யெனின்;—நீவிர் குழவிப்பருவத்துச் செய்தன ஒருசிலவேனும் இம்மனிதப் பருவத்து நினைக்கமாட்டாமல் முழுதும் மறக்கின்றமையால் 'யான்குழவியாயிருந்திலேன்' எனக்கூற அமையுமோ? காலம் நீள நீள

மறதியும் கீளும்; காலத்தினுற் ரேன்றும் மாறுதல்கள் கணக்கிறந்தன. இன்றைக்கிருந்த ஒருபொருளின் நிலை நாளை அவ்வாறே காணப்படுவதில்லை; நாளையிருப்பது மற்றைநாட் காணப்படுவதில்லை. ஆ! காலத்தினுற் செய்யப்படும் புதுமைகள் என்னே! என்னே! ஒருவனைக் குழவிப் பருவத்தில் வைத்துப் பிடித்த படமும், மனிதப் பருவத்தில் வைத்துப் பிடித்த படமும், முதுமைப் பருவத்திற் பிடித்தபடமும் ஒன்று சேர்த்துப் பார்த்தால், அம்மூன்றுருவும் மூன்றுவேறு மனித வுருக்களாய்த் தோன்றுமேயல்லது ஒன்றுய்த்தோன்று. ஆ ஒவ்வொருகணமும் மனத்தினுங் குறிக்கப்படாத அதிவேகத்துடன் எத்தனை எத்தனை மாறுதல்கள் நிகழ்கின்றன! அன்பர்காள்! எம்மருமைச் சகோதரர்காள்! இப்பூகோளமானது ஒருநொடியில் பதினெட்டரைமைல் விழுக்காடு ஒருமணிநேரத்தில் ஆயிரத்துநூற்றுப்பத்துமயில் தூரம் சுழன்று செல்வதைப் பாருங்கள்! இவ்வளவு வேகமாய்ச் சென்றும் இதன் இயக்கமும் மாறுதலும் நமக்குப் புலப்படு கின்றனவா? இல்லையே. இங்ஙனம் ஒவ்வொருகணமும் மனத்தினும்மிக்குச் செல்லும் பெருவேகத்துடன் நடைபெறும் மாறுதல்களின் இயல்புணர்ந்தே பௌத்தரிற் கணபங்கவாதிகளென ஒரு சாரார் தோன்றினர். சூறைக்காற்றினிடையிலகப்பட்ட இலவம் பஞ்சுபோல், இவ்வதிவேகமாறுதல்களின் இடைக்கிடந்துழலும் நம்உயிர்கள் அவற்றை முறைமுறையே மறந்துவிடுதல் இயற்கையேயாம். இங்ஙனம் மறக்கப்படுவது பற்றி ஒரு பொருளினிருப்பு இல்லையென்று மறுக்கப்படுதல் சிறிதும் பொருந்தாதாகலின், இப்பிறப்பிற்கேதுவான முற்பிறவியும் அவற்றிற்செய்த கன்மங்களும் உண்டென்பது தேற்றமேயாம். இனி இப்பிறவியிற் செய்யப்படும் வினைகள் அளவிறந்தனவாகலின்

இவற்றின்பயனைத் துய்த்தொழித்தற்கு மேலும் மேலும் பிறவிகள் இடையறாதுதோன்றுமென்க. வினைகள் உளவாங் காறும் உடம்பு ஒழியாது; இதுபற்றியே முற்றத்துறந்த பட்டினத்தடிகளும்,

“வினைப்போகமேயொரு தேகங்கண்டாய் வினைதானொழிந்தால்
தினைப்போதளவு நில்லாது கண்டாய் சிவன்பாதம்நினை
நினைப்போரைமேவு நினையாரைநீங்கி நெறியினின்று
லுனைப்போ லொருவருண்டோமனமே யெனக்குற்றவரே”

எனவும்,

“அன்னையெத்தனை யெத்தனை யன்னையோவப்பனெத்தனை
யெத்தனை யப்பனோ
பின்னையெத்தனை யெத்தனை பெண்டிரோ பிள்ளையெத்தனை
யெத்தனை பிள்ளையோ
“முன்னையெத்தனை யெத்தனை சென்மமோ மூடனாயடியேனு
மறிந்திலேன்
இன்னு மெத்தனை யெத்தனை சென்மமோ வென்செய்வேன்
கச்சியேகம்பநாதனே” என்று திருவாய்மலர்ந்
தருளினார்கள்.

இனி இவையெல்லாம் பொருந்துமாயினும், முற்பிறவி உண்டென்பதற்கு மாத்திரம் அனுபவத்திற் பிரத்தியக்ஷமாகச் சிலகுறிப்புகள் காட்டல் வேண்டுமெனின்;—அதுவுஞ் சிறிதுகாட்டுவாம். தாய்வயிற்றை யகன்றுபிறந்தமகவினை எடுத்துத் தன்னியபானஞ் செய்விக்கப்புகுங்கால் உலகானுபவஞ்சிறிதுமறியா அம்மகவு வாய்கூட்டித் தன்னியத்தை இழுத்துப் பால்உண்ணல்கண்டாமன்றே? அஃதங்ஙனமுண்ண எவ்வாறுகற்றது? என்றாராயின் அது முற்பிறவியில் அங்ஙனம் வாய்கூட்டியுண்ட பழக்கத்தால்வந்ததேயாம் என்பது நன்குபுலப்படும். இதுவொன்றோ, இன்னும் அம்மகவு மக்கள்முகத்தைப்பார்த்து நகையாடத்தெரியாப்பொழுதே உறங்குங்காலத்துப் பாலொழுகும் வாய்

விரித்து நகைப்பதுங்கண்டாமன்றே? அஃது அங்ஙனம் யாரைக்கண்டுநகைக்கின்றது? கனவில்நகைக்குமென்னின்;—நாமெல்லாம் நனவிற்றோன்றியதைக் கனவிற்காண்கின்றோம் நனவிற்காணப்படாதன கனவிற்றோன்றுமாயின் அவைமுற் பிறவியின் றோற்றமாமன்றோ? நனவனுபவம் சிறிது மில்லாதஅம்மகவுக்கு நனவுங் கனவு மொன்றே யன்றோ? ஆனால், நனவில்வெளியுலாவுகின்ற அதனறிவு கனவில் உள் உலவாநிற்ப, அவ்வாறுலவுங்கால் முற்பிறவியிற்கூடிய அனு பவங்கள் சில அதற்கு நினைவிற்றோன்ற அங்ஙனம் நகை யாடுகின்றது. ஆகலின், குழவிப்பருவத் துயிர்கள் மாட்டுக் காணப்படும் நிகழ்ச்சிகொண்டே முற்பிறவியுண்டென்பது நாட்டப்படுவதுகாண்க.

---

## பரமான்மா.

இனிக்கன்மமே தன்னைச்செய்தோன் அறிவிற்பதிந்து கிடந்து பின்னை அவன் நுகர்ந்து ஒழித்தற்பொருட்டுச் சரீரத்தைத் தோற்றுவிக்கும், இதற்குவேறொரு கடவுள் வேண்டாமெனக்கூறும் சமணர்மதம்பற்றிக் கடவுள் ஒன் றில்லையெனக்கூறினால் வரும் இழுக்கென்னையெனின்;— 'கன்மம்' என்பது வினை அல்லது தொழிலாகும். வினை தன்னைச் செய்தானைவிட்டுப் பிரிந்திராததுண்மையாயினும், அவ்வினையே இச்சரீரத்தைத்தோற்றுவிக்குமெனல் பொ ருந்தாது; என்னை? அஃதோர் அறிவில்லாத சடப் பொருளாகலினென்க. அற்றன்று, வினைதானே சரீரத் தைப்படைப்பதன்று தன்னையுடைய ஆன்மாவின் துணை கொண்டு படைக்குமெனின்;—அறிவின்றி வினைவயப்பட் டுக்கிடக்கின்ற ஓருயிர்தானே தன்வினையை நுகர்ந்தொழித் தற்பொருட்டு ஒருடம்பைப்படைக்குமென்றல் யாங்ஙனம்?

அங்ஙனம் படைக்கவல்லதாயின் முன்னெடுத்தவுடம்பையே விடாதிருக்க அமையுமன்றோ? இறப்புவருங்காலத்து அவ்வுடம்பைவிடவேண்டுமேயென நினைந்து நினைந்து அஃது இரங்குதல் என்னை? ஆகையால், வினைசடமாகையாற் றானே ஒருடம்பைத் தோற்றுவியாதாகலானும், வினைசெய்தஉயிர் அறிவின்றி வலியிழந்து கிடத்தலால் அதுதானும் அதனைப் படைத்துக் கொள்ளமாட்டாமையானும், இவையிரண்டின் வேறாகச் சரீரத்தைப்படைக்க வல்லது பிறிதின்மையின் பாரிசேட வளவையாற் கடவுளே அதனைச் சிருட்டிப்ப தென்பதும், அதுதானுமு் இவ்வுலகுயிர்க்கு முதலாயுள்ள தென்பதும் பெறப்படும்; இஃதுணர்ந்த பெரியாரும்,

"அநாதியே லமைவின்றெனின் மலமாயை கன்மமணுச்சிவன், அநாதிகன்ம மணுக்கள் செய்யவறிந்து கன்மமுடற்செயா, அநாதிகாரியமா முடற்களசேதனம் மணையாவறிந், தநாதியாதி யமைக்கவேண்டு மமைப்பினோடு மநாதியே" என்றருளிச் செய்தனர்.

இனி மாயாவாதிமதம்பற்றிப் பரப்பிரமம் ஒன்றே அருவாயுளதென்றும், ஏனையுருவுடைப் பிரபஞ்ச முதலியனவும் ஆன்மாவும் அதன்கட்பொய்யாய்த் தோன்றுகின்றன வெனவும், உண்மையான் உணர்ந்தவழிப் பரப்பிரமம் ஒன்றுமாத்திரம் பெறப்படுமெனவும் உரையாமோ வெனின்;—தோன்றுவதோர் தோற்றம் மெய்யே யாயினும் பொய்யே யாயினும் தோன்றப் பெறுவதனால் அஃதோர் உருவமுடைத்தாதல் வேண்டுமன்றோ? பரப்பிரமம் அருவப்பொருளாமென முன்கூறிப் பின் அதன்கண் உருவுடைப்பொருளெல்லாம் பொய்யாய்த் தோன்றுமென்றல் முன்னொடுபின் மலைவாமன்றோ? காணப்படுகின்ற இவ்வுலகுயிர்களைக்கொண்டே காணப்படாத கடவுளையறிய வேண்டியிருத்தலின், காணப்படுமிவற்றை யெல்லாம் வெறும்

பொய்ப் பொருளென் றொழித்தால் பின் காணப்படாத பிரமத்தை மாத்திரம் மெய்ப்பொருளென்று துணிந்துரைத்தற்கு வேறொரு வாற்றானும் ஒருகாரணம் பெறப்படாமையானும், உலகத்துப்பொருள் அழியாது என்றும் நித்தியமாம் என்னும் பௌதிக சாத்திரக் கொள்கையோடது முரணுதலானும் அங்ஙனங் கூறுதல் பொருந்தாதென்க.

இன்னும் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுள் அருவமாகமாத்திர மிருக்குமென் றொரு வரையறை கட்டிச் சொன்னால் அஃதுருவமாகின்ற சக்தி யில்லாததென்று பெறப்படுமாகலானும், அருவமாகிய ஆகாயம் ஆன்மா முதலியவற்றோடொப்ப ஒன்றெனக் கொள்ளப்படுமல்லது வேறுவிசேட முடையதாகா தாகலானும் அதுவும் பொருந்தாது. இவ்வுண்மை

"உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோ டருவமாகி
நிலவிடு மொன்றொன்றாக நின்றவந் நிலையேபோல
அலகிலா வறிவன்றானு மருவமே யென்னிலாய்ந்து
குலவிய பதார்த்தத்தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே"

என்னுந் திருவாக்கால் இனிது விளங்கும்.

மக்கள் ஆன்மநிலை அறிவும் உணர்வும் என இருதிறப்படும். அறிவைப்பார்க்கிலும் உணர்வே சிறந்ததாம். அறிவு உருவத்தைப்பற்றிநிகழும், உணர்வு அஃதின்றியும் நிகழும். ஆன்ம அறிவாற் பற்றப்படாத அருவவியலுடைய முழுமுதற் கடவுள் அன்பு என்னும் உணர்வு நிலையாற் பற்றுதற்கெளியனாய் ஓர் உருவத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்தனுக்கிரகிப்ப னாகலின் இறைவற்கு அருவத்திருமேனி மாத்திர முண்டென்றல் இழுக்காம். இது,

"விறகிற்றீயினன் பாலிற் படுநெய்போன்
மறையநின்றுளன் மாமணிச்சோதியான்

உறவுகோல்நட்டு உணர்வு கயிற்றினன்
முறுகவாங்கிக் கடையமுன் னிற்குமே'' என்றதிரா
விட சுருதியானும்,

ఆత్మానమరణిం కృత్వా ప్రణవం చోత్తరారణిం।
ధ్యాననిర్మథనాభ్యాసా దేవం పశ్యేన్నిగూఢవత్।
తిలేషు తైలం దధినీవ సర్పి రాప స్స్రోతస్స్వరణీషు చాగ్నిః॥ என்னும்
உபநிடத சுருதியானும் இனிது பெறப்படும்.

அற்றேல் கடவுள் உண்டென்று இங்ஙனம் விசாரணை செய்யும் அறிவாலறிதறியப் படுவதில்லை யாயின், இவ்விசாரணைகளெல்லாம் வெறுமே போலியாய் முடியும் போலு மெனின்;—அற்றன்று, அறிவால் விசாரணை செய்தலெல்லாம் கடவுள் உண்டென்பதனை நிச்சயப் படுத்துதற்கே யன்றி அதன் சொரூப முணர்தற் கன்று. அழகிற் சிறந்த மடந்தையின் அங்கஇலக்கணங்களை அறிந்து மகிழ்வது அறிவு நிலையாய்ப், பின் அவளோடு இணங்கி இன்பநுகர்ந் தவசமழிதல் உணர்வு நிலையாதல்போல இறைவனுண்டென்று மாத்திரம் விசாரித்தறிதல் அறிவின் பயனென்றும், பின்அவனோடொருமித்துப் பேரின்பத் தழுந்தல் உணர்வின்பய னென்றும் தேறப்படும். ஆகையால் அறிவுக்குக் கோசர யாகாத இறைவன் அன்பாற் கரைந்துருகித் தேம்பும் அன்பர் உணர்வுக்குக் கோசரமாய் அனுக்கிரகிப்பனாகலின் அவற்கு உருவமுண்டென்ப தொருதலையாம். இது

"இல்லாமுலைப்பாலுங் கண்ணீரு மேந்திழை பால்
நல்லாய் உளவாமா னீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று" என்னுஞ்சிவஞான
போதத்திருவாக்கானும்,

ఋతగుంసత్యం పరంబ్రహ్మపురుషం కృష్ణపింగళమ్।
ఊర్ధ్వరేతం విరూపాక్షం శంకరం నీలలోహితమ్। என்னும்

நரசிம்மதாபினியுபநிடதத்தானும்,

నమోహిరణ్యబాహవే హిరణ్యవర్ణాయ హిరణ్య
రూపాయహిరణ్యపతయేఽంబికాపతయే
ఉమాపతయేపశుపతయేనమోనమః॥

என்னும் மந்திரம் இறைவற்குப் பொன்வண்ணம் பொற்றோள் முதலியன கூறுதலானும், மண்டலபிராமணமும் இவ்வாறே

పంచవక్త్రం ఉమాసహాయం నీలకంఠం।
ప్రశాంతం అంగుష్ఠమాత్రః పురుషః॥ என்றுகூறுதலானும், கைவல்யோப நிடதம் இதயபுண்டரீகத்தில் அங்குட்ட மாத்திரையனாய்த் தோஜோமயனாய் வசிக்கும் பரமாத்மாவை உபாசிக்குமாறு கூறுதற் கெழுந்து

హృత్పుండరీకం విరజం॥ என்றநிட்களோபாசனை

சகளோபாசனை யென்னும் அருவவழிபாடும் உருவ வழிபாடும் உடன்வகுத்துக் கூறுதலானும் தெளிவாய்ப் பெறப்படும். இதனால் இறைவற்கு உருவவழிபாடு சொல்லிய பாகஞ் சிறிதும் உபநிடதங்களுட் காணப்படா தென்னும் பிரம சமாஜத்தார் கூறுவதூஉம் போலியாதல் காண்க.

இனி வைணவர் கூறுமாறு இறைவனுக்கு உருவமாத்திரமுண்டென்று கூறுமோ வெனின்; கூறும்; என்னை? அங்ஙனம் வரையறுத்துக் கூறின் அஃது அருவமாதற் குரிய சத்தி உடைய தன்றெனவும், உருவுடைப்பொருள்களான பிருதிவி அப்புத் தேயு வாயுக்களில் ஒன்றாய் ஒழியுமெனவும் பெறப்படு மாகலினென்க.

என்றிங்ஙனங் கூறியவாற்றால் இந்துசமயம் எனப்படுவது இமயமுதற் குமரியீறாக யாண்டும் பொதுவாய்ப் பரவி வழங்கும் பொதுக் கொள்கைகளாதலும், இக்கொள்கைகளுட் சிலசில வெடுத்து வற்புறுத்து அவைதம்மை மாத்திரம் அனுசரித்து வரும சாருவாகப் பௌத்தம முதலிய சமயங்கள் இநதுசமயப பிரிவாய் ஏகதேசமாய் அதன்கண் அடங்குதலும, இநதுசமயப் பொதுக்கொள்கைகள் வியாபக இலக்கண முடையவாய் இவற்றையெல்லாம் தமதகத்தே யடக்கி வியா பித்தலும, இக்கொள்கைகள் எல்லா வாற்றானும் பொருத்த முடையவாய் விளங்கலும் அறிவுறுத்தப்பட்டன.

இனி இவ் விநதுசமயம் எனப்படுவ தியாதென்று உண்மை யான் விசாரித்தவழி அதுவே சைவ சித்தாந்தம் என்னும் வேறு பெயரான வழங்கப படுகின்ற தென்பதினிது புலப்படாநின்றது

ஜடமாகிய பிரபஞ் சமும சித்தாகிய அறிவும் வேறு வேறு மென்பதும் அறிவுடைபபொருள் ஆன்மாவாமென்பதும் சித்தாந்ததின் கொள்கையாம்; இதற்குப் பிரமாணம.

"அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லாம்
அசத்தாகு மெய்கண்டா னையின்—அசத்தலாய்
நீரிலெழுத்தும் நிகழ் கனவும பேய்த்தேருமா
ஓரிலவையின்றுமா றெப்பு"

இவ்வான்மா இருவினைகளுட் பட்டுப் பிறப்பிறப்புகளிற் சுழன்று கொண்டு இயற்கையே அறியாமையுடைத்தாய் மாயையால் அறிவுவிளங்கப் பெற்று வரும் சித்துப் பொருளாமென்பது,

"அசித்தருவியாபகம்போல் வியாபகமருவ மன்றாய்
வசித்திட வரும் வியாபி யெனும் வழக்குடையனாகி
நசித்திடா ஞானச்செய்தி யநாதியேமறைத்துநிற்கும்
பசுத்துவ முடையனாகிப் பசுவென நிற்குமான்மா"

"மாயையின்வயிற்றுண் மன்னிவருஞ் செயன்ஞானமிச்
யேயுமிக்கலாதிமூன்று லேகதேசத்தி னேய்ந்திங் [சை
காயுமுக்குணங்களந்தக்கரணங்களாதி யெல்லாங்
காயபந்தங்களாகக் கலந்துடனிற்குமான்மா"

"சூக்குமதேகியாகித்தூல ரூபத்தின் மன்னிச்
சாக்கிரமுதலாயுள்ளவவத்தையுட்டங்கியெங்கும்
போக்கொடுவரவுமெல்லாம்புரிந்துபுண்ணியங்கள்பாவ
மாக்கியும் பலனகளெல்லாமருந்தியுநிற்குமான்மா"

என்னுஞ்சிவஞான சித்தித்திருவாக்குகளான் நன்கு துணியப்படும். இதன் கண்ணே கன்மமும்முற்பிறவி பிற்பிறவிகளுமுண்டென்பது இனிதுபெறப் படுதல் காண்க.

இனிப்பரமான்மா, சீவான்மாவின் வேறாய் எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா ஆற்றலும் எல்லா இன்பமும் ஒருங்குடையதா மென்பதும், அஃது அருவாய் உருவாய் அருவுருவாய் இவையும் அல்லவாய் இருக்குமென்பதும், அஃது உலகுயிர்களுமாய் அவற்றின் வேறுமாய் அவற்றினுள்ளுமாய் இரண்டறநிற்கும் என்பதும்,

"குறித்த தொன்றாக மாட்டாக் குறைவிலனாதலானும்
நெறிப்படு நிறைந்தஞானத்தொழிலுடைநிலைமையானும்
வெறுப்பொடுவிருப்புத்தன்பான் மேவுதலிலாமையானும்
நிறுத்திடு நினைந்த மேனிநின்மலனருளினாலே"

"அருவமோ ரூபாரூப மானதோ அன்றிநின்ற
உருவமோ உரைக்குங் கர்த்தாவடிவெனக் குணர்த்திங்கென்னில்
அருவமும் ரூபாரூப மானது மன்றி நின்ற
உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக்குள்ளதாமே"

"உலகெலா மாகிவேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலாவுயிர்கள் கன்மத்தாணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின்றன்மைதனக்கெய்தலின்றித்தானே
நிலவு சீரமலனாகி நின்றனன் நீங்காதெங்கும்" என்னுஞ்
சிவஞானசித்தித்திருவாக்குகளான் உணர்க. இதுகாறுங்
கூறியவாற்றாற் சைவசித்தாந்தந் தவிரப் பிறிது எந்தச் சம
யமும் இந்துசமயம் என்னும் பெயர்க்கு உரியதாகாமை கா
ண்க. ஓம் சிவாயநம:

# பண்டைக்காலத்தமிழரும் ஆர்ய

இது

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜில்

தமிழ்ப்புலமை நடாத்தும்

பண்டிதர். நாகை. வேதாசலம்பிள்ளையால்

எழுதப்பட்டு,



சென்னை:

மிமோரியல் அச்சியந்திரசாலையில்

முத்திரிக்கப்பட்டது.

1906.

இஃது

இறைவன் திருவடி நீழல் எய்திய

என் அருமை மகள்

**மரகதவல்லியை**

நினைவுகூர்தற்கு அறிகுறியாக

வகுக்கப்பட்டது.

# PREFACE.

The matter which forms the subject in the subsequent pages is a lecture delivered by me in May 1905, at the annual meeting of the Madura Tamil Sangam. Many points which were slightly touched and many a quotation which was omitted during the course of its delivery owing to want of time, are here enlarged and inserted for the benefit of the readers.

The subject is quite a new one to the main portion of the Tamil-speaking population. Even to the historians of the west it is a new theme. It is only of late that Pandit D. Saviriroyan and Prof. RhysDavids have given a new turn to the historic studies of the Indian races and their literature. Pandit Saviriroyan's 'Admixture of Aryan with Tamilian' and Prof. Davids' 'Buddhist India' have set up new lines of researches to be carried on in the study of Indian history and stimulated the interest of all impartial students whether Brahmin or Non-Brahmin to seek for their guide in the old Tamil literature and the ancient Buddhist works in Pali.

The indigenous races of India belonged to Tamil and even in the dim pre-historic times they were far advanced in mental culture. When the Aryans had come into contact with the Tamils, the civilisation of the latter was the primary element at work in effecting a thorough change in the social, moral and intellectual constitution of the former. The result produced by the commingling of the two races is, I believe, clearly shown in this lecture. Still the subject is such that it requires an elaborate treatment of the facts briefly mentioned here and I hope to do it in my separate English work 'Tamilic India.'

I need hardly say that I am deeply indebted to Pandit Saviriroyan and Prof. RhysDavids my forerunners in the new lines of studies in the history of ancient India.

Madras,
25th July, 1906.

R. S. VEDACHALAM.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| ௬. | ௧௯. | ஒருக | ஒழுக. |
| ௧௩. | ௧௫. | வாழநதா | வாழ்ந்தா |
| ௧௫. | ௧௫. | எனியோர் | எனையோர் |
| ௧௭. | ௧௭. | வருடஙகளுககு | வருடங்களுக்கு |
| ,, | ௨௧. | ஈணடு | ஈண்டு |
| ௨௩. | ௨௪. | படுவனவா | படுவனவாம். |
| ௨௫. | ௭. | தமிழ | தமிழ் |
| ௨௮. | ௮. | வெல்லாம் | வெல்லாம் |
| ௩௨. | ௧௧. | நூலிற்களி | நூல்களி |
| ,, | ௧௪. | ளிப்பை | களிப்பை |
| ௩௯. | ௩. | தம்மை | தம்மைப் |

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

1905ளு௵த்தில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் செய்தஉபந்நியாசம்.

# பண்டைக்காலத்தமிழரும் ஆரியரும்.

மனவியற்கையினுஞ் சரீர அமைப்பினும் மற்றை வழக்க ஒழுக்கங்களினுந் தம்முட்பெரிதும் வேறுபட்ட மக்கட்சாதியுள் தமிழரும் ஆரியரும் எனப்படுகின்ற இவ்விருதிறத்தினருந்தமக்குள் எவ்வாற்ருனும் வேறுபடுதல் போல ஏனைப்பிறர் அங்ஙனம் முரணிநிற்றல் ஆராய்தற்கு விசேடமுடைத்தென்று தோன்ற மாட்டாது. இவ்விருசாதியாரும் பண்டைநாளில் நிரம்பவும் மாறுபட்டு நின்றவாறு போலப், பின்றைநாளில் மிகவும் ஒருமைப்பட்டு இவர் தமிழர் இவர் ஆரியர் என்று பகுத்துணர்தற்கு அரியராய்ச் சீவித்து வருகின்ருர். இங்கே தமிழர் என்று குறிப்பிடப்பட்டோர் தமிழ்ப் பாஷை வழங்குவோர் என்று கொள்ளற்க. பிற்றைஞான்று தமிழரும் ஆரியரும் பேதந்தோன்ருவாறு கலந்து ஒருவர்க்குரிய பாஷையினையும் வழக்கவொழுக்கங்களையும் ஏனையோர் அனுசரித்துப் போதருகின்ருராகலின், இவர்தம்முள் வழங்குப் பாஷையினை ஓர் அடையாளமாகக் கொண்டு இவர்தம்மைத் தமிழர் ஆரியர் என்று பகுத்துரைத்தல் ஒரு சிறிதும் பொருந்தாது. பண்டைக்காலத்துத் தன்னந்தனியராய்த் தென்றிசைக்கண் வசித்துத் தமக்குரிய ஒருகலாற்றினைப் போற்றித் தமிழ்வழங்கிய முதுமக்களின் இரத்தக் கலப்பிற்றிரண்டெழுந்து போதருகின்ற சந்ததியாரே பிற்றைஞான்று தமிழர் எனப்பெயர் பெறுதற்கு உரிமையுடையா ரென்பதும், அவ்வாறே முன்னைநாளில் ஆசியாக்கண்டத்தின் வடக்கேயுள்ள வடநாடுகளில் வசித்துக் கொண்டு ஆரியபாஷை வழங்கிய முதுமக்களான ஆரியர் மாட்டுத் தோன்றிய சந்ததியாரே பின்ஞளில் ஆரியரென்று பெயர் பெறுந் தகுதியுடையா ரென்பதும் ஈண்டு உணரற் பாலனவாம். பலநூற்ருண்டுகளுக்கு முன்னரே தமிழரும் ஆரியரும் ஒருங்கு கலந்தமையாற்ருேன்றிச சந்ததிப்பாகுபா டுடையராய் வருகின்ற

இந்தியரை இவர்தாம் தமிழர் இவர்தாம் ஆரியர் என்று பேதம் இனிது புலனும்படி வேறுபடுத்து வழங்கல் இஞ்ஞான்று ஒரு சிறிதும் ஏலாதாயினும், இக்கட்டுரையில் பண்டைநாளிற் பேதம் விளங்கவாழ்ந்த அவ்விருசாதியாரைப் பற்றியே ஆராயப்புகுந்ததே மாகலின் அங்ஙனம் வேறு வேறு பெயர் குறித்துக்கூறல் குற்றமாதல் இல்லை என்க. அது கிடக்க.

ஐரோப்பிய பண்டிதர்கள் வடமொழி தென்மொழியில் எழுதப் பட்ட நூலுரைகளின் காலம் வரையறுத்தற் பொருட்டு இடைவிடாது செய்து வரும் பெருமுயற்சிகளால், கிறிஸ்து பிறந்தநாள் தொடங்கி இன்றுகாறும் எழுந்த நூலுரைகளின் காலம் ஒருவாறு துணியப்பட்டு வருகின்றது. சைவசமயாசிரியரான திருஞானசம்பந்தர் காலம் நிச்சயிக்கப்பட்டமையால், அவர்க்கு முன்னும் பின்னும் மிக இருண்டு கிடந்த நூலுரைகளின் காலம் விளக்கமுற்று வருகின்றன. இவ்வாறே வடமொழியில் மிகச் சிறந்த நல்லிசைப் புலவரான காளிதாசர் முதலியோர் காலம் நிச்சயிக்கப்பட்டமையால் அவர் காலத்திற்கு முற் பிற்பட்ட நூலாசிரியர் உரையாசிரியர் காலம் வரம்பு குறித்துரைக்கப்படுகின்றன. சென்ற இரண்டாயிரம் வருடங்களாக ஒரு தொடர்புற்றுக் கருகி யிருண்ட கால இருளின் இடையே மறைபட்டுப்புதைந்து கிடந்த நந்தாமணி விளக்காம் அப் பெரியார்காலம், மனவெழுச்சியும் நுண்ணறிவுமுடைய சிலரால் அகழ்ந்தெடுத்து உண்மைக்காரணங்களாற் றிரண்ட குன்றின்மேல் வைக்கப்படுதலின் நீண்ட அக்காலவிருள் வலிகுறைந்து வெளிறுகின்றது. இனி,இவ்விரண்டாயிர வருடங்களுக்கு முற்பட்டு இடிந்து வெறும்பாழாய்க் கிடக்குங் கால அரண்மனைவாயிலை அணுகி உட் செல்ல நோக்குகையில், அங்கு மிகப்பரவித்தோன்றும் இருள் கரிய மைச்சேறு குழைத்த குழம்பு போல் மிகத்திணிந்து காணப்படுவதாயிற்று. அதனைக் காண்டலும் எம் உள்ளம் பெரிதும் புழுக்கமுற்று "ஆ! இக்கால அரண்மனையினுள்ளே பண்டைக்காலத்து எம்முது மக்கள் தொகுத்து வைத்த களஞ்சியங்கள் எத்தகையனவோ, அவற்றை எங்கண்ணூரக் காணவும் பெறுகின்றிலமே! அவற்றின் அருமை பெருமையை எங்ஙனம் உணர்வேம்!" என்று நினைந்து நினைந்து ஊடுருவிச் செல்லுதற்கு அரிதாம் அவ்விருளை நோக்கிய வண்ணமே மிக வருந்தி நின்றேம். அங்ஙனம் நிற்பேமுக்கு எதிரில்

விரிந்த அவ்விருளின் நடுவிலே மனவலிமையும் விடாமுயற்சியும் ஆழ்ந்த வறிவு முடைய சிலர் அஞ்சா நெஞ்சினராய் இயங்கும் அரவம் செவிப்புலனாயிற்று. கதுமெனா அப்பக்கமாய் உறுத்து நோக்க அவர் அங்கே புற்றுமூடிய சாக்கறையினைத் திறம்படப்பிரித்து, அதனுள்ளிருந்த பொற்பேழையினை உடைத்து அதனுள்ளிருந்த முழுமாணிக்க மணிகள் சிலவற்றைப் புறத்தே எடுத்து வைத்தனர். உடனே, அக்கால வரணில் விரிந்த இருள்வலி சுருங்குவதாயிற்று. அது கண்டு கரை கடந்த உவகையுடையேமாய் உள் நுழைந்து அவற்றினருகே சென்று விழைந்து நோக்க அவ்வரிய பெரிய முழுமாணிக்கமணிகள் தொல்காப்பியம், திருக்குறள், இருக்குவேதம், திரிபிடகம் முதலியனவாய் இனிது விளங்கின. பின் இவ்வருமருந்தன்ன நூல் விளக்கத்தினாலே அப்பண்டைக்கால வரண்மனையினுட்சிறந்த இடங்கள் பலவுங்கண்டு வியப்பேமாயினேம். அது நிற்க.

இனி இந்நூல்களின் துணைகொண்டு பண்டைக்கால வியல்பு முற்று முணர்தல் அரிதாய விடங்களினெல்லாம், தமிழ் ஆரியம் முதலான பாஷைகளில் முன்னும் பின்னுமுள்ள சொற்பிரயோகங்கள் தோன்றி நின்று அவ்விடர்ப்பாட்டை விலக்கி நம்மாராய்ச்சியினை வலிபெறுத்தி வருகின்றன. நிலநூல் வல்ல ஆசிரியர் இந்நிலவுலக அமைப்பினையுந் தோற்றத்தினையும் நன்காராய்ந்து இதற்கு வயது குறிக்கின்றனர். இந்நிலவுருண்டையின் நடுவு மிகவிரிந்த குடைவாக விருக்கின்றது. அக்குடைவிலே தீக்குழம்பு நிறைந்து எரிந்து கொண்டிருக்கின்றது. அக்குடைவுக்கும் இந்நிலத்தின் மேற்புறத்துக்கும் இடையிலுள்ள மட்பகுதி பல அடுக்குகளாக அமைந்திருக்கின்றது. சிருட்டி காலத்திலே ஒரு பெருந்தீப்பிண்டமாக இருந்த இந்நிலங் காலந்தோறும் இறுகி யுறைந்து செல்கின்றதாகலின் இங்ஙனம் பல மண்ணடுக்குகள் உண்டாயின. இவ்வடுக்குகள் ஒவ்வொன்றனையும் அகழ்ந்து பார்த்து அவ்வடுக்குகள் உண்டாதற்குரியகாலம் இத்துணையாம் என்று நிலநூல்வல்ல ஆசிரியர் வரையறுத்திருக்கின்றனர். அவற்றுள் மேற்புறமபிலுள்ள நான்காவ தடுக்கிலும் ஐந்தாவதடுக்கிலும் புதைந்து கிடக்குங் கல்லாலமைத்த கருவிகள் செம்பாலமைத்த கருவிகள் இரும்பா லமைத்த கருவிகள் முதலிய வற்றின் ஆராய்ச்சியால் அவ்வப்படையில் வசித்த மக்கள் நாகரிக நிலையினை உற்றுணர்ந்து நன்கு விளக்குகின்றனர். இவ்வாறே இதுகாறுஞ்

சென்றகாலத்தினையும் பல வடுக்குகளாகப் பகுத்து, ஒருகாலத்து வழங்கிய சொற்கள் அக்கால முடிவில் தாமும் வழங்குதலின்றி அதன்கட் புதைந்து கிடப்ப மற்றை யொருகாலத்து அப்பொருளைக் குறிக்க மற்றை யோர்சொல் தோன்றி அதுவும் அக்கால விறுதி யிலே இறந்துபட்டுக்கிடப்ப வருஞ் சொன்முறையை நன்காராய்ந்து அவ்வக்கால வியற்கையினையும் அக்காலத்து மக்களியற்கையினையும் தெரித்துக்கூறுதல் சரித்திர வாராய்ச்சிக்கு இன்றியமையாதகருவி யாம். ஒரு பாஷையிலுள்ள ஒவ்வோர் சொல்லும் அப்பாஷையின் வரலாற்றை நன்கறிவிக்குங் கருவியாமென்பது கடைப்பிடிக்க.

இனி மகாபாரதப் போர் நடந்ததுதொட்டு இதுகாறுஞ் சென்ற காலத்தினைச் சரித்திர ஆராய்ச்சிக்குள் வைத்து மூன்று கூறாக அறுத்து முதல் இடை கடை யென நிறுத்தி அவற்றினியல்புகள் பெரும்பாலும் நன்கு விளங்கவகுத்துக் கூறுதல் * சரித்திரகால ஆராய்ச்சி எனப்பெயர் பெறுநிற்கும். இனி இங்ஙனங் காலவரை யறைப்படுதலின்றிப்பாரதப் போர்க்கு முற்பட்ட காலம் சரித்திர காலத்திற்கு முற்பட்ட பண்டைக்காலமெனப் பெயர் பெறும். கிறிஸ்து பிறப்பதற்கு 1400-வருடங்களுக்கு முன் நடந்த பாரதப் போரில் பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் பதினெட்டுநாள் வரையில் உதியஞ்சேரலாதன் என்னும் அரசன் சோறு கொடுத்தான் என்பதும்,அதுபற்றியே அவனுக்குப் பெருஞ்சோற்று உதியஞ்சேரலா தன் என்னும் பெயர் வழங்குவதாயிற் றென்பதும் அவ்வரசனோடு ஒருகாலத்தினரான முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர் பாடிய "மண்டிணிந்த நிலனும்" என்னும் புறநானூற்றுச் செய்யுளால் இனிது விளங்குதலின் அவ்வரசன் காலம் இற்றைக்கு மூவாயிரத்து நானூறு வருடங்களுக்கு முற்பட்ட தென்று நிறுவப்படும். இம் மூவாயிரத்து நானூறு வருடங்களுந் தொடர்ப்பட்டு வாழ்ந்து வருந் தமிழ் மக்கள் வரலாற்றினை ஒருவாறு காலங்குறித்து ஆராய்ந்துரைத் தல் சாலுமாகலின் இதனைச் சரித்திரகாலம் என்றுரைத்தாம். இங் ஙனங் காலவரையறுத்துச் சொல்லுதற்கு எலாது இம்மூவாயிர வருடங்களுக்கும் முற்பட்ட காலத்தைப் பண்டைக்காலம் என்று மாத்திரம் உரைத்தல் பெரிதும் பொருத்த முடைத்தாதல் காண்க.

---

* Historic times † Pre-historic times.

இவ்வாறே ஆரியர்க்குள்ளும் பாரதப் போர்க்கு முற்பட்ட காலம் வேதகாலம் எனப்பெயர் பெறுவதாயிற்று. அது கிடக்க.

இனி இம்மூவாயிர வருடங்களுக்கு முற்பட்டுச் சென்ற பழைய காலத்திலே இருந்த இருபெருஞ் சாதியாரான தமிழர், ஆரியர் என்பாரை நன்காராய்ந்து தங்கருத்து வெளியிடுதல் சரித்திர நூல் வல்ல ஆசிரியரெல்லார்க்கும் இன்றியமையாப் பெருங் கடமையாம். இஃதிங்ஙனமாகவும், சரித்திர நூல் வல்லாரிற் பெரும்பாலார் ஆரிய மக்களைப் பற்றியே பெரிதாராய்ந்து கூறி ஏனையோரை யாராயாது வைத்து வழுப்பட்ட கருத்துக்களையே மொழிந்து போயினர். தமிழ் மக்கள் வழங்கிய தமிழ்ப்பாஷை மிகப்பழையதாதலும், அஃதொரு தனித்த முழுமுதற் சொல்லாதலுந் தேறாத அவர் பிற்றை ஞான்று தோன்றிய சில தமிழ் நூல்களில் வடசொற்கள் சில வழங்குதல் பற்றித் தமிழ் சமஸ்கிருதத்தினின்று தோன்றியதாயென்று கூறினர். அதுவேயு மன்றித் தமிழ்ப் பாஷையில் உள்ள அரிய பெரிய நூல்களெல்லாம் கி - பி 11-வது அல்லது 12-வது நூற்றாண்டிலே தாம் இயற்றப்பட்டன வென்றுங் கூறினர். இவர் கூற்றுக்களெல்லாம் நியாயவாராய்ச்சியின்றிக் கூறப்பட்டன வாகலின், அவற்றின்பொய்ம்மை ஈண்டறிவித்தல் வேண்டற்பால தொன்றேயாம். ஒருபாஷை பிறிதொரு பாஷையோடு இனமுடைத்தோ அன்றோ என்று அறிதல், அப்பாஷைகள் முதன்முதற் றோன்றுங்காற் பிறந்தசொற்களை வைத்து ஒத்து நோக்கு முறையான் மாத்திரம் பெறப்படுவதாம். மக்கள் 'தங்கருத்தைப் பிறர்க்குப் புலப்படுத்தல் வேண்டி இட்ட ஒலிக் குறிகளே சொற்களென்று கொள்ளப்படும். ஒருவர் மற்றையொருவரொடு பழகப் புகுந்த விடத்துப், பேசுகின்ற தம்மையும், முன்னின்று கேட்போரையும், பேசப்படுகின்ற பிறரையுஞ் சுட்டுதற்குச் சொற்கள் வேண்டுவர்; அச்சொற்கள் நான், நாம்; நீ, நீர்; அவன், அவள், அவர், அது, அவை என்பனவாம்; இவை ஒவ்வொரு பாஷையினும் முற் பிறந்தனவா மாகலின் அவற்றை ஒத்து நோக்குதலாற் பாஷை யொற்றுமை நன்கு தெளியப்படும். வடமொழியில் அகம், வயம் என்பன முறையே தன்மை யொருமைப் பன்மையாகும்; த்வம், யூயம் என்பன முன்னிலை யொருமைப் பன்மையாகும்; அஸௌ, அஸு:, அத:, அமூநி என்பன படர்க்கை உயர்திணை யஃறிணை ஒருமைப் பன்மையாம். தமிழிலும் வடமொழியி

லுமுள்ள இவ்விடப் பெயர்கள் தம்முள் ஒற்றுமை சிறிதும் எய்தா மையால் அவை வேறுவேறாதல் தெற்றெனத் துணியப்படும். இனி மக்கள் தம்மோடு இன உரிமை யுடையாரைக் குறிக்குஞ் சொற்க ளும் அவ்வாறே முதற் பிறந்தனவாம். தமிழர் தமக்கு உறவினரா வாரை அம்மை, அப்பன், பிள்ளை, கணவன், மனைவி, அண்ணன், தம்பி, அக்கை, தங்கை என வழங்குவர்; ஆரியர் அவரை யெல்லாம் முறையே மாதா, பிதா, சுத அல்லது பால, பதி:, பார்யா, அக்ரஜா, ப்ராதா, ஸ்வஸா எனப் பெயரிட்டு வழங்குவர். இம்முறைப்பெயர்க ளுந் தம்மோடு இனப்படுதலில்லாமையால் இவையும் வேறுவேறென் பது துணிக. இன்னும் இவ்வாறே உணவுப்பெயர், எண்ணுப்பெ யர், கலப்பெயர், இடப்பெயர், பூதப்பெயர், விலங்கின்பெயர், உறுப் புப்பெயர், வினைப்பெயர் முதலியனவும் இவ்விரு பாஷைகளினும் வேறுபடுதல் காண்க. அவையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும். ஞானசாகரத்தில் 'தமிழ் வடமொழியினின்று பிறந்ததாமா?' என் னும் விஷயத்தில் விரித்து விளக்கினும், ஆண்டுக் கண்டுகொள்க. இவ்வாற்றால் இவ்விருமொழியுந் தம்முள் ஒன்றோடொன்றியையில் லாத் தனித்தனிப்பாஷைகளாதல் நன்கு பெறப்படும். இனித்தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளுவு, குறும்ப, இருள, எர்க் கலா, ஏனுதி முதலான பாஷைகட்கெல்லாம் இப்பத்துவகைச சொற்களும் பொதுப்பட நிற்றல் கண்கூடாயறியக் கிடத்தலின் இவ்வொன்பது பாஷைகளும் ஒன்றோடொன் றினப்பட்ட ஒருதொ குதியாமென்ப துணரப்படும். இனி ஆரியருந் தமிழரும் பிற்றை ஞான்று மிக நெருங்கி மருவி வாழ்ந்தனராகலின் ஆரியபாஷைக் குரிய சொற்கள் தமிழினும் தமிழுக்குரிய சொற்கள் ஆரியத்தினுங் கலப்புற்றன. அவர் அங்ஙனம் நெருங்கியிராது வேறா யிருந்தகா லத்தே எழுதப்பட்ட நூல்களில் விரவிய சொல் வழக்குக் காணப்படு தல் சிறிதுமில்லை யென்க. சங்கச செந்தமிழ் நூல்களில் ஒரோ வோர் ஆரியசசொற்கள் காணப்படுதல் என்னையெனின்;—ஆரியமக் கள் தமிழரோடு அக்காலத்துத் தான் விரவுதற்குப் புகுந்தனராக லின் அசசொற்கள் ஒரோவொன்று சுத்தச செந்தமிழ்நூல்களினுங் காணப்படுவனவாயின. காணப்படினும், நூற்றுக்கு ஒன்றல்லது இரண்டு விழுக்காடு மிக அருகிவந்ததே யன்றிப் பிற்றை ஞான்றை நூல்களிற்போலப் பெருகிய வரவினவாய் அவை வந்ததில்லையென்க. இனி, அள், கள், கல், கு, சா, பண், பக், மின், வள், நல், மு முத

லான சுத்தச் செந்தமிழ்ப் பகுதிகளிற் பிறந்த ஆணி, அடவி, கடு, கலா, குடி, குண்டம், கூனி, குளம், கோட்டை, சவம், சாயா, பட்டினம், பாகம், மீனம், வளையம், நாரங்கம், முகம் முதலான தமிழ்ச் சொற்கள் ஆரியபாஷையில் வழங்குதல் உய்த்துணரற் பாலதென்க. இவற்றின்விரிவெல்லாம் முன்ஞானசாகரத்திற் காட்டினும். இன்னுமிதன் பெற்றியா மெழுதிய முல்லைப்பாட்டாராய்ச்சியினும் நன்கு விளங்கும். அதுநிற்க.

இனித்தமிழ் சமஸ்கிருதத்தின் வேறாயதோர் தனிப் பாஷையாயினும் அஃது ஆரியம்போல் அத்துணைப் பழமையுடையதன்று, நிரம்பவும் புதிதாய்த் தோன்றிய தொன்றாம் என்றுரைப்பார் உரை பொருந்தாமையும் அப்பாஷை யாராய்ச்சியான் ஒரு சிறிது காட்டுதும். தமிழில் ஒருபொருளை யுணர்த்துதற்குப் பல பொருள் நிற்றல் பிங்கலந்தை முதலான நிகண்டுநூல் கற்ற சிறு மகாரும் நன்குணர்வர். ஒரு பொருளை யுணர்த்துதற்கு ஒருசொல்லேசாலுமாகவும் அங்ஙனம் பலசொற்கள்வேண்டப்படுவதென்னையென நுணுகியாராயின் அதனுண்மை இனிது புலப்படாநிற்கும். எடுத்துக்காட்டுமிடத்துக், கதிரவனை யுணர்த்த ௨௯ சொற்களும், உயர்வினையுணர்த்த ௧௯ சொற்களும், வலிவினை யுணர்த்த ௬௪ சொற்களும், அச்சந்தினையுணர்த்த ௧௩ சொற்களும், மலையினை யுணர்த்த ௨௮ சொற்களும் வருகின்றன. பிறவும் இவ்வாறே. ஒரே காலத்து இச்சொற்களெல்லாம் ஒருங்கு பிறந்தனவாகா. ஒவ்வோர் சொல்லும் ஒவ்வோர் காலத்துத் தோன்றிச் சிலகால மெல்லாம் நடைபெற்று அச்சொல் வழங்கிய மக்களோடு அதுவுமொழிய, அவர்க்குப் பின்னெழும் மக்களோடு பிறபுதிய சொற்கள் தோன்றி அவையுமவ்வாறே நடைபெற்றொழிய இங்ஙனம் பாஷை நாடோறுந் திரிபெய்தி வரும் இயற்கைத்தாமென்க. இவ்வாறு சொற்கள் தோன்றியும் வழங்கியும் மறைந்தும் போதரப் போதரும் பாஷை நாகரிக முதிர்ச்சியுடைய மக்கட்குரியதாயின் அதன்கண் அவ்வுக்காலத்திருந்த அறிவுடையோரால் எழுதப்பட்ட நூல்களில் அச்சொற்கள் கன்மேலெழுத்துப்போற் செதுக்கப்பட்டு நிலைபெறும். அப்பாஷை அங்ஙனமன்றி அநாகரிகமுடைய மக்களால் வழங்கப்படுவ தொன்றாயின் அதன்கட் காலந்தோறும் பிறந்த சொற்கள் எல்லாம் ஒருங்கே மறைந்தொழிய அப்பாஷையும் நாளடைவில் இறந்தொழியுமென்க.

ஒருகாலத்திருந்த மக்கள் ஒருபொருட்கண் உள்ள ஒருகுண விசேடம்பற்றி அப்பொருட்கொரு பெயரிட்டு வழங்குவர். அவ்வாறு வழங்கி வருகையில் அப்பெயர் பன்முறையும் வழங்கப்பட்டு வருதலின் அதன் காரணம் மறைந்தது; மறையவே, அச்சொல்லையுந் தமக்கு வேண்டியவாறெல்லாம் திரிவுபடுத்திக்கொண்டு வருதலின் அச்சொல் கடைசியில் வழக்கு வீழ்ந்தொழியப் பின் வருவோர் அச்சொல்லைவிட்டு அப்பொருட்கண் தாம் விசேடமாய்க்கண்ட குணம்பற்றி வேறு பெயர் தருகுவர். எடுத்துக்காட்டுங்கால், மரக்கொம்புகளை வெட்டுகின்ற கருவிக்குக் கோடரி என்று பெயர் (கோடு - கொம்பு ; அரி - அரிவது); அதனைப் பன்முறையாலும் வழங்கிவரும் மக்கள் அதன்காரணம் மறந்தமையின் அப்பெயரைக் கோடாலி எனத்திரித்து வழங்குகின்றார். இச்சொல் தன் உண்மை வடிவத்துடன் தமிழ் நூல்களிற் காணப்படாதொழியின் அஃதின்னதென்றறிந்துபோயிருக்கு மென்பதிற்றடையென்னை? முன்வழக்கு வீழ்ந்தொழிந்த சொற்களுந் தமிழ் நூல்களிற் பொறிக்கப்பட்டிருத்தலின் பின்வருவோர் அவற்றையும் ஒரோவொரு காலெடுத்து வழங்குதலுஞ் செய்திடுகின்றார். அங்ஙனம் வழங்குவதுஞ் செய்யுள்வழக்கிற்கே உபயோகமாவதன்றி, எல்லாமக்களுக்கும் உரியஉலகவழக்கில் அஃதில்லாமையால் உலகவழக்கிற்குயாண்டும் புதுச்சொற்கள் வேண்டப்படுமென்றல் ஒரு தலையாம். அற்றேல்,காலங்கடோறும் பழஞ்சொற்கள் வீழ்ந்தும் புதுச்சொற்கள் தோன்றியும் வருமாயின் பாஷையே முன்னிலைகெட்டுப் பின்வேறோர்நிலை எய்துமாலோவெனின்; அற்றன்று ஒருபாஷை முதன் முதல் உற்பத்தியாங்காலத்துப்பிறந்த பத்துத்தொகுதியிற்சேர்ந்த சொற்கள்அனைத்தும் எல்லாராலும் நாடோறும் திரிவின்றிவழங்கப்படும் இன்றியமையா நெறிமையுடையவாகலின் அச்சொற்கண்மாத்திரம் வழக்கு வீழ்ந்தழியாவென்பது அனுபவத்தில் வைத்துக்கண்டு கொள்க. அம்முதற்பிறவிச்சொற்கள்பற்றியே ஒருபாஷை வழக்கு வீழாது நிலைபெறுமென்றுணர்ந்து கொள்க. இனி அச்சொற்கள் ஒவ்வொன்றும் பிறந்து வழங்கிமறையப்பலநூற்றாண்டுகள் செல்லுமென்றல் அனுபவவறிவுடையா ரெல்லார்க்கும் இனிது புலனும். பண்டைத்தமிழ்மக்கள் மலைநாடுகளினுங் கடற்கரையோரங்களினும் வசித்தவரென்பது பின்னே காட்டப்படுமாதலால், அவர் வழங்கிய பாஷையில் மலை, கடல் என்னு மிரண்டையுஞ் சுட்டும் பெயர்கள் மிகுதியாகக் காணப்படும். அச்சொற்கள் எல்லா

வற்றையும் பழைய தமிழ் நூல்களில் ஆய்ந்து பொறுக்கி, எவ்வெச் சொல் எவ்வெக்காலத்து நூலிற் றோன்றிற்றென்று நிச்சயப்படுத்தி அம்முறையால் அச்சொற்களை முன் பின் வைத்துக் கணிப்பின் தமிழ்ப்பாஷையின் காலம் இனிது நாட்டப்படும். இங்ஙனங்காலங் கணிக்கும் முறையின் அருமையை நன்குணர்ந்தன்றே மாரிஸ் என்னும் ஆங்கில பண்டிதர் தா மெழுதிய ஆங்கிலபாஷை வரலாற்றில் இதனைக்கடைப்பிடித்து அதன் காலவளவை செவ்வனே குறித்திட்டார். அதுபோலவே, தமிழ்நூல் வல்ல ஆசிரியரும் இம்முறை வழாது ஆராய்ந்து தமிழ்ப் பாஷையின் பழஞ்சிறப்பை நிறுவுதற்குப் பெரிதுங் கடமைப்பட் டிருக்கின்றார். இக்கட்டுரையில் எம்மால் அங்ஙனங் காலநிச்சயஞ் செய்வதற்குக் கூடாதாயினும், ஒருபொருளைச் சுட்டுதற்குப் பலசொற்கள் காணப்படும்அத்துணையே பற்றித் தமிழ்ப் பாஷை மிகப்பழைய பாஷையாமென்று கூறுதல் குற்றமாமாறில்லை யென்க. அது கிடக்க.

இனிச் சொல்வழக்கானே யன்றிச் சொல்லுச்சாரண முறை யானுந் தமிழ் மிகப்பழையதொன்றாதல் காட்டப்படும். தமிழில் வழங்கும் எல்லாச் சொற்கள் முதலினும் ட், ண், ர், ல், ழ், ள், ற், ன் என்னும் எட்டெழுத்துக்கள் நில்லாவென இலக்கண நூல்களில் ஒரு விதி காணப்படுதல் சிறிதிலக்கண அறிவுடையாரும் அறிவர். டமருகம், ரகு, ராமன், லம்பகம் முதலியனவாக ஆரிய பாஷைச்சொற்கள் அவ்வெழுத்துக்களை முதற்கொண்டு வருமாகவும், தமிழ்மாத்திரம் அங்ஙனம் அவ்வெழுத்துக்களை முதற்கண் நிறுத்துக் கொள்ளாமையும், அப்பிறபாஷைச் சொற்களையுந் தானெடுத்து வழங்கும் போது இடமருகம், இரகு, இராமன், இலம்பகம் என உயிர் முதல் நிறுத்து வழங்குதலும் என்னை என்று ஆராய்கின்றுழி அதனியல்பு நன்குணரக்கிடக்கும். சிருட்டிகாலத் தொடக்கத்திலே தோன்றிய மக்களியல்பும், நம்மனுபவத்திற் காணும் சிறுமகார் இயற்கையும் தம்முட் பெரும்பான்மையுஞ் சமமுடையனவாம். இஃதறிவுடையா ரெல்லார்க்கும் ஒப்பமுடிந்தவோர் உண்மையேயாகும். பிள்ளைப்பருவத்திலே, சொல் உச்சரித்தற்கு இன்றியமையாக் கருவிகளான இதழ், நா, பல், அண்ணங்கள் வேண்டியவாறு இயங்காமையின் அப்பருவத்தே அம்மகார் வழங்குஞ் சொற்கள் மிகச்சிதைவுபடும். சிறுமகார் 'ராமா' என்பவனை 'ஆமா' வென்றழைப்பர். இவ்வுண்மை நாடோறும் அனுபவத்தா லறியற்பாலதேயாம். முன் மொழிக்கு

முதலாகா வெனப்பட்ட எட்டு மெய்யெழுத்துக்களும் நா மேலண்ணத்தைச் சென்று தொடும் முயற்சியாற் பிறப்பனவாம். நாவை மேலே சேர்த்தி உச்சரிக்கும் அம்முயற்சி பிள்ளைப்பருவத்தே தோன்றுமையின், அப்பருவத்தே பிறக்குஞ் சொற்களெல்லாம் அவ்வெழுத்துக்களை உடையனவாகா;சிருட்டி யாரம்பத்திற் றோன்றிய மக்களது நிலைமையும் பிள்ளைப்பருவத்தோடு இயைந்ததாகலின், அஞ்ஞான்று அவர் பிறப்பித்த சொற்களிலே அவ்வெழுத்துக்கள் காணப்படாவாயின. இதனால், தமிழ்ச்சொற்கள் மக்களுடைய முதற்பருவத்திலே உற்பத்தியாய் நிலவுதலுற்றன வென்பது எளிதிற் பெறப்பட்டது. வடமொழி முதலான மற்றைப்பாஷைச்சொற்கண் முதலிலெல்லாம் அந்நாவெழுத்துக்கள் நிற்றல் அறியப்படுதலின், அவை மக்களுடைய பிற்பருவத்திலே தோன்றியவா மென்பது துணிபொருள். மேலும், இப்போது நூல்வழக்காயுள்ள சமஸ்கிருதபாஷை மக்களால் எஞ்ஞான்றும் பேசப்பட்டதில்லை யென்றும், இதற்குத் தாய்மொழியான ஆரியமே அங்ஙனம் பேசப்பட்டதொன்று மென்றும் அப்பாஷையாராய்ச்சிவல்ல பண்டிதர்கள் பலரும் உரையாநின்றார். இவ்வாற்றால், மக்களுடைய முற்பருவத்திலே பிறந்த தமிழ்ப்பாஷை அவருடைய பிற்பருவத்திலே தோன்றிய சமஸ்கிருதபாஷைக்கும் முற்பட்டதொன்றுதல் முடிந்த வுண்மையாம். 'இதன்விரிவும் தமிழ் மிகப்பழைய மொழி' என்னும் ஞானசாகர உரையுட் காட்டுதும். அதுநிற்க.

இனித்தமிழ் இலக்கண இலக்கிய விரிவானும் மிகப்பழையதொன்றென்பது காட்டப்படும். இப்போது தமிழில் வழங்கும் இலக்கணநூல்களுள் மிகப்பழையது தொல்காப்பியம் ஒன்றேயாம். குறைபாடின்றிப்பாகுபாடு நனிதெரித்து எழுதப்படும் இலக்கணநூல் தமக்குடைய பாஷைகளெல்லாம் மிகச் சீர்திருத்தமுற்று நாகரிகம் நிரம்பிய பாஷைகளாகுமென்று அறிவுடையோர் ஒருப்பட்டுக் கூறுகின்றார். ஆங்கிலபாஷை இஞ்ஞான்று எவ்வளவோ சீர்திருத்தம் அடைந்தும் அதன்கண் உள்ள இலக்கணநூல்கள் ஒன்றாயினும் குறைபாடின்றி எழுதப்படவில்லை. தமிழோடு இனமுடைய தெலுங்கு மலையாளம் கன்னடம் முதலான பாஷைகள் பல நூற்றாண்டுகளாகச் சீர்திருத்தஞ் செயப்பட்டு வந்தும், அவற்றின் கண்ணும் இதுகாறும் இலக்கணநூல் ஒன்றேனுஞ் செவ்வையாக எழுதப்படவில்லை. இலக்கணநூல் செவ்வையாக இயற்றப்பட்ட பாஷைகள் இவ்வுலகில் எத்தனையுள்ளன வென்று எண்ணிப்பார்க்கும்வழி அவை மிகச்சில

வேறுபாடுதல் எல்லாரானும் இலேசிலே யறியப்படும். அவற்றுள், தமிழ் சமஸ்கிருதம் என்னும் இருமொழிகளினும் எழுதப்பட்ட இலக்கணநூல்களின் பெருமையும் நுணுக்கமும் நிறைவும் ஆராயுந்தோறும் பேரின்பத்தை விளைக்கின்றன. ஒருபாஷையைச் சீர்திருத்தம் பண்ணுவது ஒருவரிருவரான்முடியும் எளிய காரியமன்று. சுழன்று செல்லும் புயற்காற்றினையும், அணைகடந்து பெருகும் வெள்ளத்தினையும் இடைமறித்து நிறுத்தினும் நிறுத்தலாகும்; ஒருபாஷையின் விரைந்த செலவை அடக்கியாளுதல் யார்க்கும் முடியாததொன்றாம். வேதகாலத்திலே எழுதப்பட்ட ஆரிய பாஷை காவிய காலத்தில் எவ்வளவோ மாறுதலடைந்தது. போவுல்ப் கேடிமான் காலத்தில் நடைபெற்ற ஆங்கிலபாஷை சாசர் காலத்திலும், சாசர்காலத்திய பாஷை ஷேக்ஸ்பியர் காலத்திலும், ஷேக்ஸ்பியர் காலத்திய பாஷை டெனிசன் காலத்திலும் எத்தனை எத்தனையோ மாறுதல் அடைந்தன. இங்ஙனங்காலங்கடோறும் ஒரு பாஷையின் முன்னுருவந் திரிபெய்தி வருமாயின் அப்பாஷையின் ஒழுங்கை யறிந்து இலக்கணநூல்கள் இயற்றுதல் மிக அரிதாம். அது காலங்கடோறும் வேறுபட்டு வருமாயின் அதனைவழங்கும் மக்கள் தங்கருத்தறிவிக்க இலேசான கருவி காணமாட்டாது மிக இடர்ப்படுவர். இதுபற்றியே ஆங்கில அரசுடையார் தம்முடைய பாஷையினை ஒழுங்கு கடவாது நிலை பெறுவித்தற் பொருட்டுக் கல்விச்சாலைகள் பலப்பல வியற்றிப் பாஷையினைத் திருத்தமுறக் கற்பித்துக் கல்விவளம் பெருக்கி வருகின்றார். நாகரிக மக்களிடத்து நடைபெறும் பாஷைகள் விரைவிலே வேறுபடுதலில்லை; புதிய சில சொற்கள் பிறரிடமிருந்து போந்து சேரும் அம்மாத்திரையே யன்றித் தம் சொரூபவியல் பெரிதுந்திரிபெய்தாது பரவி வழங்கும். ஒருபாஷை சொரூபந்திரிபடையாது நிலை நிற்றற்கு வேண்டும் முயற்சி என்னை என்று ஆயும்வழி அதன்கண் ஒவ்வொரு சொல்லும் பண்டுதொட்டு வழங்குமாறும், அச்சொற்கள் தோன்றுங்காற் பெற்றகாரணமும், அவை வாக்கியங்களில் தொடர்புற்று நின்று பொருள் அறிவிக்குமாறும், அவற்றோடு கலந்து வழங்கும் பிறபாஷைச் சொற்கள் இவை என்றலும் இனிது அறியப்பட்டு வருதலேயாம். இவை இவ்வாறு அறியப்படுதல் கற்றோரிடத்தன்றி மற்றையோரிடத்து இல்லையாலோ வெனின்; ஓர் ஊரில் கற்றறிவுடையார் ஒருவர் இருப்பினும் அவரால் அவ்வூரார் எல்லாரும் திருத்த மடைவார். தாழ் நிறையப் பெய்ததீம்பாலில்

குற்றிய உறைத்துளி மிகச்சிறிதாயினும், அஃது அப்பால் முழுவதையும் தீஞ்சுவைத்தயிராகத் திரிபு செய்தல் போலக் கற்றார் ஒருவரேயாயினும் அவர் தம்மைச் சூழ்ந்தார் அனைவரும் நலம் பெறச் செய்வர். எங்ஙனமெனின், அவர் தம்பால் வந்தணுகுவோர்க்குத் திருந்திய சொற்பொருளை அறிவிப்ப, அறிவிக்கப்பட்ட அவர் சீடர் தாம் அவற்றைப் பிறர்க்கு அறிவிப்ப, அப்பிறர் அவற்றை வேறு பிறர்க்கு அறிவிப்ப, இங்ஙனம் ஓரிடத்துத் தோன்றிய அலை தடாகத்தின் நாற்புறங்களினும் பலஅலைகளைத் தோற்றுவித்து நடைபெறச் செய்தல் போல அக்கற்றறிவுடையார் தாம் பெற்ற அத்திருத்தங்களெல்லாம் அவரறிந்தும் அறியாமலும் யாண்டும் பரவிக் கொண்டேயிருக்கும். இவ்வாறு உலகத்தில் நடைபெறும் ஒழுக்கங்களெல்லாம் கற்றாராற் சீர்திருந்தப்பெற்று வருதல் பற்றியே "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்னும் திருவாக்கு எழுந்தது.

இனி எந்த நாட்டில் தொன்றுதொட்டுக் கற்றோர் மிகுதியாய்ப் பல்கி வருவரோ அந்த நாடு வளம் பெருகும்; அதன்கண் உள்ளார் எல்லாரும் கல்வி மணம் பெற்று அறிவுவிளக்கமுடையராவர்; அவர் வழங்கும் பாஷை மிகுந்த சிறப்புடையதாய் நிலைபெறும். தமிழ் நாட்டிற் பண்டைக்காலத்துக் கற்றறிவுடைய சான்றோர் கணக்கின்றியிருந்தாரென்பதற்கு அவர்களால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட அளவிறந்த நூல்களும், அளவிறந்த பாட்டுக்களுமே சான்றாம். புறநானூறு முதலான பழைய சங்கத் தொகைநூல்களைக் காண்பேமாயின், அவற்றிற் பெறுதற்கரிய முழுமணிபோன்ற அரிய பெரிய செய்யுட்களை இயற்றியருளிய அப்பெருந்தகையாளர் பேரறிவும் பெருந்தொகையும் பெரிதும் வியக்கற்பாலனவாயிருக்கின்றன. இற்றைக்கு இரண்டாயிர வருடங்களின் முன்னே நமது செந்தமிழ்ப் பாஷை எவ்வளவு திருத்தமாக வழங்கப்பட்டுலாவியது! அந்நாட்களிலிருந்த கற்றோர் நுண்ணறிவு எவ்வளவு தெளிவாக அவரியற்றிய பாக்களிலே துளும்பி ஒளி வீசுகின்றது! அப்போதிருந்த நன்மக்களெல்லாரும் எவ்வளவு இன்புற்று வாழ்ந்தனர்கள்! என்று நினைக்க நினைக்க எம் உள்ளம் வரை கடந்த இன்பத்தாற் பொங்குகின்றது. அக்காலத்திற் எழுதப்பட்ட தெய்வத்திருக்குறளுக்கு இணையான நூல் இவ்வுலகத்தில் உண்டோ? அஃது உயர்வு ஒப்பில்லா உவா அமிழ்தமன்றோ! உள்ளன உள்ளபடி கூறிய முழுக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை என்பவற்றின் முன்

நிலையெடுத்து நிற்கும் வேறுகாப்பியங்கள் இவ்வுலகில் எந்தப்பாஷை யிலேனும் உளவா? இல்லையே! மக்கள் மனோதத்துவ இயற்கை யினைப் பகுத்து விளக்கிய இறையனாரகப்பொருளுரை போன்றநூல் இவ்விரிகடலுலகினும் இல்லையே. கலித்தொகையிலுள்ள இயற்கைப் பொருள்நுட்பமும், பலதிறப்பட்ட மக்கள் வழக்க ஒழுக்க ஆராய்ச்சி யும் வேறு எப்பாஷை நூலிலாயினும் உள்ளனவா? மனுமுதலிய தன்ம சாத்திரங்களெல்லாம் நாலடியாரை ஒக்குமோ? ஆ! அக் காலத்துத் தோன்றிய திருச்சிற்றம்பலக்கோவையார் என்னும் அவ்வொருநூலை நோக்கினும் தமிழ்ப்பாஷையின் அமைதியும் சிறப் பும் இனிது புலப்படுமே. நண்பர்காள்! இங்ஙனஞ் சீர்திருத்த முற்று நிலாவிய இச்செந்தமிழை வழங்கிய மக்கள் எத்துணை நாகரிக முடையரா யிருந்தனராவர்!

இனி இந்நூல்களுக்கெல்லாம் மிக முற்பட்ட தொல்காப்பிய நூற் பெருமையைச் சிறிது ஆராய்ந்திடுவேமாயின் தமிழர் சரித்திர காலத்திற்கு முன்னும் மிக்க நாகரிகம் பெற்று வாழ்ந்தாரெனல் தெற்றென விளங்குகின்றது. தொல்காப்பியம் முற்கூறிய தமிழ் நூல்கள் எல்லாவற்றிற்கும் முன்றோன்றியதாதலை ஒரு சிறிது ஆராய்வாம். இது வடமொழியிற் பாணினி முனிவர் இயற்றிய அட்டாத்தியாயி என்னும் அரியபெரிய இலக்கணநூலுக்கும் முந்திய தென்று நாட்டவே, இதன்காலம் அத்தமிழ்நூல்களுக்கெல்லாம் முற் பட்டதாதலும் நன்குபெறப்படும். ஆகலின் முதலிற் பாணினி முனிவர் காலம் ஈண்டுச் சுருங்கவுரைப்பாம். பாணினிமுனிவர் தாமி யற்றிய அவ்விலக்கணநூலில் இவ்விந்திய தேசத்தின்கண் உள்ள இடங்கள் பலவற்றைச் சுட்டிக்காட்டி அவற்றின் பெயர்க்கெல்லாம் இலக்கணம் வகுத்துரைக்கின்றார். பெரும்பாலும் அவராற் குறிக் கப்பட்ட நாடு நகரங்களெல்லாம் பஞ்சாப் தேசத்திலும் ஆப்கானிஸ் தானத்திலும் இருக்கின்றன. இந்தியாவில் தெற்குப்பிரதேசங் களில் அவராற் குறிக்கப்பட்ட இடங்கள் கச்ச * அவந்தி †, கோசல ‡ கருச §, கலிங்க ⁋ முதலியனவாம். இவையெல்லாம் விந்திய மலை

* ச-ஆம் அத். உ, கங்ங.
† ,, க, களசு.
‡ ச-ஆம் அத். க, களக.
§ ,, ,, களஅ.
⁋ ,, ,, ,,

க்கு வடக்கேயுள்ளன. விந்தியமலைக்குத் தெற்கே உள்ள நாடு நகரங்களில் ஒன்றாயினும் அவராற் குறிக்கப்படவில்லை. ஆகவே, பாணினி முனிவர் காலத்து ஆரியமக்கள் விந்தியமலைக்கு வடக்கே உள்ள நாடுகளில் இருந்தா ரென்பதும், அம்மலையைக் கடந்து இப்பால் வந்தில ரென்பதும் இனிது பெறப்படுவனவாம்.

இனிப்பாணினீயத்திற்கு வார்த்திகை உரை எழுதிய காத்தியாயனர் விந்தியமலைக்குத் தெற்கே உள்ள நாடு நகரங்களைக் குறிப்பிடுகின்றார். ஓர் இடத்தின் பெயர் பற்றி அவ்விடத்திற் பிறந்த மக்கட்குப் பெயர் வருமாற்றைச் சுட்டிப் பாணினிமுனிவர் விதி கூறிப் பஞ்சாலத்தில் தோன்றினவன் பாஞ்சாலன், சால்வத்திற் றோன்றினவன் சால்வேயன் என்பனவாக உதாரணமுங் காட்டினார். 'ஈண்டு இச்சூத்திரத்தில் வேறு சில விடப்பட்டன'என்றுரைத்துக் காத்தியாயனர் " 'பாண்டியன்' எனுஞ்சொற் பாணினியாற் சொல்லப்படவில்லை; பாண்டு குடியில் அல்லது பாண்டு நாட்டிற் பிறந்தோன் 'பாண்டியன்' எனப்படுவான்" என்று புதிய ஓர் உரைவாக்கியமுஞ் சேர்த்தெழுதினார். இன்னும் இவ்வாறே 'சோழர்' 'மகிஷ்மத்' என்னுஞ் சொற்களும் அக்காத்தியாயனரால் ஆராய்ந்துரைக்கப்பட்டன.

இனிப்பாணினீயத்திற்கு மாபாடிய முரைத்த பதஞ்சலியார் 'மாகிஷ்மதீ' 'வைதர்ப்ப' 'காஞ்சீபுர' 'கேரள' முதலியவற்றையும் ஆராய்ந்து உரையுரைத்தார். அதுவேயுமன்றித் தம்முரையுட்காத்தியாயனர் வார்த்திகவுரை பாடபேதங்கள் பல உளவாதலும் எடுத்துக் காட்டினார். காத்தியாயனர் உரை பலபாட பேதங்கள் உடைத்தாய்த்திரிபெய்துதற்குப் பலநூற்றாண்டுகள் செல்லுமாகலின், அப்பாட பேதங்களைத் தம்முரையுட் குறித்த ஆசிரியர் பதஞ்சலியார்க்கு முந்நூறு நானூறு வருடங்களின் முன் அக்காத்தியாயனர் இருந்தாராகற்பாலார். மற்றுப்பதஞ்சலியார் இற்றைக்கு இரண்டாயிரத்து ஐம்பத்தாறு வருடங்களின் முன் இருந்தாரென வட நூற் சரித்திர பண்டிதர்கள் கிறுவினாராகலின், காத்தியாயனர் காலம் உகூ௫௰ வருடங்களின் முற்பட்ட தென்பது பெற்றாம்.

இனிப்பாணினி முனிவராற் சொல்லப்படாத புதிய இலக்கண விதிகள் சில காத்தியாயனாரற் சொல்லப்பட்டிருப்பது கொண்டு, அவ்விதிகள் பெறுதற்குரிய சொல் வழக்குகள் சில பாணினிமுனி

வர்காலத்தி லில்லை என்பதூஉம், அவை காத்தியாயனர் காலத்தே தான் தோன்றின என்பதூஉம் பெறப்படுகின்றன. அதுவேயு மன்றிப் பாணினி முனிவர் காலத்து நடை பெற்ற சொற்கள் பல காத்தியாயனர் காலத்து வழக்குவீழ்ந் தொழிந்தன. இங்ஙனம் பாஷை திரிபெய்துதற்குப் பலநூற்றாண்டுகள் செல்லுமாகலின் பாணினி முனிவர்க்கும் காத்தியாயனர்க்கும் இடையில் விரிந்த காலம் நானூறு வருடத்திற்குக் குறையாதாகும். எனவே, பாணினி முனிவர் இற்றைக்கு உ௮00 வருடங்களுக்கு முன்னிருந்தா ரென்பது இனிது பெறப்படும்.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் சொல்லதிகாரத்தில் தமிழ்ச் சொல்லிலக்கணங்களெல்லாம் முற்றவுங் கூறினாராயினும், அச்சொற்கள் எவ்வாறு பிறந்தன என்று ஆய்ந்து அவைதம்மை யெல்லாம் பகுத்துப் பகுதிகளாக அடக்கிக்காட்டினாரில்லை. அங்ஙனமாயினும், ஒவ்வொரு சொல்லுங் காரணம் பற்றியே தோன்றினவென்றும், அக்காரணம் அறிவுடையார்க்கல்லது ஏனியோர்க்கு விளங்கத்தோன்றாவென்றும் குறிப்பிட்டு "மொழிப்பொருட்காரணம் விழிப்பத் தோன்றா" என்று சூத்திரஞ் செய்தருளினார். இவ்வாற்றால் தமிழ்ச்சொற்களைப் பகுதி, விகுதி முதலியனவாகப் பகுத்து ஆராய்ந்துரைக்கும் முறை தொல்காப்பியனார் நூலெழுதிய ஞான்று தமிழாசிரியர்க்குத் தெரியாதிருந்த தென்றே துணியப்படும். மற்றுப் பாணினி முனிவர் தாமியற்றிய அட்டாத்தியாயியில் தங்காலத்து வழங்கிய பல்லாயிரம் ஆரிய மொழிகளை யெல்லாம் பகுதி விகுதிகளாகப் பகுத்தாராய்ந்து அவற்றை யெல்லாம் தாதுபாதத்திற் சில்லாயிரம் பகுதிகளிலே அடக்கினார். தொல்காப்பியனார் பாணினி முனிவர் காலத்திலேனும், அல்லது அதற்குப் பின்னேனும் இருந்தனராயின் இலக்கண ஆராய்ச்சிக்கு இன்றியமையாப் பெருஞ் சிறப்பினதான சொல்வரலாற்று முறையைத் தவறாது கூறியிருப்பர். பாணினி முனிவர்க்குப் பிற்பட்ட காலத்திலிருந்தவரான பவணந்தியார் இச்சொல் வரலாற்று முறையைத் தமது நன்னூலில் தழுவிக் கூறினமை அறியவல்லார்க்கு யாம் உரைத்தது மிகவும் பொருத்த முடைத்தாதல் இனிது விளங்கும். ஆகவே, சொல்வரலாற்று முறை தெரிந்துரைத்த பாணினி முனிவர்க்கும், அம்முறைதங் காலத்தில் லாமையால் அதனை உரையாது விடுத்த தொல்காப்பியனார்க்கும் இடைப்பட்ட காலம் மிகப்பெரிதாதல் வேண்டும். பாணினி முனி

வர்க்கு நானூறு வருடங்களின் முன்னே ஆசிரியர் தொல்காப்பியனார் இருந்தனர் என்று கொள்ளும்வழி, இற்றைக்கு மூவாயிரத்திருநூறுவருடங்களுக்குமுன் அவ்வாசிரியர் காலம் கணிக்கப்படுமென்று கொள்க.

இனி மற்றுமொரு வாற்றால் தொல்காப்பியனார் காலம் ஆயும் வழி அது நாலாயிர வருடங்களுக்கும் முற்பட்டதென்று நாட்டப்படும். தொல்காப்பியம் பஃறுளியாறு கடல் கொள்ளப்படு முன் எழுதப்பட்டது; அக்காலத்திற் குமரியாறு தென்றிசையில் ஓடிக்கொண்டிருந்தது. இது "வடவேங்கடந் தென்குமரி" என்னும் பனம்பாரனார் பாயிரவுரையானும், அதற்குரை கண்ட இளம்பூரணர் முதலான உரையாசிரியர் உரையானும் நன்குணரப்படும். இவ்யாறுகளும் இவற்றைச் சூழ்ந்த நிலங்களும் கடல் கொள்ளப்பட்டது இற்றைக்கு நாலாயிரத்து முந்நூறு வருடங்களின் முன்னென்று இலங்கைப் பௌத்த வமிசாவளியிலே குறிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனங் குறிக்கப்பட்ட காலமும், விவிலியநூலிற் குறிக்கப்பட்ட நோவா என்பவர் காலமும் மிகவும் ஒத்திருக்கின்றன. எனவே, தொல்காப்பியனார் நாலாயிரத்து முந்நூறு வருடங்களுககு முன்னிருந்தாரென்று துணிந்து கூறுவாம்.

இனி இத்துணைப் பழைய காலத்தே எழுதப்பட்ட தொல்காப்பியம் என்னும் தமிழ்க் களஞ்சியத்தில் தொகுக்கப்பட்டுள்ள பொருள் நுட்பங்கள் எல்லாம் முற்றவும் எடுத்துக் காட்டல் ஏலாமையின், ஒவ்வோரதிகாரத்திலும் ஒன்றிரண்டு எடுத்துரைப்பாம். எழுத்ததிகாரத்தின் முதலிலேயே அவ்வாசிரியர் தமிழ் ஒலி எழுத்துக்களை முறையே நிறுத்திக் கூறிய திறம் பெரிதும் வியக்கற்பாலதாம். மூடி இருந்த வாயைத்திறந்த மாத்திரையானே அகர ஒலி இயற்கையாய்த் தோன்றுதலின் அதனை முன்னும், அதன்பின் இகரம் நாவாற் பிறத்தலின் அதனைப் பின்னும், அதன்பின் அவ்வோசை இதழ்வழியே உகரமாய்ச் சென்று ஒழிதலின் அதனை அதன் பின்னுமாக நிறுத்தி யருளினார். முற்பிறக்கும் ஓசை யெல்லாம் குறுகியிருக்கு மாதலானும், அவ்வோசை பிற்கணத்திற் றொடர்பட்டு நீளுவதே நெடிலாமாதலானும் முன்னே அ, இ, உ என்னுங் குற்றெழுத்துக்களையும், அவற்றின் நீட்டமான ஆ, ஈ, ஊ என்பவற்றைப் பின்னுமாக வைத்தார். ஏனைய ஓசைகளின் முறையும் ஈண்

மொரைப்பிற் பெருகும். அவையெல்லாம் ஆசிரியர் நச்சினார்க்கினிய ருரையிற் காண்க. அற்றேல் அங்ஙனமாக, இவ்வெழுத்துமுறை வடமொழி முதலான பிறபாஷைகளினும் காணப்படுவதாக இத னைத் தமிழுக்கே வரைந்து சொல்லிய தென்னை யெனின்;—வட மொழியை ஒழித்து ஒழிந்த இந்திய பாஷைகளிலெல்லாம் காணப்ப டும் இம்முறை, தமிழ் ஆரியத்தின் முறைகண்டு செய்து கொள்ளப் பட்டதாகலின் அஃதீண்டு ஆராயற்பாற்றன்று. மற்றுவடமொழி யில் இம்முறை பண்டுதொட்டுக் காணப்படுதலின் அஃதொன்றே ஈண்டாராயற் பாலதாம். தமிழர் செய்த முறையைக் கண்டு ஆரி யர் தாம் அம்முறை காட்டினரோ, அல்லது ஆரியர் செய்த முறை யைக் கண்டு தமிழர் தாம் அது காட்டினரோ என்பது தான் ஈண்டு நிச்சயிக்கற் பாலதாம். ஆரியர் இவ்விந்தியா தேசத்திற் புகுமுன் னே அம்முறை கண்டறிந்தனராயின் அஃது அவர்க்கேஉரியதாகும்; அவர் இந்தியாவிற் புகுந்த பின் அங்கிருந்த தமிழர் அதனைப் பிரதி செய்து கொண்டாராவர். மற்று ஆரியர் இந்தியாவிற் புகுமுன் அம்முறை காணாதிருந்து புகுந்தபின் அதுகண்டனரென்று உரை நிறுவப்படுமாயின், தமிழர்க்கே அம்முறை உரியதாகு மென்பதும் அதனையே ஆரியர் பிரதி செய்து கொண்டன ரென்பதும் பெறப் படும்.

இனி ஆரியர் இந்தியாவிற் புகுமுன்னே அம்முறை அறிந்தா ரில்லை; அஃதறிந்தது உண்மையாயின் அவ்வாரியப் பிரிவினராய் ஐரோப்பாக் கண்டத்தின் தென்றிசை மேற்றிசை வடமேற் றிசை களிற் புகுந்த ஏனை ஆரிய சாதியார் வழங்கிய இலத்தின், கிரீக்கு, டியூடானிக், சிலாவிக் முதலிய ஆரிய பாஷைகளினும் அம்முறை காணப்படுதல்வேண்டும். அவற்றி லெல்லாம் உயிர் எழுத்து மெய் யெழுத்துக்கள் ஒருமுறையுமின்றிப் பலவாறு மயங்கிக்கிடத்தலின், அம்முறை ஆரிய பாஷைக் குரியதன்றென்பது அங்கையுள் நெல்லி போற் றெளியப்படும். மற்று அவ்வாரியர் இந்தியாவிற் புகுந்தபின் தமக்கு முன்னே அங்கு வாழ்ந்து வருந் தமிழ் ஆசிரியர் கண்ட அவ் வெழுத்து முறையைப் பிரதிசெய்து கொண்டார் என்க. இவ் வுண்மை **பௌத்த இந்தியா** என்னும் சரித்திரநூலில் **இரைஸ் டேவிட்ஸ்** பண்டிதராலும் நன்கு காட்டப்பட்டது. *

* Prof. Rhys Davids' Buddhist India, P. 156.

அதுகிடக்க. ஆரியபாஷை இலத்தீன் கிரீக்கு முதலிய வற்றோடு இனமுடைத்தாதல் யாங்ஙனமெனிற்காட்டுதும். ஒருபாஷை பிறிதொன்றனோடு இனமுடைத்தென்பது அவற்றின் முதனுற்பத்திச் சொற்களின் உருவொப்புமையால் நன்கு துணியப்படுமன்றே ஆரியத்தில் **சூநு** என்னுஞ்சொல் மகனைக் குறிக்கும். அவ்வாரியத்தோடு இனமான ஸெண்ட் என்னும் பாரசீக பாஷையிலும் அப்பொருளைக் குறிக்கும் அச்சொல் **ஹூநு** என்று வழங்குகின்றது; டியூடானிக் பாஷையில் **சுநு** எனவும் அவ்வாறே வழங்குகின்றது. ஆரியத்தில் மகளைக் குறிக்கும் **துகிதார்** என்னுஞ் சொல், ஸெண்டில் **துக்தர்** எனவும், கிரீக்கில் **துகாதீர்** எனவும், டியூடானிகில் **தோஹதர்** எனவும், சிலாவிகில் **துஸ்தேர்** எனவும்வழங்குகின்றது. ஆரியத்தில் உடன் பிறந்தானைக் குறிக்கும் **ப்ராதர்** என்பது,ஸெண்டில் **ப்ராதர்** எனவும், கிரீக்கில் **ப்ராதீர்** எனவும், இலத்தீனில் **வ்ராதேர்** எனவும், டியூடானிகில் **ப்ரோதர்** எனவும்,சிலாவிகில் **ப்ராதுரு** எனவும், ஸெல்டிகில்**ப்ராதீர்** எனவும் வழங்குகின்றது. ஆரியத்தில் மாட்டைக் குறிக்கும் **பசூ** என்னுஞ் சொல், ஸெண்டில் **பசு** எனவும், இலத்தீனில் **பிகஸ்** எனவும், டியூடானிகில் **வைஹூ** எனவும், சிலாவிகில் **பிகு** எனவும் வழங்குகின்றது. ஆரியத்தில் ஆட்டைக்குறிக்கும் **ஆவி** எனுஞ்சொல், கிரீக்கில் **ஒயீஸ்** எனவும், இலத்தீனில் **ஓவிஸ்** எனவும், டியூடானிகில் **அவி** எனவும், சிலாவிகில் **ஓவிகா** எனவும், ஸெல்டிகில் **ஒய்** எனவும் வழங்குகின்றது. ஆரியத்தில் பாம்பைக் குறிக்கும் **அகி** என்பது, ஸெண்டில் **அஷி** எனவும், கிரீக்கில் **எகிஸ்** எனவும், இலத்தீனில் **அங்குயிஸ்** எனவும்,டியூடானிகில் **அங்க்** எனவும், சிலாவிகில் **அங்கீஸ்** எனவும் வழங்குகின்றது. இன்னும் இவ்வாறே வருவன வெல்லாம் காட்டப்புகின் இவ்வுபந்நியாசம் வரம்பின்றி மிக விரியுமெனஅஞ்சி இத்துணையே ஈண்டைக்குப் போதுமென நிறுத்துகின்றும். இக்காட்டிய வாற்றால் ஆரியபாஷை ஸெண்ட், கிரீக்கு, இலத்தீன் முதலான பாஷைகளோடு ஒற்றுமை யுடைத்தாதல் நன்கு தெளியப்படும். இனி ஆரியத்தில் வழங்கும் சூநு, துகிதார், ப்ராதர், பசூ, ஆவி, அகி என்னும் அச்சொற்களுக்குத், தமிழில் முறையே மகன், மகள், உடன்பிறந்தான், மாடு, ஆடு, பாம்பு என வழங்குஞ் சொற்கள் ஒருவாற்றானும் உரு வொப்புமை பெறாது நிற்றலும் ஈண்டு அறியற்பாலதாம்.

இனிக்கிரேக்கர், உரோமர், ஆங்கிலர், ஆரியர் முதலான ஆரியசாதியார் ஆரியர் இந்தியநாட்டிற் புகுமுன்னே ஓசைகள் பிறக்குமுறை அறிந்து எழுத்துக்களை முன்பின்னாக நிறுத்தினராயின் அம்முறை அவ்வாரிய பாஷைகள் எல்லாவற்றிலுங் காணக் கிடக்கும். மற்று அம்முறை அவ்வாரிய பாஷைகளிற் காணப்படாமல் அகரத்தின் முன் பகரமும் அதன்பின் சகரமுமாக இங்ஙனம்ஒருமுறையுமின்றி நிறுத்தப்பட்டுக் கிடத்தலால், ஆரியர் அம்முறை முன் அறியாராய் இந்தியாவிற் புகுந்தபின் அறிந்தா ரென்பது இனிது நாட்டப்படும்.

இனி ஆரியர் வருதற்கு முன்னரே தமிழர் மிக்க நாகரிகமுடையரா யிருந்தனரென்பது இருக்குவேதத்தினாலேயே இனிது அறியப்பட்டதோன்றும். ஆரியர் சிந்து நதிக்கரையில் வந்து குடியேறிய காலத்தில், உள்நாட்டில் இருந்ததமிழர் எழுவகை அரண்மனைகளும், தொண்ணூறு கோட்டைகளும் உடையராய் வாழ்ந்தனரென இருக்குவேதம் * உரைதருகின்றது. இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளின் முன்னரே தமிழர் அழகிற் சிறந்த எழுநிலை மாடங்களும், உயர்ந்த கற்கோட்டைகளும் கட்டுவித்து வாழ்ந்தனராயின், அவ்வரிய பெரிய கட்டிடங்கள் அமைப்பதற்கு இன்றியமையாப் பெருஞ் செல்வவளமும், அவை தம்மைத் திருத்தமுறக் கட்டுவித்து முடிப்பதற்கு உரிய நூல் உணர்வும், அவற்றுள் நடத்தப்படும் பலதிறப்பட்ட இலௌகிக கருமங்களும் உடையராய் இருந்தாராதல் தெற்றெனத் துணியப்படும். இத்துணைப்பெரியநாகரிகவாழ்க்கைஉடையராயிருந்த தமிழர்தமது நாகரிக வாழ்க்கைஇனிதுநடைபெறுதற்கு இன்றியமையாதுவேண்டப்படும் தமிழ்ப்பாஷையினை இலக்கண இலக்கிய அமைதியோடு முற்றக் கற்று வந்தா ரென்பதூஉம் இதனாற் றுணிக்கப்படும் முடிபொருளாம். ஆகவே, ஓரிடத்தும் நிலைபெறமாட்டாது திரிதரு வாழ்க்கை யுடையராய் இந்தியாவினுட் புகுந்த ஆரியர் கங்கையாற்றுக் கரைப் பக்கங்களில் நிலைபெற்ற வாழ்க்கை நடாத்திச் செங்கோல் ஓச்சிய தமிழ் மக்களால் நெறிப்படுத்தப் பட்ட இலக்கண முறைகண்டு தாமும் உயிர்மெய் எழுத்துக்களை முறைப்படுத்தினா ரென்று துணிக.

---

* Vide Pandit. Saviriroyan's excellent article on 'The Admixture of Aryan with Tamilian'—The Light of Truth.

ஆரியர் வருமுன்று, தமிழர் அரசியல் முறைபிழையாது வாழ்ந்தனராகலின் அவரை ஆரியர் '**அசுரர்**' என்று பெயரிட்டழைங்கினர். இருக்கு வேதத்தின் முதல் ஒன்பது மண்டிலங்கள் முழுவதூஉம் 'அசுர' என்னுஞ் சொல் 'வலிய' அல்லது 'அதிகாரமுடைய' என்னும் பொருளில் உரிச்சொல்லாய் வழங்கப்பட்டு வருகின்ற தென்றும், 'அசுரர்' என்பதற்கு அதனால் 'தலைவர்' என்னும் பொருள் பெறப்படுகின்ற தென்றும்உரோமேஷ் சந்திரதத்தரும்இனிது விளக்கினர். 'ஞிமிறு' என்பது 'மிஞிறு' எனவும், 'தசை' என்பது 'சதை' எனவும், 'விசிறி' என்பது 'சிவிறி' எனவும் எழுத்து நிலை மாறி வருதல்போல 'அரசு' என்னுந் தமிழ்ச்சொல் 'அசுர' என நிலை மாறி இருக்குவேதத்துள் வழங்கப்படுவதாயிற்று.* தமக்கு எதிரே நாகரிகம் நிரம்பி விளங்குகின்ற தமிழ அரசரைத் தமக்குந் தலைவராக ஒருப்பட்டுப் பண்டை ஆரியமக்கள் **அசுரர்** என வழங்கினர். பிற்காலத்து வடமொழியில் மாத்திரம் 'அசுரர்' என்னும் அச்சொல்லின் உயர்ச்சிப்பொருளைமாற்றி அதற்கு அரக்கரெனப் பொருள் கட்டி விட்டார்கள். மற்று இருக்குவேதமோ அரசியல் நெறி திறம்பாத தமிழரசரைச் சுட்டி 'அசுரர்' என மிகவும் பாராட்டி வழங்கியது. இத்தமிழரசர் தங்கீழ் வாழ்வார்க்கெல்லாம் மிக இனியராய் ஒழுகியதுபற்றி, இவர்க்கும் இவர் குடும்பத்தார்க்கும் **அரசினியர்** என்னும் பெயர் வழங்குவதாயிற்று. 'அரசினியர்' என்னும் இச்சொற்றொடரையே இருக்குவேதகாலத்து ஆரியமக்கள் 'ராஜந்யர்' எனத் தமக்கேற்றவாறு திரித்து வழங்கினர். அரசினியர் எனப்படும் பண்டைக்காலத்தமிழரசர் நுண்ணறிவு நூலுணர்ச்சியாற் றத்துவங்கள் பலவும் ஆய்ந்து முடிபொருட் டேர்ச்சியுற்று விளங்கினரென்பதூஉம் அப்பழைய ஆரிய நூலாற் பெறப்படும் உண்மையாம். இதனைப் பின்னே விரித்து விளக்குவாம்.

இனி இதுவேயுமன்றித்தமிழ் மக்கள் தாம் உரையாடுங்காற் றோன்றும் ஓசைகளைப் பல்வகை எழுத்துக்களால் இட்டெழுதிப்பண்டே நாகரிக முதிர்ச்சி உடையராயு மிருந்தனர். ஆரியரோ தம்பாற் பிறந்த ஓசைகளை எழுத்திலிட்டுக் காட்டும் வகை அறியாமையினால், தம்

---

* Compare Pandit Saviriroyan's able and admirable article on the Aryan Admixture with the Tamilian.

முன்னோராற் பாடப்பட்ட பாட்டுக்களை நெட்டுருப் பண்ணுதற்குக் கிடைகூட்டிப் பயின்று வந்தார். அவ்வழக்கம் இன்றும் பலர் ஒருங்கு கூடியிருந்து வேதம் ஓதுமாற்றால் நன்கு அறியப்படும். இங்ஙனம் எழுத்துக்களின்றி வெறும் ஓசை மாத்திரையாய் வேதங்கள் அவராற் பயிலப்பட்டு வந்தமையாலன்றோ அவை 'எழுதாக்கிளவி' என்று பெயர் பெறுவனவாயின. அல்லதூஉம், வடமொழிக்கென்றோ ரெழுத்து இல்லாமையினாலேதான், வடநாடுகளிலுள்ளார் மகாராட்டிரத்திற்குரிய தேவநாகர எழுத்துக்களானும், தென்னாடுகளிலுள்ளார் தமிழுக்குரிய கிரந்தாக்கரங்களாலும், ஆந்திரநாட்டிலுள்ளார் தெலுங்கிற்குரிய தெலுங்கெழுத்துக்களானும் வடநூல்களை எழுதுதலும் பதிப்பித்தலுஞ் செய்து போதருகின்றார். பண்டைநாள் ஆரியர் எழுத்தறியாமையின் தம்முடைய பழையநூல்களைப் பாதுகாத்து வழங்கற் பொருட்டுத் திருத்தமாக அவற்றை ஓதுதற்குரிய முறைகளை எல்லாம் பிராதிசாக்கியங்களில் மிகவிரித்தெழுதினார். எழுத்தறிந்தனராயின் அவ்வாறெல்லாம் அவற்றை ஓதுதற்குரிய முறைகளை மிகவருந்தி விரித்தெழுதல்வேண்டப்படாதென்க. நினைக்கப்படுவது என்னும் பொருளையுடைய ஸ்மிருதி என்னுஞ் சொல்லும் கேட்கப்படுவது என்னும் பொருளையுடைய சுருதி என்னுஞ் சொல்லும் அவ்வடநூல்களுக்குப் பெயராய் அமைந்ததனை உற்றுநோக்குமிடத்து அவைநினைக்கப்பட்டுங்கேட்கப்பட்டும்வந்தனவேயல்லது எழுத்திலிட்டு எழுதப்படவில்லை யென்பது போதரும்.

இனி ஆரியர் இந்தியாவிற் புகுந்தபின் தமிழருடைய நாகரிக முதிர்ச்சியினையும், அவர் தாங்கருதிய பொருளை எழுத்திலிட்டுப் பொறித்தலுங்கண்டு தாமும் தம்முடைய பாட்டுக்களைப் பண்அடைவுபட வகுத்தனரன்று எழுதுமுறை கண்டறிந்தார். இது கோல்ட்ஸ்டக்கர் என்னும் பண்டிதர் விளக்குமாற்றானும் நன்குஅறியப்படும். இரைஸ்டேவிட்ஸ் பண்டிதரும் 'இந்தியாவினுள்ள எழுத்துக்கள் ஆரியர்க்குரியவல்ல'வென்றும் 'அவை திராவிட வியாபாரிகளாற் கொண்டுவந்து தரப்பட்டன' வென்றும் கூறுமாற்றானும் * அவை தமிழர்க்கே உரியவென்பது இனிது பெறப்படும்.

---

* "All the present available evidence tends to show that the Indian alphabet is not Aryan at all; that it was introduced into india by Dravidian merchants;"—Buddhist India, P. 119.

இனிச் சரித்திரநூற் பண்டிதரில் ஒருசாரார் பினீசியரென்னும் நாகரிகசாதியாரோடு வாணிகம் நடாத்திய தமிழர் அவரிடமிருந்து எழுதுமுறை கற்றுப் பின் அதனை இந்தியாவெங்கும் பரப்பினார் எனக் கூறுகின்றார். இவருரைக்கும் இவ்வுரையோடு யாம் ஒருவாற்றால் இணங்குதலும் பிறிதொருவாற்றால் இணங்காமையும் உடையோம். யாங்ஙனமெனிற் காட்டுதும்.

இற்றைக்கு மூவாயிர வருடங்களின் முன் மேற்றிசையிலுள்ள பினீசியர் என்னுஞ் சாதியார் தென்னிந்தியாவின் மேற்கே மலையாளக் கரையினும், கிழக்கே உவரி கொற்கை என்னுங் கடற்றுறைப் பட்டினங்களினும் வந்திறங்கித் தமிழரோடு வாணிகம் நடாத்தினார். அவர் தம் நாட்டுக்குத் திரும்பிப்போம்போது யானைக் கொம்புகள், தோகைமயில்கள், குரங்குகள், சந்தனக்கட்டைகள், விலை உயர்ந்த முத்துகள், அரிசி, கருவாப்பட்டை முதலிய சரக்குகளை ஏற்றிக் கொண்டுபோயினார். அவர்கள் சாலமன் என்னும் மேல்நாட்டரசன் காலத்திற் கூட்டங் கூட்டமாய் வந்தனரென்று ஈபுருபாஷையில் எழுதப்பட்ட பிவிலியநூலால் நன்கறிகின்றோம். அந்நூலில் தமிழ்நாட்டுக் கடற்றுறைப் பட்டினமான உவரி என்பது ஓபிர் * எனவும், அவர் தமிழ் நாட்டிலிருந்து ஏற்றிக் கொண்டுபோன பொருள்களான மயில், சந்தனம், அரிசிஎன்பவற்றின் பெயர்கள் தோகை, அனுகம், அரிசி எனவும் அவ்விவிலிய நூலில்எழுதப்பட்டிருக்கின்றன. † சாலமன் என்னும் வேந்தன் இற்றைக்கு மூவாயிர வருடங்களின் முன் செங்கோலோச்சினு னென்பது சரித்திரநூற் பண்டிதர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தமையின், அவன் காலத்தில் தமிழ் நாடுபோந்து தமிழரோடு வாணிகம் நடாத்திய பினீசியர் தாம் உபயோகித்துவந்த எழுதுமுறையைத் தமிழர்க்குங் கற்பித்தார். ஆயின், தமிழர் அவர் வருதற்குமுன் எழுதுமுறை அறியாரோ வெனின்; அற்றன்று. பினீசியர் வருதற்கு முன்னுந் தமிழர் அம்முறை நன்றறிந்தார் என்பது தேற்றமாம். யாங்ஙனமெனிற் காட்டுதும். ஆசிரியர் தொல்காப்பியனார் 'எழுத்ததிகாரம்' என ஒன்று வகுத்துக்கொண்டு எழுத்துக்களின் இலக்கணத்தைச் செவ்வனே கூறுகின்றமையானும், எழுத்துக்கள் இல்லாவிடின் அங்ஙனமெல்லாம்இலக்கணங் கூறுதல் ஆகாமையானும் "உட்பெறுபுள்ளியுருவாகும்மே" என்னுஞ்

* Ophir † Max Muller's Science of Language, 1st vol.

சூத்திரத்தில் மகர எழுத்து முன்நாளில் எழுதப்பட்டவரிவடிவும், "மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்" என்னுஞ் சூத்திரத்தில் மெய்யெழுத்துக்கள் புள்ளிபெற்று நிற்றலும், "எகர ஒகரத் தியற்கையுமற்றே" என்பதனால் எகர ஒகர எழுத்துக்களும் அவ்வாறேபண்டைநாளில் புள்ளி பெற்றுநின்றமையும், "புள்ளி யில்லா எல்லாமெய்யும், உருவுருவாகி அகரமோடு உயிர்த்தலும், ஏனைஉயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும், ஆயீரியல உயிர்த்தலாறே" என்பதன்கண் மெய்யெழுத்துக்கள் உயிர்களோடு கூடியவழிவரிவடிவில்உருவு திரிதலும் இனிதெடுத்து ஓதினாராகலானும், உரையாசிரியர் நச்சினார்க்கினியர் "உருவுதிரிந்துயிர்த்தலாவது மேலுங் கீழும் விலங்குபெற்றுங் கோடுபெற்றும் புள்ளிபெற்றும் புள்ளியுங்கோடும் உடன்பெற்றும் உயிர்த்தலாம். கிகீ முதலியன மேல் விலங்குபெற்றன. குகூ முதலியன கீழ்விலங்கு பெற்றன. கெகே முதலியன கோடுபெற்றன. கா ஙா முதலியன புள்ளிபெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத் தெழுதினர். கொகோ ஙொஙோ முதலியனபுள்ளியுங் கோடும் உடன் பெற்றன" என்று உரை விரித்துக் கூறுதலானும் தமிழர் தமக்கெனவேறெழுத்துடையரா யிருந்தனரென்பது துணிபொருளாம்.

அற்றேல், பினீசியரால் தரப்பட்ட எழுத்துக்களுக்கும் தமிழர்க்கேஉரிய எழுத்துக்களுக்கும் வேறுபாடு என்னைஎனின்;—பினீசியர்க்குரிய எழுத்துக்களெல்லாம் வலதுகைப்புறத்திலிருந்து இடதுகைப்பக்கமாய் எழுதப்படுவனவாம்; * தமிழர்க்குரியனவோ இடதுகைப்புறத்திருந்து வலதுபக்கமாய் எழுதப்படுவனவாம் இவ்வேறுபாட்டுடன், அவர்கொண்டுவந்தன உருவத்தானும் தமிழ்எழுத்துக்களின்வேறானவாம். எகுபதிநாட்டில் எழுப்பியதூபிகளின்மேற் பொறிக்கப்பட்டிருக்கும் சித்திர எழுத்துக்களினின்றுந் திரித்துச் செய்துகொண்டனதாம் பினீசியர்க்குரியஎழுத்துக்கள்;மற்றுத்தமிழ் எழுத்துக்களோவெனின், அக்கடியர் என்னுஞ்சாதியார் பல்லாயிரமாண்டுகளின் முன்னேவழங்கிய முளைஎழுத்துக் † களினின்றுந் தோன்றி நடைபெறுவனவாம். அக்கடியர் என்னுஞ்சாதியாரும்

* Buddhist India, P. 114. † Cuneiform letters.

பண்டைக்காலத்தமிழரும் ஒருவரேயென்பது ஸ்ரீமான் பண்டிதர் சவரிராய ரவர்களாற் 'சித்தாந்ததீபிகை' யில் இனிதுவிளக்கப்பட்டது, அதன்விரிவு பின்னேகாட்டுதும்.

இனிப் பௌத்தசமயம்விளக்கிய அசோகமன்னன் காலத்திற் செதுக்கப்பட்ட கல்வெட்டெழுத்துக்கள் இருவகைப்படுகின்றன. ஒன்று வலதுபுறத்திருந்து இடதுபக்கமாயும், ஒன்று இடதுபுறத்திருந்து வலதுபக்கமாயும் எழுதப்பட்டிருக்கின்றன. * முன்னேயது கபுர்த்தகிரிச்சிலா சாதனங்களிற் காணப்படுகின்றது; இது வட அசோகலிபி என்றுசொல்லப்படும். பின்னேயது அசோகவேந்தன் கல்வெட்டுக்கள் பெரும்பாலவற்றிலுங் காணப்படுகின்றது; இது தென்அசோக லிபிஎன்றுசொல்லப்படும். வடஅசோகலிபி இந்தியாவின்வடமேற்குப்பாகங்களில்மாத்திரம்அருகிவழங்குகின்றது.தென் அசோகலிபி இந்தியாவிற் பெரும்பாலும் எங்கும்வழங்குகின்றது. ஆகையால், தென் அசோகலிபி இந்தியாவிலேயே பிறந்த எழுத்துக்களாகுமென்பது நன்கு பெறப்படும். என்னை ? புறநாட்டிலிருந்து வந்த எழுத்துகள் இந்தியாவிலுள்ள இந்திய மக்கள் எல்லார்க்கும் விளங்காமையின் அவை அப்புறநாட்டை யடுத்த இந்திய எல்லையின் மாத்திரம் உபயோகப்படுத்தப்பட்டன ; உள்நாட் டெழுத்துக்கள் யார்க்கும் புலப்படுமாதலால் அவை இந்தியா வெங்கும் உபயோகப்படுத்தப்பட்டு வந்தன. இங்ஙனந், தென் அசோகலிபி இந்தியாவிற்கே உரியதென்பதனை இவ்வியல்பு முற்றவும் ஆராய்ந்த தாமஸ், கன்னிங்காம் என்னுஞ் சிலாபரிசோதன பண்டிதர் இருவரும் நன்குவிளக்கினார்.

இனித் தென் அசோகலிபி என்பது தமிழ் வட்டெழுத்துக்களின் திரிபேயன்றி வேறென்று கூறுதல் ஆகாமையால், அது தமிழர்க்கே உரிய எழுத்தாமென்று நாட்டப்படும். வட அசோக லிபியும் தமிழர் வழியாய்ப் பெறப்பட்ட பினீசியர் எழுத்தேயல்லதுபிறிதில்லை. இவ்வாறு எழுத்துக்களின் இருவகைப்பாகுபாடும் பொருந்தக் காட்டப்பட்டமையால் இந்தியாவில் வழங்கப்படும் எழுத்துப் பினீசியரிடமிருந்து போந்ததென்று உரைப்பார் உரையும், அற்றன்று அஃது இந்தியாவிலேயே பிறந்து வழங்குகின்றதென் றுரைப்

* R. C. Datt's Ancient India, P. 24, 2nd vol.

பார்உரையும் தம்முள் முரணுமைகாண்க. பினீசியரிடமிருந்துபோந்த தெல்லாம் இந்தியவடமேற்கெல்லையில் அருகிவழங்கும் வடஅசோக லிபியேயாகுமென்பதூஉம் இந்தியாவிலேயே தோன்றிப்பண்டு தொட்டுநடைபெறுவது தமிழவட்டெழுத்தின் திரிபானதென்னு சோகலிபியேயாகுமென்பதூஉம்பாகுபடுத்துவிளங்க உணர்தல்சரித் திரநூல்வல்லார்க்கு இன்றியமையாதகடமையாம். இவ்வுண்மை தேறுது அவையிரண்டனையும் ஒன்றெனக்கூறி முடிபுரைத்தல்ஒரு சிறிதும் பொருந்தாதென்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் சொல்லதிகார முதலிலே யே உலகியற்பொருள்களை உயர்திணை யென்றும் அஃறிணை யென் றும் பகுத்தோதினர். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம் பொறி யுணர்வோடு இவற்றைப் பகுத்துணர்கின்ற மனவறிவும் உடைய உயிர்களெல்லாம் மக்களெனப்படுவர் என்றும், இம்மக்களே உயர்திணை யாவரென்றும், ஐம்பொறி உணர்வு மாத்திரம் உடைய விலங்கு புள் முதலியனவும் உயிரில்லாத ஏனைச் சடப்பொருளுமா கிய எல்லாம் அஃறிணையாமென்றும் இனிது விளக்கிச் சூத்திரஞ் செய்தருளினார். ஆண் பெண் என்னும் பாற் பகுப்பும் உயர்திணை யில் மாத்திரம் தெற்றென விளங்குதலின் அப்பாகுபாடும் உயர்தி ணைக்கே கூறி, ஏனை அஃறிணையில் உயிருள்ள எறும்பு முதலியவற் றுள் அப்பகுப்பு அவ்வாறு விளங்காமையின் அதற்கது கூறுராய் விடுத்தனர். எம் அரிய நேசர்காள்! இப்பாகுபாட்டின் அருமையும் நுட்பமும் நாமுணராதிருக்கின்றேம். பிற பாஷைகளில் எங்காயி னும் இத்தகைய நுண்பகுப்பு உளதா என்று ஆராய்வோமாயின் அப் போது இதன் பெருமை நன்கு தெளியக் கிடக்கும். ஆங்கில முத லான மேல் நாட்டுப் பாஷையிலெழுதப்பட்ட இலக்கணநூல்களை இடைவிடாது எழுத்தெழுத்தாய் ஆராய்ந்து பார்ப்பினும் அவற்றின் கண் இவ்வரிய பெரிய இலக்கணப் பாகுபாடு ஒரு சிறிதுங் காணப் படாது; அன்றி இந்தியநாட்டிற் பிரபலமொழியாய்ப் பயிலப்படும் சமஸ்கிருதத்திலேனும் இம்முறையுண்டோ வெனின் ஆண்டும் இத னைக்காணேம். இஃதொன்றே, அச்சமஸ்கிருத பாஷையிலுள்ள சொற்பொருட் பாகுபாடுகள் நுண்ணறிவிற்குச் சிறிதும் இயையா வாறாய் அமைந்து கிடக்கின்றன. 'இல்லம்' 'வீடு' என்பன உயிரில் லாத அஃறிணைப் பொருள்களென்பதும், அவைதம்மை ஆண்பெண்

என வழங்கல் நகையாடுதற் கேதுவா மென்பதுஞ் சிறுமகாரும் அறிவர். இங்ஙனமாகவும், சமஸ்கிருதத்தில் 'ஆலயம்' என்னுஞ் சொல் ஆண்பாலாகச் சொல்லப்படுகின்றது; 'சாலை' என்பது பெண்பாலென்று சொல்லப்படுகின்றது. மயிர்க்கற்றை என்னும் பொருளுடைய 'கபரீ' என்பது பெண்பாலாம், 'கேசவேச' என்பது ஆண்பாலாம்; விருப்பம் என்று பொருள்படும் 'இச்சா' என்பது பெண்பாலாம், 'மனோரத' என்பது ஆண்பாலாம்; மாலைப்பொழுது என்று பொருள்படும் 'திநாந்த' என்னும் ஒரு சொல் ஆண்பாலாம் 'சந்த்யா' என்னும் மற்றொரு சொல் பெண்பாலாம்; உலகம் என்று பொருள்படும் 'ஜகதீ' என்பது பெண்பாலாம் 'லோக' என்பது ஆண்பாலாம்; சுவர் என்று பொருள்படும் 'பித்தி' என்பது பெண்பாலாம் 'குட்ய' என்பது அலிப்பாலாம்; காது என்று பொருள்படும் 'கர்ண' என்பது ஆண்பாலாம், 'ஸ்ருதி' என்பது பெண்பாலாம், 'ச்ரவண' என்பது அலிப்பாலாம். நண்பர்காள்! ஈதென்ன புதுமை பாருங்கள்! சடப்பொருளான இவையெல்லாம் ஆண் பெண் எனக் கூறினால் யாருக்குத்தான் நகைவிளையாது. இவ்வாறு சொற்களை ஒருவரன்முறையு மின்றித் தோன்றியவாறு ஆண்பெண் எனக்கூறி, அவை தம்மை வாக்கியங்களில் இயைத்துக் கூறுங்கால் ஆண்பெயர்க் கேற்ப ஆண்வினையும் பெண்பெயர்க்கேற்பப் பெண் வினையும் கூட்டி யுரைக்கவென விதித்தால் இவை தம்மை அறிவுடையோர் கற்கமுந்துவரா? வேறு பாஷை தெரிதற்கு வழியின்றி ஆரியத்திற் பிறந்து இடர்ப்படுவாரே அதனைக் கற்றற்கு உரியார். பொருள் வகையால் ஈது உயர்திணை ஈது அஃறிணை யென்று வகுத்தால் பொருட் கேற்பச் சொற்களை வழங்குதலில் யார்க்கும் இடர்ப்பாடு தோன்றாது. பொருள் வகையால் அஃறிணை யென்றே உலகத்திற்கு ஒப்பமுடிந்த ஒரு சொல்லை ஒருகால் ஆணாகவும் ஒருகாற் பெண்ணாகவும் ஒருகால் அலியாகவும் கூறல் வேண்டுமென ஒருமுறையுமின்றி விதித்தால், இச்சொற்களை ஆராய்ந்து இவை ஆண் இவை பெண் இவை அலி என நிச்சயஞ் செய்தலிலேயே மாணாக்கர்க்கு ஆயுள் கழியும். இனி இவற்றாற் பெறப்படும் பொருளை யுணர்ந்து அதனை உரிமை கோடற்கு ஆயுள் எங்கே உளது? சில்வாழ்நாட்பல்பிணிச் சிற்றறிவினரான மக்கள் தம்முயிர்க்குறுதி பயக்கும் உண்மைப்பொருளை உணர்தற்கு ஒரு கருவியாயமைந்த பாஷை கற்றற்கும் பயன்படுத்தற்கும் இலேசாக இருத்தல்வேண்டுமே யல்லது,

கடினபதமுடைத்தாதல் பயனின்றும். கருவியே பெரிதிடர்பயப் பதாயின் அதனாற் பெறப்படும் பொருள் சித்திதருவ தியாண்டுமி ல்லை யென்க. இத்துணைக் கடினச் செவ்வி யுடைமையினா லன்றே சமஸ்கிருத பாஷை உலக வழக்கின்றி இறந்தொழிந்தது. திருஞா னசம்பந்தப் பெருமான் முதலான அருட் டிருவாளரும் முழுமுதற் கடவுளை வழிபட் டுய்தற்குரிய இலேசான நெறியைச செந்தமிழ்த் திருப்பாட்டுக்களிலே அருளிச் செய்வாராயினர். இப்பெற்றி இனி துதேர்ந்தே

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலாமொழிபோல்
எண்ணிடைப் படக்கிடந்ததா எண்ணவும்படுமோ" என்று திரு
விளையாடற் புராண முடையாருங் கூறினார்.

செந்தமிழ் நண்பர்காள்! இற்றைக்கு நாலாயிரத்து முந்நூறு வருடங்களின் முன்னரே தமிழ் மக்களும் தமிழ் இலக்கண ஆசிரிய ரும் உயர்திணை அஃறிணைப் பாகுபாடு பொருள் வகையால் இயற் கைநெறி திறம்பாதே உணர்ந்து அறிவுடையார் எல்லார்க்கும் ஒப்ப முடிவதாக விளக்கிய அரிய நுண்ணறிவாற்றல் நுங்களாற்பெரிதும் போற்றற் பாலதேயாம். இன்றேல் ரன்னவற்றை இதுகாறுஞ் சாமானியமாய் நினைத்து வந்ததுபோல் நினையன்மின்! பண்டைத் தமிழ் நூல்களிற் சொல்லப்பட்ட ஒவ்வொரு பொருளும் கிடைத்தற் கரிய முழுமாணிக்கங்களாமென்று தேர்மின்கள்! இவ்வரும் பெறல் மாணிக்கங்களெல்லாம் வரன்முறையே தொகுத்த தொல்காப்பியம் விலை வரம்பு அறியாக் களஞ்சியம் என்று ஆராய்ந்து வியப்பெய்து மின்கள்!

இனி, நீர் வேட்டுச் செல்கின்றான் ஒருவன் நறுமணங் கமழும் இளமரக்காவின் இடையிடையேதங்கி அயர்வு சிறிது ஒழிந்து முப் பழச் சாறுந் தேனும் விரசினாற்போற் சுவைக்குந் தெண்ணீர் நிரம் பிய நீர்நிலையிற்சென்று நீர் ஆரப்பருகி வேட்கையொழிந்து அயர்வு முற்றும் நீங்கினாற்போல, ஆசிரியர் தொல்காப்பியனார் திருவாய்மல ர்ந்தருளிய எழுத்ததிகார சொல்லதிகாரங்களி னிடையே தங்கி தமி ழ்ப்பெருமை தெரியா அறியாமை சிறிது சிறிதேஒழிந்து இப்போது பொருளதிகாரத்திற்சென்று ஆண்டுவிரிந்த நுண்பொருட்டொகுதி

யில் ஒன்றிரண்டு நுகர்ந்து எமதறியாமை முற்றும் போக்குவாம். நண்பர்காள்! ஆசிரியர் பொருளை அகம் புறம் எனப்பகுத்த முறையே பெரிதும் நுண்ணறிவு நிறைந்ததாம். ஆன்மாக்களின் அறிவு நிகழ்ச்சியே அகம் புறம் என இருதிறப்படுகின்றன. ஆன்மாவினுள் நிகழும் அறிவு அவ்வான்மாவிற்கே புலனுவதாம். ஆன்மாவிற்கு ஒரு சரீரம் படைக்கப்படா முன்னெல்லாம் அதன் அறிவு புலப்பட்டு நிகழாதாய்ச் செயலின்றி மழுங்கிக்கிடந்தது. இனி அவ்வறிவு அங்ஙனம் மழுங்கிக்கிடக்க வொட்டாது அதனை எழுப்பி விரிவு செய்தற்பொருட்டு அதற்கொரு சரீரம் தரப்பட்டதாகலின், ஆன்ம உள்ளறிவு புறப்பொருளோடு இயைந்துநின்று அம்முறையே பெருகுதற்கு இவ்வுடம்பு இடைநின்று உபகரிப்பதொன்ரும். இதனுல், அகம், நடு, புறம் என்னும் மூவகை பெறப்படுகின்றன. அகம் அறிவு, நடு உடம்பு, புறம் பொருள் என ஆகும். கண் ஒருபொருளைக் காண்டற்கு ஞாயிறு விளக்கமாய் இடைநின்று காட்டுதல்போல உயிரறிவு புறப்பொருளைப் பற்றுதற்கு உடம்பு ஒரு விளக்காமென்க. இதுபற்றியே மெய்கண்டதேவர் "மாயா தனுவிளக்கா மற்றுள்ளங்காணுதேல், ஆயாதா மொன்றை" என்றருளிச் செய்தார். இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருட்குணமுஞ் சூக்குமரூபமாய் இவ்வுடம்பிற் பொருந்திக் கிடக்கின்றன; இவற்ருேடு வேறற ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற உயிரறிவு அவற்ருல் இன்ப துன்பநுகர்ந்து அறியாமை நீங்கி விளக்கமுடையதாகின்றது. வெளியே தோன்றும் எல்லாப் பொருட்குணங்களும் இச்சரீரமென்னும் பளிக்குப்பாறையிலே பிரதி பலிக்கின்றனவாகலின் இதன் நடுவில் வசிக்கின்ற உயிரறிவு இவையனைத்தையும் உணரவல்லதாகின்றது. ஆகவே அகத்தேதோன்றும் ஆன்மாவின் அறிவொழுக்கங்க ளெல்லாம், புறத்தே அவற்றை எழுப்புதற்குக் காரணமாயுள்ள பொருட்பாகுபாட்டுடன் பொருந்தியேயிருக்கும். இந்நுட்பமெல்லாம் முற்றவும் அறிந்த ஆசிரியர் அகவொழுக்கத்தைக் கைக்கிளைமுதற் பெருந்திணை இறுதியாக எழுகூருகப்பிரித்தார்; அங்ஙனம் பிரித்ததற் கேற்பவே அவற்ருேடு ஒற்றுமையுடைய புறப்பொருளையும் எழுகூருக்கினுர்.

இனி ஒருயிர் பிறிதோர் உயிரோடு பொருந்தும்வழிப் பிறக்கும் இன்பதுன்ப நுகர்ச்சி யெல்லாம் ஆசிரியர் ஒருங்கே விளக்கி யுரைக்கும் திறம் மிகப்பெரிது. இவர்போல் ஆன்ம இயற்கை முழுதுணர்ந்து உரைத்த வேறு புலவர் ஆங்கிலபாஷை வல்ல ஷேக்ஸ்பியர்

ஒருவரேயாம். அகத்தே தோன்றும் அவ்வின்பதுன்ப நிகழ்ச்சிக் கேற்ற இடம்பொழுது முதலாக ஆசிரியரான் ஆராய்ந்துரைக்கப் பட்டனவெல்லாம் இன்று காறும் உலக இயற்கை பிழையாது வரு கின்றன. இங்ஙனம் உலக இயற்கை முழுதுணர்ந் திலக்கணமுரை த்த ஆசிரியரை வேறெத்தேயத்தினும் எந்தமொழியினுங் காண்டல் அரிது அரிது.

இனி ஆன்மாவின் அகத்தே தோன்றும் உணர்வு நிகழ்ச்சிகளெ ல்லாம் இவ்வுடம்பின் புறத்தே முகத்திற் றோன்றுமென்பது 'மெய் ப்பாட்டியலில்' வரம்பு செய்துரைக்கப்பட்டது. இன்னும் அம்முக த்திற் கண்களிலேயே அக நிகழ்ச்சி முழுது முணரப்படுமென்று விளக்கி

"நாட்டமிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்." என்று கட்டளை யிட்டருளினார். தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் இதனை விசே டித்துக் கூறுமாறு காண்க. உரிமை நேசர்காள்! உலக இயற்கை ஆன்ம இயற்கை யெல்லாம் இங்ஙனம் வரைசெய்து இலக்கணமெழு திய ஆசிரியர் தொல்காப்பியனாரை ஒத்த ஆசிரியரையாயினும், அல் லதவர் அருளிச்செய்த தொல்காப்பியம் போன்ற பிறிதொரு நூலை யாயினும் இற்றைக்கு நாலாயிர வருடங்களின் முன் நாகரிகமெய் திய எத்தேசத்திலாயினும் எப்பாஷையிலாயினுங் காட்டுதல்கூடுமோ? நடுநிலைதிறம்பா துரைமின்கள்!

இனி இவ்வுலகத்தின் உள்ளும் புறம்புமாய் நின்று அறியவல் லதை அறிவித்தும் அசைய வல்லதை அசைவித்தும் பேரொளிப் பிழம்பாய் அருவாய் அறிவாய் இன்பமாய் விளங்கும் முழுமுதற் கட வுள் நிலையைச் சுட்டி ஆசிரியர் தொல்காப்பியனார் இற்றைக்கு நாலா யிர வருடங்களின் முன்னே நிறுவியபொருட் டிட்பத்தை அதேகால த்திற் றோன்றிய ஆரிய சாதியார் நூல்களிற் சொல்லிய தெய்வநிலை யோடு ஒப்பிட்டுக் காண்போமாயின் தமிழரது பண்டைக்கால நாக ரிக வளம் மேலும் மிக்குவிளங்கும்.

ஆசிரியர் "கொடிநிலை கந்தழிவள்ளி" என்ற சூத்திரத்தில் 'கந் தழி' என்னும் முழுமுதற் பரம்பொருள் 'ஒரு பற்று மற்று அருவா ய்த்தானே நிற்குந் தத்துவங் கடந்தபொருள்' என்று வலியுறுத்தார்.

இஃததற்குரைகண்ட நச்சினார்க்கினியர் கூறுமாற்றான் நன்கு பெறப்படும். இதனாற் கந்தழி எனப்படுங் கடவுள் சித்து சடம் என்னும் இருவகை யுலகினுள்ளும் ஒன்றன்றாய் இவை தம்மையெல்லாம் முற்றும் வியாபித்துக்கொண்டு எவ்வகைப்பற்றுமின்றி நிலைபெறும் பேரின்ப நிலையமென்பது பெற்றாம். அத்துணைப் பழைய காலத்தே கடவுட்டன்மையினை இவ்வாறுணர்ந் துரைத்தவர் உலகில் வேறு யாண்டுங் காணப்படார். மிகவும் பழைய நூலான இருக்குவேதத்தை ஆராய்ந்து பார்மின்! இருக்குவேத காலத்து ஆரியர் ஒளியுடைப் பொருளையும் அவற்றோடு சம்பந்தமுடையவற்றையும் தெய்வங்களாக வழிபட்டு வந்தனர். இதற்குத் 'தேவ' என்னுஞ் சொல்லே சான்றாம்; இச்சொல் 'ஒளி' என்று பொருள்படும் 'திவ்' என்னுந் தாதுவடியாகப் பிறந்ததாகும். ஆகவே, ஒளியுற்று விளங்கும் ஆகாயத்தையும், வான்மீன்களையும், சூரியனையும், விடியற் காலத்தையும், நண்பகற் பொழுதையும் பிறவற்றையுந் தெய்வங்களாகத் துணிந்து வழி படுவாராயினர். இன்னுந் தேவர்களெல்லாம் வான் நிலன் என்னும் இரண்டின் பிள்ளைகளென்றும் ஆண்டாண்டு அந்நூலிற் சொல்லப்பட்டனர். 'சோம' என்னும் ஒருவகைப் பூண்டை நசுக்கிப்பிழிந்தெடுத்த இரசம் மதுக்களிப்பைத் தருவதெனவும், இச்சோமரசமே வான், நிலன், அக்நி, சூரியன், இந்திரன், விஷ்ணு என்னுந் தெய்வங்களை யெல்லாந் தோற்றுவித்த தெனவும் ஒரு சில இடங்களில் இருக்கு வேதங் கூறுகின்றது. வேறு சில இடங்களில் சாவித்திரியும் அக்நியும் தேவர்கட்கு இறப்பில்லா வரம் அருளிச் செய்தனர் என்கின்றது. மற்றுஞ் சில இடங்களில் எல்லாத் தேவர்களும் ஒரே வகையான ஆற்றலுடையரென் றுரைத்துப்போய்ப் பின் அக்நி, இந்திரன், சூரியன் எனும் மூவரே மற்றை எல்லாரினுஞ் சிறந்தோராவ ரென்கின்றது. இன்னும் இவரைத் தவிரத் தயஸ், ப்ரிதிவி, அதிதி, ஆதித்யர், வருணன், பர்ஜன்யன், வாயு, மருத்துக்கள், மித்திரன், பூஷன், உஷஸ், அசுவினிகள், த்வஸ்திரி, ரிபுக்கள், விசுவகர்மன், ப்ரஜாபதி, ப்ருகஸ்பதி, வாக், சோம, ருத்ர, யமன் விசுவதேவர்கள், பித்ருக்கள் முதலாகத் தேவர் பலப்பலர் கூறப்படுகின்றனர். இங்கே விஷ்ணு என்று சொல்லப்பட்ட தெய்வம் திருமால் அன்று; சூரியனே, காலை நண்பகல் பிற்பகல் என்னு முப்பொழுதினும் வான் கடந்து செல்லு நிலையில் விஷ்ணு வென்னும் பெயரோடு

பொலிகின்றான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. உருத்திரன் என்று சொல்லப்பட்ட தெய்வம் சிவபிரான் அன்று; சூறாவளிக்குத் தெய்வமே உருத்திரன் என்று ஆண்டுச் சொல்லப்பட் டிருக்கின்றது. 'ருத்ரன்' என்னுஞ் சொல்லுக்குத் தாதுப்பொருள் 'முழக்கமிடுவோன்' 'ஊளையிடுவோன்' என்பனவாம். இவ்வேற்றுமைதெரியாதார் உருத்திரனுஞ் சிவனும் ஒருவரே யெனத் தமக்குத் தோன்றியவாறே மொழிவர். 'சிவம்' என்பது கந்தழி என்னும் வேறு பெயருமுடைய பரம்பொருள்; அஃது உருத்திரன் பிரமன் என்றற்றொடக்கத்துத் தேவர்கட்கெல்லாம் அப்பாற்பட்டதொன்றாம்; இவ்வுண்மை

"தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில்கள்
பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன்" என்ற மாணிக்கவாசகப்பெருமான் அருமைத் திருவாக்கானும் நன்று தெருட்டப்படும். இருக்குவேதம்முழுவதும் துருவித் துருவிப் பார்ப்பினும் 'சிவம்' என்னும் பரம்பொருளியல்பு காணப்படமாட்டாது. அங்கெல்லாம் உலக இயற்கைப்பொருள்களாற் றாம்பெறும் பயன் குறித்து அவை தம்மையெல்லாம் தம் அறியாமையாற் றெய்வங்களாகக் கருதி ஆரியமக்கள் வழிபட்டு வந்த கீழ்நிலை அறிவு புலப்படக் கிடக்குமே யல்லது, பரம்பொருட் சொரூப முணர்ந்த மேல்நிலை அறிவு சிறிதாயினும் ஆண்டுப் பெறப்படுதலில்லை. அறிவிற் சிறந்த தமிழ் மக்காள்! இங்ஙனம் வேதத்தின் உண்மைகூறி மாந்தர்க்கு அறிவு கொளுத்த வருவாரைக் கண்டு மனம் புழுங்கி உயர் குலத்தினரெனத் தம்மை இறுமாந் தெண்ணி யிருப்பார் சிலர் 'அவைதிகர்' எனப் புறம்பழிப்பர். அவர் கூறும் அப்புறம்பழிப்புரைக்குச் சிறிதும் அஞ்சன்மின்! எவர் யாது கூறினும் உண்மை கரக்கப்படாதென்க. இத்துணைக் கீழ்நிலை அறிவையேபோதித்துப் பயனின்றிவிரிந்துகிடக்கும் அவ்வேதத்தைப்பிரமாணமாகக் கொள்ளாதவர்என்றுஎம்மைப்புறம்பழிப்பதுபற்றி நம்மனோர்க்குவரும் இழுக்கென்னை? ஒருசிறிது மில்லையாகலின், நாம்தத்துவவுரிமைகைவிடாமாய் மெய்ப்பொருள்கூறுதலையே கடைப்பிடிப்பாமாக. நமக்கும் மற்றும்அறிவுடையார்எல்லார்க்குஞ் சிறந்த பிரமாண மெய்ந்நூல்களாயுள்ள **தொல்காப்பியம், திருக்குறள்** முதலியனவே நமக்குச்சாலுமென்று மனந்திருந்துமின்கள்! பிறர் கூறும்பகட்டுரைக்கஞ்சி உண்மையைக் கைவிட்டுவிடாதீர்கள்!

இனிச்சிவம்என்னும் அப்பரம்பொருள்நிலே அவ்விருக்குவேதத்திற்கூறப்படாததுகொண்டு அதன்பெருமை குன்றுமாறில்லை. பரப்பிரமப்பொருள்நிலே யறியமாட்டாத அறிவில்லாப்பிள்ளைமைப் பக்குவத்தின்கண்ணரான ஆரியமக்கள்செய்த அவ்விருக்குவேதத்திற்கழிபெருநுண்ணறிவாற் றமிழ்நன்மக்களறிந்த அம்முழுமுதற்பொருள் நிலேஎவ்வாறுகாணப்படும் ! சிறார் இழைத்துவிளையாடும் மணற்சிற்றிலிலே நுண்ணறிவுவாய்த்த தச்சரியற்றும் விசித்திரமாடங்கள்காணப்படுதலுண்டோ? எந்தநுண்பொருள் எவர்வயின்வருமோ அஃது அவர் பாலேஆராயற்பாலதாம். அஃதொழிந்து ஓர்அறிவுடையாரிடத்துப் பெறப்படும் ஒருரும்பொருளை ஏனையோர்அறிவிலாரிடத்துக் கேட்க முந்துவாரைப்போல்,தமிழ்நூல்களிற் குறிக்கப்படும் அந்தரங்க மெய்ப்பொருட்குப்பிரமாணம் வடநூலிற்றேடுதல் பெரிதும்நகையாடி இகழற்கேதுவாம். இவ்வாற்றால் யாம் வடநூல்களை இகழ்கின்றேம் என்றுநினையன்மின் ! யாம்அவற்றின் உண்மைத்தன்மை கூறியதேயன்றிப்பிறிதில்லை. இனிவடநூலிற் சிறந்தநுண்ணறிவு காணப்படும் சாங்கியம், உபநிடதம், வேதாந்தசூத்திரம், சிவாகமம்முதலியவற்றை இங்ஙனந்தாழ்த்துக்கூறுதற்கு யாம் ஒருசிறிதும் ஒருப்படேம் ஒருப்படேம்.

இனிஅவ்விருக்குவேதத்திற் போந்த அப்பல்தேவர்உபாசனையேனும்விழுப்பமுடையவா வென்று ஒருசிறிது ஆராய்வாம். மதுக்களிப்பைவிளைத்து அறிவைமயக்கி மழுக்கும்சோமரசபானத்தைச் சிறப்பித்து உபாசித்தபதிகம்ஒன்றனை இங்கேமொழிபெயர்த்து வரைகின்றாம் ; அதுகொண்டுஅவ்விருக்கு வேதப்பான்மை அறிவுடையார்க்குஎல்லாம்இனிது விளங்கக்கிடக்கும்.

இருக்குவேத ஒன்பதாம் மண்டிலம்.

முதற்பதிகம் சோமபவமானம்.

இந்திரன் பருகுதற்பொருட்டு நறுக்கிப்பிழிந்த
ஓசோமரசமே! மிகத்தித்திப்பதாய் மகிழ்ந்தசெலவினை
யுடைய நீரோடைபோல் சுத்தமாய்நின்வழியே ஒழுகுக. (க)

பகைவரையடக்குவோய்! மக்களெல்லார்க்கும் நட்பாள !
அப்பரிசையால் அவன்தன் உயர்நிலையையும் இருப்பரணையும்
அடைந்தான். (உ)

நீவிருத்திரனைக்கோறற்குச் சிறப்புடையையாகுக,
இன்பந்தருதற்குத் தலைமையுடையை யாகுக, மிகுந்த
வள்ளன்மையுடையையாகுக: செல்வமிகுந்தஎம்
இளவரசர்கொடையை விருத்திசெய்க. (ந)

வலியதேவர்கட்கு ஆற்றும்விருந்திற்கு நினது இரசத்
தைஒழுகச்செய்க: எங்கட்குவலிவும் புகழும்உண்
டாதற்பொருட்டு இங்கேவருக. (சு)

ஓ இந்துவே! நாளுநாளும் இவ்வாறே கருத்தோடு
நின்னருகே வருகின்றோம்: நினக்கே எம்வேண்டுகோள்
மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. (ரு)

சூரியன்புதல்வி என்றும் யாட்டுமயிர்க்கம்பலத்தால்
நின்சோமரசத்தைவடித்துச்சுத்தியாக்கிஒழுகவிடுகின்றாள். (சு)

மெல்லியரானபதின்மர்தோழிமார் நறுக்கும் இயந்திரத்தில்
அவனைப்பிடித்துவைத்து முடிவுநாள்வரையில் அவனைவிடாது
கொண்டிருக்கின்றனர். (எ)

அக்கன்னிமகளிர் பின் அவனைப்போகவிடுகின்றார்: இசை
கூட்டுவானைப்போல் அவர்கள் துருத்தியூதிப்
பகைவரைஒட்டும் முக்கூட்டுப்பானத்தை
உருகச்செய்கின்றனர். (அ)

இந்திரன்பருகுதற்பொருட்டு, ஊறுசெய்யப்படாதபால்
ஆக்கள்அவனைச்சுற்றிலுங் கூடியிருந்துபுதியஇளஞ்
சோமரசத்தில் தமதுபாலைக்கலப்பிக்கின்றன. (கு)

இவ்விரசத்தைப்பருகின பெருங்களிப்பால் இந்திரன்
விருத்திரரைஎல்லாம் கொல்கின்றான்: அவன்தன்செல்வத்
தை நமக்குச்சொரிந்துதருகின்றான். (கo)

இப்பெற்றியவாம் பதிகங்களேஇருக்குவேதம் முழுவதும்நிரம்பிக் கிடக்கின்றன. இன்னோரன்னபதிகங்களிற் காணப்பட்டஉபாசனைகள் இன்றும் மிகமந்த பக்குவமுடையமாக்கள் நாடுகளிற்காட்டேரி, இருளன், கறுப்பன்முதலிய சிறுதெய்வங்களைவழிபட்டு வரும்முறைகளோடு ஒத்திருக்கின்றனவேயல்லது வேறென்னை? இன்னும்ஆரியர் சோமரசபானத்தான் வேள்விகள்வேட்டதன்றியும் வெள்ளாடு

கள், செம்மறியாடுகள், பசுமாடுகள், எருமைமாடுகள், குதிரைகள், மனிதர்முதலிய எண்ணிறந்தபிராணிகளைக் கொன்றுவேட்டு அவற்றின் மாமிசத்தைப் புசித்துவந்தார்கள். மனிதன்மனிதனைக்கொன்று புசிக்குஞ்செய்கை எவ்வளவுகொடுமையானசெயல்! நக்கவாரம்முதலியதீவகங்களில்வசிக்கும் மிக்கஅநாகரிக சாதியாரே இன்றும்நரமாமிசம்புசித்துவருகின்றனர். பிராணிகளில் மனிதர்க்குப் பலவகையாலும்பயன்படுதலுடைய பசுமாடு, குதிரைமுதலியவற்றைச் சிறிதும் இரக்கமின்றிக்கொன்று அவற்றின்ஊனைவிரும்பி வேண்டியமட்டும் புசித்து வந்தனராயின், பண்டைக்காலஆரியசாதியார் எவ்வளவு கொடியவர்களென்றும் எவ்வளவு அறியாமை யுடையவர்களென்றும் எண்ணவேண்டி யிருக்கின்றது! இவ்வளவு கொடுஞ்செயலுஞ் செய்துகொண்டு, இக்கொடுஞ்செயலுக் குபகாரணமாகத் தாம் பாடிவைத்துக்கொண்ட இழிந்தவேதப்பாட்டுக்களைத் தம்மின்வேறான தமிழ்மக்களும் ஒருப்பட்டுத்தழுவிக் கௌரவிக்கும்படி வற்புறுத்து வரும் அவர்செயல் நினையுங்காலெல்லாஞ் சாலவும்வஞ்சனையுடைத்தென்றுதோன்றுகின்றது. இத்தகைய கொடுஞ் செய்கையுஞ் சுவர்க்கத்தைத்தருமென்ற அவரதுபோலிப் பொய்யுரையைமறுத்தற் கன்றேநம்முதுகுரவரான தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார்,

"அவிசொரிந்தாயிரம் வேட்டலின்ஒன்றன்

உயிர்செகுத் துண்ணாமைநன்று" என்றுதிருவாய்மலர்ந்தருளினார். சாங்கியம்என்னும் அரியதத்துவசாத்திரம் வகுத்தெழுதிய ஞானசிரேட்டரான கபிலரும் "கணக்கில்லாப் பிராணிகளைக்கொல்வித்து அவற்றின்இரத்தத்தை ஆறாய்ப்பெருகச்செய்வித்தலின் வேதங்கள் அசுத்தமுடையன."* என்றுரைத்தனர். அதுநிற்க.

இனி, மேற்கூறியவாறு இருக்குவேதம் முதலியன சாமானிய பௌதிகவழிபாட்டில் தலைநின்றனவாயினும், அவ்வேதமுடிபான உபநிடதங்களும் சாங்கியம்வேதாந்தசூத்திரம் முதலியனவுமெல்லாம் உயர்ந்ததத்துவநுண்பொருள் போதிக்கக்காண்டலின் ஆரியமக்கள் பிற்றைஞான்று பேரறிவுடையராயினரென்றோவெனின்;— என்னும். உபநிடதமுதலான ஞானநூல்கள் ஆரியபாஷையில் எழுதப்பட்டிருத்தல்பற்றி 'அவைஆரியமக்களாற் செய்யப்பட்டனவென்றல் வழுவாம்.

* சாங்கியகாரிகை.

பண்டைநாளில் தமிழ்மக்கள் வடக்கே இமயமலைச்சாரல்வரையி லும் மேற்கே ஆப்கானிஸ்தானம் வரையிலும் பரவியிருந்தனர். இதற்கு அறிகுறியாக இன்றும் ஆப்கானிஸ்தானம் பெலுசிஸ்தானம் என்னும்நாடுகளில் தமிழோடுமிக்கசம்பந்தமுடைய பிராகி என்னும்பாஷைவழங்கப்பட்டு வருகின்றது. இமயமலைச்சாரலில்வசிக்கும் குன்றவர்களெல்லாரும் தமிழின்றிரிபானஒருபாஷை வழங்கிவருகின்றனர். இதுவேயன்றிவடநாட்டிற்பழையபலஊர்களெல்லாந் தமிழ்ப்பெயர்பெற்றுவிளங்குகின்றன. 'தமிழுக்' என்னும்ஊர் வடநாட்டிலிருத்தல் யாருமறிந்ததொன்றேயாம். இஞ்ஞான்றும் வடநாட்டி லிருப்போரிற் பெரும்பாலார் பண்டைக்காலத்தமிழ்ச் சந்ததியாரேயாவர். பாஷைகாலவேறுபாட்டால்வேறுபடினும் மக்கள் சாதிப்பிறப்பியாண்டும் ஒருதன்மையாகவேயிருக்கும்.* முன்னாளிற்றமிழர் மிகப்பிரசித்திபெற்று வாழ்ந்தபோது வடஆசியாவிலிருந்துசிந்துநதிப்பக்கமாய் ஆரியமக்கள் இந்தியாவினுட்புக, உள்ளிருந்ததமிழர் இயற்கையிலேவிருந்து வருவாரைஓம்பி உபசரிக்குங்கடப்பாடுடைய ராதலால் தம்நாடுதேடிப்பிழைக்கவந்த ஆரியமக்களை நல்வரவாகஎற்று அவர்க்குவேண்டுவன தந்துஓம்பினர். ஆரியர்வருங்காலத்துத் தமிழர் மிக்க நாகரிகவாழ்வுற்றிருந்தனரென்பதை இருக்குவேத வுரைகொண்டு முன்னரே இனிதுவிளக்கினும். இனி, அங்ஙனம்போந்த ஆரியமக்களோடுதமிழர் பெரிதும் அளவளாவினராகலின் அவர்க்குரிய ஆரியபாஷையினையுந்தாங்கற்று அதனையும் பண்படுத்துவந்தனர். ஆரியமக்கள்செய்யும்வேள்விவிழாக்களுக்குத் தாமும்பொருளுதவிசெய்து அவற்றை நடைபெறுவித்து வந்தனராயினும், அவ்வேள்விவேட்டல் சிறிதும் பயன்படாமைஅறிவித்து அவர்க்குத்தத்துவ நுண்பொருள்களையுந் தமிழர் ஆங்காங்கு உணர்த்துவாராயினர். புதியராய்வந்தோர் தாம் வழக்கமாகமேற்கொண்டு செய்யும்ஒருகருமத்தைச் சடுதியிற்செய்ய வேண்டாமென்று நிறுத்தினால்அவர்மிக மனம்வருந்துவராகலின், அவர்க்குமுதலில் உபகாரிகளாய்நின்று அவர்வேண்டிய வேள்விக் கன்மங்களையும் நடாத்திவந்ததமிழர் பின் சிறிதுசிறிதே அவர்க்குத் தத்துவ நுண்பொருளறிவுகொளுத்தி வேள்விவேட்டல் பயன்படாமையேயன்றிப் பாவமுடைத்தாதலுங்காட்டுவர். இங்ஙனந்தமிழாசிரியர்காட்டிய உபதேசமொழிகளே உபநிடதங்களென்று பிற்றைஞான்றுபெயர்பெறலாயின. உபநிடதங்களெல்லாம் ஒருமுகமாய்நின்று

வேள்விவேட்டலாகாதென்றும், மக்களெல்லாருந் தத்துவஞானந் தலைப்படுதல் வேண்டுமென்றும் வற்புறுத்துகின்றன. வேதங்களிற் சொல்லிய கன்மங்களுக்குமுற்றும் விரோதமாய்நின்று அவைதம்மை பழித்துத் தத்துவஞானமேம்பாடு புலப்படுக்கும் பெற்றியனவாம் அவை வேதாந்தமெனவும் பெயர்பெறுகின்றன. வேதமும்வேதாந்தமும் தம்மிற்பெரிதும் முரணிநிற்பனவாம். வேதம் கன்மங்களை மிக் கெடுத்துக்கூறுவன; வேதாந்தம் அவற்றைப்பழித்து ஞானத்தைமிக் கெடுத்துக்கூறுவன; வேதம்ஆரியமக்களாற் செய்யப்பட்டன; வேதாந்தம் தமிழ் மக்களாற் செய்யப்பட்டனவாம். வேதமாத்திரம் அறிந்தஆரியர் வேதாந்தமறிந்ததமிழர்பால் அதனைக்கற்றறிவாராயினர். பண்டைக்காலத்தமிழர்க்குட் பிரபலவேந்தராயிருந்த சனகன் சைவலி, அசாதசத்துருமுதலிய மன்னர்மன்னர் ஆரியர்க்குவேதாந்தம்உணர்த்தியவாறு சதபாதபிராமணம், உபநிடதம்முதலியநூல்களாற்றெற்றென விளக்கப்படுகின்றது. தமிழமன்னரும் அம்மன்னர்குடியாரும் ஆரியரால்அரசினியார் என்றழைக்கப்பட்டவாறுமுன் இனிதுவிளக்கிப்போந்தாம். அப்பெற்றியராம் 'ராஜந்யர்' ஆரியர்க்குத் தத்துவஞானம் புலங்கொள அறிவுறுத்து வந்தமைக்கு ஈண்டு இரண்டோர் உதாரணங்காட்டுதும்.

சதபாதபிராமணம் கக-ஆம் புத்தகம்.

"விதேகர்கட்கு மன்னனானசனகன் அப்போதுதான் வந்த பிராமணர்சிலரைச சந்தித்தான். அங்ஙனம் சந்திக்கப்பட்டவர்கள் சுவேதகேது ஆருணேயர், சோமசுஷ்மசத்யயஞ்ஞர், யாஞ்ஞவற்கியர்என்பவராம். அவன் அவர்களைநோக்கி: 'நீங்கள் அக்கினிஹோத்திரத்தை எவ்வாறு செய்கின்றீர்கள்.?' என்றுவினவினான். பிராமணர்மூவரும் தம்மாற் கூடியவரையினும் விடைகூறினாராயினும், அவர்கூறிய தொன்றேனும் திருத்தமானதன்று. யாஞ்ஞவற்கியர்கூறியது சிறிதுபொருந்தினும் அதுவும்முற்றும் திருத்தமாகவில்லை. சனகன் அவ்வளவுதானோவென்று சொல்லிவிட்டுத் தன் இரதத்தின்மேலேறிப் போயினான். அக்குருக்கள்மூவரும் ' ராஜந்யவகுப்பைச்சேர்ந்த இப் பயல்நம்மைஅவமானம் செய்தனனே' என்றுகூறினர். யாஞ்ஞவற்கியர்மாத்திரம் இரதத்தின்மேலேறி அவ்வரசனைத்தொடர்ந்

துபோய் அவனால் அதன் நுண்பொருளறிவிக்கப்பட்டுத் தமதறியாமைநீங்கினார். அதுமுதற்சனகன் பிராமணனாக நன்குமதிக்கப்பட்டான்'' என்றுசொல்லப்பட்டது.

சாந்தோக்கியஉபநிடதம் ரு-வது பிரபாடகம், ந-வது கண்டம். "சுவேதகேது ஆருணேயர் பாஞ்சாலமன்னன் அவைக்களத்தேசென்றார். பிரவாகனசைவலி என்னும் அவ்வேந்தன் அவரைநோக்கிப் 'பிள்ளாய்! நின்றந்தை நினக்குஉபதேசஞ்செய்தனரா?' என்று கேட்டான். 'ஐயா' ஆம் அவர்செய்தனர்' என்று அவர் விடைகூறினார். (க)

'இந்நிலத்தினின்றும் மக்களெங்கு எழுகின்றனர் நீ அறிவையா?' என்று வேந்தன்வினவினான்; அதற்குஅவர் 'ஐயா, நான் அறியேன்' என்றார். 'திரும்ப அவர்எங்குசெல்கின்றார் அறிவையா?' எனவினவினான்; அதற்கவர் 'ஐயா நான்அறியேன்' என இறுத்தார்., 'தேவயானத்திற்கும் பிதிர்யானத்திற்கும் எங்கே பேதமுண்டாகின்றது அறிவையா?' எனவினவினான்; 'ஐயா நான் அறியேன்' என்றார். (உ)

'மறுமையுலகம் என்நிறைக்கப்படுவதில்லை அறிவையா?' என்றுவினவினான்; 'அதற்குஅவர் 'அறியேன் ஐயா' என்றார்; 'பஞ்சமாகுதியில் திரவப்பொருள்களென் புருஷசப்தமெய்துகின்றன அறிவையா'? என்றுவினவினான்; அதற்கவர் 'ஐயாநான் அறியேன்' என்றார். (ந)

'அப்படியாயின் உபதேசம்பெற்றேனென்று என் இங்குவந்தாய்? ஒன்றுமறியாதவன் அறிவிக்கப்பட்டானென்று நீ எப்படிச்சொல்லலாம்?' என்றான் அரசன். அதனைக்கேட்டலும் மிக்கவிசனத்தோடும் தந்தையிடம்திரும்பிப்போய் 'தந்தாய்! எனக்கொன்றும்உபதேசியாமலே, எல்லாம் உபதேசிக்கப்பட்டனவென்றீரே' என்றான். (ச)

'அப்பொல்லாதஅரசன் என்னை ஐந்து வினாக்கள் வினவினான், அவற்றுள் ஒன்றற் கேனும் என்னால் விடையிறுக்கமுடியவில்லையே' என்றான். அதுகேட்டதந்தை 'நீசொன்ன அக்

கேள்விகள் ஐந்தனுள் ஒன்றற்கேனும் எனக்கேவிடைதெரியவி ல்லையே; அவைஎனக்குத் தெரிந்தனவாயின் நினக்கேன் யான் சொல்லாமலிருப்பேன் ?'' என்றுகூறினன் (ரு)

கௌதமகோத்திரத்தாரான அவர்தந்தை அவ்வரசன் அரண்ம னைக்குப்போயினர். அவர்வருகையைக்கண்ட அரசன்விருந்தி னர்க்குச்செய்யும் உபசாரங்களெல்லாம் ஆற்றினன். மறுநாட் காலையில் அவர் அரசன் அவைக்களத்தேசென்றார். அரசன் அவரைநோக்கி. 'ஓ கௌதமரே! உலகத்துப்பொருள்களிற் சிறந்ததெதுவென்று நினைக்கின்றீரோ அதனைக்கேளும்' என் ருன். அதற்கவர் 'உலகியற்பொருள்கள் எனக்குவேண்டாம் அவைநின்பாலேயிருக்கட்டும். ஓ வேந்தனே! நீ என்புதல்வ னைக் கேட்டஐந்து வினக்களையும் எனக்குவிளக்கிச்சொல்லுதல் வேண்டும்' என்ருர். (சு)

அதுகேட்டரசன் விசனமுடையானய், 'என்னுடன் சிலநாள் இருக்கக்கடவீர்' என்றுகட்டளையிட்டான். அதுகழிந்தபின் அரசன் அவரைநோக்கி 'நீர் இவ்வாறுவிசாரணை செய்யப்புகுந் தமையானும், இதற்குமுன் பிராமணன் எவனும் இவ்விரகசிய த்தை அறியானகலானும், இவ்வுலகத்திலுள்ள எல்லாமக்களுள் ளும் ராஜந்யர்க்குமாத்திரமே இதனைஉபதேசிக்கும் உரிமையுண் டாகலானும் யாம்இதனை உமக்குஅறிவுறுத்துகின்ருேம்" என்று உபதேசிக்கத் தொடங்கினன்" என்றுசொல்லப்பட்டது.

இன்னும் இவைபோல உபநிடதங்களில் ஆண்டாண்டு வருவன வெல்லாம் எண்டுக்காட்டலுறின் இதுமிகவிரியுமெனவஞ்சி விடுக்கின் ரும்.இவைதம்மால் தேறப்படும் முடிபுயாதெனின், ராஜந்யர்அல் லது அரசினியார் என்று ஆரியரால் அழைக்கப்பெற்ற பண்டைக்கா லத்தமிழ் நன்மக்களே ஆரியப்பிராமணர்க்குத் தத்துவ ஞானேபதே சஞ்செய்து வந்தன ரென்பதேயாமென்க. ஆகவே, உபநிடதம் தமி ழாசிரியரால் ஆரியபாஷையில் எழுதப்பட்டன வென்னுமுண்மை தெளிபொருளாய் நிலைநிறுத்தப்பட்டது. வேதாந்தசூத்திரம், சாங்கி யம், நையாயிகம், வைசேடிகம், முதலியனவெல்லாம் வகுத்துநுண் பொருள் பொதுளஎழுதினர் தமிழாசிரியரேயாமென்பதூஉம், புத்த சமயம் விளக்கிய கௌதமசாக்கியரும் தமிழாசிரியரேயா மென்ப

தூஉம் முல்லைப்பாட்டாராய்ச்சி, திருக்குறளாராய்ச்சியில்நன்குவிளக்
கிக்காட்டினும். ஆண்டுக்காண்க. இவ்வாறு தத்துவஞானங்களும்
அவைதிருந்தவிளக்கிய உபநிடதம் சிவாகம முதலியனவும் தமிழர்க்
கேஉரியனவாய்ப் பின் ஆரியராற்றமிழரிடமிருந்து பெறப்பட்ட ஆரி
ய இரவற்பொருணூல்களாய் நிலைப்பவும், இஞ்ஞான்றை ஆரியர் அ
வைதமக்கே உரியனவெனவும், அவைதம்மைத்தமிழர் ஓதப்பெறாரெ
னவுங்கூறுதல் சிறுமகாரானும் எள்ளிநகையாடற்பாலதாம். இஞ்
ஞான்றை ஆரியர் தமிழர்செய்த நன்றியைச் சிறிதும்ஓராது' நீட்டி
னமரத்திற் கூர்பார்த்தல்' ஒப்பத் தமக்கு அறிவுகொளுத்திய பண்
டைத்தமிழ்மக்கட் சந்ததியாராம் நம்மனோர்பாற் செய்துபோதரும்
படிற்றொழுக்கம் மிகப்பெரிது! அவர்படிற்றொழுக்க வியல்புஇனைத்
தென்றறியாத நம்மனோரும் அவர் மயக்கவுரையில் வீழ்ந்து அவமே
யாகின்றார். இனியேனும் நம்மனோர் தம் பெருஞ்சிறப்புணர்ந்து ஆக்
கமெய்துவாராக.

முற்றும்.



# மாணிக்க வாசகர் காலம்.

நமது 'ஞானசாகரப்' பத்திரிகையின் முதற்பதுமத்தில் சைவ சமயாசிரியரான ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாகள் காலம் இற்றைக்கு ஆயிரத்தைந்நூறு வருடங்களுக்கு முற்பட்டதாமென்பதும், அவர் திருஞான சம்பந்தமூர்த்திகள், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் என்னும் ஏனைச் சைவகுரவன்மார் எல்லார்க்கும் முற்பட்டவராவரென்பதும் இஞ்ஞான்றைச் சரித்திர ஆராய்ச்சி முறைவழுவாது ஆய்ந்து தெற்றென விளக்கினும். ஞானசாகரத்தில் இங்ஙனம் நிலைபெற நாட்டிய காலநிலையைப் பின்னும் ஆங்கிலமுணர்ந்தாரும் தெரிந்து கொள்ளல் வேண்டி, அதனை ஆங்கில மொழியினும் எழுதி எமது கலாசாலைப் போதகாசிரியரால் நடாத்தப்படும் 'சென்னைக் கிறிஸ்துவ கலாசாலைப் பத்திரிகை' யினும் பிரகடனஞ் செய்வித்தேம். அதன் பிற் சில வருடங்கழித்து ஸ்ரீது. அ. கோபிநாதராவ் என்பவர் தாமும் மாணிக்கவாசகர் காலத்தை நிலைபெறுத்துவான்புகுந்து ஆங்கிலத்திலொன்றெழுதி, அதனையும் எங்கள் சென்னைக் கிறிஸ்துவ கலாசாலைப் பத்திரிகையில் வெளியிடுவித்தார். ராவ் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய அதனையே, தஞ்சையிற் பிரசுரமான 'தமிழகம்' என்னும் பத்திரிகையில் அதன் பத்திராசிரியர் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவித்தார். அது நிற்க. இனிக்கோபிநாதராவ் அவர்கள், மாணிக்கவாசகர் காலம் நாட்டுதற்குக் காட்டிய காரணங்கள் சரித்திர முறைக்கும், தருக்க முறைக்கும் இணங்காதன வாய்ப் பிழைபடுதலின், அவற்றின் பிழைபாடுகளை நெறியே வகுத்துக் காட்டி, அப்பெருமான் காலம் யாம் நிறுவிய வாறே நிலைபெறுவதா மென்பதனை ஈண்டு வலியுறுத்துதற்குப் புகுகின்றேம்.

இனி மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர் முதலானவனை ஆசிரியன்மார் மூவர்க்கும் பிற்பட்டவர் என்று நாட்டு தலே ராவ் அவர்களது கொள்கையாம். அஃதென்னெனில், மாணிக்கவாசகர் அம்மூவர்க்கும் முற்பட்டவராயின், பின்னையோரான அம்மூவரும் தாமருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களில் முன்னையோரான மாணிக்கவாசகரைக் குறிப்பிட்டு ஏதேனும் மொழிந்திருப்பராகலினென்க. அற்றேல், "நரியைக் குதிரைசெய்வானும் நரகரைத்தேவு செய்வானும்" என்ற திருநாவுக்கரையர் திருவாக்கிற் போந்த குறிப்பே, மாணிக்கவாசகரைப் பற்றி அவர் கூறினமைக்குப் போதிய சான்றாம் என்பாரை மறுத்தற்பொருட்டு ராவ் அவர்கள் நரியைக்குதிரை யாக்கிய திருவிளையாடல் மாணிக்கவாசகரைப்பற்றியதாகாதென்று ஆசங்கிக்கின்றார். அத்திருவிளையாடல் அவர்மேற்றாக வைத்துக் கூறிய வாதவூரர் புராண உரையும் திருவிளையாடற் புராணவுரையுங் கொள்ளற்பாலன வல்லவென்றும், அதனைத் தம்பொருட்டாகவே சிவபெருமான் நிகழ்த்தினாரென மாணிக்கவாசகர் தாமே தமது திருவாக்கிற் கூறிற்றிலரென்றும், "நரியைக் குதிரைசெய்வானும்" என்னுந் தேவாரத்தில் முதலதுமாத்திரம் மாணிக்கவாசகர் பாலதாயின் 'நரகரைத் தேவுசெய்வானும்' 'விரதங்கொண்டாட வல்லானும்' என்றற் றொடக்கத்தனவாகப் பின்வருவனவெல்லாம் வேறெவர் பொருட்டாக நிகழ்த்தப்பட்டன வென்றும் மேலு மேலும் வற்புறுத்து மொழிந்தார்.

இனித் திருவாசகத்தை ஒருமுறை உற்றுநோக்குவார்க்கும் நரிபரியான திருவிளையாடல் தம்பொருட்டாகவே சிவபெருமான் நிகழ்த்தினாரென மாணிக்கவாசகர் பலவிடத்துங் கூறுதல் வெள்ளிடைமலைபோல் விளங்கிக் கிடப்பவும், ராவ் அவர்கள் அதனை அறியமாட்டாது ஆசங்

கித்தல் பெரிதும் வியப் புடைத்தாம். "ஒருங்குதிரை உலவுசடை உடையானே நரிகளெல்லாம், பெருங்குதிரை யாக்கிய வாறன்றே உன்பேரருளே" * என்பது 'சிவபெருமானே, நீ எனக்குச் செய்த பேரருட்டிறமானது நரிகளை யெல்லாம் பெரிய குதிரைகளாகத் திரிபுசெய்த திருவிளையாட்டானே விளங்கிக் கிடந்ததன்றோ?' என மாணிக்கவாசக சுவாமிகள் கூறினதை இனியேனும் உணர்வாராக. இதன்கண் 'என்பொருட்டு' என்னுஞ் சொற் பிரயோகம் வந்ததில்லையாலோ வெனின்;— செய்யுட்பொருள் போகு முறையால் 'என்பொருட்டு' என்பது எளிதிற் பெறக் கிடத்தலால் அங்ஙனம் உசாவுதல் பொருந்தாதென்க. சிவபெருமான் நிகழ்த்திய வினைத்திருவிளையாடல்களைப்பற்றிப் பேசுமிடத்தெல்லாம், இறைவனை முன்னிலைப்படுத்து விதந்து கூறாத மாணிக்கவாசகப்பெருமான் ஈண்டு 'உன்பேர் அருள்' எனமுன்னிலைப்படுத்து 'நரிகளெல்லாம் பெருங் குதிரை யாக்கியவாறன்றே' என்று கிளந்தெடுத்துக்கூறியவாற்றானே, 'எனக்குச்செய்த உன்பேரருள் நரிகளையெல்லாங் குதிரைகளாக்கிய வகையான் அன்றேவிளங்கியது' என்பதே அதற்கு மெய்ப்பொருள்எனல் செய்யுட்பொருள்கோண்முறை அறிவார்க்கெல்லாம் தெற்றெனவிளங்கிக்கிடந்தது. இதற்கிதுவே மெய்ப்பொருளாவது, மாணிக்கவாசகசுவாமிகள் பிறண்டுங்கூறிய 'தெரிவர நின்றுருக்கிப்பரிமேற்கொண்ட சேவகனார், ஒருவரையன்றி யுருவறியாதென்றனுள்ளமதே" "பாய்பரிமேல் கொண்டென் உள்ளங்கவர்வரால்" "பரிமேற்கொண்டு நமையாண்டான்" என்றற்றொடக்கத்து உபப்பிருங்கண வாக்கியங்களானும் இனிது துணியப்படும். நரியைக்குதிரையாகச் செய்து அக்குதிரைமே லிவர்ந்துபோந்த பெருமானது சகளமங்கள

* திருவேசறவு, திருவாசகம்.

அருட்கோலத்தினையே என்மனம் நினைவதன்றிப் பிறி தோருருவத்தினை நினையமாட்டாதென்று சுவாமிகள் வலியுறுத்திக் கூறியவாற்றானே அத்திருவிளையாடல் அவர் தம்பொருட்டே நிகழ்த்தப்பட்டதென்பது இனிது புலப் படவில்லையா? அற்றேலஃதாக, மேலைத்திருவாக்குகளில் 'பரிமேல்வந்தார்' எனக்கூறியதன்றி நரியையே குதிரை யாகக்கொண்டு வந்தாரென்பது சொலப்படவில்லையா லோவெனின்;—நன்று கடாயினாய், "நரியைக்குதிரைப்பரி யாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப், பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையான்" என் றும், "அரியொடுபிரமற்களவறி யொண்ணான், நரியைக் குதிரையாக்கியநன்மையும், ஆண்டுகொண்டருள அழகுறு திருவடி, பாண்டியன்றனக்குப் பரிமாவிற்று, ஈண்டு கனக மிசையப் பெறாது, ஆண்டானெங்கோ னருள்வழியிருப் பத், தூண்டுசோதி தோற்றிய தொன்மையும்" என்றும் சுவாமிகள் பிறாண்டுங் கூறிய ஏனை உபப்பிருங்கணவாக்கியங் களால், இறைவன் மதுரையிற் கொண்டுவந்த பரிகள் எல் லாம் நரிகளாலாக்கினவேயாமாறு நன்குதெளியப்படு மென்க; அல்லதூஉம், அங்ஙனம் நரிகளையெல்லாம் பரி களாக்கிக் கொணர்ந்தவர் பெருந்துறையிற் குருந்தமரநீழ லிற் குருவடிவாய் எழுந்தருளித் தமக்கு அநுக்கிரகித்த இறை வனே என்பது பொள்ளெனப் புலப்பட மாணிக்கவாசகர் 'பெருந்துறையான்' எனவுங் கிளந்தெடுத்துக் கூறினாராக லின், நரிபரியான திருவிளையாடல் மாணிக்கவாசக சுவாமி கள் பொருட்டே நிகழ்த்தப்பட்ட தென்னும் உண்மை மலையரண்போல் நிலைபெறநிற்றல்காண்க. இத்துணை நுட்ப மும் ஒருங்குணர்ந்து அத்திருவிளையாடல் மாணிக்கவாசகர் பாலதாக வைத்துக்கூறிய ஆன்றோர் தொல்வழக்குரைப் பொருளோடு, பெரிதும் மாறுகொளுற்றுக் கூறியதன்மே

னும் அமையாது, அவர்தம்மைத் "தாம் பிடித்தமுயலுக்கு மூன்றேகால் என்று பிடிவாதமாய்ச் சாதிப்பார்" என்று இகழ்ந்து கூறிய ராவ்அவர்கள் அறியாமையை என்னென்பேம்!

இனி "நரியைக் குதிரைசெய்வானும்" என்னும் அப்பர் திருவாக்கில் வேறுகூட்டிச் சொல்லப்பட்ட "நரகரைத் தேவு செய்வானும்" "விரதங்கொண்டாட வல்லானும்" "விச்சின்றி நாறுசெய்வானும்" என்றற் றொடக்கத்துப் பிறலீலைகள் எவர்பொருட்டுச் செய்யப்பட்டன? என்று ராவ் அவர்கள் வினவுகின்றார். பிறவகையிற் பிறர்பொருட்டுச் செய்யப்பட்ட ஏனைலீலைகளைக் குறித்து இங்ஙனம் வினவு நிகழ்த்தல் எடுத்த பொருளுக்குச் சிறிதும் இயைபுடைத் தாகாமை அவர் உணராததென்னை? மாணிக்கவாசகர் பொருட்டு நிகழ்ந்த நரிபரித்திருவிளையாடலை அப்பர்கூறியதனானே, அதனோடு உடன் தொகுத்துக் கூறப்பட்ட ஏனையவும் மாணிக்கவாசகர் பாலனவாகக் கூறவேண்டுமென்பது ராவ்அவர்கள் கருத்துப் போலும்! இத்தருக்கமுறை அழகிது! அழகிது!! அன்பர்கள் பொருட்டு இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல் மாட்சியினைத் தொகுக்கப் புகுந்த திருநாவுக்கரசு சுவாமிகள், மாணிக்கவாசகர் பொருட்டும் பிறர்பொருட்டும் நிகழ்ந்தன கலந்தெடுத்துக் கூறினாரன்றி, அன்பர் ஒருவர்க்கே நிகழ்த்திய லீலையெல்லாம் கூறுவே னெனக்கருதிக் கூறப்புகுந்தாரல்லர். இது தானும் பிரித் துணரவல்ல தமிழ்மொழிப்பயிற்சிபெறாது, அரும் பெருந் தமிழ் நூல்களை ஆய்ந்து காலவளவை வரையறுப்பே மெனப்புகுவார் திறம் அறிவுடையார்கண்டு நகையாடுதற்கே ஏதுவாமென் றொழிக. எனவே, அப்பர் சுவாமிகள் தமது திருவாக்கிற் குறித்துரைகாட்டிய "நரியைக்குதிரை செய் வானும்" என்னுந் திருவிளையாடல் மாணிக்கவாசக சுவாமி

கள் பொருட்டு நிகழ்ந்தவைகளையோ காட்டுவதாகு மன்றிப் பிறிதாகமாட்டாதென்பது நிறுவப்பட்டது. இனி அவர் கூறிய வேறுகாரணங்களையும் முறையே ஆய்ந்துசெல்வாம்.

இனி ராவ் அவர்கள் சிலாசாதன ஆராய்ச்சிவகை யிலும் மாணிக்கவாசகர் ஏனைமூவர்க்கும் பிந்தியவராய்க் காணப்படுகின்றாரெனக் காட்டப்புகுந்து, இத்தேயத்தின் கட்பலவிடங்களிலுங்காணப்படுங் கல்வெட்டுகளில் இவரது பெயர் காணப்படாமையானும், சிறுத்தொண்டர் சீராள தேவர் முதலாயினோரையெல்லாம் குறிப்புச்செய்த இராசராச சோழன் இவரை அங்ஙனங் குறிப்புச்செய்யாமை யானும் சுவாமிகள்காலம் பிற்பட்டதாதல் ஒருதலை என்கின்றார்.

இனி இவருரைக்கூற்றுப் பொருத்தமின்றென்பது காட்டுவாம். அரசாங்கத்தார் சென்றசில வருடங்களாகவே ஆங்காங்குள்ள கல்வெட்டுக்களைப் பிரதிசெய்து போதரு கின்றாரென்பதும், இன்னும் இத்தென்னிந்திய நாட்டிற் பிரதிசெய்யப்படாது கிடக்கின்ற கல்வெட்டுக்கள் பல்லா யிரக் கணக்காக இருக்கின்றன வென்பதும் எல்லாரும் அறிந்தனவேயாம். இத்தென்னிந்தியாவிலுள்ள கல்வெ ட்டுக்கள் அனைத்தும் பிரதி செய்து வெளியிடப்பட்டிருப் பினன்றோ அவைதமுட் சிலவற்றிலேனும் மாணிக்கவாச கர் பெயர் காணப்படவில்லையே யென்று வினவலாம்? வெளி வராதவற்றில் அவர்பெயர் இருப்பினும் இருக்கலாம். ஆகை யால், கல்வெட்டாராய்ச்சி அரை குறையாயிருக்கும் இந் நாளில் அங்ஙனந்துணிபுரை நாட்டுதல் போலியாமென்க.

அல்லதூஉம், கும்பகோணத்துக்கு அருகாமையி லுள்ள திருவலஞ்சுழிக் கல்வெட்டொன்றில் மாணிக்கவாச கர் பெயர் காணப்படுகின்றதென்றுரைத்த ராவ் அவர்கள், அக்கல்வெட்டின் காலவளவையும் அதன் வரலாறுங் கூறாது விட்டது என்னையோ? திருவலஞ்சுழிக் கல்வெட்டு மிகப்

பழையதாதல் பற்றி அதனை விவரித்துரைப்பிற் றமது கொள்கை புரைபடுமெனக் கருதி விட்டார்போலுமென எமக்குஐயம நிகழாநிற்கின்றது. அது நிற்க.

அல்லதூஉம், சோழன் உருவப் பஃறேர்நெடுஞ்சேட் சென்னி, சோலாதன், ஆலங்கானத்திற் போர்வென்றபாண்டியன் நெடுஞ்செழியன், சேரன்செங்குட்டுவன் என்றற்றொடக்கத்துப் பழைய தமிழ்மன்னர்பெயரும், நக்கீரர், கபிலர், பரணர், மாங்குடிமருதனார் என்றற் றொடக்கத்துத் தமிழ் நல்லிசைப் புலவர்பெயரும பொறித்தகல்வெட்டுகள் காணப்படாமைபற்றி அவரெல்லாம் பிற்காலத்திருந்தன ரென ராவ்அவர்கள் கூறப்பெறுவரோ? பண்டைக்காலத்துத் தண்டமிழ் வளஞ்சிறக்க இலக்கண இலக்கியநூல்கள் பரக்கக்கற்றும பலப்பல புதிதுபுதிதா இயற்றியும்வந்தமையானே, அந்நூல்களால் அம்மன்னர் புலவர்முதலாயினார் பெயர் பதிககப்பட்டு இன்றுகாறும் வழங்கிவரலாயின. இலக்கண இலக்கிய நூல்வழக்கின்றி நாகரிகக்குறைவுள்ள காலத்தின் மாத்திரமே மன்னர்கள் தம்பெயரும் தம்கொடைத்திறமும் மறையாதிருத்தற்பொருட்டுக் கல்வெட்டுசள் தோற்றுவிப்பர். யாங்கூறுவதே உண்மைபொருமென்றற்குத் தமிழ் வளம் மிக்க பண்டைநாட் டமிழ்மன்னர் கல்வெட்டுக்கள் இதுகாறும வெளிவராமையே உறுஞ் சான்றும். மற்று இவ்வாறன்றி, இராசராச சோழன் முதலிய பிற்காலமன்னர் காலத்தே தமிழ்க்கல்விவளஞ் சுருங்கிப்போக, மிலேச்சவரசர் பலர் அலைமேலலைபுகுந்தாற் போல இடையிடையே படையெடுத்து வந்து இந்திய மக்களை நலிந்து குழப்ப முண்டாக்கி வந்த காரணத்தானே, பிற்காலத்துத் தமிழ்வேந்தர் தங்கொடைத்திறம் முதலியன தமக்குப் பின்னும் அழியாது புலப்படுதல் வேண்டிக் கற்களிற் பொறித்து நிலைபெறுவித்தார். பண்டைநாட்டமிழ் மன்

னர் காலத்து வேற்றரசர் தமிழ்நாடு புகுதாமையானும், தங்கொடைத் திறத்தை வியந்தியற்றிய தமிழ் நூல்கள் அழியாவென் றவர் கருதினமையானும் அவர் பிற்காலத்தார் போலக் கல்வெட்டுக்கள் தோற்றுவித்திலரென்க. இங்ஙனமாகலின் மாணிக்கவாசகர் பெயர் கல்வெட்டுக்களிற் காணப்படாமை கொண்டே அவர் இனையவர்க்கும் முற்பட்ட காலத்திருந்தாரென்பது பெறப்படும். அவர் பிற்காலத்திருந்தனராயின் கல்வெட்டுக்கள் மிகுதியுமுண்டான அப்போது அவர்பெயர் பெரிதும் அவற்றிற் காணப்பட்டுக் கிடக்குமென்க. அற்றேலஃதாக, இராசராச சோழன் தனக்கு முன்னிருந்த சிறுத்தொண்டர் சீராள தேவரைக் குறிப்பித்த வாறுபோல, அங்ஙனமே தனக்கு முற்பட்ட மாணிக்கவாசகரைக் குறிப்பிடாத தென்னையெனின்;— அஃதவ்வரசன் கருத்தறி வதற்குக் கருவி வாய்ப்பின்றி முடிவுகட்டல் ஏலாததொன்றாம். ஒவ்வொருவர்க்கு மொவ்வொருகாரணம் பற்றி ஒவ்வொருவர் மாட்டு அன்புநிகழும். தம் ஒரே புதல்வனை அறுத்துக் கறிசெய்து அடியார்க்கு அமுதூட்டிய அருமைத் திறத்தை மிகவியந்து அவ்வரசன் உலகத்தார்க்கு அவரன்பின் திறத்தை நன்மாதிரியாய் நிறுத்தல் வேண்டி அங்ஙனம் அவரைக்குறித்திருக்கலாம். இதுவேயன்றிப் பிறகாரணமும் இருக்கலாம். அல்லதூஉம், தனக்குச் சிறுகாலமுற்பட்டிருந்த சிறுத்தொண்டரை நினைவுகூர்தற்குக் காரணம் வாய்த்தாற் போலத், தனக்குப் பெருங்காலம் முற்பட்டிருந்த மாணிக்க வாசகரை நினைவுற்றுப் பிரதிட்டை செய்தற்குக் காரணம் அம்மன்னற்கு வாயாதுமிருக்கலாம். ஆகலின், அதனையொரு காரணமாய்க் கொண்டு மாணிக்க வாசகர்காலம் பிற்பட்ட தென நிறுவப் புகுதல் பெரிதும் பிழைபடுவதொன்றாமென்க. மேலும், 11-வது நூற்றாண்டிற்கு முன்னர் மாணிக்கவாசகர் உருவம்

எந்தக் கோவிலினும் பிரதிட்டிக்கப் படவில்லை என்கின்றார். இங்ஙனம கூறும் இவர் சுவாமிகள் உருவம் அவ்வாறு எங்கும் பிரதிட்டிக்கப்படவில்லை என்பதனைக் காரணங்காட்டி நிச்சயித்தனரா? சிறிதும் இல்லை. பிரபல காரணங்கள் எடுத்துக் காட்டாது 'எனக்குத் தோற்றிய வரையில்' என்று நெகிழ்ந்து உரை கூறிப்போதல் சரித்திர முறைக்குச் சிறிதும் இணங்காத தொன்றுமென்க. இவர் தமக்குத் தோன்றிய இவ்வற்புத தோற்றத்தைத் தம்மை வேவைத்துப் பார்த்துப் பார்த்து மகிழ்க.

இனி மாணிக்கவாசகர் மற்றைச் சமயாசிரியன்மார்க்கு முந்தியவராயின், அவராற் பாடப்பெற்ற திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை என்னுஞ் சிறந்த சிவதலங்கள் தேவாரத்துள் யாண்டுங் குறிக்கப்படாமை என்னை? என்று வினவி, அவ்விரண்டும் ஏனைமூவர்க்கும் பிற்காலத்தே புதிதே முளைத்தெழுந்தனவாகலின் அவைதம்மைப் பாடிய மாணிக்கவாசகர் அம்மூவர்க்கும் பிற்காலத்தினர் என்றாரா அவர்கள் தருக்கிக்கின்றனர்.

இத்தருக்கவுரை அத்தலங்களின் உண்மைநிலை தெரியாமையால் எழுந்ததாகும் என்பதனை இங்கே ஒருசிறிது விளக்குவாம். முதலில் திருப்பெருந் துறையைப் பற்றி விவரிப்பாம். திருப்பெருந்துறை என்பது தெற்கேபாண்டிநாட்டின்கண் தலைமைபெற்றிருந்ததொரு கடற்றுறைப் பட்டினமாம். முற்காலத்துப் பாண்டிமாநாட்டுக்குச் சிறந்த கடற்றுறைப்பட்டினங்களாயிருந்த கொற்கை, உவரி, பெருந்துறை என்பனவற்றைப்பற்றிய குறிப்புகள் பழைய சங்க இலக்கியங்களிற் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்தகாதையினுல் இவ்விந்திய தேசத்துக்கு அப்பால் மேற்கேயுள்ள பலதேயச் சாதியாரும் தமிழ்நாட்டில்வந்து வாணிகஞ் செய்தாரென்பது அறியக்

கிடந்ததாகலின், பெருந்துறை என்னுங் கடற்றுறைப் பட்டினத்திலும் அவ்வாறே பல்தேயத்துச் சாதியாரும் வாணிகஞ் செய்தற் பொருட்டு வந்தனரென்பது பெறப் படும். பாண்டியன் பொருட்டாகக் குதிரைவாங்கப் புறப் பட்ட மாணிக்கவாசகரும் பிறதேயத்தார் குதிரைகொண்டு வந்திறக்கும் இடமாதல் பற்றியே பெருந்துறை நாடிச் சென்றார். மாணிக்கவாசகர் சென்றகாலத்துப் பெருந்துறை சிவாலயமுடையதாக இருந்ததில்லை. அவ்விடத்தில் மிகுதி யாயிருந்தன தென்னஞ்சோலைகளும் பூம்பொழில்களுமே யென்று தமது அருமைத்திருவாக்கால் "தெங்குசோலைகள் சூழ்பெருந்துறை" எனவும்,* "தெங்குதிரள் சோலைத் தென்னன் பெருந்துறையான்" எனவும்,† "செந்தாரப் பொழில் புடைசூழ் தென்னன் பெருந்துறையான்" எனவும் ‡ சுவாமிகள் அருளிச்செய்தமையானே இனிது துணியப்படும். இவ்வுண்மை, சுவாமிகள் சரித்திரவுண்மை வழுவாது கூறிய திருவாதவூரர் புராணத்திலும் ஐயமறத் தெளித்துச் சொல்லப்பட்டது. அது,

"ஈனமில் பெருந்துறை யெனும் பதியின் ஞாங்கர்
கானமிகு புன்னைவளர் கந்தமுள சந்தம்
வானமுயர் சண்பக மரந்திகழ் நரந்தம்
தேனின முரன்றெழு செருந்திகள் பொருந்தி."
"வீழ்ந்த நறவத்துளி விழிப்புனலதாகச்
சூழ்ந்து முரல் வண்டினிசை தோத்திரம தாகத்
தாழ்ந்து மலரேந்தி யிறை தன்றிரு முனின்றே
வாழ்ந்தருந் தமன்பரென மன்னுமொரு பூங்கா" என்

னும் அப்புராணச் செய்யுட்களிற் காண்க. மேலும், மாணிக்கவாசகப் பெருமானை ஆட்கொண்டருளல்வேண்டி

---

* சென்னிப்பத்து. † திரு அம்மானை.
‡ ,,

அச்சோலையிற் குருந்தமரநீழலின் கண்ணே எழுந் தருளிய குருநாதன் பின்னர் அவர்க்கு உபதேசித்தற் பொருட்டு வேண்டுவன வெல்லாஞ் சித்தஞ்செய்ம்மின்கள் என்று தன்மருங்கிருந்த சீடர் குழாத்துக்குக் கட்டளை யிட்ட அளவிலே, அவர்கள் எல்லாஞ் சித்தஞ்செய்கின்றுழி 'மலர்மாலையினாலும், பொற்சரிகையின் நடுவே அழுத்தின முத்துக்களுள்ள பட்டாடையினாலும் அப்பூங்காவின் ஊடு ஒருகோயில் செய்தனர்' என்னும் பொருள்பட

> "முன்னவன் புகன்றவாறு முயல்குவமென்றேயந்த
> மன்னுறு தவத்தின் மிக்கார் வகைமலர்த் தெரியலாலும்
> பொன்னிடையழுத்தி முத்தம் புனைந்தபல் பட்டினாலும்
> அந்நெடுங் காவினூடங் கான பூங்கோயில் செய்தே" என்

று திருவாதவூரர்புராணத்தின்கட் சொல்லப்பட்டதனால், திருப்பெருந்துறையின் கண் சிவாலயம் அப்போதிருந்திலது என்றல் பசுமரத்தாணி போல் நாட்டப்பட்டமை அறிக. அன்றி அங்கே சிவாலயம் இருந்ததாயின் அச் சோலையின் கண் அவ்வாறு பட்டாடையினால் ஒருகோயில் இயற்றல் வேண்டாமையானும், சிவாலயமிருந்ததாக அப் புராணத்தின் கண் யாண்டும் ஓதப்படாமை யானும் மாணிக்கவாசகர் காலத்துச் சிவாலயம் அங்கில்லை யென் பது தெளிபொருளே யாமென்க. அற்றேல், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலினும், வேப்பத்தூரார் திருவிளை யாடலினும் அங்கே கோயிலுள்ளதாகச் சொல்லப்பட்டிரு த்தல் என்னை யெனின்;-பின்னையோரான அவ்விருவரும் சரித்திர மாறுபாடாகத் தாமே சிருட்டித்துக் கொண்டு ஓதுவன பல உளவாகலின், அவர் கூறுவன ஈண்டைக்குப் பிரமாணமாகாவென்க. திருவாதவூரர் புராணம் ஒன்றுமே சுவாமிகள் சரித்திரத்தைப் பிழைபடாமல் உள்ளவாறே யுரைப்பதாம்; இம்மெய்ப்புராண வுரையோடு திறம்பிக்

கூறும் அப்புராணவுரைகட்கு ஆதாரம் திருவாசகத்தும் பிறண்டும் பெறப்படாமையின் அவைகொள்ளற்பாலன வல்லவென்று மறுக்க.

இனி, மாணிக்கவாசகர் வருமிடம் நோக்கி அவரை ஆட்கொண்டருளல் வேண்டிக் குருநாதன் அப்பூங்காவிலே எழுந்தருளினான். மாணிக்கவாசகர் தாங் குதிரைகொள்ளப்போன அப்பெருந்துறையிலே அக்குருநாதனைக்கண்டு மெய்ஞ்ஞானப் பேறுடையராய் விளங்கினார். இங்ஙனமல்லது மாணிக்கவாசகர் பெருந்துறையிலே சிவாலயமிருப்பதாக உணர்ந்து அங்குச்சென்றாரல்லர். ஆகலின், இவர் அவ்விடஞ் சென்றதுகொண்டே அங்குச் சிவாலயமிருந்ததென நாட்டுவாருரையும் பொருந்தாதென்றுணர்க

இனி, மாணிக்கவாசகர் தாம் மெய்ஞ்ஞானப் பேறுபெற்று இறைவனுக்கு ஆட்பட்டபெருந்துறையில் உடனே கோயில் கட்டுவித்தாரென்றேனும், உபதேசம்பெற்றுப் பாண்டியனிடம்போய்ப் பின்னும் பெருந்துறை நண்ணி அவ்விடத்தைக்கடைசியாகவிட்டு மீண்டபின்னர்த் திரும்பவும் அவ்விடத்திற்குச் சென்றாரென்றேனும் திருவாசகமாவது திருவாதவூரர் புராணமாவது கூறுகின்றில. மாணிக்கவாசகர் பின்தாம் பெருந்துறையை நினைவுகூர்ந்தபோதெல்லாம் அங்கே குருந்தமரநீழலிலே எழுந்தருளித் தம்மை யாட்கொண்ட குருநாதன் கோலத்தையே நினைந்துருகினதாகத் திருவாசகத்தினாற் பெறப்படுகிறதே யல்லாமல் அங்கே சிவாலயமிருந்ததாக நினைவுற்றுருகினரென்பது சிறிதும் புலப்படவில்லை.

அற்றேலஃதாக, மாணிக்கவாசகர் தாங்குதிரை வாங்குதற்கென்று கொண்டு சென்ற பொருட்டிரளை யெல்லாம் எங்ஙனம் செலவிட்டா ரெனின்;—கூறுதும். மாணிக்கவாசகர் தங்குருநாதனுக்கு உடல் பொருளாவி மூன்றனை

யும் உரிமைப்படுத்துங்கால் தாங் கொண்டு வந்த பொருட் டிரள் முழுவதூஉம் குருநாதன் றிருவடியிலே உய்த்தார். அப்பொருட்டிரளைக் குருநாதன் றனடியார் குழாத்தினபால் உய்த்துத்

" திருந்திய பொருளி தெல்லாம் திருப்பணிக்களியும
மேலாம், அருந்தவர்க்குதவும் இல்லாதலந்தவர்க்கருளு
மென்றார்" என்று கூறியதாகத் திருவாதவூரர் புராணத்தின் கட்சொல்லப் படுதலின், அங்கிருந்த அவ்வடியவர்கள் எல் லாரும் அப்பொருட்குவையைச் சிவாலயத் திருப்பணி கட்கும், அரியதவசிகட்கும், வறியவர்கட்கும் கொடுத்துச் செலவிட்டன ரென்பது பெறப்படும். நன்று சொன்னீர், 'திருப்பணிக்கு அளியும்' என்றதனானே பெருந்துறையிற் புதிதாக ஒருகோயில் கட்டுவித்தார் எனல் பெறப்படு மன்றோ வெனின்;—அறியாது கூறினீர், 'திருப்பணி' என வாளா கூறினமையானே தமிழ்நாட்டின்கண் முன்னமே யுள்ள சிவாலயங்கள் புதுப்பிக்குஞ் செலவுக்குக்கொடுத்தா ரென்பது பெறப்படுவதல்லாமல், அது கொண்டு புதுவதாக ஒரு கோவில்கட்டுவித்தா ரென்பது பெறப்படாது. அன்றி அவ்வாறு ஒன்று கட்டுதற்கென்றே கொடுத்தாரெனக் கொள்வேமெனினும், அச்செய்யுளைத் தொடர்ந்துவரும்பிற் செய்யுட்களிற் கோயில் கட்டுவித்த விஷயம் ஒரு சிறிதும் குறிக்கப்படாமையின் அவ்வாறு கோடல் போலியுரையா மெனவிடுக்க. எனவே, மாணிக்கவாசகர் காலத்தில் திருப் பெருந்துறை சிவாலயமுடையதாயில்லை யென்பது நிறு வப்பட்டமைகாண்க.

இனித் திருவுத்தரகோசமங்கையி னியல்பை ஒரு சிறிது ஆராய்வாம். மாணிக்கவாசகப் பெருமானைப் பெருந் துறையிலே விட்டுக் குருநாதன் நீங்கும்போது, தன்னைப் பிரிந்திருக்க மாட்டாமையால் தாயைப்பிரிந்து வருந்தும்

கன்றுபோற் கரைந்து கரைந்து உருகியழும் தம் அன்பரை நோக்கிப் பூங்காவினிடை நின்ற ஒருமடுவைச் சுட்டிக் காட்டி "இம்மடுவின் நடுவிலே சோதிமயமான ஒரு தழற் பிழம்பு தோன்றும் அப்போது நம் அடியரெல்லாஞ்சென்று அதன்கண் வீழ்ந்து நம்பாற் சேர்குவர்; நீயும் அவ்வாறு அவரோடு உடன்சென்று விழாமல் 'உத்தர கோசமங்கை யென்னும் நம்மூரிற் சென்று, சித்தியங்கு ளெவையும் எய்தி' அதன்பின் பல சிவலிங்க வடிவுவைத்த சிவதலங்கடோறுஞ் சென்று வருதலையாயின் அங்கங்கும் இத் தழற்பிழம்புவடிவே காண்பாய், இறுதியாகச் சிதம்பரம் போந்து அங்கே புத்தரை வாதில்வென்றபின் சிவ பெரும்பதம் பெறுதலை என்று" அக்குருமூர்த்தி அருளிச் செய்ததாகத் திருவாதவூரர் புராணங் கூறுகின்றது. இங்கே, உத்தரகோசமங்கையைச் சிவலிங்கம்வைத்த தலமாகக் கூறாமல், மற்றைத் தலங்களையே அது வைத்ததாகக் கூறினமையே கவனிக்கற்பாலதாம். மாணிக்கவாசகர் தம் சிவநிட்டை கைகூடுதற்காகவே அந்நிட்டை மெய்ப்பொருள்தேற்றிய குருநாதன், திருப்பெருந்துறைப் பூங்காவோடொப்பப் பொழில்கள் நிறைந்து நிட்டை புரிதற்குப் பெரிதும் அநுகூலமுடைத்தாய் விளங்கும் திருவுத்தர கோசமங்கை யூர்க்கு ஏகுகவென்று ஏவினனென்பது மேலதனால் தெளியற்பாலதாம். அதனால், திருவுத்தரகோச மங்கையில் அந்நாளில் சிவாலய மிருந்ததின்றென்பதூஉம் பெறப்படுவதேயாகும். மெய்ப்பொருள் வழாதுகூறும் இத்திருவாதவூரர் புராணவுரைக்கு ஏற்பவே மாணிக்க வாசகப் பெருமானும் தன்னருமைத் திருவாக்கால்.

"அளிதேர்விளரி, ஒலிநின்றூதும் பொழில் உத்தரகோசமங்கை"

"அணிபொழில் உத்தரகோசமங்கை" என நீத்தல் விண்ணப்பத்திலும், "தெங்குலவு சோலைத்திருவுத்தரகோசமங்கை" எனத் திருப்பொன்னூசலினும் கிளந்தெடுத்தருளிய வாறுங்காண்க. 'திருவுத்தரகோசமங்கைக்கரசே' என விளித்துக் கூறுவதெல்லாம் ஆங்குத் தழலுருவாய்த் தோன்றிய சிவபெருமானை யல்லது வேறில்லை யென்க. ஆகவே, உத்தரகோசமங்கை ஊரிலும் மாணிக்கவாசகர் காலத்திற்சிவாலய மிருந்ததில்லை யென்பது இனிது துணியப்படுவதாம். ராவ் அவர்களும் இவ்விரண்டு கோவில்களும் பழையகாலத்தன அல்ல என்கின்றார். அதுநிற்க.

இனி மாணிக்கவாசகர் காலத்தும் அவர்க்குச் சில நூற்றாண்டு பிற்றோன்றிய அப்பமூர்த்திகள் முதலான ஏனைச்சமயாசிரியன்மார் மூவர் காலத்தும் திருப்பெருந்துறையும் திருவுத்தரகோச மங்கையும் சிவாலயங்கள் உடையவாயில்லாமையால், சிவாலயமுள்ள தலங்களுக்கே சென்று திருப்பதிகங் கட்டளையிடும் கடப்பாடு உடையரான சமயாசிரியர் மூவரும் அவ்வூர்களைத்தம் திருவாக்கிற் குறியாது விட்டனர். ஆகையால் அவர்கள் குறியாது விட்டகாரணம் இன்னதென்று பகுத் துணராமலும், மாணிக்கவாசகர் காலத்து அக்கோவில்கள் கட்டப்படவில்லை என்பதுணராமலும், தேவாரத்தில் அத்தலப்பெயர்கள் வராதது ஒன்றேபற்றி மாணிக்கவாசகர் அம்மூவர்க்கும் பிற்பட்டவ ரென்று கூறிய ராவ் அவர்கள் உரைப்பொருள் பொருத்தமின்றா மெனவிடுக்க.

அற்றேல்,திருப்பெருந்துறை,திருவுத்தரகோசமங்கை என்னும் அத்தலங்கள் உற்பத்தியாய வாறுதான் என்னை யெனிற் கூறுதும். மாணிக்க வாசகர்க்கும் ஏனைச் சமயாசிரியர்க்கும் பிற்காலத்தே திருவாசகம் மிகுதியும் ஓதப்படுவதாயிற்று. அங்ஙனம் ஓதப்படுகின்றுழி அவ்விரண்

டிடங்களும் பெருமானால் சிறந்தெடுத்துச் சொல்லப் படு
தலாலும், ஒன்றிற் பிறவியறுக்கும் மெய்ப்பொருளுபதேச
மும் மற்றொன்றில் சிட்டை கூடிப் பெற்ற மெய்யனுபவ
சித்தியும் அப்பெருமானுக்கு விளைந்தமையாலும், இவை
யெல்லாம் பிறர் நினைவு கூர்ந்து உய்தற்பொருட்டுப் பிற்
காலத்தரசர்கள் அவ்விரண்டிடத்தும் சிவாலயங்கள் விரிவு
படக் கட்டினைப்பாராயினர். பிற்காலத்தினரான விஜய
நகரத்தரசர் சிலாசாசனங்களும் பாண்டிய அரசர் சாசனங்
களும திருப்பெருந்துறையிலும திருவுத்தரகோசமங்கை
யிலுங் காணப்படுகின்றன வென்று ராவ் அவர்கள் எடுத்
துக்காட்டிய பிரமாணங்கள் அவர்கொள்கையையே வேரற
அறுத்து எமதுகொள்கையை வச்சிரத் தம்பம்போல் நாட்
டுவவயின.

இன்னும் பிற்காலத்தின்கண் இருந்த விஜயநகரத்து
நாயக்க மன்னர் கட்டட அமைப்புக்களே பெரும்பாலுங்
காணப்படுதலால் திருப்பெருந்துறைச் சிவாலயத்தின் கர்ப்
பகிருகம் ஒன்று தவிர ஏனைய வெல்லாம் அவர்களே
அமைத்தன வென்று ராவ் அவர்கள் கூறுவதனால் எமது
கொள்கை பெரிதும் வலிபெறல் காண்க. என்னை? நால்வர்
காலத்திற்குப்பின் யாரோ சிறிதாகக் கர்ப்பகிருகம் ஒன்று
மே கட்டிவைத்தனராக அதனைச் சூழப்பின்னர் வந்த விஜ
யநகரமன்னர் கட்டடங்களைப் பெருக்கினரென்பது பெறப்
படுதலின் என்க.

இனிமாணிக்கவாசகர் திருவாசகம்முழுவதூஉம்தொண்
டர்களையும் அடியார்களையும பன்முறை நினைந்து நினைந்
து உருகிக் கூறக் காண்டலாலும, அவ்வாக்கியங்களை உண
ரும்போது அப்பரையும், ஞானசமபந்தரையும், சுந்தர
ரையுமே குறிக்கின்று வென்பது புலப்படுதலாலும் மாணிக்
கவாசகர் அம்மூவர்க்கும் பிற்பட்டோர் என ராவ் அவர்
கள் மொழிகின்றனர்.

இத்தருக்கம் என்னுட்ப முடையது! புராணங்களா லும், திருவாசகத் திருவாக்காலும், ஏனை ஆன்றோர் பரம்பரை உரையாலும் நரிபரியானது மாணிக்கவாசகர் பொருட்டே எனக் கூறப்பட்டிருப்ப, அதனைப் பொருந் தாதென்று மறுத்த ராவ் அவர்கள் 'அடியார்' என்று பொதுப்படக் கூறும் சுவாமிகள் திருவாக்குக்கு ஏனைமூவர் என்று பொருள் கொண்டது பெரியதோர் தலைதடுமாற்ற வுரையன்றிப் பிறிதென்னை? "கழுமலமதனிற் காட்சி தந் தருளியமையும்" "திருவாரூரில் ஞானந்தன்னை நல்கிய நன் மையையும்" ஞானசம்பந்தரையும் சுந்தரரையுங் குறித்த னவாக ராவ் அவர்கள் பொருள் படுத்தற்குக் கொண்ட ஆதார மென்னையோ? அவ்வாதாரம் ராவ் அவர்கள் சுவா மிகள் காலத்தைப் பிற்படுத்த வேண்டு மென்று கொண்டு முதிர்வித்த கனவு நிலையில் உளது போலும்! ஞானசம்பந் தரைத் தவிர வேறடியார்க்குக் கழுமலத்திற் காட்சி கொடுத்திலன் நம்பெருமா னென்பதற்கும், திருவாரூரில் ஞானம் நல்கப்பட்டவர் சுந்தரமூர்த்திகளைத் தவிர வேற டியார் இலரென்பதற்கும் பிரமாணங் காட்டினாலன்றி ராவ் அவர்கள் உரை புரை படுதல் திண்ணம் என்க.

அற்றேல், மாணிக்கவாசகர் தமது திருவாக்கில் அடி யார் அடியாரெனப் பலகாலும் உரைப்பதுயார்தம்மை எனிற் கூறுவாம். திருப்பெருந்துறையில் எழுந்தருளிய குருநாதனைப் புடைசூழ்ந்திருந்த அடியார்கள், அக்குருநாத ன்பிரியும் போது மிகவும்வருந்தாநிற்பப்பின் அக்குருநாதன் அவர்தம்மை நோக்கி 'இம்மடுவினிடையே சோதிமயமான தழற்பிழம்பு ஒன்று தோன்றும், அதில் நீவிர் போய்ப் படிந்து சிவபதம் பெறுகுவிர்' என்று கட்டளை யிட்டனன். இட்டவாறே அவர்களும் மாணிக்கவாசகரை விடுத்துப் போய் அத்தழற் பிழம்பிற் படிந்து மறைந்து போயினர்.

தாம் அவ்வடியார் குழாத்தோடு அளவளாவி வரம்பிகந்த மகிழ்ச்சியுற்றிருந்ததனையே சுவாமிகள் "கலந்து நின்னடியாரோடு அன்றுவாளா களித்திருந்தேன், புலர்ந்து போன காலங்கள்" என நினைந்து அருளிச் செய்ததும், பின் அவ்வடியார் தம்மைப் பிரிந்து சோதியில் மறைந்ததனையே "புகுந்து நின்றது இடர் பின்னாள், உலர்ந்துபோனேன் உடையானே உலவா இன்பச் சுடர் காண்பான், அலந்து போனேன் அருள் செய்யாய் ஆர்வங்கூர அடியேற்கே" என்றுருகி அருளிச்செய்ததுமாம். இன்னுந் தம்மோடு அங்ஙனம் அளவளாவியிருந்த அடியார்கள் சிவபதவிபெற யான் அதனைப்பெறுமாற் புறமே போனேனே என உள்ளங்கசிந்து சுவாமிகள் "சிவமாநகர் குறுகப்போனார் அடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே" என்றும், "போரா உலகம் புக்கார் அடியார் புறமே போந்தேன் யான்" என்றும் "பழைய அடியார்க்குன் அணிபார் பாதங் கொடுத்தி" என்றும், "பண்டைப் பரிசே பழ அடியார்க்கீந் தருளும்" என்றும், "நின்கழற் புணைகொண்டு, இழிகின்ற அன்பர்கள் ஏறினர்வான் யான் இடர்க்கடல் வாய்ச் சுழி சென்று" என்றும், அருளிச் செய்தனர்கள். பின்னர்ச் சுவாமிகள் சிவநிட்டை கூடி அருள்வயமாய் நின்றகாலத்து அங்ஙனம் முன்னர்ப் பிரிந்துபோன அவ்வடியரையெல்லாம் மறித்தும் அவ்வருள் வெளியிற்கண்டு ஆனந்தமெய்தி, அப்பனை சிவபெருமான் தம்மைத்திரும்பவும் அவரோடுகூட்டிய பேரருட்டிறனை வியந்து "அப்பனாண்டு தன்னடியாரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே" என்று அதிசயப் பத்து முழுவதும் அருளிச் செய்தனர்கள். இங்ஙனமெல்லாம் சுவாமிகள் திருவாக்கிற் குறித்திடப் பட்ட அடியார்கள் திருப்பெருந்துறையிற் குருநாதன் பக்கல் மேவியிருந்த அடியார் குழாமன்றி, ஞான சம்பந்தர் முதலாயினு ரல்ல

ரென்பது இந்நுட்பம் ஆய்ந்துணரவல்லார்க் கெல்லாம் வெள்ளிடைமலைபோல் விளங்கிக்கிடக்கது. இஃதிப்பெற்றியதாக இதன்வரலாறு சிறிதுமோராது சுவாமிகள் இங்கு 'அடியார்' என்றது ஞானசம்பந்தர் முதலாயினோரையே யாமென்று கூறி, அதனால் சுவாமிகள் ஏனை மூவர்க்கும் பிற்காலத்தினரெனக் கூறிய ராவ்அவர்கள் திரிபுணர்ச்சி பெரிதும் இரங்கற் பாலதொன்றாம் என்க.

இனி மாணிக்க வாசக சுவாமிகள் பலவேறு திருவிளையாடல்களைக் குறித்துப் பாடாநிற்ப, ஏனைமூவரும் அவற்றிற் சிலவே கூறுதலாலும், அங்ஙனம் அவை பலவாய்ப் பெருகிய காலம் பிற்காலத்தின் கண்ணதாக வேண்டுதலாலும், அத்திருவிளையாடல்கள் பலவற்றையும் எழுதின வேப்பத்தூரார் திருவிளையாடற் புராணத்திற்கும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணத்திற்கும் சிறிது முன்னராயினும் பின்னராயினும் மாணிக்கவாசக சுவாமிகள் காலத்தை வரையறுக்க வேண்டுமென ராவ்அவர்கள் கூறுகின்றார்கள்.

இவர்கள் கூறியது பெரிதும் பிழைபடுவ தொன்றாம். மாணிக்கவாசக சுவாமிகள் தமது அருமைத் திருவாக்கில் எடுத்துக் கூறின வெல்லாம் மிகப்பழமையான திருவிளையாடல்களே யாம். ஞானசம்பந்த சுவாமிகளுக்குப் பின்னே மாணிக்கவாசக சுவாமிகள் இருந்தனராயின், மூன்று வயதிலே உமைதிருமுலைப்பாலுண்டு பேரற்புத ஞானமூர்த்தியாய்ச் சைவம் எங்கணும் விளக்கிச் சமணரை வாதில் வென்ற ஞானசம்பந்தப் பெருமானைப் பற்றிய திருவிளையாடலைக் கூறாது விடுவரோ? இஃதொன்றானே மாணிக்க வாசகர் ஞானசம்பந்தர்க்கு முன்னிருந்தா ரென்பது சிறுமகார்க்கும் இனிது விளங்கிக்கிடப்பதாக, இதுதானு முணராது ராவ் அவர்கள் காலவரையறை செய்யப் புகுந்தது

நகையாடற் பாலதொன்றும். மேலும், அப்பர் திருஞான சம்பந்தர் திருவாக்குகளில் திருவிளையாடல்கள் பலவந்திருக் கின்றனவே யல்லாமல் ராவ் அவர்கள் கூறியபடி சில வேவந்தில. இவ்வுண்மை தெரியவேண்டுபவர் ஸ்ரீமத்-வே. சாமிநாதையரவர்கள் தமிழுல கத்தைக் கடமைப் படுத்தி வெளியிட்ட வேபத்தூரார் திருவிளையாடல் முகப்பிலே மா ணிக்க வாசகர் திருவாக்கினும் மூவர் திருவாக்கினும் போ ந்த திருவிளையாடல்களையெல்லாம் மிக்க பிரயாசையோடு தொகுத் தெடுத்துப் பிரசுரித் திருக்கின்றார்க ளாதலின் ஆண்டுக் கண்டு கொள்க. அங்ஙனம் காணவல்லவர் ராவ் அவர்கள் கூறிய துமுழுப்பொய்புரையேயாமென்று தேர்வர். மாணிக்க வாசக சுவாமிகள் தங்காலத்தும் தங்காலத்திற்கு முன்னும் நடந்த திருவிளையாடல்கள் பலவற்றை விதந்தெடு த்துக் கூறுதல் போலவே, ஏனைச் சமயகுரவன் மாரும் தங்காலத்துந் தமக்குமுன்னும் நடந்தபலவற்றை எடுத்துக் கூறுகின்றனர். அதுகிடக்க.

இனிக் கி-பி 901-ஆ அரசாண்ட பராந்தகச் சோ ழன் தில்லைச் சிற்றம்பல முகட்டைப் பொற்றகடு வேய்ந்து சிறப்பித்த பின்னரே அவ் வம்பலத்திற்குப் பொன்னம் பலம் என்று பெயர் வந்ததென்றும், மாணிக்கவாசகசுவாமி கள் கீர்த்தித்திருவக வலில் "அம்பொற் பொலிதரு புலியூ ர்ப் பொது வினில் நடம் நவில்" எனவும், திருக்கோவையா ரில் "சேணிற் பொலிசெம் பொன் மாளிகைத்தில்லைச் சிற் றம் பலத்து" எனவும் கூறுதலோடு கோயின் மூத்ததிருப் பதிகம் முழுவதூஉம் இப்பெயரேவரப் பாடுத லாலும் அச் சுவாமிகள் பராந்தகச் சோழன் காலத்திற்கும் பின்னரே தான் இருந்திருக்க வேண்டுமென்று கூறிய ராவ்அவர்கள், அப் பராந்தகனுக்கு முன்னிருந்த அப்பர் சுவாமிகளும் 'செம்பொனம்பலம்' எனக்கூறியிருத்தலை உணர்ந்துகுன்று

முட்டியா குரிய போலப் பெரிதும் இடர்ப்பட்டு அதனை விலக்கி விடுவார் போல அப்பர் திருவாக்கில் வந்த 'பொன்னம் பலத்'திற்குப் 'பொன்னனைய அம்பலம்' என்பது பொருள் போலத் தோன்றுகின்றமைதனை யெடுத்துரை யாடிப்போனார்.

நாம் அவர்களுக்கு இங்ஙனம் நடுநிலை வழீஇ நாம் பேசி இழுக்குறவு திவ்வாறு வந்ததென்னை யெனின்;— தமிழ்த்தேயத்துப் பெரியாருள் யாரும் பழைய காலத்திருந்திலர் என்று நாட்டவும், தம்மை யொத்த ஆரியப் பெரியாரே பழைய காலந்தொட்டு நாகரிக முடையராயிருந்தன ரென்று காட்டவுமே புகாராகலின் அங்ஙனந்தன்னைப் பற்றுதல் என்னுங் குற்றத்திற்பட்டுப் பொருள் உண்மை தேராது நாவழுக்கினார் என்க. அது கிடக்க.

அப்பர் சுவாமிகள் திருவாக்குக்குப் பொன்போன்ற அம்பலம் என்று பொருள்பண்ணவந்த நாவ் அவ்வாறே மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்குக்கும் பொன்னனைய அம்பலம் என்று பொருள் செய்யாது விட்டதென்னை? ஒரேவகையான ஒரு சொற்றொடர்க்கு ஒருகால்ஒருவாறும் பிறிதொருகாற் பிறிதொருவாறும் பொருள் பண்ணுதற்கு இவர் கொண்டகாரணம்யாது? காரணமின்றித்தமக்கிசைந்தவாறெல்லாம் பொருள் செய்தால் இவர்போற் றிரிபடையாத நல்லறிவுடையார் இவருரைக்கு இணங்குவரா? மேலும் அப்பர்சுவாமிகள் பொன் போன்ற அம்பலம் என்று பொருள் செய்தற்கு இடந்தராமல் 'உரையாணி மாற்றுள்ள செம்பொன்னாற் செய்த அம்பலம்' என்றும் 'கதிர்விரியும் செம்பொன் அம்பலம்' என்றும், 'பரிசுத்தமான செம்பொற்றகடு எழுதி மேல்வேய்ந்த சிற்றம்பலம்' என்றும், 'பொன்னாற் செய்யப்பட்ட அம்பலம்' என்றும் இனிது பொருள் விளங்குமாறு "ஆணியைசசெம்பொன்ம

பலம்" "சுடர்ச் செம்பொனம்பலம்" "தூயசெம்பொன்னி ஞல், எழுதிமேய்ந்த சிற்றம்பலம்" என்று திருக்குறுந்தொகையிலும், 'பொன்னாகிய தில்லைச்சிற்றம்பலவன்" என்று திருவிருத்தத்திலும் அருளிச்செய்திருப்ப இவற்றையறிந்து டொருள்கொள்ளுமாறறியாத ராவ்அவர்கள் தமிழ் நூலாராய்ச்சியிற் புகுந்தது என்னை! அற்றேல், பராந்தகச் சோழன் பொன்வேய்ந்த பிறகு செம்பொன் னம்பலம் என்று பெயர்வந்ததென்னுங் கூற்று எவ்வாறாமெனின்;— அஃது அறிவில் கூற்றாமென்றே மறுக்க. பராந்தகன்பிற ஆலயங்களுக்குச் செம்பொன் முகடுவேயாது இத்தில்லைச் சிற்றம்பலத்திற்கு மாத்திரம் அங்ஙனம் பொன்முகடுவேய்ந்தகாரணம் என்னையென்று நாளுகியாராய வல்லார்க்கு, அவ்வம்பல முகடு பண்டைக்காலந் தொட்டு அங்ஙனம் பொன் வேயப்பட்டுவந்த காரணத்தானே பராந்தகவேந்தனும் தன்காலத்து அதனைப்புதுப்பித்து அங்ஙனம் பசும் பொற்றகடுவேய்வானாயிற் றென்பது தெற்றென விளங்கா நிற்கும். பராந்தகனுக்கு முன்னிருந்த பெருந்தமிழ் வேந்தர் பொன்வேயாது விட்டிருந்தனர் என்பதனை ராவ் எந்தச் சிலாசாதனத்திற் கண்டாரோ அறியேம். ஆரிய அபிமானத்தாற் கட்டி இறுகிய தம் மனோபாவகச் சிலையிற் கண்டார்போலும்! அப்பர்சுவாமிகள் திருவாக்கால்பராந்தகனுக்கு முன்னும் தில்லைச்சிற்றம்பலமுகடு பொன்வேயப் பட்டிருந்ததென்னும் உண்மை உள்ளங்கை நெல்லிக்கனி போ லினிதுபெறப்படுதலின், மாணிக்கவாசக சுவாமிகள் பொன்னம்பலம் என்று தந்திருவாக்கிற் கூறியது கொண்டே அவர் பராந்தகனுக்குப் பின்னிருந்தாரெனும் ராவ் அவர்கள் உரை பொருளொடு புணராப் போலியுரையா மென்க.

இனித் தக்ஷிணாமூர்த்தியுபாசனை மாணிக்கவாசகசுவாமி களுக்குப் பின்னர்த்தான் தோன்றியதென ராவ் அவர்கள் ஊகம் செய்கின்றனர். அவ்வூகம் காரணமின்றி அவரது வெறும் பாவனைக்கட் டோன்றுதலின் அதனை அறிவு டையோர் கொள்ளா ரென்பது. தக்ஷிணா மூர்த்தம் ஜனகர் முதலான முனிவர் நால்வர்க்கு அத்துவித உண்மை உணர்த்துதற் பொருட்டுக் கொண்ட பழமை யுநட்கோல மென்பது எல்லார்க்கும ஒப்பமுடிந்த தாகலின், அதனைப் பிறிதாகக் கூறுதல் பொருந்தாதென மறுக்க. இன்னும் முதலாம் குலோத்துங்க சோழன் தக்ஷிணாமூர்த்திக்கு மானியம் விட்டான் என்று கூறிய திருக்கண்டேசுராலய சாதனத்தைக் கொண்டு அப்போது தான் அம்மூர்த்தி உபாசனை தொடங்கிய தென்றல் பெரிய தோர் குழறு படையாம். அது மானியம் விட்டமை கூறியதேயன்றி அப்போதுதான் அவ்வுபாசனை தோன்றிய தெனக் கூறிற்றிலது. அவ்வாறாக ஒருநியதியுமின்றித் தம் மனம்போன வாறு அதற்குப் பொருள் செய்தலில் நம் ராவ் அவர்களே யன்றி வேறு எவர் வல்லார்!

இனிப் புத்தரோடு சுவாமிகள் தில்லைச் சிற்றம் பலத்தில் வாது புரிவதைப் பார்க்கப் பாண்டியனும் ஈழ மன்னன் ஒருவனும் வந்து அப்போதங்குவந்த சோழனை வணங்கித் திறைதந்தன ரென்பது திருவாதவூரர் புராணத்திற்குறிக்கப்பட்டிருக்கிற தென்றும், அங்ஙனம் பாண்டியர் சோழ மன்னர்க்குக் கீழ்ப்பட்ட காலம் 10-ம் நூற்றாண்டுமுதல் 13-ம் நூற்றாண்டிறுதி வரையுமாம் என்றும், அதனால் மாணிக்கவாசகர் காலமும் அவ்விடைப்பட்ட காலத்திலேதான் வைக்கற் பாற் றென்றும் ராவ் அவர்கள் கூறுகின்றார்கள்.

தில்லைச் சிற்றம் பலத்திற் சோழனுக்குப் பாண்டியன் திறை கொணர்ந்து செலுத்தினான் என்றது முழுப் பொய்யுரையாம். அத் திருவாதவூரர்புராணத்தையாம் பன்முறையும் படித்துப் பார்த்தோம். அதன்கண் ஈழமன்னன் ஒருவன் திறை கொணர்ந்து வைத்துச் சோழனைவந்து வணங்கினதாக மாத்திரம் சொல்லப்பட்டிருக்கின்றது; அது, "ஈழவள நாடனு மெழுந்தடிபணிந்து திறையிட்ட துறைநல்கி" என்னும் அப்புராணச் செய்யுளால் அறியப்படும். இவ்விலங்கை மன்னனைத் தவிர வேறுமன்னர்கள் அங்குவந்ததாகவேனும், பாண்டியன்வந்து சோழனைப் பணிந்ததாகவேனும் அப்புராணம் எங்கும் தேடித்தேடிப் பார்த்துங் கண்டிலேம். இவ்வாறாக இல்லாத தொன்றனை இருப்பதாகவைத்துப் பொய்யுரை கூறித் தருக்கநிகழ்த்த முன்வருதலில் ராவ் அவர்கள் முன்னதாக நிற்கின்றார் இஃதவர்க்கு நேர்மைதானோ வென்பதை அறிவுடையோரே கூறக்கடவர்.

இனி வரகுணபாண்டியனொருவனை மாணிக்கவாசகர் தம்திருவாக்கிற் குறிப்பிடக் காண்டலாலும், அவ்வரகுணன் காலம் 9-ஆம் நூற்றாண்டென்று துணியப் படுதலாலும், சுவாமிகள் காலம் அவ்வொன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரேதான் பெறப்படுதல் வேண்டும் என்கின்றார் ராவ். இன்னும் சேஷகிரிசாத்திரியார் காட்டிய பாண்டிய வமிசாவளிப்பட்டியில் ஒரே வரகுணன் காணப்படுதலால் அவனையேதான் சுவாமிகள் குறிப்பிட்டிருக்க வேண்டுமென்றும் ராவ் ஊகஞ்செய்கின்றார்.

இப்போது சரித்திர ஆராய்ச்சிக்குப் பயன்படும் சிலா சாதனங்களும் வமிசாவளிகளும் கி-பி எட்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட பாண்டிய சோழ அரசர்களையே எடுத்துப்புகலுகின்றன. கி-பி எட்டாம் நூற்றாண்டிற்கு முற்

பட்ட பழைய பாண்டிய சோழசேர மன்னர்கள் பலப் பலர் உளராகப் பழையசெந்தமிழ் நூல்களால் அறியப் படவும், அவ்வரசர்களைப்பற்றிய சிலாசாதன செப்புப்பட் டயங்களுள் ஒன்றேனும் இப்போது அகப்படக்காணகிலேம். சிவாலயங்களை எண்ணிறந்தன கட்டுவித்த சோழன் கோச் செங்கண்ணனைப் பற்றியசாதனமே அகப்பட்டிலதாயின் மற்றை அரசர்களைப்பற்றிக் கேட்பானேன்? இங்ஙனஞ் சிலாசாதனங்கள் எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னரே தோன்றியதற்கும் அதற்குமுன் தோன்றாமைக்குங் காரணம் முன்னமே கூறிப்போந்தாம். ஆகவே, பிற்காலத்திய சிலாசாதன ஆராய்ச்சி பண்டைநாட் டமிழ்மன்னர் காலந் தேர்தற்குச் சிறிதும் பயன்படாதொன்றென விடுக்க. எனவே, பிற்காலத்து அரசர்பரம்பரையினைக்கூறும் சேஷகிரிசாஸ்திரியார் வமிசாவளிப்பட்டி பண்டைக்குஞ் சிறிதும் பயன்படாதென்றறிக. குலோத்துங்க சோழன், கரிகாற்சோழன் முதலானபெயர்கள் மன்னர்கள் பலர்க் கிருந்தவாறுபோல வரகுணபாண்டியன் எனும் பெயரும் மன்னர்கள் பலர்க்கிருந்திருக்க வேண்டும். இது காறுங் குறித்துவருங் காரணங்களானும், பின்னே காட்டப்படுங் காரணத்தானும் பின்னிருந்த வரகுண பாண்டியனுக்கு [illegible] முற்பட்டிருந்த அப்பர்சுவாமிகளுக்கும் முற்பட்டவராக மாணிக்கவாசகசுவாமிகளிருத்தலால் அவர் களாற்றுதிக்கப்பட்ட வரகுணபாண்டியன் வேறென்பதே துணிபொருளாம்.

இனி மாணிக்கவாசக சுவாமிகள் புத்தகாலத்தினரா

மென்று கூறுவாருரையை மறுத்துச், சைனமதம் புத்தர் காலத்திற்குப் பிந்தியதன் றென்றும், புத்தகாலம் 9-ம் நூற்றாண்டிற்குப் பின்னாரும் நீண்டதென்பதற்கு கி-பி 984முதல் 1012வரையில் செங்கோலோச்சிய இராசராசன் காலத்தில் நாகபட்டினத்தின்கண் ஒரு பௌத்தப் பள்ளி யிருந்தமையே சான்றுமென்றும் ராவ் அவர்கள் கூறுகின் றனர்.

புத்தசமய மிருந்தகாலத்தே சமணமதமும் உடனிருந்ததாயினும் அது மிகவும் செழிப்புற்று ஓங்கியது ஐந்தாம நூற்றாண்டின் பின்னரேயாம. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னெல்லாம் புத்தமதமே மேலோங்கியிருந்தது. இதற்குச் சான்று மணிமேகலையும் சீவகசிந்தாமணியுமேயாம். மணிமேகலை பௌத்தம மேலோங்கிய முதல் நூற்றாண்டிலும், சீவகசிந்தாமணி சமணம் மேலோங்கிய ஏழாம் நூற்றாண்டிலும் எழுதப்பட்ட நூல்களாம். ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னும் ஒரோவிடத்துப் பௌத்தமதம் இருந்ததென்றதனுல் ஈண்டைக்கு ஆவதோர் இழுக்கில்லை. என்னை ? அது பிற்காலத்துத் தன்பெருமை சுருங்கி ஒளி மழுங்கிக் கிடந்ததாகலின். இனி மாணிக்கவாசக சுவாமிகளிருந்த காலத்துப் பௌத்தமதம மிகவும் விரிந்து வலி பெற்றிருந்ததென அறியப்படுதலால் அக்காலமும மாணிக்கவாசகர் காலமும் ஐந்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்டன வாமென்பது ஒருதலை. ஆகவே இவ்வுண்மையொடுமுரணி ராவ் அவர்கள் கூறியது பொருத்தமில் போலியுரையா மெனமறுக்க.

இவ்வாறு இதுகாறுங் கூறியமறுப்புரைகளால், ஸ்ரீ து. அ. கோபிநாதராவ் அவர்கள், எம. ஏ, மாணிக்கவாசகசுவாமிகள் காலம் கி-பி பதினோராவது நூற்றாண்டின் துவக்கம் அதாவது இற்றைக்கு எண்ணூற்றெட்டு வருடங்களுக்கு முன்னென்று நிலையிடுதற் பொருட்டுக் காட்டிய ஆதாரங்கள் அவ்வளவும் உள்ளீடில்லா வெறும் பதடியாமென்பதனைப் பகுத்துப் பகுத்துக்காட்டி விளக்கினோம். இனி யாம் 1902 ஸ்ரீ ஞானசாகர முதற்பதுமத்திற் பிரபல காரணங்கள் பலவற்றால் மாணிக்கவாசக சுவாமிகள் கி-பி மூன்றாவது நூற்றாண்டு அதாவது இற்றைக்கு ஆயிரத்து அறுநூற்றெட்டு வருஷங்களுக்கு முன் இருந்தார்களென்று நாட்டியதே பொருந்தமுறுவதாம். அதனை இங்கு மற்றுமோர் ஆதாரங்காட்டி முடிப்பாம்.

மாணிக்க வாசக சுவாமிகள் அப்பர் சுவாமிகளுக்கு முன்னிருந்தா ரென்பதனை நிலைபெறுத்தவே அவர்காலம் இதற்குமுன் னென்பது நாட்டப்பட்ட வாறாகும். அப்பர் சுவாமிகள் "நரியைக் குதிரை செய்வானும்" என்றது மாணிக்கவாசகர் பொருட்டு நிகழ்ந்த திருவிளையாடலைக் குறிக்க தென்பகனை முன்னரே காட்டினோம். திருப்புவனத் திருப்பதிகத்திலும் அப்பர் சுவாமிகள் "மணியார் வைகைத்திருக்கோட்டி னின்றதோர் திறமுங்தோன்றும்" என்று அருளிச்செய்து மாணிக்கவாசகர் பொருட்டாகவும் பிட்டுவாணிச்சி பொருட்டாகவும் சிவபெருமான் வைகையடைக்க மண்சுமந்து அதன்கரையில் நின்ற திறத்தை விளக்கி அருளினார். மேலும், அப்பர்சுவாமிகள் தமது

அருமைத் தனித் திருத்தாண்டகச் செய்யுளொன்றில் "குடமுழ நந்தீசனை வாசகனுக் கொண்டார்" என்று சுவாமிகளின் பெயராகிய வாசகன் என்னுஞ் சொல்லையும் வெளிப்படையாக எடுத்துக் கூறியருளினார். இம்மூன்று அரிய குறிப்புக்களானும் மாணிக்கவாசகர் அப்பர்சுவாமிகள் காலத்திற்கும் முற்பட்ட வராதல் தெற்றென விளங்குகின்றது. இனி மாணிக்கவாசகப் பெருமானிருந்த கால வரம்புதான் யாதோ வெனின்;—அஃது இற்றைக்கு ஆயிரத்து அறுநூற்றெட்டு வருடங்களுக்கு முற்பட்ட மூன்றாம் நூற்றாண்டிலாமென ஞானசாகர முதற்பகுமத்தின் கண் இனிது விளக்கினும்; ஆண்டுக் கண்டு கொள்க.

* குறிப்பு:—'பெருந்துறை' என்னுந்தலம் அப்பர்சுவாமிகள் முதலானோராற் குறிக்கப்படவில்லை யென்பதூஉம் பொருந்தாதாம். அப்பர் சுவாமிகள்தாம் அருளிச்செய்த க்ஷேத்திரக் கோவைத் திருத் தாண்டகத்தில் "பேரூர் பிரமபுரம் பேராவூரும் பெருந்துறை காம்பிலி பிடவூர் பேணும்" என்று அத்தலத்தை எடுத்தருளிச் செய்தனர்கள். அற்றேல், அதற்குத் தனிப்பதிகங் காணப்படாதவா றென்னை யெனின்;—யாம் முன்னரே காட்டிய வாற்றால் அது மாணிக்கவாசகசுவாமிகள் குருநாதனைக் கண்டு உபதேசம் பெற்ற மாட்சிமையானே சிறப் பெய்திய தன்றி, அதன்கட் சிவாலயம் முன்னில்லாமையால் அதற்குத்தனித் திருப்பதிகம் இல்லா தாயிற் றென்க.



உ

# திருச்சிற்றம்பலம்.

## சாதிவித்தியாசமும் போலிச்சைவரும்.



"சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்,
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் ளருளும் மாற்பேறரே."

திருநாவுக்கரசு சுவாமிகள்.

சைவசமயமானது சீவகாருணிய ஒழுக்கத்தையும் சிவபத்தி அடியார் பத்தியையும் போதிப்பதென்று உணரும் புண்ணியம் இல்லாத போலிச்சைவர் சிலர் சாதிவித்தியாசமே தாம் சைவ சமயத்தாற் பெறும் தத்துவஞானம் என்று மயங்கி உணர்ந்து, அம்மயக்க வுணர்ச்சியைத் தம்மிடத்தும் தம்மோடொத்தவரிடத்தும் வைத்து மகிழ்வதோடு திருத்திபெறாமல், அதனைத் தமக்கு இசைந்த பத்திரிகைகளினும் எழுதி வெளியிடுவித்துச், சைவவுண்மைகளை உள்ளவாறே எடுத்துப்போதித்துவரும் தவவொழுக்கமுடைய பெரியாரையும் தமக்குள்ள பொறாமையாலும் வஞ்ச இழிகுணத்தாலும் தமக்குத் தோன்றியவாறெல்லாம் இகழ்ந்து பேசுகின்றார். ஒருவருடைய உயர்வுந் தாழ்வும் அறிவான் மிக்க சான்றோர் மதிக்கவேண்டுமே யல்லாமல், அறிவில்லாக் குறும்பர் மதிக்கற் பாலரல்லர்; ஆகவே, அறிவில்லார் கூறும் இகழுரைகளையும் பொய்ப் பிரசங்கங்களையும் அறிவுடையார் ஒரு பொருட்டாக எண்ணாராகலின் அவர் கூறும் பழிச்சொற்களை விடுத்து, அவர் கூறும் மற்றைப் பகுதிகளில் உள்ள குற்றங்களை மாத்திரம் ஒரு சிறிது எடுத்துக் காட்டுவோம். அவர் உரைத்தவற்றில் உள்ள குற்றங்கள் அனைத்தும் அறிவுடையார்தாமே உணர்வாராகலின், ஏனைச் சாமானியர் அவர் கூறியவற்றைக் கண்டு மயங்காமைப் பொருட்டு இங்கு இதனை எழுதுவோமாயினேம்.

சாதி வித்தியாசம் பழையகாலந் தொட்டே வேதம் முதலான நூல்களிற் காணப்படுகின்றதாகலின், அந்நூல்களைப் பிரமாண மாகக் கொண்டவர்கள் அவ்வித்தியாசத்தை அனுசரித் தொழுகுதலே செயற்பால தென்கின்றார்.

சாதி வித்தியாசம் பழமையாக உள்ளது பற்றியே அதனைத் தழுவியொழுகல் வேண்டு மென்பது பகுத்தறிவில்லார் கூற்று. பழையன வெல்லாம் நல்லனவாதலும் இல்லை, புதியன வெல்லாம் தீயன வாதலும் இல்லை; பழையன வற்றில் தீயனவும் உண்டு புதியன வற்றில் நல்லனவும் உண்டு. இவ்வுண்மையைச் சைவ சித் தாந்த ஆசிரியருள் ஒருவரான உமாபதி சிவாசாரிய சுவாமிகள் "தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று தோன்றிய வாம் எனும் எவையும் தீதாகா." என்று உபதேசித்தருளியதுங் காண்க.

மனிதருடைய நாகரிக வளர்ச்சிக்கும் அறிவின் மேன்மைக் கும்ஏற்பக் காலந்தோறும் பழைய ஏற்பாடுகள் அழிந்து போதலும் புதிய ஏற்பாடுகள் புகுந்து பொருந்துதலும் இயற்கையாம். இவற் றை உலகத்தார் தழுவி நடந்துவரும் வகைகளையெல்லாம் சொல் லப் புகுந்தால் இது மிக விரியும். இதுபற்றியன்றோ "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" என்னும் விதியும் எழுந்தது.

ஆகவே, சாதி வித்தியாசம் பழையகாலந் தொட்டு இருத்தல் பற்றியே அதனை விடாது கைப்பற்றி யொழுகல் வேண்டு மென் பது சிறிதும் பொருத்தமில்லாத போலியுரையாம்.

இனிச் சாதி வித்தியாசம் பழமை தொட்டே உள்ள தென் பதும் அறிவில்லாக் கூற்றாம். மிகப் பழைய நூலாகிய இருக்கு வேதத்தின் முதல் ஒன்பது மண்டிலங்களினும் சாதி வித்தியா சத்தைப் பற்றிய குறிப்பு ஒன்றுமே காணப்பட வில்லை. ஈசகேன கடம் முதலான பழைய உபநிடதங்கள் தோன்றிய காலத்தும் நால்வகைச் சாதி வகுப்புக் காணப்படாமல், பிராமணர் ராஜந்யர் என்னும் இரண்டு பிரிவுமாத்திரமே காணப்படுகின்றது. இவ் விரண்டு பிரிவும் அவ்வவர் தொழில் பற்றி வந்தனவே யல்லா

மல், அவர் தமக்குள் வேறு எவ்வகையான வித்தியாசமும் இருந்த தாகத் தெரியவில்லை. வேள்வி வேட்டலும் நூல் ஓதுதலுமாகிய தொழிலைச் செய்பவர் பிராமணர் என்றும், போர் புரிதலும் நாடு காத்தலுமாகிய தொழிலைச் செய்பவர் ராஜந்யர் அல்லது க்ஷத்திரியர் என்றும் வகுக்கப்பட்டனர். இங்ஙனம் வகுக்கப்பட்டாலும் அவர்கள் அவ்வத்தொழில்களையே செய்யவேண்டுமென்னும் கட்டுப்பாடு சிறிதும் இருந்ததில்லை. துரோணரும் அவர் ஆசிரியர் அக்கினிவேசரும் அவர் புதல்வர் அசுவத்தாமரும் அவர் மைத்துனர் கிருபரும் போன்ற பிராமணர் போர்த்தொழில் பயின்றமையும், பிரியமேதர் சினி சார்க்கியர் திரையாருணி முதலான க்ஷத்திரியர் நூல்கள் ஓதிப் பிராமணரானமையும் மேற் கூறியதனை நாட்டுவதற்குப் போதுமான சான்றும். இவை மாத்திரம் அல்ல. இவ்விரு வகுப்பாரும் சிறிதும் வேறுபாடின்றி ஒன்று சேர்ந்து உணவருந்தியும், பெண் கொண்டு கொடுத்தும் ஒருமைப்பாய்வாழ்ந்து வந்தார்கள். விதர்ப்பன் என்னும் க்ஷத்திரியன் புதல்வியை அகத்தியர் மணந்துகொண்டார்; உரோமபாதன் புதல்வியை இருசிய சிருங்கர் மணந்து கொண்டார்; இங்ஙனமே ராஜந்யர் புதல்விகளைப் பிராமணர் மணந்துகொண்ட வரலாறுகள் எண்ணிறந்தன இருக்கின்றன. இனிப் பிராமணர் புதல்விகளை மற்றை வகுப்பாரான ராஜந்யர் மணந்து கொண்ட வரலாறுகளும் பல இருக்கின்றன. சுக்கிராசாரியார் என்னும் பிராமணர் தமது புதல்வியை யயாதி என்னும் அரசனுக்குக் கொடுத்தார்; மற்றொரு பெண்ணை அனூகனுக்குக் கொடுத்தார். இங்ஙனமே ஞானோபதேசங்களும் வித்தியாசமின்றிச் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. ஜனகராஜன் பிராமண முனிவர் பலர்க்கு ஞானோபதேசஞ் செய்தனன்; பாலாகி என்னும் பிராமணரும் அஜாதசத்துரு என்னும் அரசனால் ஞானோபதேசஞ் செய்யப்பட்ட வரலாறு பழைய உபநிடதங்களிற் காணப்படுகின்றது. இவ்வுண்மைகளால் இருக்கு வேதத்திற்குப் பின் உபநிடதங்கள் எழுந்த காலத்தில் பிராமணர் க்ஷத்திரியர் என்னும் இரண்டு வகுப்பே இருந்தன வென்பதும், அவ்விரண்டு வகுப்பும் தொழில் பற்றி உண்டாயினவே யல்லாமல் பிற்காலத்திற் போலப் பிறப்பு மாத்திரத்தால் உண்டாயினவல்ல வென்பதும், அவ்விரண்டு வகுப்பாரும் தமக்குள் ஏதும் வித்தியாச

மின்றி உண்ணல் கலத்தல்களால் ஒருமித்து வாழ்ந்தனர் என்பதும் இனிது விளங்கும்.

இனிப் புராணங்கள் இதிகாசங்கள் தோன்றிய காலத்திலே தான் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்கு வகுப்புகள் பிரிந்தன. இந்நால்வகைச் சாதியாரும் ஒரே தந்தைக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்து நால்வேறு தொழிலால் நால் வகைப்பட்டார்களே யல்லாமல் அவர்களுள்ளும் உண்ணல் கலத்தல்களில் ஏதும் வித்தியாசம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. சிரார்த்த காலங்களிற் பிராமணன் வீட்டில் சூத்திரன் சமையல் செய்து அன்னம் பரிமாறியமுறை பழைய கற்பசூத்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கிணங்கவே வாயு புராணத்தும் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கின்றது: "கிருத யுகத்தின் கண் சாதிகள் ஏதுமே இல்லை; அதன்பின்னர் பிரமதேவர் அவ்வவர் தொழில்களுக்கு ஏற்ப மனிதருள் நான்கு வகுப்புகள் ஏற்படுத்தினர். பிறரை ஆளுவதற்கேற்ற வீரச்செய்கையுடையவர்களைப் பிறரைக் காக்கும் பொருட்டு க்ஷத்திரிய ரென்று நியமித்தார். தந்நயம் பாராட்டாமல் பிறர்நலங் கருதி உண்மையே பேசி வேதத்தைச் செவ்வையாக ஓதினவரைப் பிராமணர் என வைத்தார். முன்னே வலியற்றவர்களாய் நிலத்தை உழுவதிலும் கைத்தொழில் புரிவதிலும் தலையிட்டு உழவினால் உயிர் வாழ்க்கைக்கு வேண்டுவனவற்றை எடுத்துத் தந்தவர்களை வைசியர் எனவைத்தார். சுத்தஞ் செய்பவர்களாய் எளிய தொழில் மாத்திரஞ் செய்யும் வலியற்றவர்களைச் சூத்திரர் என்று வைத்தார்." இவ்வாயு புராண வாக்கியங்களுள் சாதியானது தொழில்பற்றி வந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறதே யல்லாமல், பிறப்பினால் வந்ததென்று சிறிதும் சொல்லப்படவில்லை. இனி இந்நால்வகைச் சாதியாருள்ளும் எவர் உயர்ந்தோர் எவர் தாழ்ந்தோர் என்று வினவுங்கால், ஒழுக்கத்தால் மிக்கவரே உயர்ந்த சாதியாரெனவும், ஒழுக்க மில்லாதவரே தாழ்ந்த சாதியாரெனவும் மகா பாரதம் சாந்தி பருவத்தின்கண் நிச்சயித் துரைக்கப்பட் டிருக்கின்றது. அப்பகுதி வருமாறு:

"பாரத்துவாச முனிவர் பிருகு முனிவரை வினவுகின்றார்.

“நால்வகைச் சாதி வித்தியாசத்திற்கும் நிறந்தான் காரண மென்று சொன்னால் எல்லாச் சாதியுள்ளும் நிறங்கள் பலதிறப் பட்டுத் தோன்றுகின்றன.

“அவாவுங் கோபமும் அச்சமும் பேராசையும் சஞ்சலமும் கவலையும் பசியும் களைப்பும் நம்மெல்லாரிடத்தும் மிகுந்து தோன்று கின்றன; இங்ஙனமாயின் சாதிப் பகுப்பு எவ்வாறு பொருந்தும்?

“அசையும் பொருளும் அசையாப் பொருளுமாகிய வகை களும் எண்ணிறந்தனவா யிருக்கின்றன; இப்பகுப்புகள் பலவற் றுள்ளும் சாதி நிர்ணயம் செய்தல் எங்ஙனம்?

“இவற்றிற்குப் பிருகு மறுமொழி கூறுகின்றார்.

“சாதி வித்தியாசம் என்பது ஒன்றில்லை. உலகமுழுதும் பிரமாவாற் சிருட்டிக்கப்பட்டமையால் ஆதியில் எங்கும் பிராமணர் மாத்திரமே இருந்தார்கள். தொழில்களினாலேயே சாதிகள் உண் டாயின.

“ஆசைப்பட்ட பொருள்களை அநுபவிப்பதிற் பிரியமுள்ள வர்களும், கொடுமையும் இச்சையும் உள்ளவர்களும், இச்சிக்கப் பட்ட பொருள்களைப் பெறுவதில் ஊக்கம் வாய்ந்தவர்களும், தாங்கள் செய்தற்குரிய கடமைகளை விட்டவர்களும், செந்நிறம் வாய்ந்தவர்களும் ஆன துவிஜராகிய பிராமணர் க்ஷத்திரியருடைய நிலைமையை அடைந்தார்கள்.

“ஆடு மாடு மேய்க்குந் தொழிலை மேற்கொண்டவர்களும், மஞ்சள் நிறம் வாய்ந்தவர்களும், உழவு தொழிலாற் சீவிப்பவர் களும், தம்முடைய கடமைகளில் நில்லாதவர்களும் ஆன துவிஜ ராகிய பிராமணர் வைசியருடைய நிலையை அடைந்தார்கள்.

“கொலை செய்வதிலும் பொய் கூறுவதிலும் பிரியமுள்ள வர்களும், பேராசை பிடித்தவர்களும், எல்லா வகையான தொ ழில்களையும் செய்து அவற்றால் சீவிப்பவர்களும், கரிய நிறம் வாய்ந்தவர்களும், சுத்தம் சுசி இல்லாதவர்களும் ஆன துவிஜராகிய பிராமணர் சூத்திரருடைய நிலைமையை அடைந்தார்கள்.

“இத்தகைய தொழில்களால் பிரிக்கப்பட்டுத் துவிஜர்கள் சாதிகளாக வகுக்கப் பட்டனர்,”

ஐந்தாம் வேதமாகிய பாரதத்திலே பாரத்துவாச பிருகு சம்வாதமாக ஏற்பட்ட இந்தப் பகுதியினால் சாதி வகுப்பு ஒழுக்கத்தினால் வகுக்கப் பட்டதே யல்லாமல் பிறப்பினால் அன்றென்பது இனிது விளக்கப்பட்டிருக்கவும், இதனைச் சிறிதும் அறியாமல் பிறப்பினாலேயே நாம் உயர்ந்துவிட்டோம் என்று தருக்கினாற் புலம்பிச் சாமானியரை வஞ்சிக்கும் போலிச் சைவர் என்கடவரென்க.

மேற் கூறிய வடமொழி வேதவுரைகள் ஒழுக்கத்தினால் மாத்திரமே உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்பன வகுக்கப்படும் என்று கூறியது போலவே தமிழ்வேதமாகிய திருக்குறளும்,

"பிறப் பொக்கும் எல்லா வுயிர்க்கும், சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையால்." என்றும்,

"ஒழுக்கம் உடைமை குடிமை, இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்" என்றும்,

"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர், கீழிருந்துங்
கீழல்லார் கீழல்லவர்" என்றும்,

ஓதினமைகாண்க. இவைதாம் தெரிதற்குரிய பெருங்கல்வி போலிச்சைவர்மாட்டில்லையாயினும், பள்ளிக்கூடச்சிறுவர் நாடோறும் ஓதிவரும்,

"சாதி இரண்டொழிய வேறில்லை, சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ளபடி."

"கல்லா ஒருவன் குலநலம்பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே."

என்னும் அரிய நீதிநூல் வாக்கியங்களையேனும் அவர் தெரியப்பெறாதது பெரிதும் விசனிக்கத்தக்க தொன்றாம்.

இவைதாம் தெரியப் பெறாரேனும் உலகவழக்கையாவது தெரிந்து இவர் நலம்அடையலாகாதா? அந்தோ! போலிச் சைவர் அறியாமை இருந்தவாறென்னே! போலிச்சைவர் ஒரு

வர் வஞ்சமும் பொறாமையும் மன அழுக்கும் உடையவராகிப் பொய்பேசியும் பிறரை இகழ்ந்து உரையாடியும் பிறர்பொருளைக் கவர்ந்தும் வர, அவரைக்கண்டு "ஏ! இழிகுலத்தாய் ஏன் இங்ஙனமெல்லாம் தீது செய்கின்றாய்?" என்று வினவினால், அதற்கு அப்போலிச்சைவர் "நானா இழிகுலத்தேன்? நான் என் தகப்பனுக்கே யன்றோ பிறந்தேன். நான் தேவாரம் ஓதவில்லையா? நான் தகப்பன்பெயர் தெரியாதவர்களிற் சேர்ந்தவனோ? நான் திருவாவடுதுறை தருமபுர ஆதீனங்களில் எல்லாரோடு மிருந்து வயிறு நிறைய நன்றாய்ச் சோறுதின்று கறுத்துத் தடித்துப் ருத்திருக்கவில்லையா? பாருங்கள்" என்று தமதுடம்பைத்திருப்பித்திருப்பிக் காட்டினால் அவர் சொற்களை உலகத்தார் அங்கீகரிப்பார்களா? "அடே பேதாய் நீ இற்றையாரா உன்னைக்கேட்டார்கள்? நீ உன் தகப்பனுக்கே பிறந்தாய் என்பது உனக்கு எப்படித்தெரியும்? பெண்களுடைய சாமர்த்தியமும் தந்திரமும் உனக்கென்னதெரியும்? மகாஞானியான பட்டினத்துப்பிள்ளையார் "கைப்பிடிநாயகன் தூங்கையிலே யவன் கையையெடுத், தப்புறந் தன்னில் அசையாமல் முன்வைத்தபல்வளவில், ஒப்புடன்சென்று துயில்நீத்துப் பின்வந் துறங்குவளை, எப்படி நான் நம்புவேன் இறைவா கச்சி யேகம்பனே." என்று அருளிச்செய்ததை அறியாயோ? பெண்களுடைய பேச்சை நம்பி நான் என் தகப்பனுக்கே பிறந்தேன் என்றும், பிறர் தகப்பன்பெயர் தெரியாதவர் என்றும் இகழ்ந்துபேசாதே. இரகசியத்தில் பிறனுக்குக் கருத்தரித்த பிள்ளைகளைத் தங்கணவன் பெயரால் வளர்த்துவிடும் சம்பவங்கள் எண்ணிறந்தன. அந்தரகசியத்தில் நடந்த அவைகளைத் தெரிந்த சிலர் அவைகளைச் சிலகாரணங்கள் பற்றி வெளியிடாமையால் அவை இரகசியமாகவே நின்று விடுகின்றன. உன் இழிகுணச் செய்கைகளைப்பார்த்தால் நீ உண்மையான சைவனுக்குப் பிறந்தவன் அல்லை என்று எமக்குத் தோன்றுகின்றது. நீ யாருக்குப்பிறந்தால் எமக்கென்ன. நீ தேவாரம் ஓதி என்செய? திருவாசகம் படித்து என்செய? உன் மனஅழுக்கு உன்னைவிட்டு நீங்கிற்றில்லையே. ஆதீனங்களில் உடனிருந்து சோறுதின்றவதை ஒரு பெருமையாகப் பேசிக்கொள்ளுகின்றாய். நாங்கள் கேள்விப்பட்ட மட்டில் இப்போது சைவமடாதீனங்கள் பலவற்றில் உள்ளவர்கள்

துறவிகள் என்று பெயர்மாத்திரம் உடையவர்களாக இருக்கிறார்களே அல்லாமல், அவர்கள் இலௌகிகத்தில் ஒழுக்கங்கெட்டவர்களினும் மிகஇழிந்தவர்களாக இருக்கிறார்கள் என்றும், அளவிறந்த தருமச்சொத்துகளை வைத்துக்கொண்டு அவற்றை நல்வழியில் உபயோகியாமல் தீயவழிகளில் அவற்றை வாரிவாரி இறைக்கிறார்கள் என்றும் தெரிகிறேம். அப்படியிருந்தால் அவர்களோடு உடனிருந்து சோறுதின்னுவதில் உனக்கென்ன பெருமை வந்துவிட்டது? அவ்வாதீனங்களுக்கு உண்மையறிவுடையோர்கள் செல்வதில்லையென்று கேள்விப்படுகிறோம். சோற்றையும் பணத்தையும் விரும்பினவர்கள் அங்கே சென்று அவர்களுக்கு இச்சகம்பேசிக் காலங்கழிக்கிறார்களாம். பிறரைச்சேராமல் தாமே கூடியிருந்து சோறுதின்பவரைப்பற்றிப் பெருமைபேசிக்கொள்ளுகிறாய். அப்படியானால் பிறவற்றைக்கிட்டே சிறிதும் அணுகவிடாமல் தாமாகவே தீனி தின்னும் சிலமிருகங்கள் அவர்களைவிடச் சிறந்தன என்றன்றோ சொல்லவேண்டும்? உன் அறிவு ஆ! எவ்வளவு உயர்ந்தது! அது கிடக்கட்டும். நீ உனக்குள்ள தீயகுணச்செயல்களினின்றும்விலகி நல்வழியில் நடவாவிட்டால் நீ இழிபிறப்பினன் ஆதல்நிச்சயம்." என்று உலகத்தார் கூறுவார்களன்றோ?

அதனைக்கேட்டும் அறிவுவிளங்காமல், "வேளாளர், தொண்டைமண்டிலமுதலிமார், கார்காத்தார், சோழியர், ஓதுவார், குருக்கள் முதலாயினரல்லரோ உயர்ந்தசாதியார்? அவர்கள் மாத்திரம் அன்றோ ஒன்றுகூடியிருந்து சோறுதின்னல் வேண்டும்? இழிந்த சாதியாரான இடையர், கள்ளர், மறவர், அகம்படியர், கைக்கோளர், நாட்டுக்கோட்டைச் செட்டிகள் முதலாயினர் வேளாளருடனிருந்து உண்ணுவது கூடாதன்றோ? இழிந்தசாதியார் மேற்கூறிய உயர்ந்த சாதியாரோடுசேர்ந்து உண்ணுமையால், சைவகுலத்திற் பிறந்தவனாகிய நான் என்ன கெட்ட ஒழுக்கமுடையவனாயிருந்தாலும் நான் உயர்ந்தவனே." என்று அப்போலிச்சைவர் கூறினால் அதனைக் கேட்ட உலகத்தார்,

"சோழியர், கார்காத்தார் முதலானவேளாளர் உள்ளபடியே சிவகாருணியமும், கல்வியும், நல்லொழுக்கமும், சிவபத்தி அடியார் பத்தியும் உடையவர்களாயிருந்தால் அவர்களை உயர்ந்தோர்

என்று சொல்வதில் தடையில்லை; அப்படிப்பட்ட உண்மைவேளாளர் மற்றைச்சாதியாரை இழிவாக நினையாமல் எல்லாரிடத்தும் இரக்கமும் அன்பும் உடையவர்களாகி, மற்றைச் சாதியாரில் பிராணிகளைக்கொன்று அவற்றின் இறைச்சியை உண்பவர்களைக் கண்டால் 'நீங்கள் கொலையாலும் புலால் உண்ணுதலாலுமே இழிவடைந்தீர்கள். இவற்றை அறவே ஒழித்து எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அருளும் பாராட்டுவீர்களானால் நீங்கள் சிவபெருமான் திருவருளைப் பெறுதல் திண்ணம். நீங்களும் நம்முடனே கலந்து உறவாடலாம்.' என்று பலகாலும் எடுத்துச்சொல்லி அவர்களைத் திருத்தி, அங்ஙனம் திருந்தினவர்களைத் தம்மோடு உடன்வைத்து உண்டு அளவளாவி வாழ்வார்கள்; சிவகாருணிய உபதேசமும் சிவஞானோபதேசமும் செய்யும் கலைஞரையும் தவப்பெரியாரையும் கண்டால் அவரிடத்து அன்பினால் அகங்குழையப் பெற்றவராகி அவர்க்கு அடித்தொண்டு செய்குவர். இத்தகைய உண்மைச் சைவர்களாலே நாடெங்கும் சிவகாருணியமும் சிவபத்தியும் மிகும்; உயர்ந்த வொழுக்கமுடைய உயர்ந்த சாதியாரோடு ஒன்றுசேர்ந்து அளவளாவலாம் என்ற எண்ணத்தால், கொலைத்தொழிலையும் புலாலுணவையும் பிறர் எல்லாரும் அறவே ஒழித்து மேம்படுவார்கள்.

"இங்ஙனம் செய்வதைவிடுத்து ஏபேதாய், 'பிறர் எவ்வளவுதான் நல்லொழுக்கமுள்ளவர்களாய்த் திருந்தினாலும், நான் எவ்வளவு தான் கெட்ட ஒழுக்கமுள்ளவனானாலும், நான் சைவகுலத்திற் பிறந்தவனாகையால் அவர்களோடிருந்து சோறுண்ணமாட்டேன்.' என்கின்றாய். இழிந்தசெய்கையால் இழிந்த பிறப்படைந்த உன்னுடனிருந்து சோறுண்டால் நல்லொழுக்கத்தில் திருந்திய அவர்களுக்கும் இழிவேயாவதல்லது உயர்வு ஏது? ஆகையால், சோறே சோறென்று சோற்றையே கட்டிக்கொண்டு அழும் போலிச்சைவனான உன்னைச், சிவகாருணியத்திற் சிறந்த உண்மைச் சைவர்கள் தம்முடன்சேர்க்க மிகக்கூசுவர் அல்லரோ? சிலகாலத்துள் அழிந்து போவதாகிய உடம்பையும் அவ்வுடம்புக்கு இடும் சோற்றையுமே பெரிதாக எண்ணி அறியாமையால் மிகவும் இறுமாப்படைந்து பிதற்றும் நீயும் உன்னையொத்த சிலரும்

கூறும் பொருந்தாச் சொற்கள் நாம் சிறிதுங்கவனிக்கத்தக்கன வல்ல." என்று சொல்லாமற்போவார்களோ?

இங்ஙனம் உலகத்தார் கூறும் உலகவழக்கையும் போலிச்சைவர்கள் உணராமல் தம்மை யுயர்த்தியும் பிறரைத்தாழ்த்தியும் அகங்கரித்துரைக்கின்றார்கள்! இவர் பிறப்பினாலேயே தம்மை உயர்ந்தவர் என்று சொல்லிக்கொள்வாரானால், அவ்வாறுசொல்வதனால் இவருக்கு இழிவே உண்டாகுமல்லது உயர்வுண்டாவதற்குச் சிறிதும் இடம் இல்லை. ஏனென்றால், பிறப்பினால் தம்மைப் பிராமணர் என்று சொல்லிக்கொள்பவர்கள் தம்மைத்தவிர மற்ற எல்லாரையும் சூத்திரர் என்றே அழைக்கிறார்கள். மாமிசம் உண்பவனும் உண்ணாதவனும் ஆகிய எல்லாரையும் அவர்கள் ஒரேமாதிரியாகத்தான் நடத்துகிறார்கள். மாமிசம் உண்பவன் அவர்கள் வீட்டுக்கு விருந்தினனாய்ச்சென்றால் அவனுக்குப் பிராமணர் தாம் உண்டு மிகுந்த எச்சிலையே புறத்தேவைத்து இடுகிறார்கள்; மாமிசம் உண்ணாதவன் போனாலும் அவனுக்கும் தாம் உண்டு கழித்த எச்சிற்சோற்றையே புறத்தே வைத்து இடுகிறார்கள். போலிச்சைவர் பிறப்பினால் உயர்ந்தவராயிருந்தால் அவர்போற் பிறப்பினாலுயர்ந்த பிராமணருடனிருந்து உண்கிறதுதானே? பிறப்பினாலேதான் சாதி யென்று சொல்லும் போலிச்சைவர் தம்மைச் சூத்திரர் என்றுதான் ஒப்புக்கொள்ளவேண்டிவருமேயல்லால் வேறுதப்ப வகையில்லை; அங்ஙனஞ் சூத்திரரான இவர் மனுமுதலிய மிருதி நூல்களின்படி பிராமணர் கடைவாயிலில் காத்திருந்து அவர் காலாலிட்ட பணியைத் தாம் தலையாற்செய்து அவர் இடும் எச்சிற் சோற்றை உண்டு ஊழியக்காரனாய்க் காலங்கழிக்க வேண்டுமேயல்லாமல், பட்டை பட்டையாய்த் திருநீறுபூசிக்கொண்டு பகட்டான காசித்துப்பட்டா பொன்கட்டின உருத்திராக்கமாலை எல்லாம் அணிந்துகொண்டு தம்மினும் பிறப்பினால் உயர்ந்த பிராமணருக்கெதிரில் சமமாய் நின்று தேவாரம் படிப்பதும், சாத்திரங்கள் ஓதுவதும் பிறவுஞ் செய்தல் பெரிதும் இகழத்தக்க விரோதச் செய்கைகளாய் முடியும் அல்லவோ? பிறப்பினாலே தான் சாதி என்று சொல்ல முன்வந்த போலிச் சைவர் தம் புன்மொழியால் சீவகாருணிய வொழுக்கத்தினும் சிவபத்தி அடியார் பத்தியினுஞ்

சிறந்து விளங்கும் உண்மைச் சைவவேளாளரையும் பிறரையும் இழிந்த சூத்திரராக்கி விட்டாரே! அந்தோ! உண்மைச் சைவர்களாகிய அன்பர்களே, பிறப்பினாலேதான் சாதி யென்று உரைக்கும் போலிச் சைவர் புன்மொழிகளைக் கேட்டு மயங்கி விடாதீர்கள்! பிறப்பினாலேதான் சாதி யென்னும் அவர் சொற்களைக் கேட்டு நம்பி விடுவீர்களானால், நீங்கள் எல்லீரும் இழிந்த சூத்திரராகக் கொள்ளப்படுவீர்கள்; மாமிசம் புசிக்கின்றவர்களுக்கும் மாமிசம் புசியாமல் சிவகாருணிய வொழுக்கத்தில் நிற்கின்ற உங்களுக்கும் வித்தியாசம் இல்லாமற் போய்விடும். யாம் வடமொழி வேதம் தமிழ் வேதம் முதலிய வற்றையும் உலக வழக்கையும் பிரமாணமாகக் கொண்டு சிவகாருணிய ஒழுக்கத்தினாலேதான் சாதி உயர்வுண்டு என்று சொல்லுவனவற்றை நம்புவீர்களானால், நீங்கள் மிக உயர்ந்த சாதியாராக அறிவுடையோர் எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதல் திண்ணம். அறிவுடையார் மதிப்பையே மதிப்பாகக் கொள்ளுங்கள்; அறிவில்லார் மதிப்பை ஒரு பொருட்டாக எண்ணுதீர்கள்; அறிவில்லார் ஆயிரவர் மதித்தலினும் அறிவுடையார் ஒருவர் மதித்தலே உயர்ந்ததாகு மென்று உணர்மின்கள்!

அங்ஙனமாயின் "இழியாக்குலத்திற் பிறந்தோம்" "குலம் பொல்லேன்" என்று சமயாசாரிய சுவாமிகள் குலத்தின் உயர்வையும் தாழ்வையும் எடுத்துக்கூறியது என்னையெனின்; - சிவகாருணிய ஒழுக்கத்தில் நிற்குந் சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்த குலத்திற் பிறந்தோம் என்றும், அவ்வொழுக்கங்கள் இல்லாத குலத்திற் பிறந்தோம் என்றும் பொருள்கூறுதலே ஆசாரியசுவாமிகள் கருத்தென்று துணிக. இவ்வுண்மையுணராது பிறப்பினாலேயே குலப்பெருமை சொல்லுவார் அறியாமையைச் "சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள், கோத்திரமுங் குலமுங் கொண்டென்செய்வீர்" என்று ஆசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்கால் உற்றுணர்ந்து தெளிக. பிறப்பினாற் சைவரென்று தம்மை உயர்த்துச் சொல்லிக்கொள்வோரிற் சிலர் சிவகாருணியமும் சிவபத்தி அடியார் பத்திகளும் இல்லாராய், அகங்காரமிகுந்து, பொய்யும் புனைவும் வஞ்சமும் பொறாமையும் நிரம்பிப் பிறரைக் கொல்லாமற் கொல்லுவதில்

கருத்தூன்றி அலைகிறார்கள்; இத்தன்மையோரை உயர்ந்தகுலம் என்றுகூற அறிவுடையோர்க்கு நா எழுமா? உலகத்தாரும் அறிவுடையாரும் ஒருவன் பிறப்பைநோக்காது 'அவன் நற்குணம் உள்ளவனோ? நல்லொழுக்கம் வாய்ந்தவனோ?' என்றன்றே வினவுகின்றார்கள். ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் தாம் குடிமை என்னும் அதிகாரத்தில் உயர்குலம் இழிகுலம் என்றன ஒழுக்கத்தாற் சிறந்தகுலம் ஒழுக்கத்தாற் றாழ்ந்தகுலம் என்று வெள்ளிடைமலைபோல் விளங்க உரைத்தாராகவும், ஆசிரியர் கருத்தறிந்த பரிமேலழகியாரும் நான்கு வருணத்திலும் உயர் குலமும் தாழ்குலமும் உண்டென்பதை விளக்கினாராகவும் அவற்றை அறியும் அறிவுசிறிதுமில்லாத போலிச்சைவர் குலம் பிறப்பினாலேதான் என்று நாயனாருஞ் சொன்னாரெனத் தமக்குத்தோன்றியவாறெல்லாம் பிதற்றுவர்; அவர் பிதற்றுரையின் பொய்ம்மையை யாம் மேலே எடுத்துக்காட்டிய "ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம், இழிந்தபிறப்பாய் விடும்." என்னும் நாயனார் அருமைத்திருவாக்கால் தெளிந்துணர்க. தாய் தந்தையரும் அவருக்கு நெருங்கிய உறவினரும் நற்குண நற்செய்கையிற் சிறந்துவிளங்குபவராயின், அவர் கூட்டத்தை நற்குடி என்றும், அந்நற் குடியிற் பிறந்த பிள்ளையினிடத்து அந்நற்குண நற்செய்கைகள் அமையப் பெறும் என்றுங் கூறுதலே நாயனார்க்குக் கருத்தாதல் "தக்கார் தகவிலரென்பதவரவர், எச்சத்தாற் காணப்படும்" என்னும் அவர் திருவாக்கால் நன்கு துணியப்படும். ஒழுக்கத்தினாலேதான் குலத்தினுயர்வு பெறப்படும் என்று தமது நூல் முழுதும் வற்புறுத்திச் சொல்லும் திருவள்ளுவ நாயனாரையும் தமது புல்லறிவுக்குத் துணையாகச் சேர்க்கப் பார்க்கும் போலிச்சைவர் தம்கருத்து நிறைவேற வேறு எதுதான் செய்யமாட்டார்! அதுநிற்க.

அங்ஙனம் ஒழுக்கத்தினாலேயே உயர்வு பெறப்படவேண்டுமானால், திருநாளைப் போவாரென்னும் நந்தனார் சிவபத்தியில் தாம் மிகமுதிர்ச்சியுடையரா யிருந்தும் தமது குலத்தின் இழிவு நோக்கித் தில்லைக்கோயிலுட் புகாமல் புறத்தே ஒதுங்கிநின்றதும், சிவபெருமான் அவரை உட்புகுவித்தல்வேண்டித் தில்லைவாழ் அந்தணரைக்கொண்டு தீவளர்ப்பித்து அதன்கண் நந்தனாரை

முழுகுவித்துத் தேவவடிவாக எழச்செய்து பின்னர் உள்ளே ஏற்றுக்கொண்டதும் என்னையென்றால்;—பறைச்சாதி மற்றைச் சாதிகளைப்போலல்லாதன்று; மிகப்பரிசுத்தமுடையதாய் எல்லாத் தேவர்களுந் தன்கண் அமையப்பெற்றதாய்ச் சிவபெருமானுக்குப் பஞ்சகௌவியங்களைக் கொடுப்பதாய் உள்ள ஆவினைக்கொன்று அவற்றின் இறைச்சியை யுண்ணும் புலைத்தொழிலிற் பழகியதாகும்; இங்ஙனம் மிகக்கொடிதான புலையொழுக்கத்திற் பயின்றது பற்றியே பறைச்சாதி யேனை எல்லாச் சாதிகளினும் இழிவுடையதாயிற்று; இங்ஙனம் இது தாழ்வுடையதானதும் ஒழுக்கத்தாழ்வினாலேதான். மற்றைச் சாதியாரெல்லாம் ஒன்று கூடி வசிக்கும் நாடு நகரங்களுக்குப் புறத்தே விலக்காகப் பறைச்சேரி அமைக்கப்பட்டிருத்தலும் இக்காரணம் பற்றியே தான். இத் தன்மையதான அறிவில்லாப் புலைச்சாதியில் நந்தனார் பிறந்தமையினாலே இவரது பெருமையைப் பிறர் அறியார் என்றெண்ணி அதனை அறிவிக்கும் பொருட்டே சிவபெருமான் அங்ஙனஞ் செய்தன ரென்றுணர்க.

அல்லதூஉம், சிவபத்தியின் மேன்மையை அறிவித்தற்கும், சிவபத்தி உண்டானால் புலையுடம்பும் புண்ணிய வுடம்பாம் என்பதனை உலகத்திலுள்ள எல்லார்க்கும் தெளிவித்தற்குமே சிவபெருமான் நந்தனாரை நெருப்பில் முழுகுவித்து எழச்செய்தார் என்க. அவ்வாறானால், மாமிசம் உண்ணும் மற்றைச்சாதியாரும் மாமிசத்தை விட்டுச் சிவபத்தியில் மேம்படுவாராயின் அவரைச் சைவர்கள் அங்கீகரிக்குமுன் சிவபெருமான் அவர் பெருமையை அங்ஙனமே ஓர் அற்புதத்தால் அறிவிக்க வேண்டுமெனின்;—சிவபத்தியிற் சிறந்த அடியார்க்குப் புலையுடம்பும் புண்ணிய வுடம்பாம் என்பதனை ஒருகாலத்து ஓரிடத்து ஓர் அற்புதத்தால் தெளியச் செய்தால், அதனைப் பிற்காலத்து வருவோர் அங்கீகரித்துப் பின்னர் அடியார் பணிசெய்து நடக்கவேண்டுமே யல்லாமல் ஒவ்வொரு முறையும் அற்புதஞ் செய்து காட்டினால்தான் இவரை அடியார் என்று அங்கீகரிப்போம் என்றல் அறிவில்லா விழலர்கூற்றாய் முடியும்; திருஞான சம்பந்தப்பெருமான் சைவ சமயமே மெய்ச் சமயம் என்பதனைச் சுரநோய் விலக்கியும் அனலில் ஏடெழுதி

யிட்டும் புனலில் ஏடெழுதிவிட்டும் அற்புதத்தால் விளக்கியருளி
னூர்; அதுபோலவே, இப்போது சைவ சமயமே மெய்ச்சமயம்
என்று தாபிக்க வருகிறவர்களும் அற்புதங் காட்டினுல்தான் ஏற்
றுக்கொள்வோம் என்று கூறுவாருண்டோ? இல்லையே. அங்ங
னமே, சிவபத்தியுடையார்க்குப் புலையுடம்பும் புண்ணிய வுடம்பா
மென்பதை நந்தனுரைக் கொண்டு அற்புதத்தால் சிவபெருமான்
ஒருமுறை விளக்கிக் காட்டினுல், அவ்வாறே பலமுறையும் விளக்க
வேண்டுமென்று அறிவுடையோர் கூறுர். அகத்தேயுள்ள சிவ
பத்தி என்கின்ற சிவாக்கினியினுல் சிவனடியாருடம்பு பரிசுத்த
முடைய ஞானசரீரமாகும் என்பதனையே நந்தனுர் புறத்தே
நெருப்பிற் குளித்த அற்புதம் விளக்குவதாகும். சிவபத்தியுடை
யார்க்குக் கருவி கரணங்களெல்லாம் சிவமயமாய் விளங்குமாகலின்
அவரைப் பிறப்பு நோக்காது சிவனாகவே கொண்டு வழிபடல்
வேண்டுமென்னும் உண்மையை உணர்த்துதற் கன்றே, திருநா
வுக்கரசு சுவாமிகள்,

"சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து தரணியொடு வானா
ளத்தருவரேனும், மங்குவாரவர் செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்தரல்லராகில், அங்கமெலாங் குறைந்தழுகு
தொழு நோயராய் ஆவுரித்துத்தின்றுழலும் புலையரேனும், கங்கை
வார்சடைக் கரந்தார்க்கு அன்பராகில் அவர்கண்டீர் யாம் வணங்
குங் கடவுளாரே."

என்று அருளிச்செய்தனர். இங்ஙனமே, "யச்சண்டாள
சிவ இதிவாசம்" என்னும் முண்ட கோபநிடத வசனமானது
எவன் ஒருவன் சிவ என்னும் மொழியைச் சொல்லுகின்றுனே
அவன் சண்டாள வமிசத்திற் பிறந்தவனுயிருந்தாலும் அவனேடு
பேசுக, அவனேடு வசிக்க, அவனேடு அருகிருந்து உண்ணுக என்று
கூறுகின்றது. இங்ஙனமே,

'புலையரே யெனினுமீசன் பொலன்கழ லடியிற்புந்தி
நிலையரே லவர்க்குப்பூசை நிகழ்த்துதல் நெறியேயென்றுந்
தலையரே யெனினுமீசன் றமரைத்தாளின் நேசம்
இலரெனில் இயற்றும்பூசைப் பலந்தருவாரே யாரே?"

என்று சிவதருமோத்தரமும்,

"எள்ளற் படுக்கும் மக்களெல்லாம் இழிந்தகுலத் தோராயினும்
வள்ளற் பரமன் றிருநீறு மணியுமணிந்த மாண்பினரை
யுள்ளத்துள்ளே யிருபோது முணர்ந்து தெருண்டு சிவனெனவே
கொள்ளத்தகைய அறிவினரே பிறவிக்கடலிற் குளியாதார்."
என்று பிரமோத்தர காண்டத்தும் சொல்லப்பட்டிருத்தல் காண்க.

இவைபோலுந் திருவாக்குகளுக் கெல்லாம் பொருள்சொல்லத் தெரியாத போலிச்சைவர் பத்தியினாற் செய்வனவற்றிற்கு விதி விலக்கு இல்லை, மற்றை உலகவழக்கத்தில் சாதிவித்தியாசம் பாராட்டியே வரல்வேண்டும் என்கின்றார். உலகவழக்கிலும் ஒருவனை அவன் பிறப்பு நோக்காது அவன் கல்வியறிவினையும் நற்குண நற்செய்கைகளையும் பாராட்டியே அவனைப் பலவகையாலும் பெருமைப்படுத்தி உயர்ந்த உத்தியோக பதவிகளும் அளிக்கின்றார்கள் என்பதனை மேலே விளக்கிக்காட்டினோம். ஆதலால், பத்திமார்க்கத் திற்குத் தான் சாதிவித்தியாசம் இல்லை, உலகமார்க்கத்திற்குச் சாதிவித்தியாசம் உண்டு என்னும் போலிச்சைவர் கூற்றுப் பொய்க்கூற்றேயாம் என்க. அங்ஙனமன்று பிறப்பினாற் றாழ்ந்த வனைக் கல்வியுங் குணச்செய்கைகளும்பற்றி அவனுக்கு உயர்ந்த உத்தியோக பதவிகள் அளித்துப் அறிவுடையோர்கூடிய சபைக ளில் முன் அமரச்செய்துப் பெருமைபாராட்டினாலும், உயர்ந்த சாதியார் அவனோடு அருகிருந்து உண்பதில்லையேயெனின்;— போலிச்சைவர் தாம் அப்பெரியவனோடு அருகிருந்து உண்போம் என்று கூறாது அறியாமையால் அகங்கரித்துப் பேசுவார்களே யல் லாமல், உண்மைச்சைவர் அக்குணவானோடு அளவளாவியிருந் துண்டு புண்ணியமும் மகிழ்ச்சியும் எய்துவார்; ஞானமயமாய் விளங் கும் கற்றோர் சபைகளில் தலைமையோடிருந்து ஞானோபதேசஞ் செய்யுங்கால் அப்பெரியோன் காற்கீழிருந்து உபதேசங்கேட்டும் அவன் உத்தியோக பதவியில் அமர்ந்திருக்குங்கால் அவனெதிரே கைகட்டி வாய்புதைத்து நின்று அவன் ஏவியபணிசெய்தும் தமது தாழ்மையைக்காட்டி வந்த போலிச்சைவர் சிலர் சோறுதின்னும் போது மாத்திரம் தாம் அவனோடிருந்து உண்பதில்லை என வெறுஞ்சோற்றுப்பேச்சைப் பேசித் தம்மைத்தாமே உயர்த்திக் கொள்ளும் பதரானபேதைமைச் செய்கையைக்கண்டு அறிவுடை—

யோர் நகையாடாமல் இரார். சாப்பாட்டு ராமசாமிகளான போலிச்சைவருக்குச் சோற்றைத்தவிர வேறென்ன தெரியப் போகிறது! ஒருவரிடத்துள்ள ஞானத்தின் அருமையும் குணவொழுக்கங்களின் பெருமையும் சோற்றுருட்களுக்கு எங்ஙனந் தெரியும்? அவர்களுக்குச் சோறுதான் தெய்வம்; ஊனும் உதிரமுஞ் சீழும் சளியும் நீரும் மலமும் வழியும் புழுப்பாண்டமான தமது உடம்பின் பிறப்புத்தான் அவர்களுக்குத் தேவப்பிறப்பு!

பத்தியிற் சிறந்தவர்களுக்கும் ஞானிகளுக்குந் தாம் சாதி வித்தியாசம் இல்லையென்று போலிச்சைவர் மொழிந்தால், தெய்வமில்லையென்னும் நாஸ்திகர்களுக்கும் அஞ்ஞானிகளுக்குந் தாம் சாதிவித்தியாசம் வேண்டுமென்பது பெறப்படும். போலிச் சைவர் சாதிவித்தியாசத்தைப் பாராட்டிக்கொண்டு அஞ்ஞானச் சேற்றிலும் நாஸ்திகப் படுகுழியிலுமே கிடக்கவேண்டுமென்று விரும்பினாரானால், அவர் அப்படியே கிடக்கட்டும். தமது புல்லறிவை உண்மைச் சைவர்களிடம் காட்டி அவர்களையும் தாங் கிடக்கும் படுகுழியில் வீழ்த்த முயல்வாராயின், அவரது புல்லிய செய்கையைக்கண்டு அறிவுடையார் வருந்தாதிருப்பரோ? எமக்குப் பத்தியும் வேண்டாம் ஞானமும் வேண்டாம் நற்குண நற்செய்கைகளும் வேண்டாம், அவற்றிற்சிறந்த நல்லோரிணக்கமும் வேண்டாம், எமக்குச் சோறொன்றுதான் பிரதானம் அதுமாத்திரந்தான் எமக்குவேண்டியது என்று போலிச்சைவர் சொல்வாரானால், அவ்வளவு அறியாமையிலும் ஆணவத்திலும் அமிழ்ந்திக் கிடக்கும் அவர் இன்னும் பலகோடி பிறவிகள் எடுத்தாலன்றித் திருந்தமாட்டார் ஆகையால், அத்தன்மையோரைத் தம்மோடு உடன் வைத்து அளவளாவுதல் உண்மைச் சைவர்க்குப் பெரும் பாவமாய் முடியுமாதலால் அவர்களை இவர்கள் சேராமல் ஒழுததலே செயற்பாலதாம்.

இன்னும், பிறப்பினாலே தான் சாதியுயர்வு பெறப்படுமென்று போலிச்சைவர் கூறுவாரானால், சைவவேளாளர் தம்மைப் பிறப்பினால் உயர்ந்தோர் என்று கூறிக்கொள்வதுபோலவே மற்றைச்சாதியாரும் தம்மைத் தாம் உயர்ந்தோர் என்றுசொல்லிக்

கொள்கின்றார்கள். ராஜபுத்திரர் என்னுஞ் சாதியார் தாம் மாமிசம் புசிப்பவராயிருந்தாலும் பிராமணர்முதலான எந்தச்சாதியார் வீட்டிலும் தாம் சாப்பிடுவதில்லாமையால் தாமே எல்லாச்சாதியாரினும் உயர்ந்தோர் என்று சொல்லிக்கொள்கின்றார். கம்மாளர் தாமேபிராமணர் என்றுபிரமாணங்கள்பலகாட்டித் தம்மை உயர்த்திக்கொள்கின்றார். வன்னியர் தாமே க்ஷத்திரியர் என்று பிரமாணங்களோடு நூல்கள் எழுதித் தம்மை உயர்த்திக்கொள்வதோடு, வேளாளர் முதலான மற்றவரை எல்லாம் தாழ்ந்த சூத்திரவகுப்பினர் எனவுஞ் சொல்லிவருகின்றார். சான்றார் தாமே க்ஷத்திரியர் என்று பத்திரிகைகளினும் புத்தகங்களினும் எழுதிவருகின்றார். இடையர் தம்மைக் கோவைசியர் எனவும்,கோமுட்டிகள் வாணிகர் முதலாயினோர் தம்மைத் தனவைசியர் எனவுஞ் சொல்லிவருகின்றனர். வேளாளரில் ஒருவரும் தமது சாதியாரை வைசியர் என எழுதியிருக்கின்றார். நாட்டுக்கோட்டைச்செட்டிமாரும் தம்மைத் தன வைசியரென்று எழுதிவருகின்றார். பறையர் வகுப்பிற் கல்வியிற்றேர்ந்தவர்கள் தம்மைப் பிராமணரினும் மேலானவர் என்று சொல்வதோடு, "பார்ப்பானுக்கு மூத்தான் பறையன் கேட்பாரில்லாமற் கீழ்ச்சாதியானான்."எனப் பிரமாணங்களுங் காட்டுகின்றார்கள்; இப்பறையரிற் கல்வியினுஞ் செல்வத்தினும் உயர்ந்த பிரபுக்கள் கடைவாயிலிற் காத்திருந்து அவர் இடுவனவற்றைப் பெற்று மகிழ்ந்துவரும் வேளாள வித்துவான்கள் எத்தனைபெயர்! போலிச்சைவர் எத்தனைபெயர்! அவர்கள் மேற் பாட்டுகள் பாடினவர்களும், பாடுகிறவர்களும் எத்தனைபெயர்! இவ்வாறெல்லாம் அவர்கள் வீசி எறிவனவற்றைக் குனிந்து பொறுக்கியுண்டு வயிறு கழுவி வரும்போலிச்சைவர் முதலாயினோர் புறத்தேவந்து நன்றிமறந்து அப்பிரபுக்களைப் பறையரென இகழ்ந்துரைப்பது எவ்வளவு பேதைமை! சைவசமயத்திற்சேர்ந்த பறையரையும் சான்றாரையும் கோயிற் கோபுரவாயில்களினும் நெருங்கவிடாத போலிச்சைவர் முதலாயினோர், அன்னிய சமயத்தினராய் எல்லாவகையான மாமிசமும் உண்ணும் கிறிஸ்துவ மகமதிய அதிகாரிகள் வந்தால் அவர்கள்முன் பல்லை இளித்துக்காட்டி அவர்களைக் கோயிலினுள்ளே அழைத்துச் செல்வது என்னை! இங்ஙனமே இன்னும் போலிச்சைவர் முதலாயினோர் மற்றையோரிடத்து

வஞ்சமாய் நடக்கும் படிற்றொழுக்கத்தை விரிக்கப்புகுந்தால் இது மிகவிரியும். அதுநிற்க.

இனிச் சிவபெருமான் பிறப்பினால் உயர்ந்தவர்களுக்குத் தனது அருளை வழங்கியது யாண்டும் இல்லை. அன்பினாற் சிறந்தவர்கள் எப்பிறப்பினராகப் பிறராற்கருதப்படினும் அதனைத் தான் சிறிதும் பாராதே அவர்களுக்கே தனது பேர்அருளை வழங்கிவருகின்றான். இதற்குப் பெரியபுராணத்தின்கண் பல்வகைப் பிறப்பினரான அடியார்கள் எல்லாரும் அவனது திருவருளைப் பெற்றமையே பெருஞ்சான்றாம். மேலும், பிறப்பினால் தம்மை உயர்ந்தோராகக் கருதி அகங்கரிப்போர் அகங்காரத்தை வேரோடும் அறுத்து அவரை மாய்க்கவேண்டுமென்பதே எல்லாம் வல்ல அவ்வாண்டவன் திருவுள்ளக் குறிப்பா மென்பது சரித்திரங்கள் பலவற்றானும் நன்கு தெளிவுறுத்தப்பட் டிருக்கின்றது. திருவம்பர் மாகாளத்தில் சோமாசிமாறநாயனார் தாம் செய்த வேள்வியிலே இடும் அவிசைச் சிவபெருமான் நேரேவந்து ஏற்றுக்கொண்டருளல்வேண்டுமென்று தவங்கிடந்து இரந்தபோது, அவ்வேள்விக் குண்டத்தைச்சூழத் தம்மைப் பிறப்பினால் உயர்ந்தோராகக்கருதி அகங்கரித்திருந்த பார்ப்பனர் அத்தனைபேர்க்கும் தனது அருளை வழங்க இசையானாய் நம்பெருமான் சண்டாளப்பறையன் உருத்தாங்கி அவ்வேள்விக்குண்டத்திற்கு எழுந்தருளினான்; அதுகண்டவுடனே பார்ப்பனர் எல்லாம் 'பரிசுத்தமான யாகசாலைக்குப் பறையன் வந்தான்' என்றுசொல்லி ஓடிப்போக, அன்பினாற் பெரிய சோமாசிமாறராகிய உண்மைப் பிராமணர் அங்கிருந்து நம்பெருமானுக்கு அவிசைத்தந்து பெரும்பேறு பெற்றனர். இவ்வாறே நிகழ்ந்த வரலாறுகள் அளவிறந்தன. அவற்றைப் பெரியபுராணம் முதலான உண்மை நூல்களுட்கண்டுதெளிக.

இனிச் சிவபெருமானாகிய தம் ஆண்டவன் திருவுள்ளக் குறிப்பை இனிது உணர்ந்த அவன் அடியார்களும் அன்பர்களின் பிறப்பை ஒருசிறிதும் நோக்காது அவர்களின் அன்புக்கே மகிழ்ந்து அவர்களுடன் எதும் வித்தியாச மின்றி அளவளாவி இன்புற்றார்கள். நான்காம் ஆசாரியசுவாமிகளும் ஆதிசைவப் பிராமணருமான சுந்தரமூர்த்திகள் திருத்தொண்டத்தொகையின் கண்

பிறப்பை நோக்காமல் அடியார்கள் எல்லாரையும் வணங்கினூர். இரண்டாம் ஆசாரிய சுவாமிகளும் வேளாளருமான திருநாவுக்கரசுகள் அப்பூதி அடிகள் என்னும் பிராமணரோடு யாதும் வேற்றுமையின்றி அளவளாவினர். பிரதமசைவாசாரிய சுவாமிகளும் பிராமணருமான திருஞானசம்பந்த மூர்த்திகள் பாணர்சாதியிற் பிறந்த திருநீலகண்ட யாழ்ப் பாணரையும் அவர் மனைவியாரையும் எப்போதும் தம்முடனேயே வைத்திருந்ததோடுபிராமணரான திருநீலநக்கரென்னும் வேறோர் சிவனடியார் திருமாளிகைக்கு எழுந்தருளியபோது அவரோடு ஒருங்கிருந்து திருவமுது கொண்டு இரவில் திருநீலநக்கரது அதி பரிசுத்தமான யாகவேதிகையிலே யாழ்ப்பாணருக்கும் அவர் மனைவியார்க்கும் இருக்கை அமைத்தனர்கள். அவ்விருவரும் அவ்வேதிகையிற் சென்றவுடனே அங்கே யாககுண்டத்தில் இடஞ்சுழித்து எரிந்த சிவாக்கினி யானது இவர்களின் வரவால் மிசமகிழ்ந்து வலஞ்சுழித்தெழுந்து எரிந்ததெனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்திருக்கின்றார்கள். பாணரென்பவர் பறைச்சாதியிற் சிறிது மேலானவரென்று எண்ணப்பட்டவர்; இவ்வியல்பினரான பாணரை ஞானசம்பந்தப் பெருமானும் நீலநக்கரும் தம்மோடு உடன்வைத்து அளவளாவினதும், அவ்வருமை யை அக்கினிவடிவா யிருந்த நம் ஆண்டவன் அங்கீகரித்து மகிழ்ந்ததும் போலிச்சைவர் உணரார் கொல்லோ!

இனி அடியார்கள் சிவவேடங்கண்டு பிறரை வணங்கினூலும் சிவவேட முடையார் தாமே வந்து சொல்லுகிறபடி யெல்லாம் அவர் நடவார் என்று போலிச்சைவர் பொய்யுரை புகல்கின்றார். மெய்ப்பொருள் நாயனூர் தம்முடைய பகைவன் சிவவேடந்தரித்து வந்தவுடன் அவனை வணங்கியதும், அப்பகைவன் தம்மைக் கத்தியாற் குத்திய அரவங்கேட்டுத் **தத்தன்** என்னும் காவலாளன் அவனைப்பிடித்துக்கொள்ள ஓடிவந்தபோது "நிறைத்தசெங் குருதிசோர வீழ்கின்றூர் நீண்டகையால், தறைப்படுமளவில் தத்தா நமர் எனத் தடுத்து அவனைப் பிறர் கொல்லாமற் கொண்டு போய்விடு" என்று கூறியதும் போலிச்சைவர் அறியார் கொல்லோ! ஏனுதி நாத நாயனூர் தப்பகைவனைப் போரிற்

பலகால் தோல்வி பெறச் செய்தமையால், அவன் இவரை வேறுவகையால் வெல்ல ஏலாதென்று எண்ணித் தன் நெற்றியில் திருநீறிட்டு அதனைத் தெரியாமல் மறைத்துவந்து இவரைப் போருக்கு அழைக்க, இவரும் அவனுடன் சென்று போர்புரிந்து அவனை வெட்டப் புகுந்த பொழுதில், அவன் தன் முகமறைப்பை விலக்கித் திருநீறிட்ட நெற்றியைக் காட்ட, உடனே அவர் அவனைச் சிவனடியாராகப் பாவித்து வெட்டாமல் விட்டுத் தம்மை அவன் வெட்டும்படி நின்றார் என்பதையும் இன்னும் இவை போன்ற பலவற்றையும் போலிச்சைவர் அறியார் கொல்லோ! இவ்வுண்மைகளை இனிது விளக்கிய,

"மண்ணாளும் மன்னவன்றன் மகன் குணங்கீழ் கிரணடும் வையகத்தார் பாராதே வணங்கிடுவரஞ்சி, எண்ணாளும் இறையமலன் திருவேடந் திருநீறிட்டார்கள் குணங்குணக்கேடெனு மிரண்டும் எண்ணார், விண்ணாளத் தீவினையை வீட்டியிட விழைந்தார் விரும்பி அவர் அடிபணிவர் விமலனுரை விலங்கல், ஒன்றே தே யெனக்கருதி ஒருப்பட்டே அமலன் ஒப்பரிய புரிவாழ்வு மற்றையருக்குண்டோ" எனவும்.

'தேடியமாடுநீடு செல்வமுந்தில்லைமன்றுள்
ஆடியபெருமான்அன்பர்க்கு ஆவனஆகும்என்று
நாடியமனத்தினோடு நாயன்மார்அணைந்தபோது
கூடியமகிழ்ச்சிபொங்கக் குறைவறகொடுத்துவந்தார்."

எனவும்,

"வெண்ணீறும், வேடமும் பூசையும் மெய்யென்றான் பொய்யென்றான், மாடையும் வாழ்க்கை மனையுமே." எனவும்.

"எவரேனுந் தாமாக இலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டாலுள்கி, உவராதே அவரவரைக் கண்டபோதே யுகந்தடிமைத்திறம்நினைந்தங் குவந்து நோக்கி, இவர்தேவர் அவர்தேவரென்றுசொல்லி இரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே." எனவும், போந்த திருவாக்குகளையும் போலிச்சைவர் உணரார் கொல்லோ!

இங்ஙனம் வேடத்தைக் கண்டமாத்திரையாலே வேறுவித்தி பாசம் பாராது அவர்களோடு அளவளாவுதல் வேண்டுமென விதிக்கப்படுமானால், அவ்வேடத்தோடு கல்வியும் நற்குணமும் நல்லொழுக்கமும், ஞானமும், சிவபத்தியும் உடையாரை எவ்வளவு மதித்து அவரோடு அளவளாவி அன்புபாராட்டல்வேண்டும்! இவற்றையெல்லாம் ஒருசிறிதும் நோக்காது வெறுஞ்சோற்றுக்கே அழுது பாவத்தைஈட்டும் போலிச்சைவர் வேறு என்கடவர் என்க.

இனிப்போலிச்சைவருட் பின்னும் ஒருசாரார் தாம் தீட்சையின் இயல்பை உணர்ந்தார்போலச் சிலர் தீட்சைவேண்டாமெனக் கூறுகின்றனர் எனப்பொய்யுரை கூறினர். தீட்சைவேண்டாமெனக் கூறுவார் யாண்டும் இலர். 'தீட்சை' என்னுஞ்சொல் 'திக்' என்னும் தாதுவிற் பிறந்து, சீடனுடைய வினைகளை எரிக்கும் சம்ஸ்காரம் என்னும் பொருளைத்தரும். ஞானமெய்க்குரு எழுந்தருளி வந்து அநுக்கிரகிக்கும்போது தனது பரிசத்தானும், நோக்கானும் நினைவானும் சீடனுடைய வினைகளைச்சுட்டு அவனைப்பரிசுத்தப் படுத்தி ஞானநிட்டையை அநுக்கிரகிப்பன். இத்தகைய தீட்சையினைப் பெறவேண்டுமென்னும் அவா பக்குவமுடைய சீடனுக்குத் தானே எழும். ஏனையோர் தம்தரத்திற்கு ஏற்ற ஞானநூல்களை யோதிப் பக்குவரானபின் அவர்க்கு அவ் அவா எழும். அவா எழுந்த பின்னரும் மெய்க்குருவின்பாற் றீக்கை பெறவேண்டுமேயல்லாமல், வருவாயின்பொருட்டுச் சர்மதீக்கை பண்ணுதலையே தொழிலாகக் கொண்டுள்ளார் பால் அதனைப் பெற்றுக்கொள்ளுதலும், உள்ளம் ஒருவழிப்படாமல் தீயசிந்தனைகளைச் சிந்தித்துக் கொண்டிருக்க அநுட்டானம் பண்ணுகிறேன் என்றுசொல்லிச் கையையும் மெய்யையும் ஆட்டுதலும் பயன் இல்லாதனவாகலின் இப்படிப்பட்ட தீக்கையினையே அறிவான் மிக்க பெரியார் வேண்டாம் என்றனர்; பட்டினத்துப் பிள்ளையாரும்,

> "நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகம நீதிநெறி
> ஓமங்கள் தர்ப்பணஞ் சந்தி செபமந்த்ர யோகநிலை
> நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
> சாமங்கடோறும் இவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே."

என்றருளிச் செய்ததும் இப்படி வெறுங்கர்மங்களான தீட்சா சமஸ்காரங்கள் பயனில வென்பது அறிவித்தற்கே.

இங்ஙனமெல்லாம் எழுதப்பட்ட உண்மைப் பொருள்களை உறுதியென உணர்ந்து, போலிச்சைவர் புன்மொழிகளில் மயங்காமல் சிவகாருணிய ஒழுக்கமும் சிவபத்தி அடியார்பத்தியும் பூண்டு நம்சைவசமயாசாரியர் சந்தானாசாரியர் காட்டியவழியே நடந்து உண்மைச் சைவர்கள் உய்வார்களாக.

"குலமும் ஒன்றே குடியும் ஒன்றே
இறப்பும் ஒன்றே பிறப்பும் ஒன்றே
வழிபடு தெய்வமும் ஒன்றே யாதலால்
முன்னோருரைத்த மொழி தவறாமல்
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டுப்
புலையுங் கொலையுங் களவுந் தவிர்த்து
நிலைபெற அறத்தின் நெறிமறை யறிந்து
ஆணும் பெண்ணு மல்லதை யுணர்ந்து
பேணி யுரைப்பது பிழையெனப் படாது
சிறப்புஞ் சீலமு மல்லது
பிறப்பு நலந்தருமோ பேதையீரே."—கபிலர் அகவல்.